திருவாய்மொழிப் பேருரையாளர்

# நம்பிள்ளை உரைத்திறன்

பேராசிரியர்

**Dr. இரா. அரங்கராஜன்,** M.A., Ph.D.



மதுரை

1986

திருவாய்மொழிப் பேருரையாளர்

# நம்பிள்ளை உரைத்திறன்

பேராசிரியப் பெருந்தகையாளர்
திரு. அ. ச. ஞானசம்பந்தனார் அவர்கட்கு
அன்பளிப்பு
இரா. அரங்கராஜன்
15.10.88

This book is published with the financial assistance of Tirumala Tirupati Devasthanams under their scheme "Aid to publish Religious Books"



பேராசிரியர்

**Dr. இரா. அரங்கராஜன்,** M.A., Ph.D.

மதுரை




விற்பனை உரிமை

அமுத நிலையம் லிமிடெட்,

46, இராயப்பேட்டை ஹைரோடு,

சென்னை - 600 014.

1986

# முன்னுரை

## I

நம்பிள்ளை என்ற பெரியார் நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்கு இயம்பிய ஆழ்ந்தகன்ற பேருரையான ஈடு முப்பத்தாறாயிரப் படியினைப் பல்காற் பயின்று அதனுள் பொதிந்து கிடக்கும் பல்வகை உரையுத்திகள், மேற்கோள் ஆட்சி முறைகள், அகப்பொருள் விளக்கங்கள், உள்ளுறைச் செறிவுகள், தத்துவக் கூறுபாடுகள், வரலாற்றுச் செய்திகள் மற்றும் இன்ன பிறவற்றையும் வெளிக்கொணர்ந்து ஓர் அரிய உரைப் பெட்டகத்தைத் தமிழ் உலகிற்கு அறிமுகப்படுத்துவது இந்நூலின் அடிப்படை நோக்கம்; மேலும் பேருரையாளரான நம்பிள்ளை தலைசிறந்ததோர் திறனாய்வாளர் (critic) என்றும் பல்கலைப் புலவர் என்றும் தமிழ் நெஞ்சினர் என்றும் தமக்கெனக் கொண்ட இலக்கியக் கொள்கையினர் என்றும் அக்கொள்கைகள் இவையிவை என்றும் வெளிப்படுத்துவதும் நோக்கமாகும். இவ்விரு பால் நோக்கங்களையும் நிறைவேற்ற ஈடு உரைநூல் முழுவதையும் வரன்முறையாகப் பாடங் கேட்டுக் கற்றுப் பல செய்திகளைத் திரட்டிப் பட்டியலிட்டுக் கருத்துக்களைத் தொகுத்துப் பழந்தமிழ் உரை நெறிகளோடு ஒப்பு நோக்கி மதிப்பீடு செய்து இந்நூல் வரையப்பட்டிருக்கிறது.

நம்பிள்ளையின் திருவாய்மொழிப் பேருரையான ஈடு மணிப்பிரவாள நடையில் அமைந்ததால் தமிழறிஞரிற் பலர் அவ்வுரைக் கண் நிறைந்திருக்கும் அருமை பெருமைகளை ஆராய்ந்தறிய இடர்ப்படுகின்றனர். அவ்வுரை நூலும் தொன்று தொட்டு ஓராண்வழி மரபு முறையிலேயே கற்பிக்கப்பட்டு வந்தது. இருமொழிப் புலமையோடு நியாயம், மீமாம்ஸை, தருக்கம், வியாகரணம் முதலிய பல்துறைப் பயிற்சியும் வேண்டியிருந்தது. அவை கூடினும் வைணவ மரபுகளையும் குருபரம்பரைச் செய்திகளையும் நன்கு அறியவேண்டியிருந்தது. இத்தனை அருமைப்பாடுகளால் தமிழறிஞர் பலரும் ஒரு பெரும் உரைச் செல்வத்தை இழக்க நேரிட்டது. இவ்விழப்பை ஈடு செய்யத்திருவாளர் பு.ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள் ஈட்டின் தமிழாக்கத்தைச் செய்து சென்னைப் பல்கலைக் கழகத்தின் வாயிலாக வெளியிட்டுப் பெருந்தொண்டு செய்தார். அத் தமிழாக்கமும்

தலைசிறந்த காலக்ஷேப கிரந்தமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

நம்பிள்ளையால் விளக்கப் பெற்ற ஆழ்வார்கள் கண்ட வைதிக மதமானது, அவருடைய சிஷ்யர்களான வடக்குத்திரு வீதிப் பிள்ளையின் குமாரர்களான பிள்ளைலோகாசிரியராலும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாராலும் பெரியவாச்சான் பிள்ளையின் குமாரரான நாயனாராச்சான் பிள்ளையாலும் அருளிச் செய்யப்பட்ட ரஹஸ்யகிரந்தங்களாலும், மணவாள மாமுனிகள் அருளிய ரஹஸ்ய வியாக்கியானங்களாலும் மேலும் விளக்கம் பெற்று 'தென்கலை ஸம்பிரதாயம் என்ற பெயருடன் இன்றுவரை திகழ்ந்து வருகிறது. வடமொழி வேதங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து ஏற்பட்ட மற்றொரு ஸம்பிரதாயம் வேதாந்த தேசிகரால் மேலும் விளக்கம் பெற்று ''வடகலை ஸம்பிரதாயம்'' என்னும் பெயருடன் இன்றுவரை திகழ்ந்து வருகிறது.

இவ்வளவு பின்னணிகளையும் முறையாக ஆராய்ந்து ஈடு வியாக்கியானம் தோன்றிய வரலாற்றை நமது நண்பர் டாக்டர். இரா. அரங்கராஜன் 'திருவாய்மொழிப் பேருரையாளர் நம்பிள்ளை உரைத்திறன்' என்னும் இந்நூலில் தெளிவுபடுத்து கிறார். இவ்வாராய்ச்சித் திறனைப்பாராட்டி மதுரை காமராசர் பல்கலைக்கழகம் அவருக்கு டாக்டர் பட்டம் வழங்கியுள்ளது. இந்நூலில் அரிய பல செய்திகள் முதன்முறையாகத் தமிழ் ஆராய்ச்சி அறிஞர்களுக்கு வெளிப்படுத்தப்பட்டுள்ளன. ஈடு ஏடுபடுத்தப்பட்ட காலம் சரித்திரச் சான்றுகளால் நன்கு தெளிவாக்கப்பட்டிருக்கிறது. இரு நூறு ஆண்டுகாலம் ஈடுமறைவாக ஓராண்வழியில் உபதேசிக்கப்பட்டதன் காரணத்தை ஆசிரியர் புலப்படுத்தியிருக்கிறார். மேலும் ஈடு, படி போன்ற சொற் பொருள் ஆராய்ச்சி அவருடையஆராய்ச்சித் திறனுக்குச் சான்று பகருகிறது. திருவாய்மொழிக்குத் தமிழ்ப் புலவர்கள் செய்த உரைகளைப் பற்றியும் அவற்றின் சில பகுதிகளை ஆசாரியர் கள் தம் வியாக்கியானங்களில் மேற்கோளாகத் தழுவியதைப் பற்றியும், அவ்வுரைகள் காலவெள்ளத்தைக் கடக்க முடியாது மறைந்து போனதுபற்றியும், இந்நூலாசிரியர் அரியமுடிவுகளைக் காட்டியிருக்கிறார். நம்பிள்ளையின் உரை உத்திகளைப் பற்றி

ஆசிரியர் மிக விரிவாக ஆராய்ச்சி செய்து எழுதியுள்ளது அவருடைய உழைப்பை வெளிப்படுத்துகிறது.

வியாக்கியானங்களில் காட்டப்படும் ஐதிஹ்யங்களை இவ்வாசிரியர் வகைப்படுத்தி ஆராய்ச்சி செய்து அரிய விளக்கங்களைத்தருகிறார், ஈட்டில் புதையுண்டிருக்கும்வரலாற்றுச் செய்திகளை எல்லாம் ஆசிரியர் வெளியுலகு காணும்படியாக இந்நூலில் எழுதியிருப்பது மிகவும் பாராட்டத்தக்கது. நம்பிள்ளையின் உத்தித்திறன், உரைத்திறன், ஆய்வுத்திறன் ஆகிய முத்திறன்களை முறையாக ஆராய்ந்து வெளிப்படுத்தி அவருடைய நடைவளத்தையும் சிறப்புறக் காட்டியிருக்கும் பகுதிகள் ஆராய்ச்சி அறிஞர்களுக்கு விருந்தாக அமைகின்றன. உபயவேதாந்த ஸம்பிரதாயத்தின் அடிப்படையாக அமைந்த உபயபாஷா ரூபமான மணிப்பிரவாளத்தின் தோற்றம் வளர்ச்சி பற்றி ஆசிரியர் தெளிவாகப் பலகருத்துக்களைத் தருகிறார். தமிழ்நூல் மேற் கோளாட்சி என்னும் பகுதியில் ஆசிரியர் கடலெனப்பரந்து கிடக்கும் ஈட்டில் மூழ்கி அரிய முத்துக்கள் போன்ற செய்திகளைத் திரட்டித் தருகிறார். இந்நூலைப்பின்பற்றி பெரியவாச்சான்பிள்ளை மணவாளமாமுனிகள் போன்ற ஆசாரியர்களின் பேருரைகளையும் விரிவாக ஆராய்ந்து நூல்களை வெளியிட்டால் தமிழ் உலகிற்கு உபகாரமாயிருக்கும்.

இந்நூலில் நம்பிள்ளையின் பல்துறைப் பயிற்சிகளும் விரிந்த மேதா விலாசமும் ஆழ்வாரிடத்தில் அவர் கொண்ட பக்தியும் நன்கு வெளிப்படுத்தப்பட்டுள்ளன. இவ்வரிய நூல் நம்பிள்ளையின் பேருரையான ஈட்டைக் கற்கும் பேரார்வத்தைத் தமிழறிஞரிடையே எழுப்பும் என்று எண்ணுகிறேன். அனைவரும் இந்நூலைப் பெற்றுப் பெரும் பயன் அடைவார்கள் என்று உறுதியாக நம்புகிறேன்.

இங்ஙனம்

S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்

னுக்கு மிக நெருங்கியவளான பெரிய பிராட்டியாரும் அவனைப் பற்றி நின்றே ஸத்தை (நிலை) பெறுகிறாள். ஆகையாலே 'சித்து' என்னும் தத்துவத்திலேயே சேர்க்கத்தக்கவள் என்பது இறைநிலையைப் பற்றிய ஆழ்வார்களுடைய தெளிவான கருத்து. திருமால் ஒருவனே உயிர்கள் வீடு பெறுவதற்குத் தக்க நெறியாவான். வீடு பேறு அடைவதற்கான உயிர்களின் முயற்சிகளும் அவர்களின் அசித்துக்களோடொத்த அடிமைப் பண்புக்கு முரண்படுகையாலே அவையாவும் தக்க நெறிகள் ஆக மாட்டா. அவற்றை எம்பெருமான் சாத்திரங்களில் நெறியாகக் காட்டியிருப்பதும் அவர்களைப் படிப்படியாக முன்னேறச் செய்து முற்கூறிய அடிமைப் பண்பினை உணரச் செய்வதற்கேயாம். ஆகையால் கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் முதலான முயற்சிகளும் எம்பெருமானுடைய ஸங்கல்பத்தால் ஏற்பட்ட செயற்கையான உபாயத்வத்தை (நெறியாம் தன்மை) உடையனவேயன்றித் 'தக்க நெறியாக மாட்டா' என்பது நெறியைப் பற்றிய ஆழ்வார்களது தேர்ந்த முடிவாகும். தகாத பயன்களை விரும்புவார்க்குத் தகாத நெறிகளைச் சாத்திரங்கள் விதிக்கின்றன. அவர்களையும் படிப்படியாக முன்னேற்றி மோக்ஷத்திலும் எம்பெருமான் அடையும் உகப்பே பயன் என்றும் அதைப் பெறுவதற்கு அவனுடைய இரக்கமே உபாயம் (தக்க நெறி) என்றும் உணர வைக்கவேண்டும் என்னும் கருத்தினாலேயே சாத்திரங்கள் தகாத பயன்களுக்குத் தகாத நெறிகளை உபதேசிக்கின்றன. மோக்ஷத்திலும் அடிமைப் பண்புக்குத் தகாத தாழ்ந்த மோக்ஷமான "கைவல்ய மோக்ஷம்" என்கிற ஆத்மாநுபவத்தை (தமது ஆத்மாவையே நுகர்வது) விரும்புவார்க்குச் சாத்திரங்கள் தகாத நெறிகளை விதிக்கின்றன. இவை பயன் எனப்படும் பேறு பற்றிய ஆழ்வார்களின் தேர்ந்த முடிபாகும்.

சில காலங்களின் மறைந்திருந்த ஆழ்வார்களின் பரம வைதிக சமயம் நாதமுனிகளின் காலம் முதல் மறுபடியும் விளக்கம் பெற்றது. எம்பெருமானார் காலத்தில் வெற்றிக் கொடி நாட்டியது. அவருடைய நியமனத்தால் அவரது இனிய சீடரான திருக்குருகைப் பிரான் பிள்ளான் திவ்வியப் பிரபந்தங்களில் தலையாய திருவாய்மொழிக்கு 'ஆறாயிரப்படி' என்னும் உரையிட்டு ஆழ்வார்களுடைய அபிப்பிராயங்களைச் சுருக்கமாக

விளக்கினார். அதற்குப் பின்னர் எம்பெருமானாருடைய பிர தான சிஷ்யரான கூரத்தாழ்வானின் திருக்குமாரராம் பராசர பட்டரின் சீடரான நஞ்சீயர் திருவாய் மொழிக்கு 'ஒன்பதினா யிரப்படி' என்னும் உரையிட்டும் திவ்வியப் பிரபந்தங்களில் வேறு சிலவற்றிற்கும் உரையிட்டும் ஆழ்வார்களின் கருத்துக் களைச் சிறிது விரிவாக விளக்கினார். நஞ்சீயர் காலம் வரையில் ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்களிடையில் மேற்கூறப்பட்ட தத்துவ ஹித புருஷார்த்த விஷயங்களில் கருத்து வேற்றுமைகள் விளைய வில்லை. நஞ்சீயர் காலத்துக்குப் பிறகு அவற்றில் கருத்து வேற்றுமைகள் விளையத் தொடங்கின. எனவேதான் ஆழ்வார் களின் கருத்துக்களை ஐயம் திரிபுகள் அற விளக்க வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டுவிட்டது. அந்தச் சூழ்நிலையில் திருவரங் கத்தில் நஞ்சியருக்குப்பிறகு மதத் தலைவராயிருந்த அவருடைய சீடரான நம்பிள்ளை தம்முடைய பேருரைகளின் மூலம் சொல் வழியாகத் திவ்வியப் பிரபந்தங்களின் பொருளைத் தம் சீடர்-களுக்கும் மற்றவர்களுக்கும் அமுதப் பெருக்கென வழங்கத் தொடங்கினார். அவருடைய சொற்பொழிவைப் பெருந்திர-ளாகக் கூடியிருந்து பொதுமக்களும் கேட்டனர்.

இந்நிலையில் நம்பிள்ளையின் ஆணையைப் பெற்று அவருடைய முக்கியமான சீடராயிருந்த பெரியவாச்சான்பிள்ளை திருவாய்மொழிக்கு 'இருபத்து நாலாயிரப்படி' என்னும் உரை யும் மற்ற திவ்வியப் பிரபந்தங்களுக்கும் வியாக்கியானமும் ஸ்ரீராமாயண தனிச்லோகம், ஸ்தோத்ரங்கள் கத்யத்ரயம் ரஹஸ் யங்கள் முதலியவற்றுக்கு வியாக்கியானமும் அருளிச் செய்தார். இன்றளவும் ஆஸ்திகர்கள் அனைவரும் இவரை 'வியாக்கியான சக்ரவர்த்தி' என்று கொண்டாடுகிறார்கள்.

நம்பிள்ளையின் மற்றொரு சீடரான வடக்குத் திருவீதிப் பிள்ளை திருவாய்மொழிக்கு நம்பிள்ளை ஆற்றிய சொற்பெருக் கை அப்படியே எழுத்துக்களில் வடித்தார். அதுவே பிற்காலத் தில் ''ஈடு முப்பத்தாறாயிரப் படி'' என்று பெயர் பெற்றது. இப்பேருரை மணவாள மாமுனிகளின் காலம் வரை சில கார ணங்களால் ரஹஸ்யமாகவே உபதேசிக்கப்பட்டு வந்து மாமுனி களால் உலகெங்கும் பரப்பப்பட்டது. இதற்குப் பல அரும்பத உரைகளும் ஏற்பட்டு இன்றுவரை ஸ்ரீவைஷ்ணவர்களிடையே

அனைவர்க்கும் முழுமையாகப் பயன்பட்டிலது. ஆராய்ச்சியாளர்க்கும் மரபு நெறியிற் பாடங்கேட்கும் மாணாக்கர்க்கு மட்டுமே அம்மொழியாக்க நூல் ஒரு கலங்கரை விளக்கெனத் திகழ்கிறது. மொழி நடையை எளிமையாக்கி விளக்கமுற வரையப்படும் உரை விளக்க நூல் தேவைப்படுகிறது. மூல உரை நூலான ஈட்டையும் உரை விளக்க நூலையும் அருகருகே வெளியிடும் நற்பதிப்பு நூல் விரைவில் வெளிவர வேண்டும். மூலநூலை அழியவிடாது போற்றிக் காக்கும் அரிய பணியாக அம் முயற்சி திகழும். எத்துணைதான் இடர்ப்பட்டு மொழி பெயர்த்து எழுதினும் மூல உரை நூலின் திட்ப நுட்பங்களையும் சொற் செறிவுகளையும் மொழி நடையினையும் ஓசை நயத்தினையும் மொழியாக்க நூல் முழுமையாக வெளிப்படுத்த முடியாது. ஈட்டைப் பல்காற் பயின்றவர்களுக்கே இவ்வுண்மை நிலை புரியும்.

இந் நிலையில் இரு மொழி வல்லுநர்களான ஆசிரியர்களிடம் வரன்முறையாகப் பல்லாண்டுகள் ஈட்டைப் பாடங் கேட்டு வந்த போது எழுந்த வேட்கையின் விளைவாகவே இந்நூல் உருப் பெறுகிறது. இஃது ஈட்டின் உரிமையாளரான நம்பிள்ளையின் பல்வகைத் திறன்களைப் புலப்படுத்தும் தொகுப்பாக நிறைவு பெறுகிறது. அத் தொகுப்பு நெடிது போகாதிருக்க, (1) நம்பிள்ளையின் வாழ்க்கைக் காலத்தில் உரைகளின் தோற்றம், (2) பிற உரைகளின் இடையில் ஈட்டின் சிறப்பிடம் (3) நம்பிள்ளையின் நால்வகைத் திறன்கள் என்றவாறு மூன்று கூறுகளாக்கிய வரையறைக்குள் இந்நூல் அமைக்கப் படுகிறது. நால்வகைத் திறன்களில் உத்தி, உரை, நடை, ஆய்வுத் திறன்கள் ஆகியவை விரிவாக இடம் பெறுகின்றன. மேலும் இந்நூல் இரு பகுதிகளில் அடக்கப் பெற்று ஏழு இயல்களில் இயங்குகிறது.

இந்நூல் உரை இலக்கியத் துறை ஆராய்ச்சியாக அமைகிறது. தமிழ் ஆராய்ச்சி உலகில் இலக்கண உரையாசிரியர்களைப் பற்றி ஓரளவு விரிவான ஆராய்ச்சிகள் நிகழ்ந்துள்ளன செவ்விலக்கியங்களாகக் (Pure Literature) கருதப்படும் சங்க நூல்களுக்கும் நடையிலக்கியங்களாகக் (Applied Literature) கருதப்படும் காப்பியங்களுக்கும் அறத்துறை இலக்கியங்களாகக் (Didactic Literature) கருதப்படும் திருக்குறள் போன்ற நீதி

நூல்களுக்கும் விரிவுரைகள் எழுதிய நச்சினார்க்கினியர், அடி-யார்க்கு நல்லார் பரிமேலழகர் போன்ற உரையாசிரியர்களைப் பற்றி அண்மைக் காலத்தில் விரிவான நூல்கள் வெளிவந்துள் ளன. மேலும் தமிழ் உரையாசிரியர்கள் அனைவரையும் ஒரு முகமாக ஆராயும் முயற்சியும் நடைபெற்றிருக்கிறது. அவ் வாராய்ச்சிகளில் நாலாயிர திவ்வியப் பிரபந்த உரையாசிரியர் களின் பங்கினைக் குறிப்பாகவும் சுருக்கமாகவும் சுட்டிக் காட்டு கின்றனர். ஆனால் முழுமையாக வைணவ உரையாசிரியர்கள் அனைவரையும் பற்றிய மதிப்பீட்டு ஆராய்ச்சியில் இப்போது தான் அறிஞர்களின் நாட்டம் விழத் தொடங்கியுள்ளது. அத் தகைய முயற்சிக்குஆக்கம் சேர்க்கும் முறையில் திவ்வியப்பிரபந்த உரையாசிரியருள் 'வியாக்கியான சக்ரவர்த்தி' என்று போற்றப் படும் பெரியவாச்சான் பிள்ளைக்கு ஆசிரியராகவும் வழிகாட்டி யாகவும் விளங்கிய நம்பிள்ளை அருளிச் செய்த பேருரையான ஈட்டைக் கற்பது பெரும் பயன் நல்கவல்லது. இதன் துணை கொண்டு மற்றைத் திவ்வியப் பிரபந்த உரையாசிரியர்கள் இயற்றிய உரைகளை ஒப்பிட்டு ஆராய்தல் எளிதாகிறது. எனவே இந்நூல் உரை இலக்கிய ஆய்வுத் துறையை நிறைவு செய்வதாக அமைகிறது. அத்துடன் இதுவரை புகப் பெறாத புதுத்துறையான வைணவ பக்தி இலக்கிய உரையாராய்ச்சித் துறையில் விளக்கம் நல்கி மேலும் தொடர் ஆய்வுகளுக்கும் இந்நூல் தொடக்க நிலமாகத் திகழ்கிறது.

## II

பேருரையாளரான நம்பிள்ளை (கி.பி. 1147-1252) திவ் வியப் பிரபந்தங்களில் கண்ணிநுண் சிறுத்தாம்பு, திருவிருத்தம் திருவாய் மொழி ஆகிய பிரபந்தங்களுக்கு விரிவுரை வரைந் திருக்கிறார். அதாவது நம்மாழ்வார் அருளிய முதல் பிரபந் தத்திற்கும் இறுதிப் பிரபந்தத்திற்கும் நம்மாழ்வாரைப் பொரு ளாகக் கொண்டு மதுரகவியாழ்வார் செய்த கண்ணிநுண் சிறுத் தாம்பு என்னும் முதற்குறிப்புப் பெற்ற பிரபந்தத்திற்கும் நம்பிள்ளையின் பேருரைகளான வியாக்கியானங்கள்தோன்றின. இம்மூன்று வியாக்கியானங்களிலும் முதலில் எழுந்த திருவாய் மொழிப் பேருரையே ஈடு என்று நேரடியாகச் சிறப்பிக்கப்படு கிறது. மற்ற இரண்டு வியாக்கியானங்களையும் அச்சொல்லால் உபசரித்து வழங்குகின்றனர்.

சொல் எளிமையும் பொருள் அருமைப்பாடுமாக அமைந்துள்ளன அவற்றிற்கு நம்பிள்ளைகண்ட அரியவுரைகளும்சில பாடல்களுக்கு அவர் காட்டும் நயவுரைகளும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. பாடபேத ஆய்வுக் கலையில் (Textual Criticism) நம்பிள்ளையின் சில கோட்பாடுகளும் அவர் கொள்ளும் பாடவேறுபாடுகளும் விளக்கப்படுகின்றன இறுதியாக நம்பிள்ளையின் பேருரையில் கருத்துக்களை நன்கு வெளிப்படுத்தும் வகையில் நகைச்சுவை புகுந்திருப்பதும் விரிவாகக் காட்டப்பட்டுள்ளது.

இரண்டாம் இயலில் நம்பிள்ளையின் உரைநடைத்திறனும் சொல்வளம் தொடர்வளம் உவமை வளங்கள் அவர் தம் நடையை வளப்படுத்துவதும் இரட்டுற மொழிதலாகிய சிலேடை நடை அவர்க்குரிய சிறப்பு என்பதும் விரிவாக விளக்கப்படுகின்றன. அதற்காக, மணிப்பிரவாள நடையின் தோற்ற வளர்ச்சி களைப் பொதுவாகவும் அந்நடை திவ்வியப்பிரபந்த உரையா சிரியர்களால் போற்றிக் கொள்ளப்பட்டதற்குரிய காரணங் களைச் சிறப்பாகவும் குறிப்பிட்டிருக்கிறேன். இதில் தமிழ்நாட்டு வைணவத்தின் உபய வேதாந்தக் கொள்கையின் தோற்றமும் வளர்ச்சியும் விளக்கப் பெறுகின்றன.

நம்பிள்ளை உரைநடையில் அரசியல், வணிகஇயல், உழவியல், பொதுவாழ்வியற் சொற்கள் மலிந்து செல்வாக்குப் பெறுகின்றன. நம்பிள்ளையே பல சொற்களையும் தொடர்களையும் புதுவதாக ஆக்கிக் கொண்டிருப்பதால் அவரது உரைநடையில் பல்வகைக் கவர்ச்சிகள் விருந்தாக மிளிருகின்றன. மேலும் அவரது உரைநடையில் நூற்றுக்கணக்கான உவமைகள் பொதிந்துள்ளன. இவையனைத்தும் வகைப்படுத்தி எழுதப்பட்டுள்ளன.

இறுதி இயற்கண் நம்பிள்ளையின் பல்திறத்து ஆய்வுத் திறன்கள் விரிவாக விளக்கப்பட்டுநம்பிள்ளை சிறந்த திறனியாகவும் (Critic) ஒப்பிலக்கிய ஆய்வாளராகவும் வரலாற்றுணர்ச்சி மிக்கவராகவும் சிறப்புறுவது அவருடைய பேருரைகளிலிருந்து ஆராயப்படுகிறது. நம்பிள்ளை தம்முடைய நூல் முழுமைப் பார்வையால் (Perspective view) அரிதிற் காட்டிய பல நுட்பங் களும் தமிழ் அகப்பொருள் மரபு பற்றி நம்பிள்ளை கொண்ட தனிக்கொள்கைகளும் அகப் பொருட் பாடல்களுக்கு அவர் வகுக்கும் உள்ளுறைகளும் இறுதியாகத் திருவாய்மொழிப் பாசுரங்களிலிருந்து அவர் வடித்துத்தரும் அரிய தத்துவக் கோட் பாடுகளும் நன்கு விளக்கமுற எழுதப்பட்டுள்ளது.

IV

இந்நூல் தமிழிலக்கிய ஆராய்ச்சியில் பெரிதும் நாட்ட முடைய தமிழன்பர்களுக்கு விருந்தாகப் படைக்கப்பட்டிருக் கிறது. அன்னவர்கள் இந்நூலைப் படித்துப் பார்த்தால் நம்பிள்ளையின் பெருமைகளை உளமாரப் போற்றுவார்கள்; தமிழ்ப்பேருரையாளர் வரிசையில் முதலிடம் அளித்துப் பெரு மிதம் கொள்வார்கள்; நம்பிள்ளையின் அருந்தமிழ்த் தொண் டினைப் பல்வகையாலும் பரவிக் களிப்புறுவார்கள் என்ற இந்த எதிர்பார்ப்புக்களோடு தான் இந்நூலை எழுதிமுடித்தேன்.

இறுதியாக ஒரு வார்த்தை. இந்நூலில் நம்பிள்ளை பயன் படுத்திய அரிய தொடர்களும் தமிழ் நடையும் மரபுச் சொற் களும் என்னையறியாது இயல்பாகவே இடம் பெற்றுவிட்டன. அதற்குக் காரணம் பேருரையான ஈட்டைப் பல்கால் படித்து நுகர்ந்ததுதான்!

நம்பிள்ளையின் திருவடிகளைப் போற்றி நிறைவு செய் கிறேன்.

பேராசிரியர்,
Dr. இரா. அரங்கராஜன், M. A., Ph. D.

*மதுரை—3*
*14—12—1986*



இரண்டாம் இயலில், திருவாய்மொழிக்குத் தமிழ்ச் சான்றோர்கள் எழுதிய பேருரைகளும் வைணவ சமய குரவர்களான ஆசாரியர்கள் பலரும் பல நூற்றாண்டுகளாகப் பேணிக்காத்து வந்த வாய்மொழிப் பொருளாட்சிகளும் (Oral tradition) நம்பிள்ளையின் பேருரையான ஈட்டில் சேமிக்கப்பட்டதும் அவற்றையெல்லாம் தன்னகப்படுத்திய ஈட்டின் தனிநிலையும் விரிவாக விளக்கப்படுகின்றன. இவையாவும் பல உண்மைகளை அறிஞர் உலகிற்கு வெளிப்படுத்தும் முதல் முயற்சியாக மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. தனித் தமிழரின் திருவாய்மொழிப் பேருரைகளைப் பற்றிய அரிய செய்திகள் வெளிப்படுத்தப் பட்டுள்ளன. அவர்களில் இருவர் ஆராய்ச்சி உலகிற்கு அறிமுகம் செய்யப்படுகின்றனர்.

நம்பிள்ளையின் பேருரையை 'ஈடு முப்பத்தாறாயிரப்படி' என்று வழங்குகின்றனர். இத் தொடரில் வரும் ஈடு முப்பத்தாறாயிரம், படி என்ற சொற்களைப் பற்றிய விளக்கங்களில் சிக்கல்கள் எழுந்துள்ளன. அவற்றை ஆராய்ந்து உண்மைப் பொருள் தெளிவுறுத்தப் படுகிறது.

இறுதியாக, ஈட்டுரை இருநூறு ஆண்டுகள் ஓராண் வழியாக மறைத்துக் கற்பிக்கப்பட்ட சூழ்நிலையும் பிறகு அவ்வுரையை ஊரும் நாடும் உலகமும் கற்று உய்யுமாறு மணவாள மாமுனிகள் வெளிப்படுத்திய வரலாறும் அப்பெரியார் காலத்தில் தோன்றிய ஈட்டின் அரும்பதங்களைப் பற்றிய அரிய செய்திகளும் இவ்வியலில் இடம் பெறுகின்றன.

மூன்றாம் இயலில், நூலின் கருவான பகுதி இடம் பெறுகிறது. நம்பிள்ளை தம் பேருரையில் கருத்துவிளக்கக் கருவியாகக் கொண்ட சிறப்பு உத்திகள் (Techniques of Commenting) காட்டப்படுகின்றன. மஹாப் பிரவேசம் என்று குறியிடப் படும்உரைப்பாயிரம்,பதிகங்களுக்குமுன்மொழியப்படும்அவதாரிகைகள், இயைபுகள் ஆகியன பற்றி முதன் முதலாக விரிவான முறையில் பல அரிய செய்திகள் திரட்டப்படுகின்றன. அடுத்து, சுருதிச் சாயை, சாமானாதிகரணியம் (ஒரே வேற்றுமையிற் படித்தல்) என்ற உத்திகளால் திருவாய்மொழியைத் தமிழ் வேதம் என்ற உயரிய நிலைக்கு உயர்த்தி உரைகாரரான நம்பிள்ளை உணர்த்திய உண்மைகள் காட்டப்படுகின்றன.

இறை நுகர்ச்சி வெளிப்பாடான திருவாய்மொழிக்கண் மேலெழத் தோன்றும் முரண்களை நம்பிள்ளை இணைக்கும் சிறப்பு உத்திகளும் பதிகத்தின் பொதுக்கருத்தா? அன்றிச் சொற் சுவைக்கண்விளையும் சிறப்புப் பொருளா? என்ற உரைச்சிக்கல் எழுகின்ற இடங்களில் நம்பிள்ளையின் முடிபுகளும் பலசான்று களால் விளக்கப்பட்டுள்ளன.

நம்மாழ்வாரின் அகத்தே பாசுரங்கள் புணர்ப்புண்ட போது எழுந்த அக நினைவுகளையும் கற்பனை உரையாடல் களையும் வினாக்களையும் சொற்களின் தொடர் விழுக்காட்டின் அழகுகளையும் நம்பிள்ளை வெளிக்கொணரும் உரை உத்திகள் விரிவாக விளக்கப்படுகின்றன.

இவ்வியலில் முதன் முறையாக நம்பிள்ளை தம் இசைப் புலமையாலும் கூத்தியற் கலை அறிவாலும் திருவாய் மொழித் தொடர்களில் ஆழ்வாரின் குறிப்புகளை நன்கு விளக்கியிருப்பதைப் பல சான்றுகளைக் கொண்டு காட்டியுள்ளேன்.

நான்காம் இயலில் தமிழிலக்கண மரபுகள், தமிழகத்தின் மக்கள் வழக்குகள், அரசியல் வழக்குகள் ஆகியவை அடிப்படை உத்திகளாகக் கொள்ளப்பட்டு நம்பிள்ளையால் உரைத்தெளிவு வழங்கப்படுவது சிறப்பாக உணர்த்தப்படுகிறது. இவற்றுடன், வடமொழி இலக்கண மரபுகளைத் தமிழ்த் தொடர்களுக்கு ஏறிட்டுப் புதிய உரைஉத்தியை உரையுலகிற்கு வழங்கியவர் நம்பிள்ளை என்பதும் விளக்கப்படுகிறது.

இரண்டாம் பகுதி முதல் இயலில் நம்பிள்ளை தாம் கூறப்புகும் விளக்கங்களை வெளிப்படுத்தும் திறன் (Method of exposition) விளக்கமாக எழுதப்பட்டுள்ளது. முதற்கண், அதற்கு நம்பிள்ளையின் பழந்தமிழ் இலக்கியப் பயிற்சி பயன் பட்டமுறை விரிவாக ஆராய்ச்சி செய்யப்பட்டிருக்கிறது. விரிந்து பரந்து கிடக்கும் ஈட்டில் பழந்தமிழிலக்கிய மேற்கோள்களைத் திரட்டி அவை பிரமாணங்களாக ஆளப்பட்டதிறன் முதன் முறையாக இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது. அடுத்து, திவ்வியப் பிரபந்தப் பேருரைகளின் தனிச்சிறப்பான 'ஐதிஹ்யங்கள்' எவ் வாறு உரை விளக்கக் கருவிகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதும் அவற்றைச் செய்திகள், வார்த்தைகள், வினாவிடை கள் என்று மூவகைப்படுத்தி ஆய்வு செய்து புது உண்மைகள் காட்டப்படுகின்றன. திருவாய் மொழிப் பாடல்களிற் சில

திருவாய் மொழிக்குத் தோன்றிய வியாக்கியானங்கள் ஐந்து. அவற்றில் காலத்தால் முற்பட்டது திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்பவர் (கி.பி. 1068) எழுதிய ஆறாயிரப் படியாகும் இதுவே வைணவ உரைநடை இலக்கியங்களில் முதலில் தோன்றிய மணிப்பிரவாள உரைநடை நூல் ஆகிறது. திருவாய் மொழிக்கு இறுதியாகத் தோன்றிய வியாக்கியானம் வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் என்பவர் எழுதிய பன்னீராயிரப் படியாகும். இடைப்பட்ட மூன்று வியாக்கியானங்களில் நஞ்சீயர் (கி.பி. 1113–1208) என்பவர் அருளிச் செய்த ஒன்பதினாயிரப் படியை அவர்தம் மாணாக்கரான நம்பிள்ளையே தம் நினைவிற் கொண்டு எழுதினார். பெரியவாச்சான் பிள்ளை (கி.பி. 1167–1262) செய்த இருபத்து நாலாயிரப்படியும் தம் ஆசிரியரான நம்பிள்ளையின் சொற்பொழிவுகளைக் கேட்டு அவரது ஆணை கொண்டு எழுதியதாகும். வடக்குத் திருவீதிப் பிள்ளை (கி. பி. 1167— 1264) எழுதி உதவிய ஈடு முப்பத்தாறாயிரப்படியும் நம்பிள்ளை செப்பு நெறிதன்னை ஒரு கால் ஒரு கொம்பு ஒரு சுழி ஏற்ற இறக்கமின்றிப் பட்டோலை கொள்ளப்பட்டதாகும். ஆதலால் இடைப்பட்ட இம்மூன்று வியாக்கியானங்களும் நம்பிள்ளையின் சொல்லையும் சொற்பொருளையும் தழுவி ஒரே சாயலாக அமைந்தன. இம்மூன்றினுள்ளும் நம்பிள்ளை சொல்லக் கேட்டுக் கேட்டது கேட்டபடியே ஏட்டிலெழுதப்பட்ட ஈடு வியாக்கியானமே பலராலும் ஆழ்ந்து கற்கப்படுகிறது. அவ்வொரு வியாக்கியானத்தைக்கற்று நோக்கினால் மற்றவற்றைக் கற்பவர்களுக்கு அது பல விளக்கங்களை அளிக்கும். ஈண்டு, திருவாய்மொழி வியாக்கியானங்கள் தோன்றிய பிறகே திவ்வியப் பிரபந்தத்தின் பிற நூல்களுக்கு வியாக்கியானங்கள் எழுந்தன என்பது நினைவிற்கொள்ளத்தகும். ஆதலால் இந்நூல்எழுதுவதற்கு நம்பிள்ளை அருளிய ஈடு முப்பத்தாறாயிரப்படியே அடிப்படைச் சான்று நூலாகக் கொள்ளப்பட்டது.

நம்பிள்ளையின் ஈடு முப்பத்தாறாயிரப் படியும் மற்ற நான்கு வியாக்கியானங்களும் 'பகவத் விஷயம்' என்ற தலைப்புடன் திருவாய் மொழி மூலத்துடனும் சீயர் அரும்பதவுரையுடனும் ஸ்ரீ. உ. வே. சே. கிருஷ்ணமாசாரியார் அவர்களால் இ. பி. 1925 ல் சிறந்த பதிப்புகளாக வெளிவந்தன இப்பதிப்பு பத்துத் தொகுதிகள் அடங்கியது. அத்தொகுதிகளே இந்நூல்

எழுதுவதற்கு அடிப்படைச் சான்று நூல்களாகக் கொள்ளப் பட்டன. 'பகவத் விஷயம்' பிற பதிப்புக்களும் ஈட்டின் தமிழாக்கமும் இந்நூல் வரைவதற்குப் பெரிதும் துணை செய்தன.

நம்பிள்ளையின் ஈட்டை எழுதிவுபகரித்த வடக்குத் திரு வீதிப்பிள்ளையின் மைந்தர்களான பிள்ளை லோகாசாரியரும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் இயற்றிய நூல்கள் ஈட்டைக்கற்று ஆராய்ச்சி செய்வதற்குப் பெரிதும் பயன்பட்டன. அவற்றுள் ஸ்ரீ வசன பூஷணம், ஆசார்யஹ்ருதயம் என்ற இரு நூல்களையும் தலையாய சான்றுகளாகத் தழுவியுள்ளேன். இவற் றோடு மணவாள மாமுனிகள் (கி. பி 1370- 1443) அருளிய உப தேசரத்தினமாலை மற்றும் அவரிட்டவியாக்கியானங்களும் பெரிதும் போற்றிக் கொள்ளப்பட்டன.

III

நம்பிள்ளையின் பேருரையைக் கற்பவர்கள் முதற்கண் அவ் வுரையில் நம்பிள்ளையைப் பற்றிய வாழ்க்கைச் செய்திகளும் இடம் பெறுவதைக் காண வியப்பு எய்துவார்கள். அதனால் உரையாளரான நம்பிள்ளையின் வாழ்வு நலத்தை அறிந்து கொள்ளும் வேட்கை எழுவது இயல்பு. எனவே நம்பிள்ளையின் வாழ்க்கைச் சிறப்பு முதலில் இந்நூற்கண் விளக்கப் படுகிறது. அதையொட்டி நம்பிள்ளையின் காலம் தெளிவாகவும் அறுதி-யாகவும் நிறுவப்படுகிறது. அதனால் மணிப்பிரவாள உரை மலர்ச்சியில் காலத்தின் செல்வாக்கைப் புரிந்து கொள்ள முடி கிறது. நம்பிள்ளையின் காலத் தெளிவே மற்றைய வைணவ ஆசார்யர்களின் காலக் கணிப்பிற்கு அடிப்படையாகும். காலக் குறிப்பைத் தொடர்ந்து, நம்பிள்ளையின உள்ளத்தில் ஆழ்வார் பாசுரங்களுக்குப் பேருரைவரையும் திறன் எவ்வாறு எவரால் விதைக்கப்பட்டது, எவ்வாறு எவரால் வளர்க்கப்பட்டுப் பயன் கொள்ளப்பட்டது என்ற அரிய செய்திகள் காட்டப்படுகின்றன. அடுத்தபடியாக, நம்பிள்ளை தாமே திருவாய்மொழிக்குப் பேருரைகளைத் தோன்றும்படி செய்த சூழ்நிலைகள் விளக்கப் பட்டு நம்பிள்ளையின் வாழ்க்கை திருவாய்மொழிப் பேருரை-களோடு ஒன்றி நிலை பெற்ற தன்மை உணர்த்தப்படுகிறது. இறுதியாக நம்பிள்ளையின் நற்பண்புகள் அகச் சான்றுகளைக் கொண்டே தொகுக்கப்பட்டு அவரே திருவாய் மொழிக்குத் தகும் உரைகாரர்' ஆகிறார் என்பது தெளிவுறுத்தப்பட்டுள்ளது

## நன்றியுரை

நம்பிள்ளை திருவாய்மொழிக்கு இயம்பிய பேருரையான ஈட்டை வரியடைவே வரன்முறையாகக் கற்பித்த பெருமகனார் விஞ்சிமூர் ஸ்ரீ. உ. வே. வித்துவான் ஸ்ரீநிவாசாசாரியார் திறத்தில்பெருநன்றிக்கடன் பட்டிருக்கிறேன். அவர் வாயிலாகப் பேரறிஞர்களாய்த் திகழ்ந்த காரப்பங்காடு வேங்கடாசாரியார், மதுரைத் தமிழ்ச்சங்கம் திரு நாராயணய்யங்கார், அப்பனையங்கார் ஆகியோருடைய பொருளாட்சிகளும் புலமைக்குறிப்புகளும் அடியேன்பாற் சேர்ந்தன. ஈட்டைக் கற்பித்த அப்பெருமகனார்க்குத் 'தலையல்லால் கைம்மாறு' ஒன்றுங் கண்டிலேன்.

வைணவ சமய மரபு நூல்களான முமுட்சுப்படி, ஸ்ரீவசன பூஷணம், ஆசாரிய ஹிருதயம், தத்துவத்திரயம் ஆகியவற்றை முறையாகப் பாடங்கற்பித்தும் வியாக்கியானங்களில் இழிந்த இடமெல்லாம் துறையாகும்படி தெளிவைப் பிறப்பித்தும் வழிகாட்டிய வித்துவான் ஸ்ரீ. உ. வே. வீரராகவையங்கார் ஸ்வாமி அவர்களிடத்துப் பெருநன்றியுடையேன்.

என்பால் ஆராய்ச்சி உணர்வை ஊட்டி வளர்த்த பெருந்தகையாளரான மகாவித்துவான் பிரதிவாதி பயங்கரம்ஸ்ரீ உவே அண்ணங்கராசாரியாரின் திருவடி மலர்கள் எப்போதும் என் சென்னிக்கு அணியாகத் திகழும். தொண்ணூறு பிராயத்துத் தளர்ந்த நிலையில் படுத்த படுக்கையிலும் என்னை அருகிருத்திப் பல ஐயப்பாடுகளை அகல்வித்த அப்பெரியாரின் எளிமையை நினைத்து ஊற்றின்கண் நுண்மணல் போல் நீராய் உருகி நிற்கிறேன்.

நம்பிள்ளைஈட்டைக் கற்று இந்நூலை வரையத்தொடங்கும் போது நல்லாசிகளை வழங்கிப் பல்லாற்றானும் நல்லாற்றுப் படுத்தி இவ்வரிய முயற்சியில் அடியேனைப்பணிகொண்ட திருமலை திருப்பதி பெரிய கேள்வி ஸ்ரீமத்பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யராய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத்சுந்தரராமாநுஜ பெரிய ஜீயர் ஸ்வாமி திருவடிமலர்கள் அடியேன் சென்னிக்கு அணியாக எஞ்ஞான்றும் திகழ்ந்து கொண்டிருக்கும்.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் டாக்டர்பட்டத்திற்காக இந்தநூலை உருவாக்கி வரைந்தபோது அரிய பல

விளக்கங்களை நல்கி அறிவியல் அடிப்படையில் நெறிப்படுத்திய பேராசிரியர் டாக்டர் கோ. விசயவேணுகோபால் அவர்கட்குப் பரிதும் நன்றிகூறும் கடப்பாட்டையுடையேன்.

அடுத்து எனக்குத் தமிழ் கற்பிக்கும் நெறியைப் புகட்டிய பேராசிரியரும் எந்தைபோல் என்பால் பரிவுடன் ஆய்வு நெறிகளை முறைப்படுத்திப் பல திருத்தங்களை விளக்கமுறுத்தியவருமானடாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்களுக்கு நன்றியை நெஞ்சுருகித் தெரிவிக்கிறேன்.

இறுதியாக எனக்குத் தமிழிலக்கண உரையாசிரியர்களின் உரைநுட்பங்களைத் தெளிவுறுத்திய மதுரையாசிரியர் பண்டித ஆ. சிவசுப்பிரமணிய அய்யர் அவர்கட்கு என் நன்றியுணர்வுகளை உரிமையாக்கிக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு அணிந்துரைவழங்கிய பேரறிஞர் ஸுதர்சனர் ஸ்ரீ உ. வே. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் **M.A.,B .L** தமிழ்ப் பேருலகிற்கு ஆற்றி வரும் அரிய பணிகள் மிகவும் போற்றத்தக்கன. 'பாலேய் தமிழர்' என்று நம்மாழ்வாரால் போற்றப்படும் அரிய தொடர்க்கு இன்று நம்மிடையே பொருத்தமுற வாழ்ந்து வரும் பெரியார் ஸுதர்சனர். இஃது புகழ்ச்சி புனைந்துரைகளல்ல; உண்மையுரை என்பதைத் தமிழ் உலகம் நன்கு அறிந்து வைத்திருக்கிறது. ஸுதர்சனர் ஆழ்வார்களின் பாசுரங்களுக்கு விளக்கவுரை வரைவதில் பெரியவாச்சான் பிள்ளையை நிகர்க்கிறார்; சங்கத்துச் சான்றோரின் கடவுட் கொள்கையை நிலைநிறுத்தி வரைவதில் அஞ்சா நெஞ்சம் படைத்தவராகிறார்; கம்பநாடரின் சமயக் கருத்துக்களைத் தெளிவாக்குவதில் தீரம் மிகுந்தவராகிறார். திருமால் திரு நெறி தலைக்கொண்ட திருவாளரான ஸுதர்சனர் அந்நெறி தழைத்தோங்க அயராது உழைக்கிறார். அன்னாரின் திருவடிகளில் நெஞ்சுகனிந்த நன்றி மலர்களை மாலையாகப் புனைந்து அணிவிக்கிறேன்.

இந்நூல் அச்சு உருவில் அழகிய புத்தகமாக வெளிவருவதற்கு அன்பர்களும் அரிய நிறுவனங்களும் ஆற்றிய பேருதவிகளை நெஞ்சகம்பால் நீடு நினைந்து போற்றும் கடப்பாடு பெரிதும் உடையேன்

திருமலை-திருப்பதி தேவஸ்தானம் முந்துறமுன்னம் உதவிக்கரங்களை நீட்டி நிதி வழங்கி உதவிபுரிந்த செயலை உள

மார நினைத்து நன்றி பாராட்டுகிறேன். அதேபோன்று அறச் செயல்பல ஆற்றிவரும் டி. வி. எஸ். நிறுவனத்தின் சுந்தரம் சாரிட்டீஸ் அறக்கொடையாளரும் நிதிவழங்கி எளியேனை இப்பணியில் ஈடுபடுத்தினர். அவர்களுக்கு என்றும் நன்றியுடையேன். மேலும் இப்பணியின் தொடக்க காலத்திலேயே நிதித் துணை நல்கிய நிறுவனங்களான,

ஸ்ரீ கருமுத்து தியாகராஜஞ் செட்டியார் சாரிட்டீஸ்,
கப்பலூர் மதுரை.

ஸ்ரீ காகுமானி ஆதிகேசவுலு செட்டி சாரிட்டீஸ்,
சென்னை - 29

நாராயண, குருவைய செட்டி எஸ்டேட் அண் சாரீடீஸ்,
சென்னை-1

அல்லத்தூர் நாதமுனி செட்டி சாரிட்டீஸ், சென்னை 5 என்ற அறக்கொடை நிறுவனங்களின் அறங்காவலர்களுக்குப் பெரிதும் நன்றியுடையேன். சிறப்பாகக் கப்பலூர் தியாகராசர் ஆலை அதிபர் திரு. கருமுத்து தி. கண்ணன் அவர்களுக்கும் சென்னைஸ்ரீ நாதள்ள N. ஆதிகேசவுலு குப்தா அவர்களுக்கும் நன்றி பாராட்டக் கடமைப்படுகிறேன்.

இந்நூலை அச்சிட்டு வெளியிடுவதற்கு இசைவளித்த மதுரை காமராசர் பல்கலைக் கழகத்திற்கும் அழகுற இந் நூலை அச்சிட்டு அருந்துணை நல்கிய மதுரை, கோனார் அச்சகத்தினர்க்கும் இறுதியாக நன்றியுரைகளை உரிமையாக்கு கிறேன்.

## சுருக்கக் குறியீடுகளின் விளக்கம்

| | | |
|---|---|---|
| தி. ப. | — | திருப்பல்லாண்டு |
| பெ. ஆ. திரு. | — | பெரியாழ்வார் திருமொழி |
| தி. பா. | — | திருப்பாவை |
| நாச். திரு. | — | நாச்சியார் திருமொழி |
| பெரு, திரு. | — | பெருமாள் திருமொழி |
| தி. ச. வி. | — | திருச்சந்த விருத்தம் |
| தி மா. | — | திருமாலை |
| தி. ப. எ. | — | திருப்பள்ளி எழுச்சி |
| அ. பி. | — | அமலனாதிபிரான் |
| க. நு. சி. | — | கண்ணிநுண் சிறுத்தாம்பு |
| பெரி. திரு. | — | பெரிய திருமொழி |
| தி. கு. தா. | — | திருக்குறுந்தாண்டகம் |
| தி. நெ. தா. | — | திருநெடுந்தாண்டகம் |
| தி. வா. மொ. | — | திருவாய் மொழி |
| மு. தி. அந். | — | முதல் திருவந்தாதி |
| இ. தி. அந். | — | இரண்டாம் திருவந்தாதி |
| மூ. தி. அந். | — | மூன்றாம் திருவந்தாதி |
| நா. தி. அந். | — | நான்முகன் திருவந்தாதி |
| திரு. விரு. | — | திருவிருத்தம் |
| தி. ஆ. | — | திரு ஆசிரியம் |
| பெ. தி. அந். | — | பெரிய திருவந்தாதி |
| தி. எ. கூ. | — | திரு எழு கூற்றிருக்கை |
| சி. தி. ம. | — | சிறிய திருமடல் |
| பெ. தி. ம. | — | பெரிய திருமடல் |
| இரா. நூ. | — | இராமானுச நூற்றந்தாதி |
| உ. தே. ர. | — | உபதேசரத்தின மாலை |
| ஆ. கு. ப. பி. | — | ஆறாயிரப்படி குருபரம்பராப் பிரபாவம் |
| ப. கு. ப. பி. | — | பன்னீராயிரப்படி குருபரம் பராப் பிரபாவம் |
| பெ. தி. அ. | — | பெரிய திருமுடி அடைவு |
| வி. மோ, நி. | — | விலக்ஷண மோக்ஷாதிகாரி நிர்ணயம் |

| | | |
|---|---|---|
| பெ. வா. பி. | — | பெரியவாச்சான் பிள்ளை |
| ம. மா. | — | மணவாள மாமுனிகள் |
| பி. லோ. சீ | — | பிள்ளை லோகஞ்சீயர் |
| சீ. அ. | — | சீயர் அரும்பதம் |
| ஸ்ரீ வ. பூ | — | ஸ்ரீவசன பூஷணம் |
| ஆ. ஹிரு. | — | ஆசாரிய ஹிருதயம் |
| வியா. | — | வியாக்கியானம் |
| சே. கி. | — | சே. கிருஷ்ணமாச்சாரியர் |
| பு. ரா, பு | — | பு. ரா. புருஷோத்தம நாயுடு |
| எஸ், கி. ஐ. | — | எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் |
| ஸ்ரீவை. கி. மு. சபை | — | ஸ்ரீ வைஷ்ணவ கிரந்த முத்ராபக சபை |
| ம. பி. (1) | — | மகாப்பிரவேசம் ஒன்று |
| ம. பி. (2) | — | மகாப்பிரவேசம் இரண்டு |
| ம. பி. (3) | — | மகாப்பிரவேசம் மூன்று |
| தொல். | — | தொல்காப்பியம் |
| கலித் | — | கலித்தொகை |
| பெருங். | — | பெருங்கதை |
| பு. வெ. மா. | — | புறப்பொருள் வெண்பா மாலை |
| பிரு. உப. | — | பிருகதாரணிய உபநிடதம் |
| தைத். உப. | — | தைத்திரிய உபநிடதம் |
| சாந். உப. | — | சாந்தோக்கிய உபநிடதம் |
| ப. ஆ. | — | பதிப்பு ஆசிரியர் |
| மொ. பெ. ஆ. | — | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| உ. ஆ. | — | உரையாசிரியர் |
| மு. நூ. | — | முந்துநூல் |

## மேற்கோள்களில் வரும் வடசொற்களின் பொருள் விளக்கப்பட்டியல்

பகுதி I இயல் (2)

சிட்டர் — சீரியோர்
அந்வயம் - வினைமுடிவு
அர்த்தவாதம் — புனைந்துரை
பகவத் ப்ரபாவம் — இறைப் பெருமை
சப்தார்த்த நிர்ணயம்— சொற் பொருள் அறுதியிடல்
சாதித்தல் — நிறுவுதல்
கிரந்தஸ்தமாக —நூலில்இடம் பெற
ஔதார்யம— வள்ளன்மை
ரக்ஷணம் —காப்பு
தாரகம்—ஆதாரம்; நிலைபேறு
அனுகுணமாக — பொருந்து மாறு
த்ருஷ்டாந்தம் — எடுத்துக் காட்டு
பரபக்ஷப்ரதிக்ஷேபம் -- பிறன் கோள் மறுத்தல்
நியாயம் — அளவைநூல்
மீமாம்சை — மேற்கோளால் உண்மை அறிதல்
பிராப்யம் — அடையத்தக்கது
பிராபகம்- அடைவிக்கும்நெறி
ஸந்தானம் — வழியினர்
கூடமாய் — மறைவாய்

இயல் (3)

சிரியப்பதி —திருமகள்கேள்வன்
ப்ரக்ரியை — முறைமை
ஆஹ்நிகத்ரயம் — வட மொழி மஹாபாஷ்யம் விரித்துரைப் போர் முதல்நாள் விரிவை மறுநாள் மறுமொழிகலாக மூன்றுநாள் நிகழ்ச்சி.
தத்துவதரிசி —மெய்ப்பொருள் கண்டவர்
புருஷார்த்தம் — உறுதிப் பொருள்
ஐசுவரியம் — செல்வம்
கைவல்யம் -- தனியான ஆன்ம நுகர்ச்சி
பாஹ்ய ஸம்ச்லேஷ அபேக்ஷ — புறத்தே கலவி நிகழ்த்த வேட்கை
அவஸாத அதிசயம் — துன்பின் மிகுதி
குணசேஷ்டிதம் — பண்புச் செயல்கள்
உபக்ரமிக்கிறார் — தொடங்கு கிறார்
ஹிதம் — நன்மை
ஸர்வாதிகாரம் -- எல்லாரா லும் பற்றற்கு உரிமை
அபிமதவிஷயம் காதலி
மூலப்ரக்ருதி—மூலப்பகுதி
நிர்தேசம் — குறிப்பு
புரோடாசம் -- அவியுணவு
கரணம் -- பொறிகள்
பிரவணம் —படிதல்
விஸ்மிதராகிறார் — வியக்கிறார்
தமஸ் — இரவு

அபிமதவிச்லேஷம் — காதலியைப் பிரிதல்

விப்ரலம்பகர் — வஞ்சகர்

விரஹம் — பிரிவு நோய்

பகவத் ப்ரஸாதலப்தமான — இறையருளால் பெறப்பட்ட

சக்ஷுர் மூலமாக—கண்கள் வழியாக

ஸ்வர வசனவ்யக்திகளாலே — இசை உரைகளாலே

சேஷ்டிதங்கள் — செயல்கள்

ஆகர்ஷகமாக — கவர்ச்சியாக

நிருத்தலக்ஷணம் — நாட்டிய இலக்கணம்

அனுகரித்தல் — போலச் செய்தல்

பாவபந்தம் — அன்புத் தளை

பரிஹாரம் — கழுவாய்

அனுவாதம் — வழிமொழிதல்

பிரளயம் — ஊழி

ஆர்த்தி — துயர்

விபூதி — செல்வம்

விரோதி நிரஸனன் - பகையை அழிப்பவன்

ஸம்பாவனை - நிகழ்வு

அனன்யார்ஹமாக — பிறர்க்கு உரிமையில்லாத படி

உக்தி — சொல்

க்ரியா பர்யந்தமாக — செயல் அளவாக

அனுகூல பாஷணம் — நன்மையான பேச்சு

அனுகூலதர்சனம் — நன்மையான பார்வை

உத்தேச்யபூமி — குறியாகக் கொள்ளப்பட்ட இடம்

பிரதிபக்ஷநிரஸனம் — மறுதலையை அழித்தல்

ஸாத்ய பக்தி — பயனான பக்தி

ஸாதனபக்தி — கருவியான பக்தி

அபத்தம் — பொருத்தமின்மை

சாதனம் — கருவி

## இயல் (4)

பிரகரணம் — அதிகாரம்

மதுஸ்யந்தி — தேனைப் பெருக்கும்

நிரதிசயமான — உயர்வறவுயர்ந்த

ஸம்ஸாரி சேதனர் — பிறவிக் கடலில் வீழ்ந்த உயிரிகள்

சப்தாதிகள் — சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்

க்ஷுத்ரதேவதைகள்— சிறு தெய்வங்கள்

அபவ்யமானால் — பணிவில்லையானால்

யுவாக்கள் — இளையோர்

லீலோபகரணங்கள் — விளையாட்டுக் கருவிகள்

ஸர்வக்ஞன் — முற்றறிவினன்

அனந்தரம் — அடுத்து

வர்ஷஜலம் — மழைநீர்

உபபாதித்தல் —பொருத்துதல்

க்ஷாமகாலம் — வறுமைக் காலம்

பஹுப்ரஜனானவன்—நிறைய மக்களைப் பெற்றோன்

கிருஷி — உழவுத் தொழில்

கிராமணிகள் — கிராமத் தலைவர்கள்

திரவ்யார்ஜனம் — பொருளீட்டல்
வர்த்தியா நின்றால் — வாழ்ந்தால்
அபாச்ரயம் — காப்பான இடம்
பீதனாய்— அச்சமுற்றோனாய்
அர்த்தம் — பொருள்
அஹம் சப்தம்— நான் என்னும் சொல்
அசேனதகிரியாகலாபம்— அறிவில்லாத செயல் வடிவான வினைகள்
பரிகரம் — துணையாளர்
ம்ருத்யு — இறப்பு
பித்ராதிகள் — தந்தை முதலியோர்
ஆச்ரயம் — புக்கிடம்
பிரஸ்துதமான — நிகழ்கையான
ரக்ஷ்யன் — காக்கப் படுவோன்
அச்ரோத்ரியன் வேதமோதாதவன்
விபக்தி — உருபு
பிரமேயம் — கருத்து
ருஷபம் — எருது
அவயவசோபை — உறுப்பு நலன்
அவாங்முகியாய் — தலை கவிழ்ந்தவனாய்
ப்ரீதிப்ரகர்ஷம் — மகிழ்ச்சி மிகுதி
ஸ்மிதம் — புன்முறுவல்
சிரேஷ்டம் உயர்ந்தது

பகுதி II இயல் (1)

பிரதிகூலித்தார் — பகைவர்
அனுகூலித்தார் — நட்பினர்
கிருதக்கிருத்தியர் — செய்ய வேண்டுவன வற்றைச் செய்து முடித்தோர்
கர்த்தவ்ய சேஷம் — செய்ய வேண்டியவற்றுள் எஞ்சியவை
ரக்ஷ்ய வர்க்கம் — காக்கப்பட வேண்டிய இனம்
போகப்ரகாரம்- நுகர்வகைகள்
அபசாரம் — பெரியோர்ப் பிழைத்தல்
சங்கிக்க — ஐயுற
ஸௌமனஸ்யக்குறைவு—மனப் பொருத்தமின்மை
பிராசங்கிகம் — இடையில் பொருத்தமுறச் சேர்த்தல்
அந்திம தசை — இறுதிக்காலம்
விஜயஸ்வ, விஜயீபவ வெல்க!
அப்ரீதி — வெறுப்பு
யோஜனா பேதம் — பொருண் முடிவில் வேறுபாடு
ஸூக்ஷ்மமான — நுண்ணிய
பரிச்சேதித்தல் — அளவிடல்
பரிபூதராவர் — இகழப்படுவர்
விபாகம் — வேறுபாடு

இயல் (2)

ஸம்பாவனை — பரிசு
ஆச்ரயண வஸ்து — அடையத் தக்க பொருள்
தர்சனம் — சமயம்
சித்து — ஆன்மா
அசித்து—ஆன்மா அல்லாதன
ஈசுவரன் — இறைவன்
குணத்ரயாத்மகமாய்— மூன்று பண்புகளுக்கு நிலைக்களனாக
விபுவாய் — நிறைந்ததாய்
ஸதத பரிணாமியாய் என்றும் வளர்வனவாய்

ஹேயதயா ஜ்ஞாதவ்யமாய்—இழிவு என்று அறியத்தக்கதாய்
போக்யதாபுத்தி— சுவையாகக் கொள்ளும் எண்ணம்
திருடமாக்கி — உறுதியாக்கி
தியாஜ்யம் — விடத்தக்கது
ப்ரதிபத்தி — ஈடுபாடு
தனலுப்தன் — பொருளிழந்தோன்
ஸத்ருசபதார்த்தம் — போலியான பொருள்
ஸம்பந்திபதார்த்தம்—தொடர்பான பொருள்

இயல் (3)

கடாக்ஷம் - பார்வை
தத்வத்திரயம்— மூவகைமெய்ப் பொருள்
தேசவிசேஷம்—வைகுந்தம்
ப்ரஸாதத்தாலே — திருவருளாலே
ஸர்வ லக்ஷண உபேதமானாப் போலே — எல்லா இலக்கணங்களும் கூடினாப் போலே
அபிநிவேசம் — காதல்
ப்ரஜைகள் — குழந்தைகள்
லோபத்தாலே- சிக்கனத்தாலே
பரோபதேசம் — பிறர்க்கு அறிவுரை
ப்ராப்ய பூமி — வைகுந்தம்
தேசாந்தரம் — வேற்றுநாடு
அபிஜனத்தாலும்— குடிப்பிறப்பாலும்
ப்ராப்த யௌவனருமாய் — இளமை எய்தியவராய்
மஹாரதன் — தேர்களைச் செலுத்துவதில் வல்லோன்

ப்ரணயரோஷம்— ஊடற்சினம்
ஸங்கம் — காதல்
த்வரை — விரைவுணர்ச்சி
ஸாஹஸத்தை — அரியசெயலை
யாத்ருச்சிகமாக—தற்செயலாக
உத்யானம் — சோலை
வ்யாப்தமாக — கூடியதாக
ஸத்தை — உயிர் இருப்பு
உபயவிபூதியுக்தன்— விண்ணும் மண்ணுமான இரு உலகங்களை உடையோன்
ஸாம்யஷட்கம் — அறுவகைச் சமன்பாடுகள்
க்ஷோபங்களிலே — போர்களிலே
ஸம்ருத்தனானவன் — நிறைந்தோன்
சமிதை — வேள்வித்தீயில் இடும்விறகு
ஸாவித்ரி — ஒருமந்திரம்
கடகர் — சேர்ப்பிப்போர்

# பொருளடக்கம்

## முதற் பகுதி

# பொருளடக்கம்

## இரண்டாம் பகுதி

**3. நம்பிள்ளையின் ஆய்வுத் திறன் (97—173)**

1. திறன்காண் நெஞ்சம் — இறையருள் ஞானி, அழகுணர்ச்சி கவிக்கு உள்ளுறை, இலக்கணம் இயைந்தது ஏன்? பக்திநூற் கோட்பாடுகள், விருப்பும் வெறுப்பும், காலத் தாழ்வு, ஏன்? ஆழ்வார் செய்த அடிமை யாது? திறனி, கவிதை அனுபவம் ஈடுபாடு. 2. முழுப் பார்வை — போக்குகள், கொள்கை மாற்றம், விடாயும் விளைவும், சொற்பொருள் மாற்றம், ஆழ்வாரும் இருடியரும், ஆழ்வாரும் காப்பிய மாந்தரும் பாடல்களைத் தொடுத்த முறை, உபதேசங்களை வழங்கியது ஏன்? ஓரியற் பதிகங்களின் நுண்ணிய வேறுபாடுகளைக் காட்டல், கரை புரளும் ஆற்றாமை, உபதேசத்தின் உயர்வு, ஏற்ற பொருளாட்சியைக் காட்டுதல், விரைவுணர்ச்சியைக் காட்டுதல். 3. ஒப்பிலக்கிய ஆய்வு; வான்மீகரும் ஆழ்வாரும்— தலைமைப் பண்புகள் ஒப்பு நோக்கு, கூற்று ஒப்பு நோக்கு 4. அகப்பொருள் ஆய்வுகள்-தூதுப் பதிகங்கள், மடல், அநுகாரம் (போலச் செய்தல்) சில துறை விளக்கங்கள், வெறி விலக்கு, அறத் தொடு நிற்றல், உடன்போக்கும் தனிப் போக்கும், பூத்தரு புணர்ச்சி, புனல்தரு புணர்ச்சி, களிறுதரு புணர்ச்சி. 5. உள்ளுறை (ஸ்வாபதேசம்) - அடிப்படை உள்ளுறைகள், பிராட்டி நிலை, தாய் தோழி மகள், கருப் பொருள்கள் 6. வரலாற்றுணர்வு, போர்ச் செய்திகள், சோழப் பேரரசர்கள், 'ஆயிரத்தளி, சோழகுாலந்தகன், முக்கோட்டை, அரசியல் நடைமுறைகள் 7. அரையர் கலை — விண்ணப்பம் செய்வார்கள், திருவத்தியயனம், அரையர்கள், இசைகாரர், இசை தாளம் நடிப்பு, இசையால் ஏத்துதல், மனவுருக்கம், பரந்தமனம், பயன்கருதாத் தொண்டு, உலகியலறிவு, ஆசாரியர் நிலை, அரையர் கலை வளர்த்த ஆசாரியர்கள்; ஆளவந்தார், இராமாநுசர், எம்பார், பொருளாட்சிகள் 8. நம்பிள்ளை காட்டும் நல்நெறி - பக்தரும் பிரபன்னரும்- பரந்துளதன்மை, தக்கநெறி, இயற்கை இன்னருள், கைவல்ய மோக்ஷம், புறம்புள்ளார் படிகள்.

# பிழை திருத்தம்

## பகுதி (1)

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 29 | ......... | பின்பழகிய பெருமாள் சீயர், 13ம் நூ. |
| 36 | 11 | ஆராய் | ஆராய்ந் |
| 78 | 18 | பெற்ற | பெற்று |
| 92 | 23 | தோடர்பு | தொடர்பு |
| 110 | 3 | என்று | ஒன்று |
| 114 | 14 | வை கொண்டவர் | வைக்கொண்டவர் |
| 134 | 17 | நியமங்களோட | நியமங்களோடே |
| 159 | 15 | இன்றை | இன்றைய |

## பகுதி (2)

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 16 | 21 | மலைபாம்பு | மலைப்பாம்பு |
| 34 | 27 | என்ற | என்று |
| 89 | 27 | அளித் | அளித்த |
| 101 | 2 | கூற்றுபட | கூற்றுப்பட |
| 103 | 17 | கோட்பாடுள் | கோட்பாடுகள் |
| 112 | 20 | இடியரும் | இருடியரும் |
| 115 | 17 | அரண்டு | இரண்டு |
| 121 | 14 | நாயகிக்கும் | நாயகனுக்கும் |
| | 16 | நாயக | நாயகி |
| 122 | 27 | புக்கனோடு | புக்கதனோடு |
| 139 | 24 | வெளிப்பட்டால் | வெளிப்பாட்டால் |
| 140 | 27 | நிலையையும் | நிலைமையும் |
| 150 | 7 | திரிவார்ள் | திரிவார்கள் |
| 164 | 30 | புறம்பள்ளார் | புறம்புள்ளார் |

திருவரங்கத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள



நம்பிள்ளை - மூலவர்



நம்பிள்ளை - உற்சவர்

## ஆன்ற தமிழ்மறைகள் ஆயிரமும்



ஈன்ற முதல் தாய்
சடகோபன்



மொய்ம்பால் வளர்த்த
இதத் தாய்
இராமாநுசன்



மறைப் பொருள் விரித்த
மணவாள மாமுனிவன்

# இயல் : 1 நம்பிள்ளை வரலாறு.

வரலாறு வேண்டுமா?

திருவாய்மொழிக்குப் பேருரையான ஈட்டை இயம்பியவர் நம்பிள்ளை. அப்பேருரையின் திறனை ஆய்வு செய்ய நம்பிள்ளையின் வாழ்க்கை வளத்தை முன்னாய்வு செய்து கொள்வது இன்றியமையாத ஒரு பணியாகிறது. ஏனெனில், நம்பிள்ளையின் வாழ்க்கை அவருடைய பேருரையிற் பிணைந்து ஒரு தனித் தன்மையை அவ்வுரைக்கு ஈட்டித் தருகிறது. உரையாளர்கள் பொதுவாகத் தம் உரைகளில் தம்மைப் பற்றிக் குறிப்பிடுவதில்லை. மூலநூலோரும் தம் வாழ்க்கைக் குறிப்புகளை நூலின் அகத்தில் தருவதில்லை. நூலுள் நுழைவதற்குத் தேவையான தம் வாழ்வியற் குறிப்புகளை நூன்முகமாகப் புறத்தே கூறிவிடுவர். அவை பதிகங்கள் எனப் பெயர் பெறுகின்றன. இரட்டைக் காப்பியங்களின் பதிகங்கள் இவ்வாறு அமைந்தவையே.

ஆனால் பேருரையான ஈட்டில் நம்பிள்ளையைப் பற்றிய குறிப்புகள் 29 இடங்களில் வருகின்றன.[1] அவை இடம் பெறும் உரைப்பகுதியைச் சுவைக்க வேண்டுமானால் நம்பிள்ளையின் வாழ்க்கையைத் திறனாய்வு செய்து மனத்திற் கொள்ள வேண்டும். நம்பிள்ளையின் வாழ்க்கையை வரலாற்று அடிப்படையில் தெளிவாக அமைத்துக் கொண்டால் அவருடைய பேருரையில் குறிக்கப்படும் அடியார்களையும் ஆசாரியர்களையும் கலைஞர்களையும் காவலர்களையும் முறையாகக் காலவரம்புக்கு உட்படுத்தி நம்பிள்ளையின் சம காலத்தினரைப் பற்றிய விளக்கங்களைப் பெறமுடியும். இவை ஆய்வாளர்களுக்குப் புது ஆய்வுக் களன்களைக் காட்டித்தரும்.

ஈட்டின் ஆசிரியர் நம்பிள்ளை உரையாளராய் மட்டுமன்றித் திறனாய்வாளராகவும் செயற்படுவதால் அத்திறனாய்வின் தகுதியைச் சீர்தூக்கிக் காண அவருடைய உலகியல் வாழ்க்கையையும் அறிந்து கொள்ள வேண்டிய நிலை ஏற்படுகிறது. மேலும், திருவாய்மொழி உரைகளின் தோற்றமும் வளர்ச்சியும்

1. பார்க்க, பின்னிணைப்பு : ''ஈட்டில் நம்பிள்ளை பற்றி வரும் இடங்கள்''

நம்பிள்ளையின் வாழ்க்கையோடு ஒன்றியுள்ளன. இவ்வகைக் காரணங்களைக் கருதி நம்பிள்ளையின் வாழ்க்கை ஆய்வு செய்யப்படுகிறது. இவ் ஆய்வுக்குப் பயன்படும் சான்று மூலங்களின் தகுதிப் பாட்டையும் அவை தரும் தெளிவுகளையும் இனிக் காண்போம்.

## சான்று மூலங்கள்

### குருபரம்பரை நூல்கள்

நம்பிள்ளையின் வாழ்க்கையைத்தெரிவிக்கும் பழைமையான குரு பரம்பரை நூல் ஆறாயிரப்படி குருபரம்பராப் பிரபாவம். இந்த நூலை மணிப்பிரவாள நடையில் எழுதியவர் நம்பிள்ளையின் சீடரும் துறவியுமான பின்பழகிய பெருமாள் சீயர்.[2] ஆசிரியராகிய நம்பிள்ளையினும் மிக மூத்தவரானஇவர் ஆசிரியர்க்கு அணுக்கராய்த்தொண்டுகள் செய்தவர்;இத்தகைய பேரறிவாளர் ஆழ்வார்களின் வரலாற்றையும் ஆசாரியர்களின் வரலாற்றையும் உரைநடையில் நூலாக்கி உதவினார். அதற்குக் கருவியாக இராமானுசர் காலத்தில் வாழ்ந்த கருடவாஹன பண்டிதர் இயற்றிய திவ்ய ஸூரி சரித்ரம் என்ற வடமொழி நூலைக் கொண்டார்.[3] சீயரின் ஆறாயிரப்படி குருபரம்பரை நூல் நம்பிள்ளையின் உரை ஏடுபடுத்தப்பட்ட வரலாற்றோடு முடிவடைகிறது. நம்பிள்ளையின் இறுதிக் காலத்தை இந்நூல் தெரிவிக்கவில்லை. ஆதலால் பின்பழகிய பெருமாள் சீயர் நம்பிள்ளையின் வாழ்நாளிலேயே பரமபதமடைந்திருக்க வேண்டும். இந்நூலில் பின்பழகிய பெருமாள் சீயரின் வரலாறும் இடம் பெறுகிறது. இது சீயரின் மாணாக்கர்களால் பிற்காலத்தில்

---

2. 'பின்பழகிய பெருமாள் நாயனார் ஜீயர்' என்றும் இவர் பெயர் காணப்படுகிறது. எறும்பியப்பா, விலக்ஷண மோக்ஷாதிகாரி நிர்ணயம், கமர்ஷியல் அச்சியந்திர சாலை, சென்னை, 1904, ப. 45

3. திவ்யஸூரி சரித்திரம் ஆறாயிரப்படி குருபரம்பராப்பிரபாவத்துக்கும் பிற்பட்டது என்ற ஒரு கருத்து உண்டு. (B V. Ramanujam 'Some Aspects of the History of Sri Vaishnavism upto Ramanuja, Annamalai University: P, 30) இதை மறுத்து மரபுவழிச் செய்தியை உறுதிப்படுத்தி அந்நூல் இராமாநுசர் காலத்திலேயே எழுதப்பட்டது என்றும் ஆ. கு. ப. பிரபாவத்துக்கு அடிப்படையானது என்றும் என். ஜெகதீசன் நிறுவியிருக்கிறார். (N. Jagadeesan, History of Sr Vaishnavism in the Tamil country, post Ramanuja, Koodal Publishers Madurai 1977 p. 81) மேலும் இதைப்பற்றிய செய்திகளுக்கு, பார்க்க: டி. வி. பார்த்தசாரதி அய்யங்கார், திவ்யஸூரிசரிதகால நிர்த்தாரணம், அம்ருதலஹரி 121, (1953).

நுழைக்கப்பட்டிருக்கலாம். இந்நூலே சீயரால் எழுதப்படாமல் அவரிடம் பாடம் கேட்ட மாணாக்கர் ஒருவரால் ஏடுபடுத்தப் பட்டதாகும் என்றும் சிலர் கருதுகின்றனர்.[4]

நம்பிள்ளை கி. பி. 1252-ல் திருநாடு சேர்ந்தார் என்று அறியப்படுவதால், சீயரின் ஆறாயிரப்படி குருபரம்பரை நூல் கி. பி. 13-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றியதாகக் கொள்ளலாம்.

சீயரின் குருபரம்பரை நூலை முன்னோடியாகக் கொண்டு வேறுபல குருபரம்பரை நூல்கள் பிற்காலத்தில் உரை நடையிலும் செய்யுள் நடையிலும் தோன்றின. அவை சீயரின் நூலினும் அளவில் குறைந்தோ கூடியோ இருந்திருக்கலாம். அவற்றினின்றும் வேறுபடுத்திக்காட்டவே சீயரின் நூலுக்கு ஆறாயிரப்படி என்ற அடைமொழி ஏற்பட்டது. நம்பிள்ளையின் சீடர் வழியினரான இளம்பிளிசைப்பிள்ளை என்பவரால் இயற்றப்பட்ட ஒரு குருபரம்பரை நூல் இருந்ததாகப் பெரிய திருமுடிஅடைவு வாயிலாக அறிகிறோம்.[5] பிள்ளைலோகஞ்சீயரின் யதீந்த்ரப் ப்ரவணப் ப்ரபாவம், ராமானுஜார்ய திவ்யசரிதை என்ற இரு மணிப்பிரவாள உரைநடை நூல்களிலும் மேற்கோளாகப் பல தமிழ்ச்செய்யுட்கள் எடுத்தாளப்படுகின்றன. இவை யாவும் செய்யுள் வடிவத்திலிருந்த குருபரம்பரை நூல்களிலிருந்து எடுத்தாளப்பட்டிருக்க வேண்டும். அந்த நூல்கள் இன்று கிடைத்தில. கி. பி. 16-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட வடிவழகிய நம்பிதாசரின் செய்யுள் குருபரம்பரை நூல் ஒன்றே முழுமையாகக் கிடைத்துள்ளது.[6]

---

4. பின்பழகிய பெருமாள் சீயர், ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம், எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ப. ஆ) 1968, முகவுரை.

5. பெரிய திருமுடி அடைவு, எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், (ப. ஆ), 1968 ப, 37.

6. வடிவழகிய நம்பிதாசர் என்பவர் முதல் வானமாமலை சீயரின் சீடரான ஆத்தான் அழகப்பங்காரின் சீடராவார்.

— குருபரம்பரை, திருஞானமுத்திரைக் கோவைப்பதிப்பு, உரிமையுரை & குரு வணக்கம், 1968.

கிழையூர்ச் சடகோபதாசர் என்பவரால் கி. பி 17ஆம் நூற்றாண்டில் 'அரிசமய தீபம்' என்னும் செய்யுட் குருபரம்பரைநூல் இயற்றப்பட்டது. இதே காலப் பகுதியில் 'குருபரம்பரை புராணம்', 'பரமயோகி விலாசம்', 'இராமாநுசசரிதை, ஆகிய குருபரம்பரை நூல்கள் தோன்றின. இவற்றுள் இராமாநுச சரிதை என்பது பாகை சீதாராமதாசரால் இயற்றப்பட்டது. இவையாவும், இராமாநுசரின்வரலாற்றோடு முடிகின்றன.

இறுதியாக, ஆறாயிரப்படி பன்னீராயிரப்படி குரு பரம்பராப்ரபாவம் என்ற விரிவான ஒரு குருபரம்பரை நூல் மிகப் பிற்காலத்தில் எழுந்தது. பின்பழகிய பெருமாள் சீயரின் ஆறாயிரப்படி குருபரம்பரை, வார்த்தாமாலை, பெரியவாச்சான் பிள்ளையின் பேருரைகளில் இடம்பெறும் ஐதிஹ்யங்கள் ஆகிய வற்றைத் தழுவி இந்நூல் விரிவாக அமைக்கப்பட்டிருக்கிறது. இதில் நம்பிள்ளையின் இறுதிக் காலமும் அவரை அடுத்துவந்த ஆசாரியர்களின் வரலாறும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. பிள்ளை லோகாசாரியாரின் வரலாற்றின் ஒரு பகுதியோடு இந்நூல் முடிவடைகிறது.

### உபதேசரத்தின மாலை

எழுபத்து மூன்று வெண்பாக்களில் அமைந்த இந்நூலை எழுதி அருளியவர் மணவாள மாமுனிகள் (கி.பி. 1370—1443). இந்நூல் திவ்வியப் பிரபந்தங்களின் வைப்பு முறை பற்றியும் பெயர்க் காரணம் பற்றியும் அவற்றிற்கு ஆசாரியர்கள் இட்ட வியாக்கியானங்கள் பற்றியும் அவ்வியாக்கியானங்களைத் தழுவி எழுந்த ஸம்பிரதாய கிரந்தங்களில் ஒன்றான ஸ்ரீவசனபூஷணம் பற்றியும் பல அரிய செய்திகளைத் தன்னகத்தே கொண்டு தமிழில் அமைந்த சிறந்த திறனாய்வு நூலாக அமைந்திருக்-கிறது. இந்நூலில் நம்பிள்ளையின் உயர் பண்புகளும் அவர்தம் பேருரையான ஈட்டின் ஓராண்வழிச் செலவும் சுருக்கமாகச் சொல்லப்படுகின்றன. கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் தோன்றிய இந்நூலும் இதற்குப் பிள்ளைலோகஞ் சீயரிட்ட உரையும் நம் பிள்ளையின் வரலாற்றையும் திருவாய்மொழி வியாக்கியானங் களின் வளர்ச்சியையும் ஆய்வு நிகழ்த்த நல்ல சான்று மூலங்க-ளாகப் பயன்படுகின்றன.

### பெரிய திருமுடி அடைவு

இந்நூல் மணவாளமாமுனிகளின் சீடரான கோயில் கந்தாடை அண்ணனின் திருமகனாரான "கோயில் கந்தாடை நாயன்" என்பவரால் செய்யப்பட்டது. இவர் கி.பி 1466ல் பரமபதித்தார் என்று அறியப்படுகிறது. (6அ) இந்நூலின் காலம் கி.பி. 15-ஆம் நூற்றாண்டின் பிற்பாதியாகும். இதனை முழு வரலாற்று நூலாக ஏற்கமுடியாது. ஆழ்வார்கள் ஆசாரியர்-

(6 அ) கோ.க.வா. அண்ணன் ஸ்ரீநிவாஸாசாரியார், கோயிலண்ணன் திருமாளிகை குருபரம்பராப்ரபாவம் 1983, ப 114.

களின் பிறந்த நாட்களையும் வாழ்ந்த ஆண்டுகளையும் கூறுவதோடு வேறு சில செய்திகளையும் இந்நூல் கூறுகிறது. இந்நூல் உண்மையில் வைணவ ஆசாரியர்களின் வரிசையை முறைப்படுத்திக் காட்டுவதையே முதன்மை நோக்கமாகக் கொண்டது. பெரிய திருமுடி அடைவு என்னும் நூற்பெயரே அதனைத் தெளிவுறுத்துகிறது. இந்நூலில் குறிப்பிடப்படும் நம்பிள்ளையின் அவதார வருடம், திருநாடு சென்ற வருடம், அவர் செய்த நூல்கள், அவருடைய சிஷ்யர்கள் போன்ற அரிய செய்திக் குறிப்புகள் ஆராய்ச்சிக்குப் பயன்படுகின்றன.

**யதீந்த்ரப்ரவணப் பிரபாவம்**

இவ்வரிய உரைநடைநூல் பிள்ளைலோகஞ்சீயரால் கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் இறுதியில் எழுதப்பட்டது. யதீந்த்ரப் பிரவணர் என்று சிறப்பிக்கப் பெற்ற மணவாளமாமுனிகளின் வரலாற்றைக் கூறுவது இந்நூல். இதன் ஆசிரியரான பிள்ளை லோகஞ்சீயர் மணவாள மாமுனிகளின் சிஷ்யரும் அஷ்டதிக்கஜங்களில் ஒருவருமான பரவஸ்து பட்டர்பிரான் சீயரின் சிஷ்யர் பரம்பரையில் வந்தவர்.[7] இந்நூலின் முற்பகுதியில் திருவாய்மொழிக்குப் பேருரைகள் தோன்றிய வரலாறும் ஈட்டின் ஓராண்வழிச் செலவும் மிக விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

**ஐதிஹ்யங்கள்**

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்துள் இருபத்து நான்கு நூல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இவை அனைத்திற்கும் பேருரை வரைந்த பெருமை பெரியவாச்சான் பிள்ளையைச் சேரும். பெரியாழ்வார் திருமொழியின் முதல் 420 பாடல்களுக்கு இவருடைய பேருரை ஏடுகள் செல்லரித்து அழிந்ததால் மணவாளமாமுனிகள் அவற்றிற்கு மட்டும் பேருரை வரைந்து சேர்த்திருக்கிறார். வேறு பல ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்களும் திவ்வியப் பிரபந்தங்களுக்கு உரை செய்துள்ளனர்.[8] இவ்வுரைகளில் நூற்றுக்கணக்

7. மணவாள மாமுனிகளின் அட்டதிக்கயங்களில் ஒருவரான பரவஸ்து பட்டர்பிரான் சீயரின் புத்திரர் அழகியமணவாளர். அவருடைய பேரனாகிய வரதாரியர் என்பவரே துறவு நெறி தழுவி 'பிள்ளை லோகஞ்சீயர்' என்று அழைக்கப்பட்டார்; இவர் நெடுநாள் மாமல்லபுரத்தில் இறைபணியாற்றி வந்தார்.

—வி.வி. ராமாநுஜம் (ப.ஆ.) 'குறிப்பு' மணவாளமாமுனிகள் ஆறாவது நூற்றாண்டுவிழா மலர், சென்னை, 1970, ப. 29

8. பார்க்க: பின்னிணைப்பு: ''திவ்வியப்பிரபந்த உரையாசிரியர் பட்டியல்''

கான ஐதிஹ்யங்கள்[9] காட்டப்பட்டுள்ளன. இவற்றில் நம்பிள்ளை போன்ற உரையாசிரியர்களின் சுவையான வாழ்க்கைச் செய்திகள் அடங்கியுள்ளன. ஈட்டில் எடுக்கப்பட்டிருக்கும் ஐதிஹ்யங்கள் தனியாக ஆய்வு செய்யப்படும்.[10] குருபரம்பரை நூல்களில் காணக்கிடைக்காத பல் குறிப்புகள் ஐதிஹ்யங்களில் கிடைப்பதால் நம்பிள்ளையின் உரைமரபுகளை அறிந்துகொள்ள இவை உயரிய சான்று மூலங்களாகக் கொள்ளப்படுகின்றன.

பிறநூல்கள்

இந்நூலில் கொள்ளப்படும் சிறப்பான பிற சான்று நூல்கள் வருமாறு :

| எண் | நூல் | ஆசிரியர் | காலம் |
|---|---|---|---|
| 1 | ஸ்ரீவசனபூஷணம் | பிள்ளை லோகாசாரியார் | கி. பி. 13-ஆம் நூற்றாண்டு. |
| 2 | ஆசார்ய ஹ்ருதயம் | அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் | ,, |
| 3 | சரமோபாய நிர்ணயம் | நாயனாராச்சான் பிள்ளை | ,, |
| 4 | ஸ்ரீவசனபூஷண, ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானங்கள் | மணவாளமாமுனிகள் | கி. பி. 15-ஆம் நூற்றாண்டு |
| 5 | அந்திமோபாய நிஷ்டை | பட்டர்பிரான்சீயர் | ,, |
| 6 | விலக்ஷண மோக்ஷாதிகாரி நிர்ணயம் | எறும்பியப்பா | ,, |
| 7 | ஸ்ரீவைஷ்ணவ ஸமயாசார நிஷ்கர்ஷம் | பிள்ளை லோகஞ்சீயர் | கி. பி. 16-ஆம் நூற்றாண்டு |
| 8 | வார்த்தாமாலை | ,, | ,, |

---

9. ''கதையோடு கூடிய அர்த்த விசேஷங்களை ஐதிஹ்யமென்றும், இதற்கு ஆளவந்தார் அருளிச் செய்யும்படி, இங்கு எம்பெருமானார் அருளிச் செய்யும்படி, என்று பட்டர் அருளிச் செய்தார் என்று காட்டும் அர்த்த விசேஷங்களை நிர்வாஹம் என்றும் பெரியோர் வழங்குவர்''
— பி. ப. அண்ணங்கராசாரியார், ஐதிஹ்ய நிர்வாஹரத்நமாலா, 1953, முன்னுரை,

10. பார்க்க : இரண்டாம் பகுதி, இயல் (1)

## நம்பிள்ளை — காலம்

நம்பிள்ளை கலி 4249, பிரபவ வருடம், கார்த்திகைத் திங்கள், கார்த்திகை நாளில் திருவவதரித்தார். இது கி.பி. 1147 என்று ஆகிறது. இவர் 105 ஆண்டுகள் வாழ்ந்திருந்தாராகப் பெரிய திருமுடி அடைவு குறிப்பிடுகிறது.[11] ஆகவே, இவருடைய காலப்பகுதி கி.பி. 1147—1252 என்பதாகும்.

ஆனால் மு. அருணாசலம் நம்பிள்ளையின் காலத்தை கி.பி. 1207—1312 என்று காட்டுகிறார்.[12] நம்பிள்ளையின் பிறப்பு வருடமான 'பிரபவ' கி. பி. 1147, கி. பி. 1207 என்ற இரண்டு ஆண்டுகளுக்கும் பொருந்திவரும் இவற்றுள் கி. பி 1207 ஐத் தழுவி நம்பிள்ளையை அடக்கிய ஆசாரியர்களின் கால்வழி ஒன்றையும் அவர் அமைத்திருக்கிறார். அதில் பட்டருடைய காலமாக கி.பி. 1192—1220 என்று கணக்கிட்டிருக்கிறார். இக் கணக்கீடுகள் பொருந்தாதவை. இவற்றையே மு.வை.அரவிந்தன் போன்ற ஆய்வாளர்களும்[13] தழுவிக் கொள்வதால், இக்கணக்கீடுகள் மறு ஆய்வு செய்யப்படுகின்றன.

இராமானுசருடைய காலம் கி. பி. 1017—1137 என்பது எவ்வகை மாறுபாடுமின்றி ஆய்வாளர்களாலும் மரபுவழியினராலும் ஏற்றுக் கொள்ளப்படுகிறது இராமானுசர் பரமபதிப்பதற்கு முன்பே பட்டர் பிறந்துவிட்டார். இதனைக் குருபரம்பரை நூல்கள் அறிவிக்கின்றன.[14] இதனை வலியுறுத்தும் ஐதிஹ்ய அகச் சான்றுகளும் கிடைக்கின்றன. பட்டரைத் திருவரங்கர்க்கும் திருவரங்க நாச்சியார்க்கும் வளர்ப்புக் குழந்தையாக இராமானுசரே மஞ்சள்நீர் குடிப்பித்து வழங்கியதைப் பெரியவாச்சான் பிள்ளை குறிப்பிடுகிறார்.[15] இளைஞராயிருந்த பட்டரை ஒரு நாள் இராமானுசர் கோயிலுக்கு அழைத்துச் சென்று நம்முடைய புத்தகத்தை அவர் கையிற் கொடுத்துப் படித்து

---

11. பெரிய திருமுடி அடைவு, மு. நூ. ப. 33.
12. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு (பதின்மூன்றாம் நூற்றாண்டு) 1970: பக் 485
13. மு. வை. அரவிந்தன், உரையாசிரியர்கள், மாணிக்கவாசகர் நூலகம். 1977. திருத்திய பதிப்பு பக் 553-567. இவருடைய காலக்கணக்கீட்டின்படி பட்டர் (கி. பி. 1192—1220) என்றும் நஞ்சீயர் (கி. பி. 1182—1287) என்றும் ஆகின்றன. நம்பிள்ளையின் காலத்தை இவர் வரையறை செய்யவில்லை. இக் கணக்கீடுகள் ஐதிஹ்ய அகச்சான்றுகளோடு முரணாகின்றன.
14. ஆ. கு. ப. பி, மு. நூ. ப. 213
15. பெ. வா. பி. வியா: திருவாசிரியம், 1

விரிவுரை கூறக் கேட்டு மகிழ்ந்தாராம். அப்போது கூடி-யிருந்த பெரியோர்களை எல்லாம் அழைத்துத் தம்மைப் போலவே பட்டரையும் மதிக்க வேண்டும் என்று ஆணை-யிட்டாராம். இச்செய்தி ஈட்டிலேயே இடம்பெற்றிருக்கிறது.[16] ஆதலால் பட்டருடைய பிறந்த வருடம் கி. பி. 1137க்கு முற்பட்டது என்பது தெளிவாகிறது. எனவே மரபுவழி நூல்கள் கூறுகிற முறையில், பட்டரின் பிறந்த வருடம் கி. பி. 1122 என்பது பொருந்துகிறது. அதே நூல்களின்படி பட்டர் 28 ஆண்டுகள் உயிர் வாழ்ந்திருந்தார்[17] என்று கொண்டால் அவருடைய மறைவு ஆண்டு கி. பி. 1150 எனத் தெரிகிறது. இனி, பட்டரை நம்பிள்ளை நேரிற்கண்டு அவருடைய சொல் லமுதத்தைச் செவியாற் பருகினார் என்பதற்கும் வலிய அகச் சான்றுகள் உள்ளன. "இது பட்டர் அருளிச் செய்ய நான் கேட்டேன் என்று பிள்ளை அருளிச் செய்வர்" என்று பெரிய-வாச்சான் பிள்ளையும் ஈட்டை ஏடுபடுத்திய வடக்குத் திருவீதிப் பிள்ளையும் ஐந்து இடங்களில் குறித்துவைத்துள்ளனர்.[18] இவற்றால் நம்பிள்ளையின் அவதார வருடம் கி. பி, 1150 க்கு முற்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவு.

எனவே, நம்பிள்ளையின் அவதார ஆண்டு கி. பி. 1147 என்பதே உறுதியாகிறது. ஆதலால் நம்பிள்ளையின் காலப்பகுதி கி. பி. 1147-1252 என்பதே உண்மையில் பொருத்தமாயுள்ளது.

இக்காலப் பகுதியில் நெடிது வாழ்ந்த நம்பிள்ளை சோழப் பேரரசின் பொற்காலத்தையும் அது தளர்வுற்று வீழ்ச்சியடைந்து பாண்டியப் பேரரசின் ஆட்சிக்கு உட்பட்டதையும் நேரிற் கண்டவர். இரண்டாம் இராசராசன் (கி. பி. 1146-1163) இரண்டாம் இராசாதிராசன் (கி. பி, 1163 - 1178) மூன்றாம் குலோத்துங்கன் (கி. பி. 1178 - 1218), மூன்றாம் இராசராசன் (கி. பி. 1216 - 1256) ஆகியோரின் ஆட்சிக்காலங்களில் இவர் திருவரங்கத்தில் நிலையாகத் தங்கியிருந்து உரைப்பணியை

16. 10-6-1 ஈ
17. ஆ.கு.ப.பி., மு. நா., ப. 341
18. (அ) பெ. வா. பி.வியா., பெரி.திரு., 4-10-8
(ஆ) பெ. வா. பி.வியா., பெரி. திரு., 5-5-1
(இ) பெ. வா. பி.வியா., நாச். திரு., 12.5
(ஈ) 4-8-8 ஈ
(உ) 10-6-1 ஈ

ஆற்றிவந்தார். பெரும் போர்களைத் தாம் வாழ்ந்த காலத்தில் கண்டவர் இவர். மூன்றாம் குலோத்துங்கன் கி.பி 1190ல் முடி சூடியசடையவர்மன் குலசேகர பாண்டியனைப் போரில் வென்று மதுரையை அழித்தான். மதுரைக்கு முடித்தலை கொண்ட சோழபுரம் என்றும் பாண்டியர் கொலு மண்டபத்துக்கு சேர பாண்டியர் தம்பிரான் என்றும் பெயரிட்டு வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும் செய்து கொண்டான்.[19] அதன் நினைவாக அவன் திருவரங்கத்தில் செய்த திருப்பணிகளை நம்பிள்ளை ஈட்டில் குறிப்பிட்டிருக்கிறார். தம்முடைய வாழ்நாளின் இறுதியில் மாறவர்மன் சுந்தரபாண்டியன் சோழ நாட்டில் புகுந்து கி.பி. 1227ல் வெற்றிவாகை சூடியதையும் ஆயிரத்தளி அரண்மனையில் வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும் செய்து கொண்டதையும் [20] திருவரங்கம் கோயிலுக்குத் திருவாபரணங்கள் வழங்கி விமானத்தைப் பொன்வேய்ந்ததையும் நம்பிள்ளை கண்டார்.[21] அரசர்களின் வாழ்க்கை முறைகளையும் வெற்றி தோல்விகளையும் தம்முடைய பேருரையில் உரை விளக்கங்களாகப் பயன்கொண்டிருக்கிறார். இவை பிறிதோரிடத்துத் தனியாக ஆய்வு செய்யப்படும்.[22]

### நம்பிள்ளையை ஈன்ற முதல்தாய் — பட்டர்

'வானிட்ட கீர்த்திவளர் கூரத்தாழ்வான்' திருமகனாரான பராசர பட்டரின் நயம் மிக்க விளக்கங்களில் ஈடுபட்டு அவருக்கு ஆசாரியராக இருக்கத்தக்க மூத்தோர்களும் அவரைப் பாராட்டியதோடு வழிபடவும் செய்தனர்.[23] பட்டருடைய சொற்பொழிவுப் பேரவையில் தமிழ்வல்ல புலவர்களும் அமர்ந்து கேட்டு இன்புற்றனர். அவர்கள் பட்டரிடத்துப் பல ஐயப்பாடுகளை அகற்றிக் கொண்டனர்.[24] அதே பேரவையில் வேதவேதாந்தங்களிலும் தமிழ் நூல்களிலும் தேர்ச்சியுற்றிருந்த நம்பிள்ளையும் பட்டருடைய இன்சுவையே வடிவெடுத்த விளக்கவுரைகளைக் கேட்டு அவர்பால் மனம் ஈர்க்கப்பெற்றார். இச்செய்தி குரு பரம்பரைகளில் இடம் பெறாதது வியப்பூட்டுகிறது. அதனால்

19. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, 1974 ப. 408
20. ஏ.எம். சடகோபராமாநுஜாசாரியர், ''திருக்கோளூர்ச்சாசனங்கள்'', செந்தமிழ் தொகுதி 12. பகுதி 8 ப.344.
21. கோயிலொழுகு, எஸ்.கி.ஐ. பதிப்பு, 1976 ப.13
22. பார்க்க: இரண்டாம்பகுதி, இயல் (3)
23. பெ. வா. பி.வியா., திரு.வி. 53
24. 1-4-4 ஈ

குருபரம்பரைகளை மட்டும் கற்போர் பட்டர் திருநாடுசென்ற பிறகே நம்பிள்ளை அவதரித்தார் என்று முடிவுசெய்துவிடுகின்றனர். நாலாயிர திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்களில் வரும் ஐதிஹ்யங்களைக் கூர்ந்து ஆய்வுசெய்தால் அம்முடிவு தவறெனப்படும்.

பட்டரின் விளக்கவுரைகள் நம்பிள்ளையின் மனத்தில் ஆழப்பதிந்தன. அவற்றைப் பின்னால் பல ஆண்டுகள் கழித்துத் தம் சிஷ்யர்களான பெரியவாச்சான் பிள்ளைக்கும் வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கும் சொல்லி மகிழ்ந்தார். அவ்விருவரும் அவற்றைத் தம் பேருரைகளில் பொன்னேபோற் போற்றிப் பொதிந்து வைத்தனர்.[25] அவை இன்று ஆய்வாளர்க்குப் பெரும் பயனைத் தருகின்றன.

நம்பிள்ளையின் உள்ளத்தில் உரைத்திறனை விதைத்தவர் பட்டர். பட்டருடைய விரிவுரைகளே நம்பிள்ளையின் பேருரைக்கு அடித்தளம் அமைத்தன; புதிய உரை உத்திகளுக்கு அடிகோலின. ஆழ்வாருடைய திருவாக்கிலிருந்து உணர்ச்சிகள் பொசிந்து புறவெள்ளமிட்டபோது அவ்வுணர்ச்சிகளின் ஊடே ஆழ்வாரின் மனவோட்டங்களைக் கண்டுபிடிக்கும் உத்திகளைப் பட்டருடைய விரிவுரைகளைக் கேட்டே நம்பிள்ளை அறிந்து கொண்டார். ஒரு சமயம் பட்டர் அமலனாதிபிரானுக்கு விரிவுரையாற்றியதை நம்பிள்ளை கேட்டார். பாடல்களில் வரும் சொற்சேர்த்திகளின் நயத்தைப் பட்டர் விளக்கநேர்ந்தது.

> ''நிவந்த நீண்முடியன் அன்று நேர்ந்த நிசாசரரைக்
> கவர்ந்த வெங்கணைக் காகுத்தன் கடியார்பொழில்
> அரங்கத் தம்மான்''[26]

என்ற பாடலில் காகுத்தனைச் சொல்லி உடனே அரங்கத்தம்மானைக் குறிப்பிட்டதன் நயத்தினைப் பட்டர் திறன்பட விளக்கினார்:

> ''திருப்பாணாழ்வார் 'அன்று நேர்ந்த நிசாசரரை' என்று ராவண வதமே தொடங்கி அடிமையாற்றினார்; அது தெற்குத் திருவாசலாலே புகுந்து கிடந்தது; மந்திபாய் என்று பரமபதமே தொடங்கி அடியொற்றினார்.

25. (அ) பெ.வா. பி.வியா. பெரி. திரு. 5-5-1
(ஆ) 4-8-8 ஈ

26. அமலனாதிபிரான், 2

திருமலையிலே புகுந்து கிடந்தது. அங்கே பார்த்த வாறே ... இன்னமும் போக்கிலே ஒருப்பாடு தோற்றி யிருந்தது என்று அவ்விடமே தொடங்கி அடியொற்றின் வாறே வடக்குத் திருவாசலாலே புகுந்து படுக்கை இங்கேயாயிருந்தது என்று பட்டர் அமலனாதி பிரான் அருளிச் செய்யா நிற்க நான் கேட்டேன் என்று பிள்ளை அருளிச் செய்வர்''[27]

திருப்பாணாழ்வாரின் மனம் இராவணவதம் செய்து வெற்றி வீரனாக நின்ற இராமன் அருகே சென்றது. அதாவது கற்ப னையில் இலங்கைக்கே சென்றார் ஆழ்வார். அவனைப் பாட முனைந்தார். ஆழ்வாருடைய பாடலைப் போர்க்களத்தில் கேட்க மனமில்லாத இறைவன் பிடித்த வில்லும் கையுமாக ஓடத் தொடங்கித் தெற்குத்திருவாசலாலே நுழைந்து திருவரங்-கத்தில் பாம்பணைமேற் சாய்ந்து விட்டானாம்; ஆழ்வாருடைய செந்தமிழ்ப் பாசுரங்களை ஆர அமரக் கேட்டுத் துய்க்கவே அப்படிப் போகமண்டபமான திருவரங்கத்துட் புகுந்தான் இறைவன். அதனால்தான் 'காகுத்தன்' என்று தொடங்கிய ஆழ்வார் 'அரங்கத்தம்மான்' அவன் என்று முடிக்கிறார். மேலும் ஆழ்வாருடைய மனம் விண்ணவர் தலைவனைப் பாடப் புகுந் தது. விண்ணவர் கோமானும் விண்ணிலிருந்து இறங்கித் திரு-மலையிலே வந்து நின்றான். ஆழ்வாரும் அவனைப் பாடத்-திருமலை புகுந்தார். அவனோ பயணத்திலே ஒருப்பட்டவ-னாய்த் தோற்றிச் சடக்கெனத் திருமலையிலிருந்து ஒரு பயணம் எடுத்து வடக்குத் திருவாசலாலே திருவரங்கம் புகுந்து பாம்-பணையிலே சாய்ந்து கிடந்தானாம். ''மந்திபாய் வடவேங்கட மாமலை வானவர்கள் சந்தி செய்ய நின்றான் அரங்கத் தரவின் அணையான்'' என்ற பாசுரத்தில், 'விண்ணவர்கோன் விரையார் பொழில் வேங்கடவன்' என்ற முதல் பாசுரத் தொடரையும் இணைத்துச் சொற்களின் இடைவெளியில் ஆழ்வாருடைய மனப்பயணங்களையும் பட்டர் இனிது விளக்கினார். இவ்வாறு சொற்களினூடே ஆழ்வாருடைய கற்பனை ஓட்டங்களைப் பட்டர் விளக்கியது நம்பிள்ளையை மிகவும் கவர்ந்தது.[28]

மற்றொருமுறை,

''பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியும்
சார்ங்கவில் நாணொலியும் தலைப்பெய்வது எஞ்ஞான்று
கொலோ?[29]

27. பெ. வா. பி.வியா. பெரி. திரு. 5.5-1

28. மேலது

29. நாச்.. திரு. 9-9

என்று ஆண்டாளின் பாடலை விளக்கும்போது, பாடலில் வரும் எண்ணும்மைகளுக்குப்பின் ஒளிந்திருக்கும் காதல் ஏக்கத்தையும் எதிர்பார்ப்புகளையும் வெளிப்படுத்தினார் பட்டர். இரண்டு அவதாரங்களில் இரண்டு பிராட்டியரின் உயிர்தரிக்கக் காரண-மாயிருந்த நாண் ஒலியும் சங்க முழக்கமும் ஆகிய இருவேறு ஓசைகளையும் ஒரே சமயத்தில் கேட்டுத் தரிக்கப் பார்க்கிறாள் ஆண்டாள் என்று விளக்கினார் :

> ''ஸ்ரீஜனகராஜன் திருமகளுக்கும் ருக்மிணிப் பிராட்டிக்கும் உண்டான விடாய் தனக்கொருத்திக்கும் உண்டாகை யாலே அவர்களிருவரும் பெற்ற பேற்றை நான் ஒருத்தியும் ஒரு காலே பெறவேணும் என்கின்றாள்-இதுபட்டர் அருளிச்செய்ய நான் கேட்டேன் என்று பிள்ளை அருளிச் செய்வர்''[30]

என்ற பெரியவாச்சான் பிள்ளையின் மேற்கோளிலிருந்து பட்ட-ரிடம் நம்பிள்ளை கொண்ட ஈடுபாடு புலனாகிறது. ஆளவந்தாருடைய ஒரு சுலோகத்திற்குப் பட்டர் நிருவகித்த விளக்கம் நகைச் சுவையும் உலகியலும் தழுவித் தெளிவு நல்கியதை நம்பிள்ளை கேட்டுச் சுவைத்த ஒரு செய்தியும் ஈட்டிலேயே இடம் பெற்றிருக் கிறது. அந்தச் சுலோகத்தில், ''உனக்கு அன்பனான சேனை முதலியாராலே யாதொரு செய்தி யாதொரு படியாக விண் ணப்பம் செய்யப்பட்டதோ, அதை அப்படியே செய்வதென்று அழகிய கண் பார்வைகளாலேயே நியமித்து அருள்கிறாய்'' என்று விண்ணோர் தலைமகனாய் வானிளவரசனான பரமபத நாதனைக் குறித்து ஆளவந்தார் அருளிச் செய்கிறார்.

இங்குச் சேனை முதலியார் எந்த எந்தச் செய்திகளை விண்ணப்பம் செய்கிறார், வைகுந்தநாதனும் அவரிடத்துக் கொண்ட பேரன்பினால் அவ்விண்ணப்பத்தை எங்ஙனம் ஏற்று ஆணையிடுகிறான் என்ற இரண்டும் சொல்லப்படவில்லை. அவற்றைப் பட்டர் தம் புலமைத்திறத்தாலும் கற்பனை வளத்-தாலும் இறையருளாலும் உணர்ந்து விளக்கினார். அவருடைய விளக்கம் பின் வருமாறு :-

சேனைமுதலியார் சட்டையும் பாகையும் பிரம்புமாக வந்து அந்தப்புரத்திலே புகுந்தார். அப்படி முன் அனுமதியின்றி நுழைவதற்கு அவருக்கு உரிமை இருந்தது. அவர் புகுந்ததும்,

30. 4-8-8 ஈ

பரமபதநாதன் அருகில் விரும்பியபடி போகங்களை அனுபவித்துக்கொண்டிருந்த ஸ்ரீதேவி பூமிதேவி நீளாதேவி ஆகிய மூவரும்அச்சங் கொண்டு அந்தப்புரத்தின் மூலைகளிலே மறைந்து கொண்டனர். வைகுந்தநாதனும் அவரைக் கண்டதும் வினயத்தோடு ஒடுங்கியிருந்தான். ஆண்டும் அனுபவமும் ஆற்றலும் நிறைந்த சாமந்தர்களான சேனாதிபதிகளைக் கண்ட போது, மிகச்சிறு பிராயத்திலேயே அரசுரிமை எய்திய இளவரசர்கள் ஒடுங்கிப் பணிந்து அடக்கமாக நிற்பதுபோலிருந்தது. சேனை முதலியாரும் விண்ணவர்கோனுடைய வான் போகங்களுக்கு இடையூறாக இருக்க விரும்பவில்லை; ஆதலால் தம்முடைய கோரிக்கைகளைப் பாசுரப் பரப்பறச் சுருக்கமாக விண்ணப்பித்தார். ''இன்னானைப் பிரம்மாவாக ஆக்க வேணும் இன்னானை மாற்ற வேணும்'' என்பது தான் அவருடைய விண்ணப்பம். இதனால் அண்டங்களின் ஆட்சிப் பொறுப்பை சேனை முதலியார் தலையில வைத்துத் தான் கவலையற்று இருந்தான் என்று தெரிகிறது. சேனை முதலியாரின் கோரிக்கைகளில் தன் புருவ நெறிப்புக்களாலும் திருக்கண் நோக்கங்களாலும் கையெழுத்துச் சாற்றினான் பரமபதநாதன்.

இவ்வாறு நகைச் சுவையோடு விண்ணாட்டில் நிகழும் பரிமாற்றங்களையெல்லாம் பட்டர் விரித்துரைத்ததை நம்பிள்ளை கேட்டு அதைத் தம் சிஷ்யரான வடக்குத் திருவீதிப் பிள்ளைக்குச் சொல்லியிருக்கிறார். அதனை அப்படியே சிஷ்யரும், 'அருள்பெறுவார் அடியார்' என்ற பாசுரத்தின் ஈட்டில் இடங்கண்டு சேர்த்து எழுதியுள்ளார்[31].

**ஒரு தடையும் விடையும்:**

பட்டருடைய விரிவுரைப் பேரவையில் நம்பிள்ளை இருந்து கேட்டது உண்மையானால், அப்போது நம்பிள்ளை என்ன வயதினராயிருந்தார்? பட்டர் தம்முடைய இருபத்தெட்டாம் பிராயத்தில் திருநாடு சென்று விட்டார் என்று குருபரம்பரை நூல்கள் தெரிவிக்கின்றன.[32] அதாவது கி. பி. 1150ல் பட்டர் மறைந்து விட்டார் என்று ஆகிறது. நம்பிள்ளை கி. பி. 1147ல் பிறந்தார் என்று முன்னர்க் கண்டோம்.[33] அப்படியானால் பட்டர் பரமபதிக்கும்போது நம்பிள்ளை மூன்றாண்டுச்

---

31. 10-6-1 ஈ
32. பார்க்க: குறிப்பு. 17
33. இவ்வியல் ப. (8)

சிறு குழந்தையாயிருந்தார் என்று தேறுகிறது. மூன்றே பிராயத்துப் பச்சிளஞ் சிறுகுழவி பட்டரின் புலமைத்திறன் மிக்க சொற்பொழிவுகளைப் புரிந்து கொள்ளவும் அதனை நெடுநாள் மனத்திருத்திப் பின் வெளியிடவும் கூடுமோ?

பட்டர் மறையும்போது 28 ஆண்டுகள் நிரம்பியிருந்தார் என்று குருபரம்பரை நூல்கள் குறிப்பிடுவதில் பிழை புகுந்திருக்க வேண்டும். பெரிய திருமுடி அடைவில் பட்டர் 'ஜய' வருடத்தில் பரமபதித்தார் என்ற குறிப்பு உள்ளது.[34] அதன்படி பட்டருடைய அவதார வருடமான சுபகிருதுவிலிருந்து ஜயவரை கணக்கிட்டால், பட்டர் தம்முடைய 52-ஆம் வயதில் பரமபதித்தார் என்பதை எளிதில் அறியலாம். அப்போது நம்பிள்ளைக்கு 27 வயதாகியிருக்கும். அப்படியானால்தான் "பட்டர் அருளிச் செய்ய நான் கேட்டேன் என்று பிள்ளை அருளிச் செய்வர்" என்று ஐதிஹ்யங்களில் வருவது நன்கு பொருந்துகிறது.

ஆனால், பட்டர் 'பால்யத்திலே' பரமபதித்து விட்டதாக நம்பிள்ளை சொல்லக் கேட்டு அதனை வடக்குத் திருவீதிப் பிள்ளை ஈட்டிலேயே எழுதி வைத்திருக்கிறார்.

> "நம்மைப் போல் வாய்புகு சோறாகப் பறி கொடாதே நெடுங்காலம் பூமியிலே ... ... இருக்கப் பெறுவர்கள், என்று சீயர் உருத்தோறும் அருளிச் செய்வர். பால்யத்திலே பட்டரைப் பறிகொடுத்தாரிறே அவர்"[35]

என்று ஈட்டிற் குறிப்பிடுகிறார். அதாவது நஞ்சீயர் தம் ஆசாரியராகிய பட்டரைப் பறிகொடுத்தபோது பட்டருக்குப் பால்யமான பருவம் என்று இதனால் ஏற்படுகிறது. ஐம்பத்திரண்டு பிராயத்தைப் 'பால்யம்' என்று கொள்ளலாமா? என்ற கேள்வி அடுத்து எழுகிறது. அதே ஈட்டில் "பூமியிலே எம்பெருமானாரைப் போலே ...நெடுங்காலம் இருந்து" என்ற குறிப்பும் வருகிறது.[36] நூற்றிருபது வயதில் பரமபதித்த இராமாநுசரைப் போலன்றி ஐம்பத்திரண்டு பிராயத்தில் பட்டர் பரமபதித்தது பெரும் அதிர்ச்சியைத் தந்ததால் நடுவயதையும் 'பால்யம்' என்று வேதனைப் பெருக்கில் கூறியிருக்கிறார். இம்முடிவு பற்றி எழுதிக் கேட்டபோது காஞ்சிபுரம் ஸ்ரீ உ. வே. பி. ப அண்ணங்கராசாரியார் ஸ்வாமி ஒப்புதல் அளித்து மேலும் "நஞ்சீயர்

---

34. பெரிய திருமுடிஅடைவு, மு. நூ., ப.31
35. 4-3-11 ஈ
36. மேலது

ஆசிரயித்தபிறகு அதிக காலம் பட்டர் எழுந்தருளியிராமை-யால் வந்த மனவேதனை அங்ஙனே சொல்லுவித்தது'' என்ற குறிப்பையும் வழங்கினார்.[37]

எனவே, குருபரம்பரை நூல்களில் ''பட்டர்க்கு இருபத்தெட்டாம் திருநட்சத்திரத்திலே'' என்று வரும் தொடர் பிறழ்வானது என்பதும் ஐம்பத்திரண்டாம் வயதில்தான் அவர் பரமபதித்தார் என்பதும் உறுதியாகின்றன.[38] இதனால், இருபத்தேழு பிராயத்து இளைஞராயிருந்த நம்பிள்ளை பட்டரிடத்துக் கேட்ட அரும்பொருள்களை நெஞ்சில் தேக்கியிருந்து நெடுங்காலம் கழித்துத் தம் பேருரையில் அவற்றைச் சேமித்து வைத்தார் என்பது பொருந்துகிறது.

**நம்பிள்ளையை வளர்த்த இதத் தாய் — நஞ்சீயர்**

பட்டர் பரமபதித்த பிறகு நஞ்சீயர் ஆசாரியரானார். அவரிடமும் நம்பிள்ளை பாடங் கேட்டார். அப்போதும் அவர் அடக்கமாகவே தம்மை வெளிப்படுத்தாது விரிவுரைகளைச் செவிமடுத்தார். நஞ்சீயர் அவரைத் தம் சீடராக ஏற்றுக் கொண்டது சுவைமிக்கது; எதிர்பாராமல் நிகழ்ந்தது.

நஞ்சீயர் பட்டரின் ஆணைப்படி திருவாய் மொழிக்கு ஒருரை இயற்றியிருந்தார். அதை நன்றாகச் சுவடியில் எழுத-வல்லாரைத் தேடியபோதுதான் நம்பிள்ளை அறிமுகப்படுத்தப் பட்டார். அவருடைய கையெழுத்து முத்துக் கோத்தாற்போல் ஏட்டில் அமைந்ததைக் கண்டு வியப்புற்ற நஞ்சீயர் அவரைத் தம் சீடராக ஏற்றுக்கொண்டு திருவாய் மொழி உரையை ஒருரு கற்பித்துச் சுவடிக்கட்டையும் நல்கினார். அச்சுவடிக்-

---

37. இந்நூலாசிரியர்க்கு ஸ்ரீஉ.வே.பி.ப.அண்ணங்கராசாரியர்ஸ்வாமி எழுதிய கடிதம், 12-7-1978.

38. பாடப்பிறழ்வாகக் கொள்ளாமல் அதைப் பொருந்த விடுவதற்குச் சிலர் முயன்றிருக்கின்றனர். து.அ. கோபிநாதராவ் இராமானுசருக்குப் பிறகு பட்டர் 28 ஆண்டுகள் வாழ்ந்ததைக் குறிப்பதாகக் காட்டுவர். (T.A. Gopinatha Raoi History of Srivaishnavism, P 40) டி.என். சுப்பிரமணியம் பட்டர் ஆச்ரிய, பீடத்தில் அபிடேகம் செய்யப்பட்டு 28 ஆண்டுகள் வாழ்ந்ததைக் குறிப்பதாகக்-கொள்வர். ( S.I. Temple Inscriptions, Vol. III-Part II P 158)
இவ்விருவர் முடிவுகளின்படி பட்டர் பரமபதித்த வருடம் முறையே கி.பி. 1140, கி.பி. 1168 என்று வருகிறது. இவை பெரிய திருமுடிஅடைவு காட்டும் 'ஜய' வருடத்-தோடு பொருந்தா. மேலும் வைணவ ஆசாரியர்கள் பரமபதித்த வருடங்களை அம்முறையிற் குறிப்பிடுவதும் மரபன்று.

கட்டைக் காவிரியாற்றைக் கடந்து செல்லும்போது வெள்ளப் பெருக்கில் இழந்துவிட்டார் நம்பிள்ளை. சுவடியிழந்த அவர் ஒருவாறு மனந்தேறி நஞ்சியர் பக்கல் கேட்டவற்றை நினைவிற் கொண்டு இறையருளை முன்னிட்டுத் தாமே உரையை எழுதி முற்றுவித்து நஞ்சீயரிடம் கொண்டுபோய்க் காட்டினார். தாம் எழுதியபடியே இருந்ததோடு சீரிய சிறப்புப் பொருள்களும் பொதிந்திருப்பதை நஞ்சீயர் கண்டு இறும்பூதெய்திச் சீடரை வாரி அணைத்துக் கொண்டு, ''இவர் நம்முடைய பிள்ளை, திருக்கலிகன்றிதாசர்'' என்று பலரறியப் பாராட்டினார்.[39] நம்பிள்ளையின் இயற்பெயர் வரதராஜர். ஆனால் அப்பாராட்டுரைக்குப் பிறகு எல்லோரும் அவரை 'நம்பிள்ளை' என்றே அழைக்கத் தொடங்கினர். வரதராஜர் தம்முடைய ஏற்றத்தால் பெற்ற பெயர் இதுவென மணவாளமாமுனிகள் குறிப்பிட்டிருக்கிறார்.[40]

நஞ்சீயரிடம் பாடம் கேட்டுவரும்போதே நம்பிள்ளையின் உரைத்திறனும் நயம் காண் நெஞ்சமும் வினாக்களாக முகிழ்த்தன. அவற்றிற் சில இலக்கியம் பற்றியன; சில ஆழ்வாருடைய நோக்குக் கருதியன; சில மெய்ப்பொருளியல் (தத்துவம்) சார்ந்தன. நம்பிள்ளையின் வினாக்களும் அவற்றிற்குச் சீயர் அளித்த விடைத் தெளிவுகளும் நம்பிள்ளையைப் பேருரையாளராகப் பயிற்றுவித்தன. அவற்றுட் சில ஈண்டு அறியத்தக்கன.

(அ) ''மென்னடை யன்னம் பரந்து விளையாடும்
வில்லிபுத் தூருறை வான்றன்,
பொன்னடி காண்பதோர் ஆசையி னாலென்
பொருகயற் கண்ணிணை துஞ்சா''[41]

என்ற ஆண்டாள் பாசுரத்திற்குப் பொருள் கேட்டுவருங்கால், நம்பிள்ளை விடுத்த வினா :-

கீழ்ப் பாட்டில், 'வைகுந்தன் என்பதோர் தோணி பெறாதுழல்கின்றேன்' என்றாள். வைகுந்தம் தொலைவிலுள்ளதால் அது பொருத்தமானது தனக்காக வந்து நிற்கிற இடமாகிய வில்லிபுத்தூரிலே அவனைக் காணப் பெறாதே நோவுபட்டுக் கண்ணுறங்காதே இருந்தாள் என்றால், எங்ஙனே சேரும்?

---

39. ஆ.கு.ப.பி., மு.நா. ப.348 திருமங்கையாழ்வாருக்குத் 'திருக்கலிகன்றி' என்று ஒரு பெயர் உண்டு. திருமங்கையாழ்வார் பிறந்த அதே திங்களிலும் நாளிலும் பிறந்தவராதலால் நம்பிள்ளை 'திருக்கலிகன்றிதாசர்' என்றும் சிறப்புடன் அழைக்கப்பட்டார்.

40. உபதேசரத்தினமாலை, 50

41. நாச். திரு. 5-5

இதற்கு விடையாக நஞ்சீயர் கூறியது :-

> "உள்ளுப் புக்கால் குறியழியாதே நம்மைப் போலேபோர வல்லவளல்லள். பரதாழ்வானைப் போலே மோஹிப் பாள் ஒருத்தியாய்த்து. உள்ளே கொடு புகில் அந்த சீலகுணத்தைக் கண்டவாறே இவள் மோஹித்துக் கிடக்கும். பின்னை இவளை இழக்கவொண்ணாதென்று கொண்டு புக்கார்கள் இல்லை"[42]

ஆண்டாளின் இயல்பை நன்கு அறிந்து வைத்திருந்த பெரியாழ்வார் அவளை வடபெருங் கோயிலுடையான் திரு முன்பு ஒரு நாளும் அழைத்துச் சென்றிலர் என்பது நஞ்சீயரின் கருத்தாகும். எனவே வில்லிபுத்தூரில் பலரும் கண்ணால் காணக் கிடக்கும் எம்பெருமானைத் தான் ஒருத்தி காண முடியாதே நோவுபட்டுக் கண்ணுறங்காதேயிருந்தாள் ஆண்டாள் என்பது பொருந்துகிறது. பதிகங்களிலும் தனிப்பாடல்களிலும் நிகழும் பொருந்தாமைகளை ஒருங்கவிடும் உரை உத்தியைச் சீயரிடமிருந்து இவ்வாறு கற்று அவற்றை மேலும் விரிவு படுத்தி முரண் இணைப்புக் கலையில் வல்லவரானார் நம்பிள்ளை.

(ஆ) நம்பிள்ளையின் நெஞ்சில் திறனாய்வு கால்கொண்டிருந்தது. உண்மை காணும் வேட்கையில் எதற்கும் அஞ்சாது வினவி அறியும் நெஞ்சத்திலேதான் திறனாய்வுப் பயிர் செழித்து வளர முடியும். அத்தகைய திறனுக்கு உரமிட்டு வளர்த்தவர் நஞ்சீயர். ஒருமுறை வால்மீகரின் இராமாயணத்திலேயே சீதையின் நிலைபற்றிக் கூரிய வினா ஒன்றை நம்பிள்ளை எழுப்ப நேரிட்டது. 'இராவணன் பிராட்டிமுன் இராமனைப் போன்ற ஒரு பொய்த் தலையைக் கொய்து காட்டி அச்சுறுத்தியபோது, அவள் அழுது அரற்றினாளேயன்றிச் சடக்கெனப் பட்டுப் போகவில்லையே?' என்ற ஐயத்தை ஆசிரியரிடம் தெரிவித்தார். பிராட்டியின் பண்புநலத்தைப்பற்றி ஐயுறவு கொள்வதா என்று அஞ்சினாரில்லை. உண்மையை அறியும் நாட்டமே மிகுந்திருந்தது. தலையாய கற்புடையார் கணவன் இறந்தான் என்ற

---

42. பெ. வா. பி. வியா., நாச். திரு. 5-5

சொல் செவிப்படுவதற்கு முன்னமேயே இறந்து படுவர் என்ற மரபுஅவர் நினைவில்ஓடியிருக்க வேண்டும்.[43] நஞ்சீயரின் விடை தெளிவைப் பிறப்பித்தது:-

"பிராட்டியின் உயிர் நிலைக்கு அவனைப்பற்றித் தான் பெறும் அறிவு காரணமன்று; பெருமாளின் உயிர் உளதா யிருப்பதே காரணம். அவன் உளனாகையாலே அவள் இறந்துபடாதிருந்தாள்"

என்பது நஞ்சீயரின் விளக்கம்.[44] இவ்வரிய நுண்பொருளைப் பிள்ளை ஈட்டில் தழுவிக் கொண்டு தமிழ் அகப்பொருள் மரபை நிலைநாட்டியுள்ளார்.[45]

(இ) உலகியற் காட்சிகளைக் கொண்டு அருளாளரின் அனுபவங்களை விளக்கிக் காட்டும் உத்தியையும் நம்பிள்ளை தம் ஆசிரியரிடத்தே வினவியறிந்து கொண்டார். திருக்காட் கரையில் கோயில் கொண்ட தெய்வவாரியான திருமாலின் பேரெழில் நலத்தில் ஆழ்வார் உள்ளமழிந்து அலைப்புண்ட-படியை "ஆருயிர் பட்டது எனதுயிர் பட்டது"[46] என்று பாசுர மிட்டார். நஞ்சீயர் இதனை வினாவாகக் கொண்டு "நான் பட்ட பாட்டை அங்குப் பரமபதத்தில் ஆர் உயிர் பட்டது?" என்று பொருள் விரித்தார். 'ஆர்' என்பது விண்ணாட்டவரான நித்திய சூரிகளைக் குறித்து நின்றது என்பது ஆழ்வாரின் உட்கிடையாகச் சீயர் கருதினார். விண்ணாட்டவர்களும் இறைவனது எழிலைப்பருகித்துடிப்பர் ; ஆழ்வாரும் அப்படியே துடித்து அலமாப்பர். ஆயினும் விண்ணாட்டவரினும் ஆழ்வா-ருடைய அனுபவத்தின் சிறப்பை அறிந்து கொள்ள விரும்பி-னார் நம்பிள்ளை. இதற்கு உலகியல், உளவியல் கொண்டு நுண்ணுரை வழங்கினார் நஞ்சீயர். "மணாளனுடைய கை-பட்டவாறே புதுமணப் பெண்ணுக்கு வேர்ப்பது விடுவது போல் புத்துணர்ச்சி பிறக்குமன்றே; பழையரானார்க்கு அங்ஙனிருக்க வொண்ணாதே!" என்று சுருங்க விளக்கினார் சீயர். ஆழ்வா-ரைப் புதுமணப் பெண்ணாகவும் விண்ணாட்டவரைப் பழைய

43. மணிமேகலை 2: 42-44; பு.வெ.மா. 262

44. 4-6-0 ஈ; 5-3-0 ஈ

45. 6-1-10 ஈ

46 பெரி. திரு. 9-3-1

பெண்டிராகவும் கொண்டு உருவகித்து உண்மையை விளக்கினார் சீயர்.[47]

(ஈ) ஆழ்வாருடைய பாடல்வரிகளைப் பன்முறை பல்காற் சொல்லிப் பார்த்துப் பொருள் காணும் திறத்தினையும் நம்பிள்ளை சீயரிடம் கற்றுக் கொண்டார். சொல்லும் முறையிலும் பல்பொருள் தோன்றும் என்ற உரையுண்மையைச் சீயர் தெளிவுறுத்தினார்.

பெரிய திருமொழியில் திருத்தாயார் கூற்றாக,

''பண்டிவரைக் கண்டறிவது எவ்வூரில்
யாமென்றே பயில்கின்றாளால்''[48]

என்ற தொடர் வருகிறது. இதற்கு இருவகையாகப் பொருள் நிறுவினார் சீயர். 'முன்பு இவரைக் கண்டாற் போலுள்ளதே எவ்விடத்துக் கண்டிருப்போம்' என்று தலைவி ஆராய்வதாக ஒரு பொருள்; 'இப்போதே இவரை முதலாகக் கண்டோம், பண்டு எவ்வூரிலும் கண்டறிவதில்லை' என்று தலைவி முடிவு செய்வதாக மற்றொரு பொருள். 'இவ்விரு பொருளும் ஒரே தொடருக்கு எப்படிச் சேரும்?' என்று நம்பிள்ளை கேட்டார். நஞ்சீயர், ''மூலத்தில் 'பயில்கின்றாளால்' என்றிருப்பதால் இவ்வினாத்தொடரைத் தலைவி பல்கால் உருச்சொல்கிறாள் என்பது விளங்குகிறது. அந்தத் தொடரை முதன்முறை சொல்லும்போது முதற்பொருளும் அடுத்தடுத்துச் சொல்லும்போது இரண்டாம் பொருளும் தோன்றக் குறையில்லை'' என்று விளக்கினார்.[49] ஒவ்வொரு தொடரையும் இடத்திற்கு ஏற்ப, உணர்ச்சி பொருந்த, சொல்லிப் பார்த்தே பொருள் தெளிவு பெறவேண்டும் என்ற உரைக் கொள்கையைச் சீயரிடம் கற்றுப் பேருரை எழுதும்போது அதனைப் பின்பற்றினார் பிள்ளை.

இதே போன்று, அன்றாட வாழ்க்கையில் நிலவுகின்ற நாட்டுப்பழக்கங்களையும் தொழில் முறைகளையும் அடிப்படையாகக் கொண்டு அருந்தொடர்களுக்கு விளக்கம் காணும் உத்திகளையும் நஞ்சீயரிடம் உசாவியறிந்து கொண்டார். நம்பிள்ளையின் வினாக்களை உன்னித்து நோக்கினால் அவை ஐய

---

47. பெ.வா.பி.வியா. பெரி. திரு. 9-3-1; 9-6-9 ஈ
48. பெரி. திரு. 8-1-9
49. 3.7.1ஈ; திரு.வி. 8ஈ; பெ.வா.பி.வியா., பெரி திரு. 8-1-9

வினாக்களாகப்படவில்லை. சில உத்திகளைப் பயன்படுத்து வதற்கு முன் இசைவுபெற விரும்பினார் என்றே தோன்றுகிறது.

வளர்த்ததனால் பயன் பெற்றேன்

நம்பிள்ளையைப் பேருரையாளராக வளர்த்தவர் நஞ்சீயர். ஆயினும் பிள்ளையின் பேருரையாகிய ஈட்டை அவர் காணக் கொடுத்து வைத்திலர். நஞ்சீயர் பரமபதித்த பிறகே அவ்வுரை ஏடுபடுத்தப்பட்டது. அப்பேருரையைக் கண்டிலராயினும் சீடரான நம்பிள்ளையின் உரைத்திறனையும் புலமைப் பெருமை யையும் அவருடைய உரையாடல்களிலும் வினாக்களிலும் அறிந்துகொண்டு பெரிதும் பாராட்டினார். திருமங்கையாழ் வாரின் ஒரு பாசுரத் தொடருக்குப் புதியதும் சுவைமிக்கதுமான விளக்கம் கூறியபோது நம்பிள்ளையை ஆழ்வாரினும் உயர்ந்த பக்தராகப் போற்றினார்.[50] தம்முடைய உரைவிளக்கத்தினும் மிகப் பொருந்துவதொன்றைத் தமிழ் நூற்புலமை கொண்டு நிறுவியபோது மனமுவந்து ஏற்றுக்கொண்டார்.[51] தம் ஆசிரியராகிய பட்டரின் ஒரு பொருளாட்சி விளங்காதபோது பொருள் புரியும்படி வேறொரு பொருளாட்சியை வழங்கிய போதும் பட்டருடைய மற்றொரு பொருளாட்சியை எளிதில் பொருந்தவிட்டபோதும் நஞ்சீயர் மகிழ்ந்து 'வளர்த்ததனால் பயன் பெற்றேன் வருகவென்று மடக்கிளியைக் கை கூப்பி வணங்கினாளே' என்ற பாடலுக்கு எடுத்துக் காட்டாகக் கற் றோர் கூடிய பேரவையில் நம்பிள்ளையைப் போரப் பொலியக் கொண்டாடினார்[52]. வயதில் மூத்தவராயும் ஆசிரியராயுமுள்ள நஞ்சீயர் சிறு பிராயத்தினராய்ச் சீடரான நம்பிள்ளையைக் கொண்டாடுதல் தகுமோ என்று பிறர் வெறுத்தபோது, 'கணபுரம் கைதொழும் பிள்ளையைப் பிள்ளை என்று எண்ணப் பெறுவரே'' என்ற ஆழ்வார் பாடலைக்காட்டி நம்பிள்ளை தொழத்தக்கவரே என்றுவிளக்கிநிறுவினார்.[53] நஞ்சீயர் தம்வாழ் நாளில் நூறுமுறை திருவாய் மொழிக்குப் பொருள் நிருவகித் தார், அவற்றை ஒன்றும் தப்பாமற் கேட்ட நம்பிள்ளை நூறாம்

---

50. பெ.வா.பி.வியா. பெரி. திரு. 1-1-2
51. பெ.வா.பி.வியா. பெரி. திரு. 1-2-10
52. பெ.வா.பி.வியா. பெரி. திரு 10-2-1; 9-6-6ஈ; 6-7-9ஈ
53. 6-7-9 ஈ

முறையாகத் திருவாய் மொழிச் சொற்பொழிவு முடிந்ததும் ஆசிரியராகிய சீயருக்குப் பெருஞ்சிறப்புடன் சதாபிஷேகம் செய்து மகிழ்வித்தார்.[54]

நஞ்சீயர் நூறு பிராயம் எழுந்தருளியிருந்து ஒரு பேருரையாளரை இவ்வுலகிற்கு வழங்கிப் பரமபதித்தார். இவர் கி.பி. 1208ல் பரமபதித்தாராகத் தெரிகிறது.[55] இவரிடம் நம்பிள்ளை சீடராயிருந்த ஆண்டுகளை இனிக் கணக்கிட வேண்டும்.

இராமாநுசர் கி.பி. 1137 ல் பரமபதித்தார். அதற்குப் பிறகு மூன்று ஆண்டுகள் கழித்து கி.பி. 1140ல் எம்பார் பரமபதித்தார்.[56] எம்பாரைத் திருவரங்கத்தில் நஞ்சீயர் கண்டதாக ஒரு ஐதிஹ்யத்தால் அறியமுடிகிறது.[57] ஆகையால் கி.பி. 1138-39ல் நஞ்சீயர் பட்டரால் ஆட்கொள்ளப்பட்டுப் பரம வைணவராய்த் திருவரங்கத்திற்கு வந்து சேர்ந்திருக்கவேண்டும். அதாவது பட்டருடைய மறைவுக்குப் பிறகு 34ஆண்டுகள் வாழ்ந்திருந்து ஆசாரிய பீடத்தை அணி செய்திருந்தார். இவற்றுள் நம்பிள்ளை முப்பது ஆண்டுகளாவது நஞ்சீயருக்குச் சீடராகியிருந்திருக்க வேண்டும். நஞ்சீயர் பரமபதிக்கும்போது நம்பிள்ளைக்கு 61 வயது நிரம்பிவிட்டது. அதற்குப்பின்னரே அவர் உரைகளைத் தோற்றுவித்தார் என்று தெரிகிறது.

நம்பிள்ளையின் இல்லறவாழ்வைப்பற்றி ஆறாயிரப்படி குருபரம்பரை நூல் ஒன்றும் தெரிவித்திலது. குறிப்பறிந்து ஒழுகிய நல் மனைவி வாய்க்கப் பெற்றிருந்தார் என்ற செய்தியை மட்டும் யதீந்த்ரப்ரவணப் பிரபாவத்திலிருந்து அறிய முடிகிறது.[58] அவருக்கு இருமனைவியர் வாழ்க்கைப்பட்டிருந்தனர் என்றும் அவருடைய திருமகனாருக்குத் 'தூவியம்புள்' என்பது பெயர் என்றும் பன்னீராயிரப்படி குருபரம்பரை நூல் தெரி-

---

54. ஆ.கு.ப.பி., மு. நூ.ப. 352

55. பெரிய திருமுடிஅடைவு, மு.நூ.ப. 33

56. பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ சபை பொன்விழாமலர், ஆசார்யர்களின் கால நிர்ணயம் 1978, ப. 295

57. 6-4-10 ஈ

58. யதிந்த்ரப் பிரவணப்ரபாவம், சே.கி. பதிப்பு, 1907, ப.5

விக்கிறது.[59]

**நம்பிள்ளையின் நிலைத்த வாழ்வு**

நம்பிள்ளை தம் வாழ்நாளில் பெரும்பகுதிக் காலம் திருவரங்கத்திலேயே நிலையாகத் தங்கியிருந்தார். அவர்செய்த திவ்விய தேச யாத்திரைகள் பற்றிய விரிவான செய்திகள் குருபரம்பரை நூல்களில் இல்லை. திருவரங்கத்துக்கு அருகிலுள்ள திருவெள்ளறைக்குச் சென்றுவந்த ஒரு நிகழ்ச்சி மட்டும் ஆறாயிரப்படி குருபரம்பரையில் உள்ளது.[60] 'வேல்வெட்டி' என்ற சிற்றூர்க்குச் சென்றுவந்த ஒரு குறிப்பு ஓர் ஐதிஹ்யத்தில் கிடைக்கிறது.[61] ஒருமுறை நம்பிள்ளை மைசூர்ச் சீமையிலுள்ள மேலக்கோட்டைக்குச் சென்று கேசவ தீட்சிதருடைய அகத்திலே தங்கியிருந்ததாகத் திருவிருத்த உரையில் காணப்படுகிறது.[62] மற்றொரு சமயம் அவர் காஞ்சிபுரத்துக்குப் பயணம் சென்று திரும்பியதை விலக்ஷண மோக்ஷாதிகாரி நிருணயம்[63] குறிப்பிடுவது வேறொரு முறை நஞ்சீயரின் ஆணைப்படி இறையிலியாக நிலம் வேண்டி யாதவராயன் என்ற மன்னனைச் சந்திப்பதற்காகத் திருவையாறு சென்று வந்தார் என்பதைப் பெரியவாச்சான் பிள்ளை கூறுகிறார்.[64] இக்குறுகிய வெளிச் செலவுகளைத் தவிர நம்பிள்ளை பெரும்பாலும் திருவரங்கம் திருப்பதியே இருப்பாகப் பெற்று வாழ்ந்தார். அதனால் திருவாய்மொழி உரை ஆக்கத்திற்கு இடையறவு படாத நெடிய, அமை

---

59. பன்னிராயிரப்படி குருபரம்பராப் பிரபாவம், பூமகள் விலாச அச்சுக்கூடம் சென்னை. 1928 ப. 575 'தூ வியம்புள்' என்பவர் பட்டர் வமிசத்தினர் என்று எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் கருது ர். (வார்த்தாமாலை 178, 'விளக்கவுரை' ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம், 392) பெ திருமுடி அடைவில் நம்பிள்ளையின் குமாரராக 'ராமாநுஜாசார்யர்' என்ற யர் காணப்படுகிறது. வைணவ ஆசாரியர்களுக்கு வடமொழியிலும் தமிழிலும் த. த்தனியாகப் பெயர்கள் வழங்கப்படுவது மரபாக உள்ளது. பெரியவாச்சான் பிள்ளைக்கு 'ஸ்ரீ கிருஷ்ணன்' என்று வடமொழிப் பெயர் தனியனில் வருகிறது. எனவே ராமாநுஜாசாரியருக்கே தமிழ்த் திருநாமமாகத் 'தூ வியம்புள்' என்று ஏற்பட்டிருக்கலாம். 'தூ வியம்புள்' என்ற பெயர் திருவாய்மொழியில் 3—8—7; 4—5—4 9—9—4 ஆகிய இடங்களில் வருகிறது. இச்சொல்லழகில் ஈடுபட்ட நம்பிள்ளை தம் மகனார்க்கு அதைப் பெயராக இட்டிருக்கக்கூடும்,

60. ஆ.கு.ப.பி..மு.நூ., ப.363

61. 1-10-2 ஈ:
 பெ.வா.பி. வியா., பெரி.திரு. 1-1-1
 பெ.வா.பி. வியா., பெரி.திரு. 5-8-6
 வார்த்தாமாலை, 60;
 ஸ்ரீவசனபூஷணம், சூத். 31;

62. திருவி. 15 ஈ

63. எறும்பியப்பா, விலக்ஷண மோக்ஷாதிகாரி நிர்ணயம், 1904, பக்.15, 16,

64. பெ.வா.பி., வியா; பெரி. 2-6-1

தியான இருப்பிடச் சூழல் அவர்க்கு வாய்த்தது. இடையிடையே நிகழ்ந்த போர்ச் செயல்களாலும் அப்பணிக்கு இடையூறு விளையவில்லை[65] என்றும் தெரிகிறது.

## நம்பிள்ளை—உரைகளைத் தோற்றுவித்த உத்தமர்

நம்பிள்ளை பல்லாண்டுகள் நஞ்சீயரின் ஒன்பதினாயிரப் படி உரையை அடிப்படையாகக் கொண்டே விரிவுரையாற்றி வந்தார். அதனால், உரை விள்க்கங்கள் பெருகிக் கொண்டே போயின. ஆயினும் அவற்றைப் பிள்ளை ஏட்டில் எழுத முயலவில்லை. அவற்றைச் செவிமடுத்த அறிஞர்கள் ஏடுபடுத்த முயன்றனர். நடுவில் திருவீதிப்பிள்ளைபட்டர் என்பார் ஒருமுறை அவற்றை எல்லாம் பகலிற் கேட்டு இராமுற்ற எழுதித் தலைக்கட்டி எழுதிய சுவடிகளை நம்பிள்ளையிடம் காட்டினார். தம்முடைய இசைவு பெறாது எழுதப்பட்டதாலும் மிகவும் பெருக்கமாய் ஒரு லட்சத்து இருபத்தையாயிரம் கிரந்த அளவுடையதாக இருந்ததாலும் தம்முடைய வாக்குகளால் மட்டுமே நிரம்பி உள்ளத்திலிருந்த ஆழ்பொருள்களைத் தெரிவிக்காததாலும் நம்பிள்ளை வெறுப்புற்று அச்சுவடியை நீர் சொரிந்து கரையானுக்கு இரையாக்கி விட்டார்.[66] நடுவில் திருவீதிப்பிள்ளையின் உழைப்பு வீணாயிற்று. இவருடைய ஒரு பொருளாட்சி மட்டும் ஈட்டில் இடம் பெற்றுள்ள்ளது.[67]

## இருபத்து நாலாயிரம்

நடுவில் திருவீதிப்பிள்ளையின் சுவடிகளை அழித்த பிறகு நம்பிள்ளைக்கு மனமாற்றம் ஏற்பட்டது. திருவாய்மொழிக்குத் தாம் நிறுவிய கட்டளையில் ஒரு பேருரை தோன்றவேண்டும் என்ற எண்ணம் எழுந்ததுபோலும். ஆனால் தாமே தமது திருக்கரத்தால் எழுதவில்லை. தமக்கு மிகவும் அன்பராய் எல்லா நூல்களையும் அலகலகாய்க் கற்றிருந்த பெரியவாச்சான் பிள்ளையை ஒரு வியாக்கியானம் இடுமாறு பணித்தார்.[68] அதுவே இருபத்துநாலாயிரம் கிரந்தங்களைக் கொண்ட

---

65. 4-6-6- ஈட்டில் வரும் ஐதிஹ்யத்தால் போர்க்காலங்களிலும் திருவரங்கம் கோயிலுக்கு உட்புறமாகப் பாதுகாப்பான இடத்திலமர்ந்து திருவாய்மொழிப் பொருள் ஆராயப்பட்டது தெரிகிறது.

66. ஆ.கு.ப.பி., மு.நூ. பக். 372

67. 9-3.0 ஈ

68. ஆ.கு.ப.பி., மு.நூ ப. 372

பேருரையாகத் தலைக்கட்டிற்று. அதனை நம்பிள்ளை ஏற்றுக்-கொண்டார். பின்னால் ஈடு மணவாளமாமுனிகளால் மக்-களிடையே பெருக்கம் அடையும் வரை பெரியவாச்சான் பிள்ளையின் பேருரையே அறிஞர்களால் விரும்பிக் கற்கப்-பட்டது.

ஈடு முப்பத்தாறாயிரம்

நம்பிள்ளைக்கு முதன்மையான சீடர்கள் பெரியவாச்சான் பிள்ளையும் வடக்குத் திருவீதிப் பிள்ளையும் ஆகிய இருவர். இவ்விருவரும் நம்பிள்ளையின் இரு கண்களாகப் போற்றப் பட்டனர்.[69] இவருள் வடக்குத் திருவீதிப்பிள்ளை ஒருமுறை நம்பிள்ளையின் திருவாய் மொழிச் சொற்பொழிவுகளைக் கேட்டது கேட்டபடியே இரவு முழுதும் விழித்திருந்து ஏடுபடுத் திவந்தார். அது முடிவுற்றதும் நம்பிள்ளையிடம் காட்டினார். அது யானை கோலஞ்செய்து புறப்பட்டாப்போலே பெருமிடுக்குடன் அமைந்த அழகைக் கண்டார் நம்பிள்ளை. முப்பத்-தாறாயிரம் கிரந்த அளவில் சுருக்கமும் பெருக்கமுமின்றி அமைந்த அப்பேருரையை உள்ளத்தாற் பாராட்டினாலும் தம் முடைய ஆணையின்றி எழுதப்பட்டதால் அச்சுவடிக்கட்டை வாங்கித் தம்மிடத்திலேயே வைத்துக் கொண்டார்.[70]

அதனைப் பெற்று வெளிக் கொண்டுவரப்பலரும் விரும் பியிருந்தனர். ஆயினும் அதனைப் பிள்ளையிடம் தெரிவிக்க அஞ்சினர் போலும். சுவடிக்கட்டைக் கரையானுக்கிட்டு அழிக் காமல் வைத்துக் கொண்டதே பெரிதாயிருந்தது. அந்நிலையில் தான் ஒரு நாள் இறைவன் ஆணையால் நம்பிள்ளை தமது சீடரான 'ஈயுண்ணி மாதவப்பெருமாள்' என்பவருக்கு ஈடுமுப் பத்தாறாயிரப் பட்டோலையை வழங்கினார். அப்போதும் ஒரு நிபந்தனையிட்டார். அவ்வுரையைப் பலருக்கும் காட்டாது ஓராண் வழியாகவே கற்பித்து வருமாறு ஆணையிட்டார்.[71]

நம்பிள்ளையின் நற்பண்புகள்

கலையறக்கற்றுக்கலையிலங்கு மொழியாளராகத் திகழ்ந்த நம்பிள்ளையிடம் எவ்வகைச் செருக்கும் இருந்ததில்லை. குலக்

69. மணவாளமாமுனிகள், ஈட்டுத்தனியன்.

70. ஆ.கு.ப.பி., மு.நூ. ப. 374

71 மேலது

செருக்கு கல்விச்செருக்கு செல்வச் செருக்குகளாகிய வஞ்சமுக் குறும்புகளையும் அடியோடு ஒழித்து அடக்கமே வடிவெடுத்-தாற்போல் விளங்கினார். அவருடைய ஓர் உயர் குணத்தை ஈட்டிலேயே காணமுடிகிறது. ஒரு முறை பிள்ளையாத்தான் என்னும் செல்வர் நஞ்சீயரிடம் திருவாய்மொழிக்குப் பொருள் கேட்கச் சென்றார். சீயர் அவரைப் பிள்ளைபால் கேட்குமாறு அனுப்பிவைத்தார். பெருஞ் செல்வராகிய அவர் நம்பிள்ளையைத் தெண்டனிடத் தயங்கினார். நஞ்சீயர் துறவியாதலால் அவரைத் தெண்டனிட்டு வணங்கலாம், நம்பிள்ளையோ தம்மினும் இளைய ராய் இல்லறத்திருந்ததால் தெண்டனிடத்தகாது என்று அவர் எண்ணினார். அதனால் நஞ்சீயர் நம்பிள்ளையை அழைத்து அச்செல்வருக்குப் பாங்கானபடி பொருள்உரைக்குமாறு ஆணை யிட்டார். சீயரின் குறிப்பறிந்த பிள்ளை அச்செல்வரை ஓர் இருக்கையில் உயர இருத்தித் தாமே தெண்டனிட்டுக் கீழிருந்து அவருக்குத் திருவாய்மொழிப்பொருளை உபதேசித்து வந்தா-ராம். •நெடுமாற்கடிமை (8–10) என்ற திருவாய்மொழி வந்தவாறே அடியார்களின் ஏற்றத்தை நம்பிள்ளை பரக்க விரித்துரைத்தார். அதைக்கேட்ட செல்வர் குற்றத்தை உணர்ந்து நம்பிள்ளையை அன்று தெண்டனிடப் புகுந்தாராம். நம்பிள்ளை அதனை ஏற்க மறுத்தும் சீயரையிட்டு வற்புறுத்திப் பிள்ளை-யின் திருவடிகளில் தெண்டனிட்டுக் கிடந்தாராம்.[72] இவ்வாறு சீடரை வணங்கி வழிபட்டுப் பொருள் உரைத்து நல்வழிப் படுத்திய பெருந்தகைப் பண்பாளர் நம்பிள்ளை என்று அறி-கிறோம்.

தம்மை அறவெறுத்த பகைமையாளரும் அப்பகைமைஒழிந்து போற்றும்படி வாழ்ந்தவர் நம்பிள்ளை. தம்மிடம் இல்லாத பழி-களைப் பிறர் பொறாமையால் ஏறிட்டாலும் அப்பழிகளை மனமுவந்து ஏற்றுக்கொண்ட நம்பிள்ளை 'நானே தானாயிடுக' என்ற திருப்பாவைக்கு இலக்கியமாக வாழ்ந்தார். நம்பிள்ளை யிடம் புலமைக் காய்ச்சலால் வெறுத்திருந்த 'கந்தாடைத் தோழப்பர்' பிள்ளையின் பெரும்பண்புகளை அறிந்து அவரை 'லோகாசாரியர்' என்று பாராட்டி வழிபட்டார்.[73]

---

72. 3—7—3 ஈ

73. உபதேசரத்தினமாலை, ப. 51

நம்பிள்ளையின் உரை நயங்களை அரசர்களின் முன் விரித்துரைத்துப் பரிசுகளாகப் பெரும் பொருளைப் பெற்றபோது அவரிடத்துப் பொறாமையுற்ற நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் மனம்மாறித் தாம்பெற்ற பரிசுப் பொருள்களைப் பிள்ளையிடம் கையுறையாகச் சேர்த்துச் சீடரானார்.[74]

விரிவுரையாளராகத் திகழ்ந்த நம்பிள்ளை அற்புதம் செய்த அருளாளராகவும் வாழ்ந்த வரலாறுகள் குருபரம்பரை நூல்களில் உருக்கமாகச் சொல்லப்பட்டுள்ளன.[75]

அற்புதமியற்றவல்ல ஆசாரியராயினும் நம்பிள்ளை சாதாரண மனிதரைப் போன்றே அடக்கமாய் வாழ்ந்தார். ஒரு சமயம் நம்பிள்ளை நோய்வாய்ப்பட்டார். தம்முடைய அற்புத ஆற்றலால் நோயைத் தீர்த்துக் கொள்ளச் சிறிதும் விரும்பவில்லை; அவர்மீது பரிவுகொண்ட சிலர் மந்திரங்களைப் பிரயோகித்துப் பரிஹரிக்க முயன்ற போது அம்முயற்சியைத் தடுத்துவிட்டார். துவயம் என்ற மந்திரத்தைத் தவிர மற்ற மந்திரங்களை அவர் நினைத்தும் பார்ப்பதில்லை. துவயத்தையும் தம்முடைய பொருள் அநுபவத்துக்குக் கொள்வரேயன்றி நோய் தீர்க்கும் உபாயமாகக் கொள்ளமாட்டார். நோயினால் திருமேனி இளைத்ததே என்று சிலர் வருந்திய போது ஒன்று தேய மற்றது வளரும் என்ற உண்மையைக் கூறினார். அதாவது ஞான பக்தி வைராக்கியங்கள் வளரச்சரீரம் தேய்ந்து இளைக்கும் என்று கருத்து. ஓர் அன்பர் அவரிடம், ''ஆரோக்கியம் இல்லையோ?'' என்று உசாவிய போது, ''போர் செய்யவா போகிறேன். பெருமாளைச் சேவித்திருக்க வேண்டிய அளவு ஆரோக்கியம் உண்டு'' என்று விடையிறுத்தார். உடல் வளர்ச்சியிலே உள்ளம் செலுத்தி ஊன் மல்கி மோடுபருத்திருப்பார் ஒருவரல்லர் நம்பிள்ளை என்று அறியப்படும்.[76]

---

74. ஆ.கு.ப.பி., மு.நூ., ப. 369

75. (அ) மேலது பக். 363, 364;

(ஆ) எறும்பியப்பா, மு.நூ. பக். 15, 16.

76. ஆ.கு.ப.பி., மு.நூ., பக். 367, 368.

# இயல் 2 : நம்பிள்ளைஉரை

## தமிழ்ப் புலவர் உரைகள்

திருவாய்மொழிக்குத் தென் சொற்கடந்து வடமொழிக் கடலின் நிலை கண்டுணர்ந்த பேரறிவாளராய் ஞான பக்தி வைராக்கியங்களில் முதிர்ந்தவராய்ப் பொன்னையும் புகழையும் போற்றுதலையும் வெறுத்தவராய் ஆழ்வாரிடத்து அளப்பரிய காதன்மையுடையோராய் விளங்கிய ஆசாரியர்கள் ஐவர் உரை எழுதியுள்ளனர். ஆசாரியர்களின் சிஷ்ய பரம்பரையிற் சேராதவர்களாகவும் இலக்கிய நோக்கு ஒன்றினையே கருதியவர்க-ளாகவுமிருந்த தமிழ்ச் சான்றோர்கள் சிலரும் திருவாய்-மொழிக்கு உரையிட்டிருந்தனர். அவ்வுரைகள் யாவும் இறந்து பட்டன. ஆயினும் நம்பிள்ளையின் ஈட்டில் அவ்வுரைகளிலிருந்து நயமான பகுதிகள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன.

ஆசிரியர்களின் புலமைத்திறன் மிக்க விரிவுரைகளைத் தமிழ்ப் புலவர்கள் கேட்டதால் திருவாய் மொழிக்குத் தாமும் உரையிடவேண்டும் என்று விரும்பியிருக்கக் கூடும். அப்படி உரையிட்டால் அது தமக்குப் பெரும் புகழை ஈட்டித் தரும் என்றும் அவர்கள் நினைத்திருக்கக் கூடும். அதனால் ஆசாரி-யர்களின் சொற்பொழிவுகளைச் செவிமடுத்து இடையிடையே வினவியறிந்தும் தெளிவு பெற்றுச் சென்றனர். இச் செய்திகள் யாவும் ஈட்டில் நிறைந்திருக்கின்றன. மரபு வழியாக வந்த வாய்மொழி உரைகளோடு தமிழ்ப் புலவர்களின் உரைகளும் ஒன்று சேர்ந்து நம்பிள்ளையின் பேருரையில் கலந்துவிட்டன. அதனால் முதற்கண் அவற்றையும் ஆய்வு செய்து கொண்டால் திருவாய்மொழி உரைகளின் இடையில் நம்பிள்ளை பேருரை-யின் இடமும் சிறப்பும் தெளிவாகப் புலப்படும்.

## ஆழ்வானும் ஆமருவிநிரைமேய்த்தான் நம்பியாரும்

இராமானுசருடைய சீடரான கூரத்தாழ்வான் ஒருமுறை 'இராஜேந்திர சோழன்' என்ற சிற்றூர்க்கண் திருவாய்மொழியில்

"கலைகொள் அகலல்குல் தோழீ நம்கண்க ளாற்கண்டு
தலையில் வணங்கவு மாங்கொலோ தைய லார்
முன்பே"[1]

1. தி.வா.மொ. 5-3-7.

என்ற பாடற்பகுதியை விரித்துரைத்தார். அப்போது தமிழ் அகப்பொருள் மரபுகளை நன்கு அறிந்திருந்த முதிர்ந்த பருவத்-துப் புலவரான ஆமருவி நிரை மேய்த்தான் நம்பியார் என்பவர், ''ஆழ்வான், தலைமகள் தலைவனைத் தலையால் வணங்கு-வளோ?'' என்று கேட்டார். ஆழ்வானும் 'சிஷ்டர் செயலுண்டு' என்று சீதையின் செயலை வால்மீகத்திலிருந்து எடுத்துக் காட்டினார்.[2] இதனால் தமிழ் இலக்கணம் வல்லவர்கள் ஆசாரியர்களின் விரிவுரைகளை உன்னித்துக் கேட்டனர் என்றும் தமிழ் மரபுகளை மதித்து உரையாற்றுகின்றனரா என்பதை வினவியறிந்தார்கள் என்றும் தெரிகிறது.

### பட்டரும் தமிழ்ப் புலவர்களும்

கூரத்தாழ்வானுடைய குமாரரான பட்டருடைய பேர-வையில் தமிழ்ப் புலவர்கள் நிரம்பியிருந்தனர். அவர்களில் ஆல-வாயுடையான், ஒப்பிலாத பெருமாள் என்ற இருவரும் மதுரையைச் சேர்ந்தவர்களாகத் தெரிகின்றனர். அவர்கள் வினவியபோது பட்டர் குறுந்தொகையிலிருந்தும் திருக்குறளி-லிருந்தும் சான்றுகள் காட்டி விடையளித்ததை நம்பிள்ளையே தம் பேருரையில் விரிவாக விளக்கியிருக்கிறார்.[3] பட்டரு-டைய பேரவையில் பெருந் தமிழ்ப்புலவர்களும் தாமே சென்று சமயக் கொள்கைகளைக் கேட்டு ஐயப்பாடுகளை அகற்றிக் கொண்டனர். ஒருமுறை ஒருசெட்டியை, ''இவன் தமிழுக்குத் தேசிகனாயிருக்கும்,'' என்று பட்டருக்கு அறிமுகப் படுத்தி-னார்கள். அப்புலவரும் உடலைப்பற்றிய இருவேறு கோட்பாடு-களைக் கேட்டுத் தெளிவு பெற்றதாக அறியப்படுகிறது.[4]

### அகளங்கனும் அருளிச் செயலும்

வைணவ சமய குரவர்கள் சோழப் பேரரசர்களின் பேரோலக்கங்களில் ஆழ்வார்களின் அருளிச் செயற் பாசுரங் களுக்குப் பொருள் விரித்துக் கூறிப் பாராட்டுக்களைப் பெற்

---

2. 5-3-7. ஈ 'இராமன் திருவடிகளைத் தலையால் வணங்கினேன் என்று கூறுக' என்று அனுமனிடம் கூறியதாக வான்மீகர் வருணிப்பர் கம்பரும் 'உன்மலர்டி சென்னி வைத்தாள்' என்று அனுமன் இராமனிடம் கூறியதாகக் காட்டுவர் (சுந், திரு.தொழுத., 45) இவ்விடத்தில் (சியர்) அரும்பதவுரைகாரர் ''தெய்வம் தொழாஅள் கொழுநற்றொழு தெழுவாள்'' என்ற குறட்பகுதியைச் சான்று காட்டுகிறார்.

3. பெ.வா.பி.வியா., பெரி.திரு 5-1-2; 1-4-4ஈ

4. 10-2-5ஈ; இதே செய்தி பெ.வா.பி. வியா. 1-3-1ல் இடம் பெறுகிறது. அங்கு 'ஶ்ரீயாபாரி' என்று குறிக்கப்படுகிறது.

றிருக்கிறார்கள். சோழமன்னரில் 'அகளங்க நாட்டாழ்வான்' என்பவன் ஆழ்வார் பாடல்களுக்குச் சுவையான பொருள்களை வெளியிட்டிருக்கிறான். அவற்றுள் ஒன்றைப் பெரியவாச்சான் பிள்ளை தம்முடைய வியாக்கியானத்தில் சேமித்து வைத்திருக் கிறார்.[5] இச் சோழமன்னன் 'அகளங்கன்' என்ற சிறப்புப் பெயர் தாங்கிய விக்கிரம சோழன் (கி.பி.1118-1136) ஆவான்.[6] 'விக்கிரம சோழ தேவர்' பணித்ததாக வேறு இரண்டு இடங்களிலும் அவனுடைய வார்த்தைகளைப் பெரியவாச்சான் பிள்ளை குறிப்பிடுவர்.[7] இச்சோழமன்னன் பட்டருடைய பேருரைகளைக் கேட்டுப் பொருள் நிறுவும் திறன் பெற்றிருந்தான். இதனால் சோழமன்னனுடைய பேராதரவைப் பெறப் புலவர் பலரும் திருவாய் மொழிக்கு உரையிடும் முயற்சியில் ஈடுபட்டனர். அரசியற் பணியிலிருந்த உயரதிகாரிகளும் ஆசாரியர்களை அணுகி ஆழ்வார் பாடல்களுக்குப் பொருள் கேட்டு வந்தனர். 'வளவன் பல்லவதரையன்' என்பான் ஒருவன் திருக் கோட்டியூர் நம்பிபக்கல் திருவிருத்தம் கேட்டிருந்தான்; இவனை நஞ்சீயர் திருக்கோட்டியூரில் சந்தித்த போது அவனும் நம்பியின் ஆணைப்படி 'யாதானுமோர்' என்ற திருவிருத்தப் பாடலை நாடோறும் இறைவன் திருமுன்னர் விண்ணப்பித்து வருவதாகக் கூறினானாம்.[8] இவனுடைய முழுப்பெயர் 'கருணாகரன் சுந்தரத் தோளுடையானாகியவளவன் பல்லவ (த)ரையன்' என்பதாம். பாண்டிய நாட்டைச் சேர்ந்த இவன் பரகேசரி அகளங்கனாகிய விக்கிரம சோழனுடைய அரசியல் அதிகாரியாவான்.[9]

## தமிழர் பொருளாட்சிகள்

ஆசாரியர்களின் விரிவுரைகளைக் கேட்டதமிழ்ப்புலவர்கள் அவ்வப்போது தம்முடைய புலமைக்கு எட்டிய பொருளாட்சிகளையும் உரைத்து வந்தனர். அவற்றை ஈட்டில் பதினோரு இடங்களில் காண்கிறோம். தமிழருடைய பொருளாட்சிகளைக் குறிப்பிடும்போது,

5. பெ.வா.பி. வியா., நாச். திரு 13—1
6. தி.வை. ச. பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, 1974, ப.331.
7. பெ.வா,பி.வியா., பெரி.தி 8—5—6
   பெ.வா.பி.வியா., தி.நெ.தா.25
8. பெ.வா.பி.வியா., திரு.விரு.95
9. தி. வை. ச. பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு 1974 ப 339

| | |
|---|---|
| ஒரு தமிழன் ... என்றான் | — 3 |
| ஒரு தமிழன் ... சொன்னான் | — 1 |
| ஒரு தமிழன் நிர்வகித்தான் | — 3 |
| என்று ஒரு தமிழன் | — 2 |
| இது தமிழன் நிர்வாகம் | — 1 |
| தமிழர் ... என்று சொல்லுவார்கள் | — 1 |
| | 11 |

என்ற முறைகள் காணப்படுகின்றன.[10] இவை வருமிடங்களை ஆய்வு செய்தால் சில உண்மைகள் புலனாகின்றன.

**'தமிழர்' யார் ?**

ஆசாரியர்கள் தம் வியாக்கியானங்களில் 'தமிழன்' என்றும் 'தமிழர்' என்றும் பிற உரையாளரைச் சுட்டும்போது இகழ்ச்சிக் குறிப்பு இழையோடுவதாகச் சிலர் கருதுகின்றனர்.[11] ஆழ்வார் களை இருடிகளிலும் உயர்ந்தோராகக் கருதித்தொழும் இயல்பினர் ஆசாரியர்கள். ஆழ்வார்கள் தங்களைத் தமிழையிட்டுச் சிறப்பித்துக் கொண்டதை அவர்கள் அறியாதவர்களல்லர். பூதத்தாழ்வார் தம்மைப் 'பெருந்தமிழன்' என்று அறிவித்துக் கொண்டார்.[12] மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரைத் 'தமிழ்ச் சடகோபன்' என்று பாராட்டினார்.[13] இவற்றை நன்கறிந்த ஆசாரியர்கள் 'தமிழன்' என்பதை இகழ்ச்சிக் குறிப்போடு சொல்லியிருக்க மாட்டார்கள். உண்மையில் அவர்கள் புகழ்ச்சிக் குறிப்போடு தான் சொல்லியிருக்க வேண்டும். 'தமிழர்' என்றபோது சாதியைக் கருதினாரா அன்றி மொழியைக் கருதினாரா என்பதையும் ஆய்வு செய்ய வேண்டும்.

'தமிழன்' என்று திருவள்ளுவரையும் 'தமிழர்' என்று களவியல் உரைகாரரையும் தொல்காப்பியரையும் நம்பிள்ளை வழங்குகிறார்.[14] இதனால் தமிழ் நூல் வல்ல புலமைச் சான்றோர்களையே அவ்வாறு இயற்பெயரன்றிப் பொதுப்படக் குறித்தனர் என்பது தெளிவு. இவ்வாறே பரிமேலழகர் தம் திருக்குறள் உரையில் வடநூலாரைச் சுட்டியிருப்பது ஒப்பு நோக்கத்தக்கது.[15] மற்றொரு உண்மையும் ஈட்டு ஐதிஹ்யங்களை

10. பார்க்க :பின்னிணைப்பு (4)
11. கோ. பாலசுந்தர நாயகர், திருவாய்மொழி அகப்பொருட்பாசுர விளக்கம் முதற் பகுதி, 1956, முன்னுரை; ப.xvii
12. இ.தி.அந்.74
13. க.நு.பி.7
14. 2-1-5ஈ; 6-1-10ஈ 9-4-6ஈ
15. பரிமேழலகர் உரை- குறட்பாக்கள்; 381, 467, 525, 550, 631, 687, 732, 762 993, 1318, 1330.

ஆய்வு செய்தால் புலனாகிறது. ஓர் ஆசாரியரிடம் திருவிலச்சினை முதலிய வைணவ சமய தீட்சைகள் பெற்றுக் கொண்டோர் தமிழ்ப் புலமை பெற்றிருந்தாலும், அவர்கள் 'தமிழர்' என்று அழைக்கப்படவில்லை, அவர்களுக்குரிய 'தாஸ்ய' நாமத்தாலேயே வழங்கப்பட்டனர். அவர்களில் அந்தணரல்லாதவர்களும் சேர்ந்திருந்தனர். பிள்ளையுறங்கா வில்லிதாசர், நம்பி திருவழுதிவளநாடு தாசர் என்று இவ்வாறு பல பெயர்களை ஈட்டில் காணலாம்[16]. இவர்கள் யாவரும் தமிழர்களே; திருவாய் மொழிக்குப் பொருள் நிறுவியவர்களே. ஆயினும் இவர்களைத் தமிழர் என்னாது சிறப்புத் திருப்பெயர்களாலேயே குறித்தார் நம்பிள்ளை. மேலும் தமிழர் என்ற போது சாதி கருதப்படவில்லை; அந்தணர் குலத்திற் பிறந்த ஆசாரியர் ஒருவர் 'தமிழர்' என்று சுட்டப்படுகிறார். திருவாய்மொழியில் வரும் ''பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும் ஓராயிரம்'' என்ற தொடரின் வியாக்கியானத்தில் நம்பிள்ளை கூரத்தாழ்வானுடைய அபிப்பிராயமாகப் பாலேய் தமிழருக்கு உதாரணமாக ''ஸ்ரீபராங்குசநம்பி'' என்னும் ஆசாரியரைக் காட்டுகிறார். ஸ்ரீபராங்குசநம்பி எம்பாரின் திருத்தம்பியான சிறிய கோவிந்தப் பெருமாளின் திருக்குமாரர் ஆவார். [16அ], இவரைத் தமிழர் என்று சிறப்பித்தாலும் இவருடைய பொருளாட்சியைக் காட்டுமிடம் வரில், அப்போது நாஸ்ய நாமத்தாலேயே குறிப்பிடுவர். ஆகவே, தமிழ் இலக்கண இலக்கியங்கள் வல்லவராய்ச் சமய தீட்சை பெறாதவர்களே தமிழர் என்று குறிப்பிடப்பட்டனர் என்று தெரிகிறது. அத்தகையோர் தம்முட்கூடித் திருவாய்மொழிப் பொருளை ஆராய்ந்தனர் என்றும் ஆராய்ந்து உரையும் இட்டனர் என்றும் கருதலாம். சமய தீட்சை பெற்ற தமிழர் ஒருவரும் திருவாய்மொழிக்கு உரையிட முன்வரவில்லை; அதற்குமாறாக அவர்கள் தம் ஆசாரியர்களிட்ட பேருரைகளைப் பேணிக் காப்பதையே பெருங்கடனாகக் கொண்டனர்.

### ஏற்பும் இகழ்வும்

இனித் தமிழர் நிறுவிய பொருள்களை ஆசாரியர்கள் ஏற்றனரா அன்றி மறுத்தனரா என்று ஆய்வு செய்தல் தகும். ஆழ்வாருடைய இயல்புக்கும் சம்பிரதாயக் கோட்பாடுகளுக்கும்

---

16. பார்க்க : பின்னிணைப்பு (5)

16. (அ) 1.5.11 ஈ

முரணின்றிப் பொருந்துவனவற்றை நம்பிள்ளை ஏற்றுக் கொள்-ளத் தயங்குவதில்லை. பெரியவாச்சான் பிள்ளை தம்முடைய வியாக்கியானத்துள் தமிழருடைய பொருளாட்சிகளாகப் பிரித்துக் காட்டியவற்றை நம்பிள்ளை ஈட்டில் அப்படியே தழுவிக் கொண்டிருப்பதை நான்கு இடங்களில் பார்க்கிறோம்.[17] சில பாடல்களுக்குத் தமிழரின் பொருளாட்சிகளை முதன்மை-யின்றிப் பொதுவாக ஏற்றுக் கொண்டிருக்கிறார்.[18] அவ்விடங்-களில் அரும்பதகாரர்களே மறுப்புக் காட்டி எழுதுகிறார்கள்.

தமிழரிட்ட வியாக்கியானங்கள்

தமிழர் ஓரோ இடங்களுக்குப் பொருள் நிறுவிய தோ-டன்றித் திருவாய்மொழி முழுமைக்கும் பொருள் விரித்து உரை எழுதியிருந்தாகவும் ஈட் ிருந்து அறியப்படுகிறது.

"என்று ... வியாக்கியானம் பண்ணினார்கள் தமிழர்கள்"[19]

" ... என்று ஒரு தமிழன் வியாக்கியானம் பண்ணினான்"[20]

என்று வரும் ஈட்டுத் தொடர்கள் அதை உறுதிசெய்கின்றன. அவற்றை 'உரை' என்னாது 'வியாக்கியானம்' என்றே வழங்-கியிருப்பது நோக்கத்தக்கது. இந்த வியாக்கியானங்கள் வாய் மொழி விரிவுரைகளேயன்றி எழுதப்பட்டவுரைகளல்ல என்று சிலர் கருதுவர். தமிழர் உரைகள்எழுதப்பட்டனவே என்பதைக் காட்டும் இடங்களும் ஈட்டில் வருகின்றன.

"ஒரு தமிழன் இட்டுவைக்கிறான்"[21]

"ஒரு தமிழன் தாத்பர்யமாக இட்டு வைக்கிறான்"[22]

"... என்று ஒரு தமிழன் இட்டு வைத்தான்"[23]

என்று வரும் தொடர்கள் அதற்குச் சான்றுகள் ஆகின்றன.

---

17, 3-9-2ஈ; 4-2-5ஈ; 5-9-7-ஈ; 6-3-9ஈ

18. 3-9-7ஈ 3-9-9-ஈ; 4-5-6ஈ

19. 3-9-2ஈ

20. 3-9-7ஈ

21. 4-6-2ஈ

22. 5-4-6ஈ

23. 7-7-2ஈ;7-7-6ஈ

வியாக்கியானம் எழுதுவதையே 'இடுதல் என்று கூறுவது மரபு.

தமிழரின் வியாக்கியானங்களையும் நம்பிள்ளை தம் ஈட்டில் பயன்படுத்தியிருக்கிறார்.

''ஈட்டிய வெண்ணெயுண்டான்
திருமூக் கென தாவியுள்ளே
மாட்டிய வல்விளக்கின்
சுடராய் நிற்கும் வாலியதே''[24]

என்ற திருவாய்மொழிப் பாடலில் 'மாட்டிய' என்பதற்குச் 'சுடர்வெட்டிய' என்று பெரியவாச்சான் பிள்ளையும் நம்பிள்ளையும் முதற் பொருள் கூறி அடுத்துத் தமிழருடைய வியாக்கியானத்திலிருந்து 'மாட்டிய-ஏற்றிய' என்ற பொருளை எடுத்துக் காட்டுகின்றனர்.

இனித் திருவாய்மொழிக்கு உரையிட்ட தமிழரின் பெயர் காலம் முதலிய தனிச் செய்திகளை ஈட்டிலிருந்து ஆய்வு செய்தால் அரிய உண்மைகள் வெளியாகின்றன.

கரிக்காற்சோழப்பிரமராயன் உரை

கல்பிரம்மதேசத்தில் வாழ்ந்த கரிக்காற் சோழப் பிரம்மராயன் என்பான் திருவாய்மொழிக்கு ஒரு வியாக்கியானம் செய்து அதை நஞ்சீயரிடத்துக் காட்டினான். அவனிடத்துச் சில உதவிகளைக் கணிசித்த நஞ்சீயர் நம்பிள்ளையை அழைத்து, ''நீர் இத்தைக் கேட்டுப் பாராட்டுக'' என்று வேண்டினார். அவ்வுரை முழுவதையும் கேட்டுஇறுதியில் நம்பிள்ளை,''ஆழ்வார் திருவுள்ளத்தை அடியொற்றி அவர் போனவழியே போயிருக்கிறீரே!'' என்று புகழ்வது போல் குறிப்பிட்டார். அவனும், ''ஆகா, பிள்ளை! ஆழ்வார்க்கும் எனக்கும் வேறுபாட்டைக் கருதவில்லையோ? கிராம காரியங்கள் செய்து இடையிடையே இதுவும் செய்ய வேண்டிற்றே எனக்கு!'' என்றானாம்.[25] ஆழ்வார் மூலநூலை இருந்த இடத்திலிருந்தே எளிதாகச் செய்துவிட்டார் என்பதும் அரசியற்கருமங்களுக்கு இடையே அதற்கு வியாக்கியானம் செய்ததே அரியசெயல் என்பதும் அதுவே சிறப்பாகப்

24. தி.வா.மொ. 7-7-2
25. 3.9.2ஈ

பாராட்டத்தக்கது என்பதும் அவ்வேறுபாட்டை நம்பிள்ளை கருத்திற் கொள்ளவில்லை என்பதும் அவனுடைய பேச்சின் உட்கருத்தாகும். இதனால் ஆழ்வாரிடத்து மதிப்பின்றித் தனக்குப் புகழைத் தேடிக் கொள்ளவே உரையிட்டான் என்று விளங்குகிறது.

இவ்வுரைகாரர் அந்தணர் குடிப்பிறந்து அமைச்சுத் தொழிலில் இருந்தார் என்பதை 'கரிக்காற் சோழ ப்ரஹ்மராயன்' என்னும் இவருடைய விருதுப்பெயர் காட்டுகிறது. இவருடைய இயற்பெயர் அறியப்படவில்லை. இவர் இரண்டாம் இராசாதி ராச சோழனின் (கி. பி. 1168-78) அரசியல் அதிகாரியாகப் பணியாற்றியிருக்கலாம். இரண்டாம் இராசராசனுக்கு 'கரிகால் சோழன்' என்னும் பட்டப் பெயர் இருந்தது.[26] ஆதலால் இவருடைய உரை கி.பி. 12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றியதாகலாம்.

**தமிழாசாரியர் உரை**

திருவாய்மொழிக்கு வியாக்கியானமிட்ட மற்றொரு தமிழ்ப் புலவரையும் ஈட்டில் அறிமுகமாகக் காண்கிறோம். 'காப்பாரார்' என்ற பாடலின் ஈட்டில் 'கங்குல்' என்பதற்கு 'நாள்' என்ற பொருளை ஒரு தமிழ்ப் புலவர் வியாக்கியானத்தில் கண்டதாக நம்பிள்ளை குறிப்பிடுகிறார். அத்தமிழ்ப்புலவரை

> "தமிழாசார்யன் என்று தமிழர்க்கு அகஸ்திய
> னோபாதியாயிருப்பான் ஒருவன்"[27]

என்று மிகவும் சிறப்பித்துப் பேசுகிறார் நம்பிள்ளை. கி. பி. 12-ஆம் நூற்றாண்டின் பிற்பாதியில் வாழ்ந்து அகத்தியருக்கு நிகராகப் பெருந்தமிழ்ப் புலமை படைத்த உரையாசிரியராக இவர் இருந்திருத்தல் வேண்டும். இவரைப் பற்றிய வேறு செய்திகள் கிடைக்கவில்லை.

**தமிழர் உரைகள் ஏன் மறைந்தன ?**

தமிழ்ப் புலவர்களிட்ட திருவாய்மொழி உரைகள் கால வெள்ளத்தில் பேணுவாரின்றிப் பையவே மறைந்தன. வைணவ ஆசாரியர்கள் இவ்வுரைகளையும் தழுவிப் போற்றியிருப்பதால் அவர்கள் அவ்வுரைகளின் அழிவிற்குக் காரணமாகார். அவ்வா- சாரியர்கள் குறித்து வைத்திலரேல், தனித் தமிழர் எழுதிய

26. தி.வை.ச. பண்டாரத்தார், மு.நூ., ப.387
27. 5-4-7*

உரை தாமும் அறியப்படாமலேயே போயிருக்கும், இனி, அக் காலத்து வாழ்ந்த மக்களுக்கு வடமொழி விரவியதும் ஓசையின் பம் தழுவியதுமான மணிப்பிரவாள நடையில் பெரு நாட்டம் சென்றிருக்க வேண்டும். மேலும் வேத வேதாந்தங்களும் இதி-காசபுராணங்களும் மேற்கோளாக இடைவிரவிய பேருரை-களையே அவர்கள் வரவேற்றிருக்க வேண்டும்.

மேலும் இராமானுசரின் திருவடித் தொடர்பில்லாத பிறர் ஆழ்வாருடைய அனுபவ மொழிகளை 'அதிவாதம்' என்றும் 'உயர்வுநவிற்சி' என்றும் 'புனைந்துரை' என்றும் கூறிவந்தனர். அதனால் வைணவ உலகம் அத்தகையோரின் உரைகளைப் புறக்கணித்தது என்னலாம்.

> "எம்பெருமானார் ஸ்ரீபாதத்தில் அந்வயமில்லாதார் பகவத் விஷயத்தில் சொன்ன ஏற்றமெல்வாம் அர்த்த வாதம் என்றிருப்பர்கள். அதுடையவர்கள் பகவத்ப்ர பாவத்துக்கு எல்லையில்லாமையாலே சொன்னவை சில; சொல்லாததுவே பெரிது என்றிருப்பர்கள்'"[28]

என்று பெரியவாச்சான்பிள்ளை கூறுவதே பிற உரைகளின் வீழ்ச்சிக்கு உண்மைக் காரணத்தைக்குறிப்பால் உணர்த்துகிறது.

### மரபுவழி உரைகள்

ஆழ்வார்களின் காலத்தில் திவ்வியப் பிரபந்தங்கள் உரை யின்றியே மக்களிடையே வழங்கி வந்தன. தொல்காப்பியமும் அப்படியே உரையின்றிச் சிலகாலம் வழங்கியது என்பதை ஒப்பு நோக்கலாம். "உரையின்றிச் சூத்திரத்தானே பொருள் நிகழ்ந்த காலமும் உண்டு" என்பர் பேராசிரியர்.[29] ஆழ்வார்களுக்குப் பிறகு நாதமுனிகள் தொடங்கித்தான் திவ்வியப் பிரபந்தங் களுக்கு உரைகாணும் வேட்கை ஊற்றெடுத்தது. அதைத் தொடர்ந்து வாய்மொழியாகவே உரைகள் பெருகத் தொடங் கிப் பல ஆண்டுகள் வளர்ந்து பின்னரே எழுத்து நிலை எய்தியது. இறுதியாகத் தோன்றிய நம்பிள்ளையின் ஈடு அதற்கு முன் எழுந்த வாய்மொழி உரைகள் அனைத்தை யும் தன்னுள் அடக்கிக் கொண்டது. அவற்றை 'நிர்வாஹங்

---

28. பெ.வா.பி.வியா., பெரி. திரு 10-4-1

29. பேராசிரியர் உரை, தொல்காப்பியம், மரபியல், 98,

கள்' என்னும் பெயரால் நூற்றுக்கணக்கான இடங்களில் நம் பிள்ளை சேமித்து வைத்திருக்கிறார். ஆகையால் மரபுவழி உரைகளின் தோற்ற வளர்ச்சிகளை முன்னாய்வு செய்து கொள்ள வேண்டிய நிலை ஏற்படுகிறது.

நாதமுனிகளின் வாய்மொழி உரைகள்

கி.பி.எட்டாம் நூற்றாண்டின் இறுதியில் நாதமுனிகள் திவ்வியப்பிரபந்தப் பாடல்களைத் தொகுத்து அடைவுபடுத்தினார். அவற்றை நான்கு ஆயிரங்களாக அடைக்கும் போது 'ரஹஸ்யத்ரயங்கள்' என்னும் முப்பெரும் மறைமொழிகளோடு ஒப்பிட்டு அவற்றின்அடைவு முறையிலேயே நிரல்படுத்தினார்.[30] அதற்காக அவர் ஆழ்வாரின் பாடல்களின் பொருளை ஆராய்திருக்க வேண்டும். நாதமுனிகளின் ஒருபொருளாட்சி திருவிருத்த வியாக்கியானத்தில் காட்டப்பட்டிருக்கிறது.[31] இவற்றால், நாதமுனிகள் மூல நூல்களைப் பரப்புவதில் மட்டுமே ஈடு பட்டிருந்தார் என்று பொதுவாக நினைப்பது தவறு ஆகிறது. 'ஆராவமுதே' என்ற பதிகத்தைச் சிலர் பாடக்கேட்டு அதன் பொருட் சுவையில் ஈர்க்கப்பட்டே அவர் திருவாய் மொழி முழுவதையும் தேடுவதற்கு முனைந்தார்.[32] அதைப்பெற்றபின் பொருளில் கண்செலுத்தாது மூலத்துடன் நின்றுவிட்டார் என்பது பொருந்தாது. ஆதலால் நாதமுனிகளே திருவாய் மொழிக்குப் பொருள் ஆய்வு செய்து விரித்துரைக்கும் வாய் மொழி மரபைத் தொடங்கி வைத்தார் என்பது தெளிவாகிறது.

ஆளவந்தாரின் வாய்மொழி உரைகள்

நாதமுனிகளின் பேரனார் ஆளவந்தார். நாதமுனிகளிடம் நேராக இவர் பாடம் கேட்டிலர். அவருடைய சீடர்கள் வழியாகத் திருவாய்மொழியின் பொருளாட்சிகள் இவருக்குக் கிடைத்திருக்க வேண்டும்.[33] ஆளவந்தாருடைய பேரவையில் திருவாய்மொழிப் பாடல்கள் ஆரஅமர நன்கு ஆராயப்-

---

30. பெரியவாச்சான்பிள்ளை, கலியனருள்பாடு; மேலும் கோவிலொழுகு. எஸ்.கே,ஐ. பதிப்பு, ப.32

31. பெ.வா.பி.வியா., திரு.விரு.52, இப்பாசுரவுரையில்முன்புள்ள முதலிகள், ஆளவந்தார், பட்டர் ஆகியோரின் பொருளாட்சிகள் காட்டப்படுகின்றன. இதில் முன்புள்ள முதலிகள் என்பதால் நாதமுனிகள் கருதப்படுகிறார்.

32. ஆறாயிரப்படி குருபரம்பராப்பிரபாவம், எஸ்.கே.ஐ. பதிப்பு, ப.101

33. வேதாந்ததேசிகன், ஸ்ரீஸம்பிரதாயபரிசுத்தி, வ.ந. ஸ்ரீராமதேசிகாசார்யர் (ப.ஆ), 1972, முதற்பாகம், ப.4

பட்டன. *உண்ணுஞ்சோறு (6—7) என்னும் திருவாய்மொழியில் தலைவி தனிப் போக்கில் ஒருப்பட்டாள்; *கள்வன் கொல் (3 — 7) என்னும் பெரியதிருமொழியில் தலைவி உடன் போக்கில் இழிந்தாள். ஆளவந்தார் பேரவையில் இவ்விரு தலைவியரின் நிலைகள் ஒப்பு நோக்கப்பட்டன. தனிப் போக்கில் ஒருப்பட்ட தலைவியின் நிலையே மிகவும் அஞ்சத்தக்கதாய்ப் பரிவுக்கு உரியது என்று முடிவு செய்யப்பட்டது. ஆனால் ஆளவந்தார், ''நெடுநாள் பிரிந்து கூடியதால் இருவரும் இன்பம் தலைமண்டையிட்டு எவ்வழிச் செல்வது என்று அறியாது மயங்கி வீழ்வர். தனியே போனவருக்கு இலக்கு ஒழிய வேறு ஒன்றும் புலப்படாது. ஆகையால் இருவராய்ப் போனவர்களாகையாலே இருவர்க்கும் சேர்த்து அஞ்ச வேண்டும். தனிப் போனவருக்கு ஒரு அச்சமுண்டோ?'' என்று முடிவு கூறினார். 'திண்ணம் என்னிளமான் புகுமூர் திருக்கோளூரே' என்ற கூற்றில் வரும் 'திண்ணம்' என்ற சொல்லையும் 'அணியாலி புகுவர் கொலோ' என்ற கூற்றில் வரும் 'கொல், என்ற ஐயக்குறிப்பு இடைச் சொல்லையும் கொண்டு ஆளவந்தார் அங்ஙனம் முடிவு செய்தார்.[34]

ஆளவந்தாருடைய பொருளாட்சியனைத்தும் அவருடைய சீடரான திருமாலை ஆண்டானிடம் சேர்ந்தன. அவை அனைத்தும் இராமானுசருக்குக் கிடைத்தன.

### இராமாநுசரின் வாய்மொழி உரைகள்

ஆளவந்தாருடைய பொருளாட்சிகளைத் திருமாலையாண்டான் மூலம் கேட்டறிந்த இராமாநுசர் அவற்றை மேலும் பெருக்கித் தம் சீடர்களுக்கு வழங்கினார். அவற்றைத் தாம் எழுதிய பாஷ்யங்களிலும் நன்கு பயன்படுத்திக் கொண்டார். ''பாஷ்யகாரரர் இது கொண்டு சூத்திர வாக்கியங்களை ஒருங்க விடுவர்'' என்ற அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் கூற்று இதற்குச் சான்று.[35] திருவாய்மொழிப் பொருளை விரித்து வளர்த்ததால் இராமானுசர் திருவாய்மொழியின் 'இதத்தாய்' என்று போற்றப்பட்டார்.[36] இராமானுசர் காலத்தில்தான்

34. 6-7-1ஈ

35. ஆசார்யஹ்ருதயம், சூ. 65

36. பட்டர், திருவாய்மொழித்தனியன்.

திருவாய்மொழிக்கு வியாக்கியானம் நூல் வடிவில் வரவேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டது. இராமானுசரே ஒரு வியாக்கியானம் எழுதவேண்டும் என்று அவருடைய சீடர்கள் விரும்பினார்கள். ஆயினும் அவர் திருவாய்மொழிக்கு வியாக்கியானமிட முன் வரவில்லை.

### திருக்குருகைப் பிரான் பிள்ளான் — இன்பமிகும் ஆறாயிரம்

திருக்குருகைப் பிரான் பிள்ளான் இராமானுசருடைய பேரன் பிற்குரியராயிருந்தார். அவருடைய மாமன் மகனாகவும் இருந்தார். அவரே இராமானுசரை அணுகித் திருவாய் மொழிக்கு உரையிடும்படி மனமுருக வேண்டினார். இராமானுசரோ தாமே உரை எழுதினால் திருவாய்மொழிப் பொருளுக்கு வரம்பு கட்டியதாக அறிவுக்குறைவாளர் முடிவு செய்துவிடுவார்கள் என்று அஞ்சினார். திருவாய் மொழிக்குப் பொருள் அவரவர்களுடைய அறிவுத்திறனுக்கும் அன்புப் பெருக்கிற்கும் ஏற்பப் பெருகிச் சுரக்கும் என்பது இராமானுசருடைய எண்ணம். திருவாய்மொழிக்கு ஒன்றினும் மற்றொன்று விரிந்ததாய்ப் பல பேருரைகள் தோன்ற வேண்டும் என்பது அவருடைய உட்கோளாய் இருந்திருக்க வேண்டும். சீடர்களின் வற்புறுத்தலுக்கு இணங்கி, பிள்ளானையே வியாக்கியானம் வரையும்படி பணித்தார்.[37] அவருடைய ஆணையின்படி திருவாய் மொழிக்கு மணிப்பிரவாள நடையில் தாற்பரியம் விளங்குமாறு ஒரு வியாக்கியானத்தைப் பிள்ளான் எழுதிமுடித்தார். அதுவே 'ஆறாயிரப்படி' என்று வழங்கப்படுகிறது.

ஆறாயிரப்படி வியாக்கியானம் பின்னால் பல பேருரைகள் தோன்ற இடமளிக்கும்படி செறிவான முறையில் பொழிப்புரையாக எழுதப்பட்டது என்று கருதலாம். வாய்மொழியாக வளர்ந்த உரைகள் முதலில் ஏடுபடுத்தப்படும் போது சுருங்கிய வடிவத்திலேயே அமைந்தன. சிலப்பதிகாரத்தின் முதல் உரை சுருக்கமான அரும்பதவுரையே. முதலில் எழுந்த பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு உரைகள் குறிப்புரைகளே. புறநானூற்றின் பழையவுரை பொழிப்புரையே. பரிமேலழகரின் பரிபாடலுரையும் சுருங்கியதே. புறநானூற்றின் முதல் 90 பாடல்களுக்கு உள்ளது குறிப்புரை தான். இவற்றுக்கெல்லாம் விரிந்த உரை-

---

37. ஆ. ரு. ப. பி; மு. நா. ப. 372

களைக் காலவளர்ச்சி பிற்காலத்தில் வழங்கியது. இதே அமைப்பு நிலை திருவாய்மொழி உரைகளின் வளர்ச்சியிலும் படிந்திருக்கிறது.

பிள்ளானுடைய வாய்மொழி உரைகள் ஈட்டில் 32 இடங்களில் எடுக்கப்பட்டுள்ளன.[38] இவற்றில் பல ஆறாயிரப் படியில் காணப்படவில்லை. அவை யாவும் பிள்ளான் தம்முடைய சொற்பெருக்கிலுரைத்த இன்சுவைப் பொருள்கள். அவை வாய்மொழியாக நம்பிள்ளைக்கு வந்து ஈட்டில் இடம் பெற்றன.

இனிப் பிள்ளானின் ஆறாயிரப்படி எக்காலத்து எழுதப் பட்டது என்பதை ஆய்வு செய்வோம்.

இராமானுசர் ஸ்ரீபாஷ்யத்தை எழுதிமுடித்த பிறகே பிள்ளான் அவரைத் திருவாய்மொழிக்கும் வியாக்கியானமிடுமாறு வேண்டினார். இராமானுசர் தம்முடைய 98வது வயதில் (கி,பி. 1115) ஸ்ரீபாஷ்யத்தின் எஞ்சிய இறுதிப் பகுதியை எழுதிமுடித்தார் என்று ராமானுஜார்ய திவ்யசூரிசரிதையில் வரும் மேற்கோட் செய்யுளால் அறியமுடிகிறது.[39] மேலும் *வீடுமின் முற்றவும்' (1—1) பிரவேசத்தில், இராமானுசர் பாஷ்யம் தலைக்கட்டிய பிறகு அத்திருவாய் மொழியை 'பக்திபரமாக' நிருவகித்தார் என்று நம்பிள்ளை சுட்டிக் காட்டுகிறார். பிள்ளானும் பக்திபரமாக நிருவகித்திருக்கிறார். இவற்றால், இராமானுசர் ஸ்ரீபாஷ்யத்தை முற்றுவித்த பின்னரே பிள்ளானுடைய வியாக்கியானம் தோன்றியது என்பது தெளிவாகிறது. பிள்ளான் கி. பி. 1068ல் அவதரித்தார். ஆகையால் அவர் தம்முடைய ஐம்பது வயதிற்கு மேல் அதாவது கி. பி.1115க்குப் பிறகே வியாக்கியானமிட்டார் என்று ஆகிறது. இவ்வாறு நாதமுனிகளின் காலத்திலிருந்து நாளைடைவிற் சேர்ந்த வாய்மொழி உரைகள் பிள்ளான் காலத்தில் கி.பி.12ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஏட்டில் ஏற்றப்பட்டன. இறையனார் களவியலுக்கு உரைகண்ட நக்கீரருடைய உரை வாய் மொழியாகவே வளர்ந்து சென்று ஒன்பது ஆசிரியர்களைக்

---

38. பார்க்க : பின்னிணைப்பு (6)

39. பிள்ளைலோகஞ்சீயர், ராமாநுஜார்ய திவ்யசரிதை- ப.243. ''முன்னமுரைத்த பாடியத்தின் குறையாம் மூன்றத்தொருகூறு தன்னைச் சகவாண்டு ஆயிரத்து முப்பத்தேழில் சாற்றினானே'' என்ற மேற்கோட் பாடலால் சக 1037ல் (கி.பி1115) ஸ்ரீபாஷ்யம் முடிக்கப்பட்டது தெரிகிறது.

கடந்து இறுதியில் ஆசிரியர் நீலகண்டனார் காலத்தில் ஏட்டில் ஏற்றப்பட்டது ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.[40] அது விரிவாக அமைந்தது; ஆனால் ஆறாயிரப்படி சுருக்கமாக அமைந்தது

**பட்டர் வாய்மொழி உரைகள்**

பட்டர் தமது தந்தையாரான கூரத்தாழ்வானிடத்தும் ஆசாரியராகிய எம்பாரிடத்தும் திருவாய்மொழிக்குப் பொருள் கேட்டிருந்தார். ஆறாயிரப்படி உரையை அடிப்படையாகக் கொண்டு தம்முடைய புலமைத் திறத்தால் அதை மேலும் விரித்துச் சொற்பொழிவுகளை நிகழ்த்தினார். அவற்றைப் பிள்ளானும் உடனிருந்து கேட்டிருக்கக்கூடும். கிடாம்பியாச்சான், பிள்ளைதிருநறையூர் அரையர் போன்ற பெரியார்கள் அவற்றைக் கேட்டுப் பட்டரை மிகவும் பாராட்டினார்கள்.[41] பட்டருடைய நயவுரைகள் அத்தனையும் ஒன்றுதப்பாமல் ஈட்டில் சேமிக்கப்பெற்றிருக்கின்றன, திருவாய்மொழிக்குப் பட்டர் தாமே எழுதாது நஞ்சீயரையே ஒரு வியாக்கியானமிடுமாறு பணித்தார்.[42] நஞ்சீயர் கற்றுத் துறை போகிய ஒரு வேதாந்தி. திருவாய் மொழிக்கு வேதாந்தக் கட்டளையில் வியாக்கியானம் தோன்றவேண்டும் என்று பட்டர் கருதியிருக்கலாம். அதுவே இராமாநுசரின் இறுதி ஆசையை நிறைவேற்றியதாக அமையும் என்று எண்ணியிருக்கக்கூடும். இராமாநுசர் பரமபதிக்கு முன் பட்டரை அருகழைத்து, "வாரீர்மேல் நாட்டில் (மைசூர்ச் சீமை) வேதாந்தி என்னும் வித்துவான் இருக்கிறான் என்று கேள்விப் பட்டோம். நீர் அங்கே சென்று அவனை நம் தரிசனப் பிரவர்த்தகனாகத் திருத்தும்" என்று ஆணையிட்டிருந்தார். வேதாந்தம் வல்லவராய் அத்வைதாசாரியராய்ப் புகழ் படைத்த அவர் திருவாய் மொழிக்கு உரை எழுதினால் வைதிகர்களான அத்வைதிகள் திருவாய் மொழியும் வேதாந்த சாஸ்திரம் என்று மதிப்புக்காட்டுவர் என்று இராமாநுசர் கருதியிருக்க வேண்டும், எனவேதான், பட்டர் தாமே எழுதாது வேதாந்தியான நஞ்சீயருக்குத் திருவாய்மொழியைச்கற்பித்து உரை எழுதுமாறு பணித்தார்.

**நஞ்சீயரின் ஒன்பதாயிரம்**

இந்த வியாக்கியானம் ஏடுபடுத்தப் பட்ட வரலாறு முன்னர் ஆய்வு செய்யப்பட்டது.[43] நம்பிள்ளை தம் நினைவி

---

40. இறையனாரகப் பொருள் உரை, கழக வெளியீடு, 1969, ப.9
41. பெ.வா.பி.வியா, திரு.விரு.53.
42. உபதேசரத்தினமாலை, 42
43. இந்நூல் ப. (16)

லிருந்தே இவ்வுரையை எழுதித் தலைக்கட்டினார். நம்பிள்ளையின் சொல்லும் புலமையும் ஊடுருவி நிற்பது ஒன்பதினாயிரப்படி உரை. பெயரளவில் நஞ்சீயருரையாகவும் செயலளவில் நம்பிள்ளையின் உரையாகவும் அது கொள்ளத்தக்கது. ஆனாலும் ஒன்பதினாயிரப்படியை நஞ்சீயரின் வியாக்கியானமாகவே நம்பிள்ளை தம் பேருரையில் குறிப்பிடுகிறார். ''சீயர் அருளிச்செய்ததும் வியாக்கியானம் பண்ணிற்றும்'' என்ற ஒரு பொருளாட்சியைக் குறிப்பிட்டிருக்கிறார்.[44] அப் பொருளாட்சி ஒன்பதினாயிரப்படியில் அப்படியே உள்ளது.

### பெரியவாச்சான் பிள்ளையின் இருபத்துநாலாயிரம்

இது நம்பிள்ளையின் விருப்பத்தின்படியே இயற்றப்பட்டது. நம்பிள்ளையின் சொற்பொழிவுகளை அப்படியே கேட்டுக் கூறியது கூறியபடியே எழுதப்பட்டது அன்று. அவரிடம் கேட்டிருந்த கருத்துக்களை நினைவிற்கொண்டு ஆரஅமரச் சிந்தித்து முறையாக எழுதப்பட்டது. ஈடு அப்படியல்லாமல், கேட்டது கேட்டபடியே விரைவாக எழுதப்பட்டது என்று தெரிகிறது. அதனால்தான் ஈட்டில் தொடர்கள் முன்னும் பின்னுமாய் மாறிச் சிலவிடத்து விழுந்திருக்கின்றன. அவற்றை நிரல்படுத்தும் பணியை அரும்பதங்கள் செய்துள்ளன.

பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தில்தான் முதன் முதலாக ஐதிஹ்யங்கள் இடம் பெற்றன; பிறருடைய பொருளாட்சிகளும் காட்டப்பட்டன. பெரியவாச்சான்பிள்ளை உரைக்கு மற்றொரு சிறப்பு உண்டு. ஈட்டிற்கு அதுவே முன் மாதிரியாக அமைத்துக் கொள்ளப்பட்டது. பல இடங்களில் இதில் வரும் தொடர்கள் அப்படியே ஈட்டில் உருமாறாது வரக் காண்கிறோம்.

### வாதிகேசரி அழகிய மணவாளச்சீயரின் பன்னீராயிரப்படி

வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் (கி.பி. 1242-1350) பெரியவாச்சான்பிள்ளையின் சீடர். இவர் செய்த உரை ஈட்டிற்குப் பின்னரே தோன்றியது ஆயினும் ஈட்டைக் கற்பார்க்கும் ஆய்வு செய்வார்க்கும் இவ்வுரை பெருந்துணை நிற்பதால் இதனைப் பற்றிச் சில உண்மைகளை ஆய்வு செய்து கொள்ள வேண்டியிருக்கிறது.

---

44. 10—3—11அ

முன்புள்ள பெரியோர்கள் செய்த வியாக்கியானங்களை எல்லாம் கண்டு அவற்றின் பொருட்சிறப்புக்களை எல்லாம் சுருக்கி எளிதாகவும் விளக்கமாகவும் இருக்குமாறு இவ்வுரை செய்யப்பட்டதாகப் பிள்ளைலோகம்சீயர் கூறுவர்.[45] இவர் தம்முடைய பதவுரையில் திருவாய்மொழிப் பதிகங்களில் வரும் பாட்டுக்களின் யாப்பு அமைதிகளை ஆராய்ந்து குறிப்பிடு கிறார். இலக்கணக் குறிப்புகளையும் சில இடங்களில் எழுது வர். இவை இவருடைய தமிழிலக்கணப் புலமைக்குச் சான்று-களாக விளங்குகின்றன. மற்ற உரையாசிரியர்களிடமிருந்தும் சில இடங்களில் இவர் வேறுபட்டு உரை வரைந்திருக்கிறார், அதனால் 'தம் பெரிய போதமுடன்' இவர் உரையிட்டதாகவும் ஆயினும் சப்தார்த்த நிர்ணயத்திற்குப் பெரிதும் உபகாரப்படு வதால் 'ஏதமில் பன்னீராயிரம்' என்று குற்றமில்லாததாகவும் மணவாள மாமுனிகள் தம் உபதேச ரத்தின மாலையில் குறிப் பிடுகிறார். ஈட்டைக் கற்பவர்கள் அது விரிந்து பரந்து அமைந் திருப்பதால் பாடற் சொற்களின் கொண்டுகூட்டை அறிய இடர்ப்பட்டனர். ஈட்டின் போக்கு ஆற்றொழுக்கில் உரை விரிப் பதாகவே அமைந்திருக்கிறது, அதனால் பொருள் தொடர்பை அறியவும் இன்ன சொல்லுக்கு இது பொருள் என்று அவ்வப்போது தெரிந்து கொள்ளவும் பதவுரைதேவைப்பட்டது. அதனால் பாடல்களிலுள்ள சொற்களைப் பொருள் தொடர் பில் வைத்தும் தேவையான சொற்களை வருவிக்க வேண்டிய வழி வருவித்தும் ஒரு சுருக்க உரையை அழகிய மணவாளச் சீயர் உருவாக்கினார். இந்நூல் பதவுரை என்பதைக் கருத்திற் கொண்டே, ''இத்தையொழிய நாலு வியாக்கியானங்கள் உண்டானாலும் சப்தார்த்த நிர்ணயத்துக்கு இத்தைக் கொண் டே சாதிக்க வேண்டுமிறே'' என்றும் ''பிரதிபிம்ப வியாக்கி யானமாகச் செய்தது'' என்றும் பிள்ளைலோகஞ்சீயர் கருத்துத் தெரிவித்திருக்கிறார்.[46]

### நம்பிள்ளை செப்பு நெறியான ஈடு முப்பத்தாறாயிரப்படி

நம்பிள்ளை செப்பிய பேருரைகளை வடக்குத் திருவீதிப் பிள்ளை ஏடுபடுத்திய வரலாற்றை முன்னர்க் கண்டோம்.[47]

---

45. பி, லோ. சீ, வியா; உ. தே. ர. மா. 45
46. மேலது
47. இந்நூல் ப (24)

இவ்வுரைகளைப்பற்றி மணவாள மாமுனிகளின் குறிப்புகள் ஆய்வுக்கு உரியது. 'மாறன் மறைப் பொருளை அன்றுரைத் தது'[48] ஆறாயிரப்படி; 'மாறன் மறைப்பொருளை ஆய்ந் துரைத்தது'[49] ஒன்பதினாயிரப்படி; 'மாறன் மறைப்பொருளைச் சொன்னது'[50] இருபத்துநாலாயிரப்படி; 'மாறன் மறையின் பொருள்உரைத்தது'[51] பன்னீராயிரப்படி. ஆனால் ஈட்டைக் குறிக் கும் போது 'மாறன் மறைப் பொருளை நன்கு உரைத்தது,[52] என்று சிறப்பித்திருக்கிறார். "ஆனை கோலம் செய்தாப்போல மிகத் தெளிவாம்படி அருளிச் செய்தது"[53] என்று இதற்குக் கருத்துரைப்பார் பிள்ளை லோகஞ்சீயர். இதனால் தெளிவும் அழகும் மிக்கது ஈடு என்பது கருத்து. 'தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறி,[54] என்று மணவ ளமாமுனிகளும் கூறியிருப்பது கருதத் தக்கது. திருக்குருகைப் பிரான் பிள்ளான் முதலாயினார் சுருங்க எழுதி விளக்க வேண்டுவதை வாய் மொழியாகக் கூறிவந்தனர். சுருக்க உரைகளில் 'விரிப்பிற் பெருகும்' விரிவஞ்சி விடுத்தோம், வல்லார் வாய்க் கேட்டுணர்க' என்ற தொடர்மொழிகளைப் பன்முறையும் காணலாம். ஸ்ரீவசன பூஷணத்தில், "பயத்தாலே சொல்லுகிறிலோம்" என்பதையே ஒரு சூத்திரமாக்குவர் பிள்ளைலோகாசாரியார்.[55] இவ்வகைத் தொடர்கள் ஈட்டில் யாண்டும் இல்லை. சொல்லவேண்டுவன அனைத்தையும் ஒன்று தப்பாமல் விரிவாகச் சொற்பெருக் காற்றியபோது கேட்டு எழுதப்பட்டதால் ஈட்டில் 'தெளிவு' மிகுந்து காணப்படுகிறது.

தெளிவும் அழகும் மிக்க ஈட்டை எழுதி உதவியவர் வடக்குத் திருவீதிப்பிள்ளை. அவர் எழுதவில்லையானால் நம்பிள்ளையின் சொற்களும் சொற்பொருள்களும் காற்றில் கரைந்து போயிருக்கும். அவருடைய பணியைப் பாராட்டியே 'வள்ளல்' என்று அவரைச் சிறப்பித்தார் மணவாளமாமுனிகள்[56] "சமகாலத்திலவர்களையொழியப் பின்புள்ளாரும் அறிந்து

---

48. உ. தே. ர. பா.41
49, மேலது. பா. 42
50. மேலது. பா 43
51, மேலது. பா. 45
52. மேலது. பா. 44
53, பி. லோ. சீ ஙியா; உ.தே.ர.பா.44
54. உ. தே. ர. பா. 44.
55. ஸ்ரீ வசனபூஷணம், சூத். 397
56. உ.தே.ர.பா.44

உய்யும்படி கிரந்தஸ்தமாக எழுதி உபகரித்த ஔதாரியம்'' என்பர் பிள்ளைலோகஞ்சீயர்.[57]

ஈட்டின் ஆசிரியர் நம்பிள்ளையா, வடக்குத் திருவீதிப் பிள்ளையா? இவ் வினாவிற்கு, விடை காண்பது தேவையான ஒன்று. 'நம்பிள்ளை ஈடு' என்ற தொடர்வழக்கமே மரபு நூல் களைக் கற்பிப்பவரிடம் நிலவுகிறது. மணவாள மாமுனிகள் ஞானசார வியாக்கியானத்தில் 'தேனே மலரும் திருப்பாதம்' என்ற தொடரை விளக்கும்போது ஈட்டின் ஒரு பகுதியை எடுத்துக் காட்டி ''என்று நம்பிள்ளை அருளிச்செய்தாரிறே'' என்று முடிக்கிறார்.[58] ஸ்ரீ வசனபூஷண வியாக்கியானத்தில், 'மண்ணும் விண்ணுமெல்லாம் உடனுண்ட' என்கிற இடத்தில் 'ரக்ஷணம் அவனுக்கு தாரகமாகையாலே 'உண்ட' என்கிறது. இல்லையாகில் 'காக்க' என்ன அமையும்' என்றிறே நம்பிள்ளை அருளிச் செய்தது'' என்றுமணவாளமாமுனிகள்எழுதுகிறார்.[59] மேலும், பிள்ளை லோகஞ்சீயர் ஸ்ரீவைஷ்ணவ சமயாசார நிஷ்கர்ஷம் என்ற நூலில், ''திருவாய்மொழிக்கு முன்பு எத்தனை வியாக்கியானமிருந்தாலும் ஸ்வாமி நம்பிள்ளை அருளிச் செய்த முப்பத்தாறாயிரமே பிரதானம்'' என்று குறிப்பிட்டுள்ளார்,[60] இவற்றால் ஈட்டின் ஆசிரிய உரிமையாளர் 'நம்பிள்ளை' என்பது தெளிவாகிறது.

### ஈடு - சொற்பொருள் ஆய்வு

நம்பிள்ளையின் வியாக்கியானங்களே 'ஈடு' என்று வழங்கப்படுகிறது. திருவிருத்தம், கண்ணிநுண் சிறுத்தாம்பு ஆகியவற்றிற்கு நம்பிள்ளை எழுதியன இவ்வாறு ஈடு என்றே இன்றும் வழங்கப்படுகிறது. பிறர் எழுதியனவற்றை 'ஈடு' என்று ஏன் குறித்திலர்? இக்கேள்விக்கு விடை காணுமுன் 'ஈடு' என்பதன் சொற்பொருளைக் காணவேண்டும்.

(அ) ஈடு என்பது 'இடுதல்' என்பதன் முதனிலை திரிந்த

---

57. பி.லோ.சி.வியா; உ.தே.ர. பா.44

58. மணவாளமாமுனிகள் வியா ; ஞானஸாரம், பா,1

59. ம.மா.மு, வியா; ஸ்ரீ.வ.பூ;' சூ 347

60. பி.லோ. சி; ஸ்ரீவைஷ்ணவ ஸமயாசார நிஷ்கர்ஷம் ஸ்ரீவை கி.மு. சபைப்பதிப்பு, 1911, பக் 280

தொழிற் பெயராய் இடப்பட்டதாகிய வியாக்கியானத்தைக் காட்டுகிறது. இதனை ஏற்றுக் கொண்டால், மற்றவர்கள் இட்ட வியாக்கியானங்களையும் 'ஈடு' என்று வழங்காததற்குக் காரணத் தைக் காட்டவேண்டும்.

(ஆ) நம்பிள்ளையின் திருவாய் மொழிப் பேருரையானது சுருதப்பிரகாசிகையினை அளவால் ஒத்திருப்பதால் 'ஈடு' என்று வழங்கப்பட்டது. 'ஈடும் எடுப்புமில் ஈசன்' என்ற இடத்தில் ஈடு என்ற சொல் 'ஒப்பு' என்ற பொருளில் வந்திருத்தல் உண்டு. இக்கருத்தை 'அந்திமோபாயநிஷ்டை' என்ற நூலில் பட்டர்பிரான் சீயர் வெளியிட்டிருப்பதாக உபதேசரத்தினமாலை வியாக்கியானத்தில் பிள்ளைலோகஞ்சீயர் காட்டுகிறார்.[61] முதலில் 'ஈடு' என்பது திருவாய்மொழிப் பேருரையைக் குறிக்க வந்து பிற்காலத்தில் நம்பிள்ளையின் பிற உரைகளையும் குறிக்கப் பயன்பட்டிருக்கலாம்.

(இ) தன்னைக் கற்பார் எல்லாரையும் திருவாய் மொழி யிடத்து ஈடுபடச் செய்வதால் 'ஈடு' என வழங்கியிருக்கலாம். ''மாறன் மறைப்பொருளை ஈடுபடும்படியிறே செய்தது'' என்பர் பிள்ளை லோகஞ்சீயர்[62].

(ஈ) 'ஈடு' என்ற சொல்லுக்குக் 'கவசம்' என்றும் ஒரு பொருள் உண்டு. அப்பொருளில் நம்பிள்ளையே ஆண்டிருக் கிறார். ''பாண்டவர்களுக்காக உடம்புக்கு ஈடு இடாதே எதிரிகள் அம்புக்கு இலக்காக்கின இந் நீர்மை'' என்பது ஈட் டில் வரும் தொடர்.[63] 'ஈடிடாதே — கவசமிடாதே' என்று சீயர் அரும்புதவுரைக் குறிப்பும் இருக்கிறது.[64] நம்பிள்ளை காலத்தில் கவசம் என்ற பொருளில் 'ஈடு' என்ற சொல் வழக்கிலிருந்ததாகத் தெரிகிறது, நச்சினார்க்கினியரும் சிந்தாமணி உரையில் இச்சொல்லைக் கவசம் என்ற பொருளில் வழங்கியிருப்பதைப் புரா. புருஷோத்தமநாயடு காட்டியுள்-ளார்.[65] ஆக, ''கவசமானது உடலைக் காத்தல் போன்று இம்

---

61 பி லோ, சீ. வியா, உ. தே. ர. பா. 44

62 மேலது

63 7-5.9ஈ; 9.9.2ஈ

64. 5.7.9ஈ, சீ.அ.

65 பு.ரா.புருஷோத்தம நாயடு, (மொ.ஆ) ஈட்டின் தமிழாக்கம், திருவாய்மொழி வியாக்யான வரலாறு, ப 48

முப்பத்தாறாயிரப்படி வியாக்கியானமும் கற்போராலும் எழுதுவோராலும் வேற்று மக்களாலும் தன் நிலைதிரிந்து மாறுபடாதபடி திருவாய் மொழியினைக் காத்து நிற்றலின் இவ் வியாக்கியானத்திற்கு 'ஈடு' என்ற தனிச் சிறப்புப் பெயரினை நம் பெருமக்கள் இட்டு வழங்கினார்கள்'' என்பர் நாயடு அவர்கள்[66].

பெரியவாச்சான்பிள்ளையின் வியக்கியானத்தைக் கவச மாகக் கொள்ளாது நம்பிள்ளையின் ஈட்டையே கவசமாகக் கொண்டதில் ஒரு கருத்திருக்க வேண்டும். பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானமே முதலில் பிரச்சாரம் அடைந்தது. அதற்குப் பிறகு ஆழ்வார் பாசுரங்களுக்குப் பொருள் நிறுவு வதில் சிலர் கருத்து மாறுபட்டுப் புதிய கொள்கைகளைப் பற்றத் தொடங்கினர். அவற்றிற்கெல்லாம் தக்க மறுப்புரை களைத் தன்னகத்தே கொண்டதாய் நம்பிள்ளையின் ஈடு

அமைந்தது. அதனைக் கண்ட ஆசாரியர்கள் அதனை 'ஈடு' கவசம்) என்ற குறிப்பிடத் தொடங்கினர். 'ஈடு' என்று முதன் முதலில் வருவது மணவாளமாமுனிகளின்உபதேசரத்தின மாலையில்தான்.[67] அவருக்கு முன்பிருந்த ஆசாரியர்களின் காலத்தில் 'ஈடு' என்ற குறியீடு பேச்சு வழக்கில் இருந்திருக்க லாம். நம்பிள்ளையின் பேருரைக்கும் மணவாளமா முனிகளின் காலத்திற்கும் இடைப்பட்டுத் தோன்றிய ஸ்ரீவசனபூஷணம், ஆசார்யஹ்ருதயம் முதலிய நூல்களில் இச்சொல் இடம் பெற வில்லை. பேச்சுவழக்கில் இருந்த இச்சொல்லை மணவாளமா முனிகள் நூலீல் ஏற்றி வாழ்வித்தார். ஈடு ஓராண்வழியாகச் சென்ற காலத்தில் வாழ்ந்த பெருமக்களே அங்ஙனம் 'ஈடு' என்று வழங்கியிருக்கலாம்.

நம்பிள்ளை காலத்தில் வைணவ சமயத்தில் உபாசகர் களான சிலர் ஆழ்வார் பாடல்களைத் தங்களுக்குச் சான்றா கக் கொள்ள முயன்றனர். உபாசகர்கள் என்போர் தங்களு டைய முயற்சியாகச் செபம் தவம் வேள்வி முதலானவற்றை உபாயமாகச் செய்து இறையருளைப் பெற நினைப்பவர்கள். நம்பிள்ளை முதலான ஆசாரியர்கள் இறைவனையே உபாய

66 மேலது

67 உ. தே. ர, பா. 44 பின்பழகிய பெருமாள் சீயரின் ஆறாயிரப்படி குருபரம்பராப் பிரபாவத்தில் வரும் 'ஈடு முப்பத்தாறாயிரம்' என்ற தொடர் பிற்காலத்தில் சேர்க்கப் பட்டிருக்கலாம்,

மாகப் பற்றி அருளைப் பெற நினைப்பவர்கள். இவர்களைப் ‘பிரபன்னர்’ என்று அழைப்பர். உபாசகர்கள் திருவெட்டெழுத்து முதலிய மறைமொழிகளை ஓதி உருவெண்ணியும் வேள்வியில் பயன்படுத்தியும் போருவர்கள். பிரபன்னர்கள் அவற்றின் பொருளில் ஆழ்ந்து சுவைத்து உண்மை ஞானம் எய்தி மகிழ்வர். உபாசகர்களை நம்பிள்ளை ‘புறம்புள்ளார்’ என்று குறியிட்டு அழைக்கிறார். இவர்களுடைய சில கொள்கைகளை நம்பிள்ளை மறுத்துத் தம் கருத்துக்களை நிறுவியிருக்கிறார். அவை வேறொரு இயலில் விரிவாக ஆய்வு செய்யப்படும்.[68] புறம்புள்ளாரைப் பற்றிய குறிப்பு ஒன்றும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் இல்லை. ‘புறம்புள்ளார்’ என்ற உபாசகர்களின் பொருள் விரிவிற்கு இடமின்றித் திருவாய்மொழிப் பொருளைக் காத்துக் கவசமாக நின்றதால் நம்பிள்ளையின் பேருரை சிஷ்யபரம்பரையில் ‘ஈடு’ என்று போற்றப்பட்டது. இம்முறையிலேயே ‘ஸச்சரித்ரரக்ஷை’ என்ற நூற்பெயர்கள் பிற்காலத்தில் வடமொழி நூல்களுக்கும் இடப்பட்டன. ரக்ஷையும் ஈடும் ஒரே பொருள் கருதிய இரு மொழிச் சொற்கள்.

### படிகள்

நம்பிள்ளையின் ஈடு, முப்பத்தாறாயிரப்படி என்றும் அழைக்கப்படுகிறது. ‘படி’ என்ற சொல்லையும் ஆய்வு செய்ய வேண்டிய நிலை ஏற்படுகிறது. ‘படி’ என்பதற்கு ‘அளவு’ என்று பொருள் கொள்வர் பு. ரா. புருஷோத்தம நாயடு அவர்கள்.[69] அளவாவது ஒற்று ஒழிந்து உயிரும் உயிர்மெய்யுமாக 32 எழுத்துக்களையுடைய ஒரு கிரந்தம் என்றும் அவர் விளக்குவர். ‘ஆறாயிரப்படி வியாக்கியானம்’ என்றும் விரித்துக் காட்டுகிறார். இவ்விளக்கமும் மறு ஆய்வு செய்யப்படல் வேண்டும்.

‘படி’ என்பது தொகை அளவைக் குறிக்குமானால், அதனையிடாதே இன்பமிகும் ஆறாயிரம் என்றும் ஏர் ஒன்பதினாயிரம் என்றும் இருபத்து நாலாயிரம் என்றும் ஈடு முப்பத்-

---

68 பார்க்க :இயல் (7), பகுதி 2.

69 பு. ரா. பு.மு. நா,ப41

தாறாயிரம் என்றும் மணவாளமாமுனிகள் குறித்ததன் கருத்-தினைக் காண வேண்டும். ஆறாயிரம் முதலிய சொற்களே ஆகுபெயர்களாக நின்று ஆறாயிரம் கிரந்தம் முதலியனவற்-றைக் காட்டும். 'படி' என்பது தேவையில்லை. இக்கருத்தி லேயே மாமுனிகள் அவ்வாறு 'படி' என்பதின்றி ஆண்டிருக்கிறார். மேலும் 'படி' என்பது அளவைச் சுட்டு-மானால், முமுட்சுப்படி, சிரியப்பதிப்படி, யாத்ருச்சிகப்படி பரந்தபடி என்ற சில நூல்கள் வழங்கப்படுவதில் 'படி' என்-பதை விளக்கமுடியாது போகும்.

மேற்குறித்த நூல்கள் யாவை என்பதை முதற்கண் ஆய்வு செய்வோம். வைணவர்கள் திருமந்திரம், துவயம், சரமசுலோகம் என்னும் மூன்றையும் 'ரஹஸ்யத்ரயம்' (முப்பெரும் மறை மொழிகள்) என்று குறிப்பிடுவர்: அவற்றுள் திருமந்திரம் என்பது திருமாலின் திரு எட்டெழுத்து, துவயம் என்பது கடவல்லி உபநிடதத்துள் படிக்கப்படும் இருதொடர்கள்; சரம-சுலோகம் என்பது கீதையில் கண்ணன் கூற்றாக வரும் ஒரு சுலோகம். இம்மூன்றிலும் வைணவ சமயக்கோட்பாடுகள் உறைந் திருப்பதாகக் கொள்ளப்படுகிறது.[70] இவற்றுக்குப் பிள்ளைலோ காசாரியர் வியாக்கியானங்களாக யாத்ருச்சிகப்படி, பரந்தபடி, சிரியப்பதிப்படி, முமுட்சுப்படி என்று நான்கு நூல்களைச் செய் திருக்கிறார், இவை வியாக்கியானங்களேயானாலும் மூலத்துக்-குத் தகுதியாக மதிக்கப்படுகின்றன; சூத்திரங்களாகவும் அமைக்கப்பட்டிருக்கின்றன; இவற்றையே மூலமாகக் கொண்டு உரைகளும் தோன்றியுள்ளன.

இங்ஙனம் 'ரஹஸ்யத்ரயம்' என்ற முப்பெரும் மறை மொழிகளுக்கு வியாக்கியானங்களாக அமைந்தவற்றின் கிரந்த அளவுகளைக் காட்டும் குறியீடு இடப்படவில்லை. இவற்றின் வாசிகளை அறிந்துகொள்ள மணவாள மாமுனிகளின் வியாக்கி யானத்தையே நாடவேண்டியிருக்கிறது.

> "அதில் யாத்ருச்சிகப்படி மிகச் சுருக்கமாகையாலும் பரந்தபடி மிகப் பரந்ததாலும் ச்ரியப்பதிப்படி அவ்விரு குற்றமுமின்றிக்கே யிருந்தாலும் வடமொழித் தொடரின் மிகுதியால் பெண்ணுக்கும் பேதைக்கும் கற்கப் போகாமை

70 (அ) ஓம் நமோ நாராயணாய—திருமந்திரம் (திருவெட்டெழுத்து)

> யாலும் மூன்றுவிதக் குற்றமும் இல்லாதபடி இன்னமும் ஒரு பிரபந்தமிட வேணும் என்று திருவுள்ளம்பற்றி எல்லாவற்றுக்கும் பின்பிறே முமுக்ஷுப்படியாகிற இப் பிரபந்தம் இட்டருளிற்று ''[71]

என்று அவர் தெளிவிக்கிறார். இதனால் 'படி' என்பது அளவைக் காட்டுவதன்று என்று அறியப்படுகிறது. யாத்ருச்சிகம், சிரியப்பதி, முமுட்சு என்ற முதற்குறிப்புடன் தொடங்கும் வியாக்கியானங்கள் அக்குறிப்புடன் 'படி' என்று சேர்த்து அழைக்கப்பட்டன. ஒன்று மிகவும் பரந்திருத்தலால் 'பரந்தபடி' என்ற பெயரிடப்பட்டது. இதனால் 'படி' என்னும் சொல் 'வியாக்கியானம்' என்ற பொருளில் வ்ழங்கப்பட்டது என்பது தெளிவாகிறது. அவ்வகையில், 'முமுக்ஷுப்படி' என்பது 'முமுக்ஷு' என்று தொடங்கும் ஒரு வியாக்கியானம் என்று பொருள்படுகிறது. மேலும், ஒரே நூலுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட வியாக்கியானங்கள் தோன்றியபோதுதான் 'படி' என்ற சொல் குறியிடப்படுகிறது. அதனால் 'படி' என்பதற்கு 'இது ஒரு வகை வியாக்கியானம்' என்பதைப் பொருளாகக் கொள்ளலாம் (Different Version)[72]. எனவே 'ஈடுமுப்பத்தாறாயிரப்படி' என்று குறிக்கும்போது பொருட்காப்பாகச் செய்யப்பட்டது என்பதும் முப்பத்தாறாயிரம் கிரந்தங்களைக் கொண்டது என்பதும் மற்றவற்றினின்றும் வேறு வகைத்தான வியாக்கியானம் என்பதும் உணர்த்தப்படுகின்றன.

இனி, இக்கிரந்த அளவுகளை வரையறுத்துச் சுட்டியதன் நோக்கம் பிற்காலத்து இடைச் செருகல்களைத் தவிர்ப்பதற்காகவும் இருக்கலாம். ஆனால் இவ்வெண்ணிக்கையை இதுகாறும் எவரும் சோதித்துப் பார்த்ததாகத் தெரியவில்லை. வியாக்கியானங்களில் வரும் மேற்கோள்களையும் சேர்த்து இவ் எண்ணிக்கை காட்டப்பட்டதா என்பதையும் ஆராய்ந்து பார்க்கவில்லை. கிரந்த எண்ணிக்கை கூடியோ குறைந்தோ இருக்கலாம். ஆயினும் பெரும்பான்மை பற்றி ஆறாயிரம், ஒன்பதினாயிரம் என்று இவ்வாறு சுட்டியிருக்கவும் கூடும்.[73]

---

(ஆ) ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே
ஸ்ரீமதே நாராயணாய நம : — துவயம் (மந்திரரத்தினம்)

(இ) ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம்வ்ரஜ, அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:—சரமசுலோகம்

71. ம. மா. மு, வியா, முமுட்சுப்படி, பிரவேசம்
72. இதை 'ப்ரக்ரியை' என்பர் வடமொழியாளர்
73. 1112 பாடல்களைக் கொண்டதாயினும் 'திருவாய்மொழி ஆயிரம்' என்ற வழக்கையும் 3776 பாடல்களைக் கொண்டதாயினும் நாலாயிர திவ்வியப் பிரபந்தம் என்ற வழக்கையும் ஒப்பு நோக்குக

**புதுமைப் பெயரிடு**

திருவாய் மொழியின் ஐந்து வியாக்கியானங்களும் வட மொழியிலுள்ள ஐந்து நூல்களின் நினைவாகத் தொகையளவு வரையறை செய்யப்பட்டு வழங்கப்படுகின்றன. ஆறாயிரம் சுலோகங்களைக் கொண்ட விஷ்ணு புராணத்தின் அளவில் அமைக்கப்பட்டது பிள்ளானின் ஆறாயிரப்படி; ஒன்பதினாயிரம் கிரந்தங்களைக் கொண்ட இராமாநுசரின் ஸ்ரீபாஷ்யத்தின் அளவில் எழுதப்பட்டது நஞ்சீயரின் ஒன்பதினாயிரப்படி; இருபத்து நாலாயிரம் சுலோகங்களைக் கொண்ட வால்மீகி இராமாயணத்தின் அளவில் இயற்றப்பட்டது பெரியவாச்சான் பிள்ளையின் இருபத்து நாலாயிரப்படி; பன்னீராயிரம் சுலோகங்களைக் கொண்ட பாகவதத்தின் அளவில் செய்யப்பட்டது அழகிய மணவாளச்சீயரின் பன்னீராயிரப்படி. இராமாநுசரின் ஸ்ரீபாஷ்யத்துக்குச் சுதரிசன பட்டர் என்பவர் முப்பத்தாறாயிரம் கிரந்தங்களைக் கொண்ட ஒரு விருத்தியுரை எழுதினார். அது 'சுருதப்பிரகாசிகை' என்று அழைக்கப்படுகிறது. சுருதப்பிர-காசிகையின் அளவில் இடப்பட்டதே ஈடு முப்பத்தாறாயிரப்படி. இவ்வாறு பொதுவாக விளக்கம் தரப்படுகிறது.

தமிழ் இலக்கண உலகில் இளம்பூரணம் என்றும் சேனாவரையம் என்றும் பேராசிரியம் என்றும் நச்சினார்க்கினியம் என்றும் இவ்வாறு உரையாசிரியர் பெயரைச் சார்த்தியே உரைநூல்கள் வழங்கப்படுகின்றன. திருவாய்மொழி உரை உலகில் மட்டும் நூலின் எழுத்துத் தொகையளவால் பெயர்கள் வழங்கப்படுகின்றன. அவை குறிப்பிட்ட சில வட மொழி நூல்களின் நினைவாகவும் அமைக்கப்பட்டது ஒரு புதுமையாகும். தொகை அளவால் உரைகளைப் பெயரிடுவது உரையாசிரியர்களில் தெய்வச்சிலையாரைக் கவர்ந்திருக்கிறது. நம்பிள்ளைக்குச் சமகாலத்தவரான அவர் ஒவ்வோர் இயலின் இறுதியிலும் உரையின் எழுத்தளவைக் குறிப்பிடுவர். எடுத்துக் காட்டாகக் கிளவியாக்கத்தின் இறுதியில் "இவ்வோத்தினுள் சூத்திரம் உள்பட்ட உரையினது அளவு கிரந்த வகையான் ஐந்நூற்று நாற்பது" என்று எழுதி முடித்திருக்கிறார்,[74]

---

74. மு, வை, அரவிந்தன் உரையாசிரியர்கள், 1968, ப.149. தெய்வச்சிலையார் உரை, சை. சி. நூ. ப. கழகப்பதிப்பில் இக்கிரந்த எண்ணிக்கையை நீக்கி விட்டனர். தெய்வச்சிலையார் முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன் (கி.பி. 1268-1310) காலத்தவர்-மு.வை, அரவிந்தன், உரையாசிரியர்கள், 1977, ப. 212.

சில ஆய்வுகள்

(அ) பன்னீராயிரப்படி பாகவதத்தின் சுலோக அளவில் செய்யப் பட்டதாகக் கொள்வர் பு. ரா. புருஷோத்தமநாயடு அவர்கள். ஆனால், மற்ற வியாக்கியானங்களுக்குப் பொருத்த மான வடமொழி நூல்களைக் காட்டிய பிள்ளைலோகஞ்சீயர் இதற்கு மூலமான பாகவதத்தைச் சுட்டிக்காட்டவில்லை. மேலும், "இந்த எண்ணிக்கைக்கு அநுகுணமாக விலக்ஷண ப்ரமாணம் உண்டாகில் அந்த எண்ணிக்கையாக அருளிச் செய் தார் என்று நிர்வஹிக்கக் கடவது" என்றும் எழுதிவைத்தார்.[75] அவர் பாகவத புராணத்தையே அறிந்ததில்லையா? அறிந்து வைத்தும் அதை 'விலக்ஷணப் பிரமாணமாக' ஏற்கவில்லையா? இவற்றிற்கு விடைகளை ஆய்வு செய்தல் நல்லது.

பாகவதம் ஆசாரியர்களின் வியாக்கியானங்களில் மிகக் குறைந்த அளவான இடங்களிலேயே மேற்கோளாக ஆளப் பட்டிருக்கிறது. ஓரிரு சுலோகங்களே அப்படி மேற்கோளாக எடுக்கப்படுகின்றன. கண்ணனுடைய செய்திகளைக் காட்டு மிடங்களிலும் விஷ்ணுபுராணச் சுலோகங்களே மேற்கோளாக எடுக்கப்பட்டுள்ளன. ஆளவந்தார் தமது தோத்திர நூலில் பராசர முனிவரைப் பெரிதும் போற்றி அம்முனிவருடைய நூலைப் புராண ரத்தினம் என்றும் கொண்டாடியிருப்பதே அதற்குக் காரணம்.[76] பிள்ளைலோகஞ்சீயரின் காலம் வரை பன்னீராயிரப்படி அளவுக்கு எது மூலம் என்று அறியப்பட வில்லை; பின்னால் வந்தவர்களே அதற்கு மூலமாகப் பாகவ தத்தைக் கற்பித்துக் கொண்டனர் என்று கொள்ளலாம். பாக வதம் பதினெண்ணாயிரம் சுலோகங்களைக் கொண்டதாக நன்கு அறியப்படுகிறது. ஆனால் அப்புராணம் பன்னிரண்டு ஸ்கந்தங்களைக் கொண்டதாகலின், பன்னீராயிரம் கிரந்த அள வில் அமைந்த வாதிகேசரியின் உரை பாகவதத்தின் நினைவுச் சின்னமாகப் போற்றப்படும் மரபு பிற்காலத்தில் தோன்றிய தாகலாம்.

(ஆ) நம்பிள்ளையின் பேருரை சுருதப் பிரகாசிகையின் அளவைக் கொண்டது என்பதை ஆறாயிரப்படி குருபரம்பரை

---

75. பி. லோ. சீ., வியா. உ. தே. ர. பா. 45

76. ஆளவந்தார், ஸ்தோத்ர ரத்நம், சு. 4

நூலில் பின்பழகிய பெருமாள் சீயர் குறிப்பிடுவதாக இருக்கிறது.[77] சுருதப்பிரகாசிகையைச் செய்த சுதரிசன பட்டர் நம்பிள்ளைக்குப் பிற்காலத்தவர். ஈடு தோன்றிய பிறகே அவருடைய சுருதப் பிரகாசிகை எழுதப்பட்டது.[78] அப்படியிருக்க நம்பிள்ளைக்கு முன்பே காலமாகிவிட்ட பின்பழகிய பெருமாள் சீயர் சுருதப் பிரகாசிகையை எப்படி அறிந்திருக்க முடியும்?

சுருதப் பிரகாசிகை பிரச்சாரம் அடைந்த காலத்தில் ஈடு அதற்குச் சமமான கிரந்த அளவைக் கொண்டிருப்பதை அறிந்த பிற்காலத்தினர் சீயரின் குருபரம்பரை நூலில் அச் செய்தியை இடைச் செருகியிருக்க வேண்டும்.

மணவாளமாமுனிகளின் சீடரான பரவஸ்து பட்டர் பிரான் சீயரே தம்முடைய அந்திமோபாய நிஷ்டையில் ஈட்டைக் குறித்துச் சொல்லும்போது, ''இது தான் சுருதப் பிரகாசிகையின் கட்டளையிறே' என்று எழுதி வைத்தார்.[79] அதனால் அவர்காலத்துத்தான் பின்பழகிய பெருமாள் சீயரின் குருபரம்பரை நூலில் அச்செய்தி இடைப் புகுத்தப்பட்டது என்று தெரிகிறது. பிள்ளைலோகஞ்சீயரும், ''இது (ஈடு) தான் சுருதப் பிரகாசிகைக்கு முன்னே அவதரித்தது ஆனாலும் பின்புள்ளார் இதின் படியை த்ருஷ்டாந்தமாக அருளிச்செய்யக்குறையில்லை' என்று குறிப்பிடுவது ஈடு - சுருதப்பிரகாசிகை ஒப்பீடு பிற்காலத்தில் தோன்றியது என்பதற்கு அரண் செய்கிறது.[80]

**ஈட்டின் ஓராண் வழிச்செலவு**

நம்பிள்ளையின் ஈட்டில்மூன்றாம் குலோத்துங்கனும் மாறவர்மன் சுந்தரபாண்டியனும் செய்துகொண்ட வீராபிடேகங்களும் விசயாபிடேகங்களும் குறிப்பிடப்படுகின்றன.[80 (அ)] அதனால்கி.பி. 1228க்குப்பிறகு அதாவது நம்பிள்ளை 80பிராயங்களைக்கடந்த பிறகே அவருடைய விரிவுரையான ஈடு ஏடுபடுத்தப்பட்டது என்று கொள்ளலாம். இவ்வாறு வடக்குத் திருவீதிப்

---

77. ஆ. கு. ப. பி., மு. நா. ப, 373
78. ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம், 368, ப. 296.
79. பிள்ளைலோகஞ்சீயரே தம்முடைய உபதேசரத்தினமாலை 44வது பாடல் வியாக்கியானத்தில் இச்செய்தியைக் குறிப்பிடுகிறார்.
80. பி. லோ. சீ. வியா. உ, தே. ர. பா. 44
80. (அ) இந்நூல் பகுதி (2) இயல் (7)

பிள்ளை ஏடுபடுத்திய ஈட்டை நம்பிள்ளை வாங்கித் தம்முடைய மற்றொரு சீடரான ஈயுண்ணிச் சிறியாழ்வான் அப்பிள்ளை கையிற் கொடுத்து அதனை ஓராண்வழிக் கிரமத்தில் கொண்டு செல்லுமாறு ஆணையிட்ட வரலாற்றை முன்னர்க்கண்டோம்.[81] இனி, ஈடு அம்முறையில் நடந்த செய்தி ஆய்வு செய்யப்படல் வேண்டும். ஓராண்வழிமுறையில் எத்தனை ஆண்டுகள் உரை நடந்தது, எப்போது அம்முறை மாறி எல்லார்க்கும் பொதுவாய்ப் பிரச்சாரம் நடந்தது, ஏன் ஓராண்வழியிற் செலுத்தப்பட்டது என்பன ஈட்டின் ஆய்வுக்கு உதவுகின்றன.

ஈட்டின் இவ்வகைச் செலவுபற்றிச் சுருக்கமான செய்திகள் உபதேசரத்தினமாலையிலும் அதன் வியாக்கியானத்திலும் உள்ளன. சற்று விரிவான செய்திகளைப் பிள்ளை லோகஞ்சீயரின் 'யதீந்த்ரப்ரவண ப்ரபாவம்' என்ற நூலில் காணலாம். ஈட்டின் தனியன்களுக்கு அச்சீயர் இட்ட வியாக்கியானங்களும் சில செய்திகளைத் தருகின்றன.

ஈயுண்ணிச் சிறியாழ்வான் அப்பிள்ளை தம்முடைய மகனாரான பத்மநாபருக்கு ஈட்டைக் கற்பித்தார். இவ்விருவரிடம் ஈடு பல்லாண்டுகள் தங்கிவிட்டது. காஞ்சிபுரத்திலேயே அவ்விருவரும் தங்கிவிட்டனர். ஈட்டைப் பிறருக்கு வெளிப்படுத்தாமல் நிதியை நோக்கிக் கொண்டிருக்குமாப்போலே காத்துக் கொண்டிருந்தனராம்.[82] பிறகு நம்பிள்ளையின் மற்றொரு சீடரான நாலூர்ப்பிள்ளை பத்மநாபருக்குத் தொண்டுகள் செய்து மகிழ்வித்து ஈட்டைப் பெற்றார். அப்போது நிகழ்ந்த ஓர் அற்புதத்தை யதீந்த்ரப்ரவணப்ரபாவம் விரிவாகக் கூறுகிறது. பத்மநாபர் ஈட்டை நாலூர்ப்பிள்ளைக்கு வழங்கிய போது காஞ்சிமாநகரில் கோயில் கொண்டுள்ள தேவப்பெருமாள் அருச்சகர் வாயிலாக ஆவேசித்து ஈட்டை எல்லார்க்கும் வெளிப்படுத்துமாறு ஆணையிட்டார்.[83] அப்படியிருந்தும் ஈடு வெளிப்போந்துபிரச்சாரம் அடையவில்லை. நாலூர்ப்பிள்ளை தம்முடைய மகனாரான நாலூர் ஆச்சான் பிள்ளையிடம் ஈட்டை

81. இந்நூல் ப. 24

82. பி. லோ. சீ. வியா; ஈட்டுத்தனியன்

83. பி. லோ. சீ; யதீந்த்ரப்ரவணப்ரபாவம், 1891, ப. 20

வழங்கினார். அவரே அதனைத் திருநாராயணபுரத்தில் ஆய் என்பவருக்கும் திருவாய்மொழிப்பிள்ளைக்கும், இளம்பிளிசைப் பிள்ளைக்கும் கற்பித்தார்.[83(அ)] திருவாய்மொழிப் பிள்ளையிடமிருந்து அவருடைய சீடரான மணவாளமாமுனிகள் ஈட்டைக் கற்று அதை நாடும் நகரும் நன்கு உணரும்படியாகத்திருவரங்கப் பெருநகரில் திருவரங்கருக்கு முன் கூடிய பேரோலக்கத்தில் பத்துத் திங்கள் விரித்துரைத்து ஈட்டைப் பிரச்சாரப்படுத்தினார். அதனால் அவருக்கு 'ஈட்டுப் பெருக்கர்' என்ற சிறப்புப் பெயர் கிடைத்தது.[84] 'ஸ்ரீசைலேச' என்று தொடங்கும் வடமொழித் தனியனும் திருவரங்கரால் வழங்கப்பட்டது.

ஈடு-ஓராண்வழிச் செலவு

| | |
|---|---|
| *(ஈட்டை ஏடுபடுத்தியவர்)* | வடக்குத் திருவீதிப்பிள்ளை *(கி.பி.1167-1264)* |
| | ↓ |
| *(நம்பிள்ளை சீடர்)* | ஈயுண்ணிச் சிறியாழ்வான் அப்பிள்ளை |
| | ↓ |
| *(அப்பிள்ளை மகனார்)* | பத்மனாபப் பெருமாள் |
| | ↓ |
| *(நம்பிள்ளையின் மற்றொரு சீடர்)* | நாலூர்ப்பிள்ளை |
| | ↓ |
| *(நாலூர்ப்பிள்ளை மகனார்)* | நாலூர் ஆச்சான் பிள்ளை |
| | ↓ |
| *(பிள்ளைலோகாசாரியரின் சீடர்)* | திருவாய் மொழிப்பிள்ளை *(கி.பி. 1290-1410)* |
| | ↓ |
| *(திருவாய்மொழிப்பிள்ளை சீடர்)* | மணவாள மாமுனிகள் *(கி.பி. 1370-1443)* |

கி.பி. 1432ல் மணவாள மாமுனிகள் ஈட்டை பிரச்சாரப்படுத்-

---

83 (அ). அஹோபல மடத்தின் மூலபுருஷரும் திருநாராயணபுரத்தில் நாலூராச்சான் பிள்ளை கோஷ்டியில் சேர்ந்து ஈட்டைக் கற்றார் என்றும் ஒரு கருத்து உண்டு. — திருப்பாவை நாலாயிரப்படி, முன்னுரை, ஸ்ரீவேதவேதாந்த வர்த்தினிசபை, திருவல்லிக்கேணி, 1948.

84. பி.லோ.சி., யதிந்த்ரப்ரவணப்ரபாவம், 1891, ப.99

தினார்.[85] அதுவரை ஏறத்தாழ இருநூறு ஆண்டுகள் நம்பிள்ளையின் ஈடு ஓராண்வழியாகச் சென்றது. அக்காலப் பகுதியில் வாழ்ந்த மற்றைய ஆசாரியர்களும் அறிஞர்களும் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தையே தஞ்சமாகப் பற்றித் திருவாய்மொழிப் பொருளைக் கற்று வந்தனர். கி.பி.1269—1369 என்ற காலப்பகுதியில் வாழ்ந்த வேதாந்த தேசிகரும் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தையே காண நேர்ந்தது. அதனையே தமது நூல்களில் நன்கு பயன் படுத்திக் கொண்டார்.[86]

இப்படி இரண்டு நூற்றாண்டுகள் ஈடுமறைந்தே ஓராண் வழியிற் செலுத்தப்பட்டதற்கு அறுதியான காரணத்தை ஒரு நூலும் விளக்கவில்லை. நம்பிள்ளை காலத்தில் உபாசகர்களும் திருவாய்மொழியைத் தம் கொள்கைகளுக்குச் சான்றாக உரை விளக்கம் செய்ய முற்பட்டனர்; அவர்களுடைய கொள்கைகள் ஈட்டில் நன்கு மறுக்கப்பட்டுள்ளன. இம் மறுப்புக்களை

---

85. மணவாளமாமுனிகள் ஈட்டை விரித்துரைக்கத் தொடங்கிய நாள் ;

'' நல்லதோர் பரிதாபி வருடந் தன்னில்
நலமான ஆவணியின் முப்பத் தொன்றில்
சொல்லரிய சோதியுடன் விளங்கு வெள்ளித்
தொல்கிழமை வளர்பக்க நாலா நாளில்
செல்வமிகு பெரியதிரு மண்டபத்திற் செழும்
திருவாய் மொழிப் பொருளைச் செப்புமென்று
வல்லியுறை மணவாளர் அரங்கர் நங்கள்
மணவாளமாமுனிக்கு வழங்கினரே.''

ஈடு விரிவுரை நிறைவெய்திய நாள் :

'' ஆனந்த வருடத்திற் கீழ்மையாண்டில்
அழகான ஆனிதனில் மூலநாளில்
பானுவாரங் கொண்ட பகலிற் செய்ய
பௌரணையில் நாளிட்டுப் பொருந்தி வைத்தே
ஆனந்தமயமான மண்டபத்தில்
அழகாக மணவாளர் ஈடுசாற்ற
வானவரும் நிரிட்ட வழக்கே யென்ன
மணவாளமாமுனிகள் களித்திட்டாரே ''

— பி. லோ. சி. யதிந்த்ரப்ரவணப்ரபாவம், 1891. ப. 107 இவற்றால், பரிதாபி ஆண்டு, ஆவணித்திங்கள், 31ஆம்நாள், சுக்கிலபட்சம், சுவாதி நட்சத்திரம், வெள்ளிக்கிழமை தொடங்கப்பட்ட ஈடு விரிவுரை பிரமாதீச ஆண்டு, ஆனித் திங்கள், பௌர்ணமி, மூல நட்சத்திரம், ஞாயிற்றுக்கிழமையன்று நிறைவெய்தியதாக அறியப்படுகிறது.

86. பி. ப. அண்ணங்கராசாரியர், தீபிகையுரை, தி. வா. மொ. 1-8-0.

உபாசகர்கள் அறிய நேர்ந்தால், எதிருரைகள் தோன்றி வீணான, மனக்கசப்புக்கள் உருவாகும் என்று நம்பிள்ளை அபிப்பிராயப் பட்டிருக்கவேண்டும். அவற்றை அவர்களால் காண வொண்ணாது நெடுநாள் வாழச் செய்து ஈட்டை நன்கு பெருக்கிப் பிரச்சாரம் செய்யும் ஒரு அருளாளரிடத்தே சேர்ப்பிக்க வேண்டும். என்ற எண்ணம் நம்பிள்ளைக்கு இருந்திருக்க வேண்டும். அதன்விளைவே ஓராாண் வழிச்செலவு.

முடிப்புரை

நம்பிள்ளையின் இளம் பருவம் திவ்வியப் பிரபந்த உரை மலர்ச்சியில் ஒன்றிவிட்டது ஒன்றுவதற்கு முன்னரே அவர் தம்மை அவ்வொன்றிப்புக்குத் தகுதியாக்கி வைத்திருந்தார். பட்டருடைய விரிவுரைகளில் வேத வேதாந்த இதிகாச புராணக் கருத்துக்களும் அருந்தமிழ் மரபுகளும் கடல்மடை திறந்தாற் போல் வெளிவந்தன. அவற்றை அள்ளிப் பருகும் அருந்திறல் நம்பிள்ளையிடம் அமைந்திருந்தது. நம்பிள்ளையின் கல்வித் தகுதியை அளவிட வல்லார் யார்? ஒரு வியாக்கியான சக்கர வர்த்தியை உருவாக்கியவர் நம்பிள்ளை. அந்தச் சக்கரவர்த்தியே நம்பிள்ளையின் கல்வித் தகுதிகளைக் குறிப்பிட்டு வியப் படைந்திருக்கிறார்.

அறுபத்துநான்கு கலைகளை அறுபத்து நான்கு நாட்களில் கண்ணபிரானுக்கு ஓதுவித்த பெருந்திறலோன் சாந்தீபனி முனிவனைக் குறித்து, "ஓதுவாய்மையும் உவனியப் பிறப்பும் உனக்கு முன் தந்த அந்தணன் ஒருவன்" என்று சிறப்பிக்கிறார் திருமங்கையாழ்வார். சாந்தீபனியின் பெயரைச்சுட்டாது ஓதுவிக்கும் ஆற்றலில் ஒப்பில்லாதவன் என்பதைக் காட்டுவதற்காக 'ஒருவன்' என்றார் திருமங்கையாழ்வார். அவ் ஒருவனுக்கும் ஓர் உவமையாகத் தம் பேராசியராகிய நம்பிள்ளையை எடுத்துக் காட்டுகிறார் பெரியவாச்சான்பிள்ளை:-

> "முற்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாஸ புராணங்களையும் அதிகரித்து பரபக்ஷ்ய்ரதிக்ஷேபத்துக்கு உடலாக நியாய மீமாம்ஸைகளும் அதிகரித்துப் போதுபோக்கும் அருளிச் செயலிலேயாம்படி பிள்ளையைப் போலே அதிகரிப்பிக்க வல்லவனையிறே ஒருத்தன் என்பது"[87]

பெரியவாச்சான் பிள்ளையின் வியப்புரை இது! திவ்வியப் பிரபந்தத்துக்குப் பேருரை வரைவதற்கான தகுதிகளை எல்லாம் பெரியவாச்சான் பிள்ளை பட்டியலிட்டு அவற்றை ஒருசேரப்

87, பெ. வா. பி. வியா. பெரி, திரு. 5-8-7

பெற்றுச் சாந்தீபனிக்கு உவமையாகும் அளவு உயர்ந்திருந்தார் நம்பிள்ளை என்பதை உலகுக்குக் காட்டியுள்ளார். வேதவேதாந்த இதிகாச புராணங்களையும் தருக்க மீமாம்சைகளையும் கற்று வல்லவராயினும் அவற்றின் ஆராய்ச்சிகளில் போது போக்காமல் அவற்றைக் கருவியாகக் கொண்டு ஆழ்வார்களின் அருளிச் செயலிலேயே பொழுதைப் போக்கியவர் நம்பிள்ளை என்பதும் அப்பெருமை பெறாதவர் சாந்தீபனி என்பதும் பெரியவாச்சான் பிள்ளையின் நுண்ணிய குறிப்பாகும்.

வாய்மொழியாகவும் எழுத்து வடிவமாகவும் பல நூற்றாண்டுகளில் சேர்ந்துவிட்ட திருவாய்மொழி உரைகள் அனைத்தும் நம்பிள்ளையிடம் ஏரிபோல் தேங்கியிருந்தன. அவை அனைத்திற்கும் அவர் கொள்கலனாயிருந்தார். அவரிடமிருந்து தொடர்ந்து வரும் பொருளாட்சிகளையே பிற்காலத்து ஆசாரியர்கள் முதன்மையாக ஏற்றுக்கொண்டனர்.

> "ஸம்ப்ரதாயத்திலும் வந்தால் நம்பிள்ளை ஸ்ரீபாதத்திலே கேட்ட சிறியாழ்வான் அப்பிள்ளை குமாரர் பக்கலிலே கேட்ட நாலூர்ப் பிள்ளை அருளிச் செய்தாராகையாலே அந்த ப்ராபல்யமுண்டு"[88]

என்ற மணவாளமாமுனிகளின் வாக்கு இதற்குச் சான்று.

### ஈடும் அரும்பதவுரைகளும்

ஈட்டின் பல்வகை உரைத்திறன்களைக் காணக் கைவிளக்காகப் பயன்படுவன அரும்பதவுரைகள். அவற்றிலிருந்து மேலும் சில செய்திகள் கிடைக்கின்றன. எனவே ஈட்டின் திறனாய்வுக்கு முன் அவை தரும் செய்திகளை ஆய்வு செய்து கொள்வது இன்றியமையாதது.

நம்பிள்ளை பெருந்திரளான திருமால் அடியார்கள் நிரம்பிய பேரவையில் சொற்பொழிந்தனவற்றையே வடக்குத் திருவீதிப்பிள்ளை ஏடுபடுத்தினார். நம்பிள்ளையின் பேரோலக்கத்தை அணிசெய்தவர்கள் ஆசாரியர்களான முதலிகள். ஈட்டில் பல இடங்களில் அவர்களை உளப்படுத்திய தொடர்களைக் காணமுடிகிறது :-

---

88. ம. மா, மு., வியா. பெரி. யா. திரு- 5-3-7

''நம் தர்சனத்துக்குத் தத்வங்கள் மூன்று''[89]
''... நம் முதலிகள் அருளிச்செய்வது''[90]
''... நம் ஆசார்யர்கள் ... ...''[91]
''நம் தர்சனத்துக்குள்ளது''[92]
''ஆகவேயிறே நம் முதலிகள்...[93]'',
''நம் முதலிகள் ஒரோ ஸந்தானங்களாக ...''[94]

இவற்றால் முதலிகளான வைணவ நெறியினரைக் குறித்தே ஈடு எழுந்தது என்றுதெரிகிறது. அவரல்லாத பிறரும் பேரவையில் இருந்தாலும் அவர் சிறு வரவினரே. அவர்களைச் சிறப்பாகக் குறித்து ஈடு உரையாற்றப்படவில்லை.

ஈடு என்பது உரையாற்றப்பட்டதன் எழுத்துப் பதிவே என்பதற்கும் அகச் சான்றுகள் உள்ளன. சில இடங்களில் நம்பிள்ளை அருகிருந்தோரை முன்னிலைப் படுத்தி விளித்தனவும் அவ்வாறே போற்றி எழுதப்பட்டன· ''பிள்ளாய், நல்லதை மறக்கப் பண்ணாநிற்க இவ்விஷயம் தீயத்தை மறவாதொழிவதே'' என்ற முன்னிலைத் தொடர்கள் ஈட்டிற் காணப்படுகின்றன.[95] ஈடு உரையாற்றப்படுவதற்கு முன்னர் நம்பிள்ளை கூறியிருந்த சில கருத்துக்களும் ஈட்டில் இடமறிந்து ஏற்றப்பட்டன். ''வியாக்கியானம் பண்ணுவதற்கு முன்பேயும் ஒரு பொருள் உண்டு இதுக்கு அருளிச் செய்வது'' என்ற ஈட்டுத்தொடர் இதற்குச் சான்றாகிறது.[96]

ஏடுபடுத்தப்பட்ட ஈடு ஏறத்தாழ இருநூறு ஆண்டுகள் ஓராண்வழியாய்ச் சென்று இறுதியில் கி.பி. 1432ல் மணவாள மாமுனிகளால் வெளிப்படுத்தப்பட்டது. ஈட்டின் அருமை பெருமைகளை அறிந்த அவர் அப்பேருரையை விரித்துரைப்ப

89. ஈடு, ம. பி (1)
90. மேலது
91. மேலது
92. 1-1-2ஈ
93. 6-8-2ஈ
94 6-8-6ஈ
95. 1-7-1 ஈ இதை 'வார்த்தைப்பாடு' என்பர் அரும்பதகாரர்.
96. 5-3-1 ஈ

தையே பெரும்பணியாகக் கொண்டார். இருநூறு ஆண்டுகள் இடைப்பட்ட பழமை ஏற்பட்டதால் அவ்வுரையினைப் பின்னோரும் அறிந்து கொள்ளும் வண்ணம் தெளிவுறுத்தலைத் தலையாய கடமையாகக் கொண்டார் அவர். ஈட்டில் வரும் வடமொழி மேற்கோள்களை எல்லாம் ஒன்று திரட்டித் தொகுத்தார். அவற்றின் நூல்களின் பெயர்களையும் காட்டி-னார். அடுத்து, ஈட்டின் பிரதிகள் பலவற்றை எழுதச்செய் தார், 'திருவாழியாழ்வார் பிள்ளை' என்னும் தமது சீடர் ஒருவரை ஈடு முப்பத்தாறாயிரப்படி அர்த்தமாம்படி சிறிது வியாக்கியானங்களைக் கூட்டிப் பிரதி ஏறியருளப் பண்ணி வைக்கவும் நியமிக்க அவரும் அப்படியே செய்தருளினார்.[97]

ஈட்டில் இங்ஙனம் சில மாற்றங்களைச் செய்து செப்ப-னிடும் பணி மாமுனிகள் காலத்தில் தொடங்கியது. மேலும் ஈட்டில் வரும் 'கூடமான வாக்யங்களுக்கு அர்த்த விசாரம்' செய்யவும் தலைப்பட்டனர். கந்தாடை நாயன் என்பாரும் மணவாளமாமுனிகளின் திருப்பேரனாரான ஜீயர் நாயனாரும் ஈட்டுத் தொடர்களின் ஆராய்ச்சியில் ஈடுபட்டனர். இவருள் கந்தாடை நாயன் என்பவர் மாமுனிகளின் ஆணைப்படி வட மொழியில் ஈட்டிற்கு அரும்பத விளக்கம் செய்தார்.[98] இதுவே முதல் அரும்பதவிளக்கநூல், இந்நூல் இன்று கிடைக்கவில்லை.

'அப்பு அரும்பதம்' என்ற ஒன்றைச் சீயர் அரும்பதம் குறிப்பிடுகிறது. அப்பு அரும்பதத்தில் ஸ்வாபதேச அர்த்தம் இடம்பெற்றிருந்ததாகவும் அது தெரிவிக்கிறது.[99] மாமுனிகளின் காலத்தில் (கி. பி. 1370—1443) பல அறிஞர்கள் ஈட்டிற்கு அரும்பதவுரைகள் எழுதி வைத்தனர். அவற்றை விரிவுரை விளக்கம் செய்தபோது பயன்படுத்திக் கொண்டனர். மாமுனி-களின் காலத்திற்குப் பிறகு தோன்றிய அரும்பத விளக்கங்களில் இரண்டு நூல்களே இன்றும் வழக்கத்தில் உள்ளன.

---

97. பி. லோ. சி., யதிந்த்ரப்ரவணப்ரபாவம், ப. 59

98. மேலது – ப. 93.

99. 4-4-4 சி.அ; 6-7-4 சி.அ- ஈண்டுக் குறிப்பிடப்படும் அப்பு என்பவர் திருவிருத்தத்திற்கும் அரும்பதம் செய்தார்.

## அடையவளைந்தான் அரும்பதமும் சீயர் அரும்பதமும்

'ஆத்தான் சீயர்' என்பவர் தமக்கு முன்னிருந்தோர் செய்த அரும்பத விளக்கங்களை எல்லாம் அடையத் திரட்டி ஒரு அரும்பதவுரை செய்தார். அதனால் 'அடைய வளைந்தான்' என்ற பெயர் இடப்பட்டது. இதனைப் பிள்ளை லோகஞ்சீயர் தம்முடைய திருவாய்மொழி நூற்றந்தாதி வியாக்கியானத்தில் மேற்கோளாகக் காட்டியிருக்கிறார்.[100] அதனால் அவருக்கும் முற்பட்ட காலத்தில் அடையவளைந்தான் எழுதப்பட்டது விளங்குகிறது. அடைய வளைந்தானைத் தழுவி நடையை எளிமைப்படுத்தியும் வடமொழியிலிருந்த கடினமான பொருள் ஆராய்ச்சிகளைக் களைந்தும் 'குணகரம்பாக்கம் ராமானுஜஜீயர்' ஒரு புதிய அரும்பதவுரையை ஆக்கினார், இதனை 'சீயர் அரும்பதம்' என வழங்குவர். இந்நூலில் மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்கள் மேற்கோளாக இடம் பெறுகின்றன. மேலும் அவருடைய சீடர்களான கந்தாடை நாயன், பிரதிவாதிபயங்கரம் அண்ணா, இராமாநுசம்பிள்ளை, வானமாமலைஜீயர், அழகப்பங்கார் ஆகியோரின் பொருள் ஆட்சிகளும் இடம் பெறுகின்றன.[101]

அரும்பதகாரர்களின் இலக்கியப் பணிகள் தனி ஆய்வுக்கு உரியன. அவர்களை ஒரு வகையில் பதிப்பாளர் என்று கூறலாம். தாம் தேடித் தொகுத்த பல ஈட்டுக் கையெழுத்துச் சுவடிகளை நன்கு பரிசோதித்து ஒப்பிட்டுப் பார்த்தனர். சில சுவடிகளின் உரிமையாளரின் பெயர்களையும் குறித்து வைத்தனர். 'அப்பன்' என்பவரின் பிரதியிலிருந்து ஒரு பாட வேறுபாட்டைச் சீயர் அரும்பதம் காட்டியுள்ளது.[102] இவர் மாமுனிகளின் சீடரான 'பெரிய கந்தாடை அப்பன்' என்பவராகலாம்.[103] சீயர் அரும்பதகாரர் செய்த ஈட்டின் பதிப்புச் செம்மைகளை ஒன்பது தலைப்பில் காண முடிகிறது. அவையாவன,

---

100. பி, லோ. சி, வியா. திருவாய்மொழி நூற்றந்தாதி, பா, 34

திருவரங்கம் திருக்கோயிலின் ஏழு திருச்சுற்றுக்களையும் உள்ளடக்கிய வெளிச் சுற்றுக்கு 'அடைய வளைந்தான்' என்று பெயர். அங்குத்தான் அக்காலத்தில் ஆசாரியப் பெருமக்கள் குடிவாழ்ந்தனர், அப்பெயரே ஆத்தான் சீயரின் அரும்பதவுரைக்கு இடப்பட்டது என்று கொள்ளலாம்.

101. 5-8-3 சீ. அ; 5-7-10 சீ. அ; 2-5-4 சீ. அ

102. 3-4-10சீ,அ

103. பி. லோ. சி., யதிந்த்ரப்ரவணப்ரபாவம், ப.92

1. விடுபட்ட தொடர்களை இன்ன இடத்தில் கூட்டுக என்னுதல். [104]

2. மிகையான தொடர்களைச் சுட்டிக்காட்டுதல். [105]

3. குறிப்பிட்ட பிரதியிலிருந்து தொடரை எடுத்தல். [106]

4. தொடர்களின் இடப் பெயர்ச்சிகளைத் திருத்தி அமைத்தல் [107]

5. தொடர்களை வருவித்தல். [108]

6. சில பிரதிகளின்படி தொடர்களைச் சேர்த்தல். [109]

7. தொடர்களை வரிசைப்படுத்தல். [110]

8. பொருள் தெளிவில்லாத தொடர்களைக் காட்டுதல். [111]

9. சொற்பொழிவு வரிசையில் தொடர்களை ஒழுங்குபடுத்துதல். [112]

இனி அரும்பதகாரர்களின் உரை விளக்கப் பணிகளும் பத்து வகையாக அமைந்துள்ளன.

1. ஈட்டில் வரும் அருஞ்சொற்கள், தொடர்களின் பொருள் விளக்கம் தரப்படுகிறது. ஈட்டில் வரும் தமிழ்ச் சொற்களுக்குப் பொருள் வடமொழியிலேயே பெரும்பாலும் அறிவிக்கப்படுகிறது.

2. அரிய உரையாட்சிகளுக்குக் காரணம் காட்டப்படுகிறது. எடுத்துக் காட்டாக, 'பட்டபோது எழுபோதறியாள்' என்ற தொடருக்கு ஈட்டில், ''உதித்ததும் அஸ்தமித்ததும் அறிகிறிலள்'' என்ற விளக்கம் தரப்படுகிறது. 'படுதல்' உதித்தலையும் 'எழுதல்' அஸ்தமித்தலையும் காட்டும் என்பதை மேற்கோள் காட்டி நிறுவுகிறது சீயர் அரும்பதம். முத்துப்

---

104. 1-9-1 சீ. அ
105. 2-10-2 சீ. அ
106. 3-4-10 சீ. அ
107. 4-10-5 சீ. அ
108. 5-6-0 சீ. அ
109. 6-7-2 சீ. அ
110. 10-1-0 சீ. அ
111. 10-2-1 சீ. அ
112. 9—9—0 சீ. அ.

பட்டது, எழுகளம் என்ற பிரயோகங்களையும் தருகிறது[113].

3. மணவாளமாமுனிகளுக்குப் பிற்பட்ட ஆசாரியர்களின் பொருள் ஆட்சிகளும் காட்டப்படுகின்றன.[114]

4. ஈட்டுத் தொடர்கள் ஆய்வு செய்யப்படுகின்றன.[115]

5. உரிய இடங்களில் தமிழ் நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டப்படுகின்றன.[116]

6. ஈட்டில் சுட்டப்படாத சில பாடவேறுபாடுகள் காட்டப்படுகின்றன.[117]

7. ஈட்டில் காட்டப்படும் உரை வேறுபாடுகளுக்கும் ஐதிஹ்யங்களுக்கும் கருத்துக் கூறப்படுகிறது.[118]

8. ஈட்டில் வரும் ஐதிஹ்யங்களுக்கு இணையான வேறு ஐதிஹ்யங்கள் காட்டப்படுகின்றன.[1T9]

9. ஈட்டில் வரும் கதைக் குறிப்புகளுக்கு விளக்கங்கள் தரப்படுகின்றன.[120]

10. ஈட்டில் எடுக்கப்படும் மேற்கோள் துணுக்குகளின் முழுவடிவத்தையும் அவை எந்த நூலிலிருந்து எடுக்கப்பட்டன என்பதையும் அவற்றின் பொருளையும் தருகின்றன.

அரும்பதவுரைகளை ஆராய்ச்சி செய்து அவற்றிலுள்ள சில குறைபாடுகளைத் தெரிந்தெடுத்து முதன்முதலாக ஆய்வு நிகழ்த்தியவர் ஸ்ரீ உ.வே.பி.ப. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி[121] ஒரு சில குறைகள் காணப்படினும் ஈட்டை ஆய்வுசெய்து கற்கப்புகுகின்றவர்களுக்கு அரும்பதங்கள் பெரிதும் உதவுகின்றன. ஈட்டைத் தமிழாக்கம் செய்த பெரியாரும் அரும்பதவுரைகளையே அடிக்குறிப்புகளாக ஆக்கிக் கொண்டனர்.

---

113. 2-4-9 சி.அ
114, 2-5-4 சி.அ; 6-8-0 சி.அ
115, 4-6-0 சி.அ; 5-10-3 சி.அ
116, 4-1-5 சி.அ; 4-8-0; 5-3-7 சி.அ
117- 5-6-11 சி.அ
118. 6-8-0 சி.அ
119. 4-9-0 சி.அ; 10-2-1 சி.அ
120. 6-8-10 சி.அ
121. ஸ்ரீ உ.வே. பி.ப. அண்ணங்கராசாரியர், அத்யமே சுலோகார்த்த தத்வப்ரதிஷ்டா, 1936, ப. 31.

# இயல் 3 : உத்தித் திறன்

## ஈட்டின் உரைப்பாயிரம்

திருவாய்மொழிக்குத் தகைமாண்ட நுழைவாயிலை எழுப்பி யுள்ள நம்பிள்ளை தமது உத்தித்திறனை அவ்வாயிற்கண் பொறித்து வைத்திருக்கிறார். பக்தி இலக்கியங்களுக்கு உரை காண விரும்புகின்றவர்களுக்குப் புதிய நெறிகள் ஆங்கே காட்டப்படுகின்றன. அவை இவ்வியலில் ஆய்வு செய்யப்படும்.

'அருந்தமிழ்க்குப் பாயிரம்'[1] என்று கம்பரால் சிறப்பிக்கப் பெற்ற திருவாய் மொழிக்குப் பாயிரம் ஒன்றும் தோன்ற-வில்லை. "ஆயிர முகத்தான் அகன்றதாயினும், பாயிர மில்லது பனுவல் அன்றே"[2] என்பது சான்றோரால் செய்யப்படும் பனுவல்களாகிய சாத்திரங்களுக்குப் பாயிரத்தை வலியுறுத்த எழுந்த மரபாகும். மேலும் பாயிரம் செய்தற்குரியோர் இன்னார் என்பதும் வரையறுக்கப்பட்டுள்ளது.

> "தன்னாசிரியன் தன்னொடு கற்றோன்
> தன் மாணாக்கன் தகுமுரைகாரன் என்று
> இன்னோர் பாயிரம் இயம்புதல் கடனே"[3]

என்பது அவ்வரையறையாம்.

இறைவனால் மயர்வற மதிநலம் அருளப்பெற்று அவ் அருட்பெருக்கினால் இறையுணர்ச்சி உள்ளடங்காது புறம்பே வெள்ளமிடப் பாசுரங்களைப் பாடிய நம்மாழ்வார்க்கு ஓதுவித்த தன்னாசிரியராக ஒருவரும் அமையவில்லை. இறைவனிடத்துக் கொண்ட அவரது அவாவே ஆழ்வார்க்கு ஆசிரியர். "அவா உபாத்யாயராக நடத்த நடந்த ஆயிரம்"[4] என்பர் நம்பிள்ளை. ஆழ்வார்க்குப் பிறர் ஆசிரியராக அமையாத போகே அவருடன் கற்றவர் இலர் என்பதும் தெளிவாகிறது. எனவே, தன்னாசிரியன், தன்னொடு கற்றோன் என்பவர்களாற் செய்யத் தகும் பாயிரம் திருவாய்மொழிக்கு இலதாயிற்று. நம்மாழவா ருடைய மாணாக்கரான மதுரகவியாழ்வார் செய்த "கண்ணி நுண் சிறுத்தாம்பு" என்ற நூலைப் பாயிரமாகக் கொள்ள-லாமோ எனின், அந்நூல் மதுரகவியாழ்வாருடைய தன்நுகர்வு

1. கம்பர், சடகோபர் அந்தாதி,
2. நன்னூல், ச. தண்டபாணிதேசிகர் (ப.ஆ), 1961, சூத்.54.
3. மேலது, சூத் 41
4. 10-10-11ஈ

வெளிப்பாடாகவும் ஆழ்வாரைப் போற்றும் தோத்திர நூலாக வுமே அமைந்துள்ளது. 'அடியார்க்கு அடிமையாயிருத்தல்' என்ற வைணவ சமயக் கோட்பாட்டை வெளிப்படுத்தும் ஒரு தனி நூலாகவே அது ஏற்கப்பட்டிருக்கிறது. அதனால்தான் திருவாய் மொழிக்கு முன்பாகச் சேர்க்காமல் அதை முதலா-யிரத்தின் இறுதியில் இடமறிந்து சேர்த்தார் நாதமுனிகள்.[5] 'தானே முழுதுணர்ந்து' தண்டமிழால் குறள் பாடிய திருவள்ளு வானரைக் குறித்தெழுந்த திருவள்ளுவமாலையும் இங்ஙனம் பாயிரமாகக் கொள்ளப்படாது புகழ்மாலையாகவே பயிலப்படு வதும் ஒப்பு நோக்கத்தக்கது.

இங்ஙனம் அவற்றைப் பாயிரங்களாகக் கொள்ளாத-தற்குக் காரணம், அருளாளர்களின் நூல்களை முதல் நூலாகக் கொண்டதுதான். "வினையின் நீங்கி விளங்கிய அறிவின்-முனைவன் கண்டது முதல் நூலாகும்"[6] என்ற தொல்காப் பியமே அதற்கு அடிப்படையிட்டது. முனைவனை வழிபட்டுத் தலைவராயினார்செய்ததும் முதல் நூலாகும் என்பது பண்டைய உரையாசிரியர் உடன்பட்ட ஒன்றாகும்.[7] ஆகவே முதல் நூலுக் குப் பாயிரம் தோன்ற வழியில்லை என்ற கருத்து உருவாகியது, ஏனெனில், பாயிரத்தில் "ஆக்கியோன் பெயரே வழியே எல் லை"[8] என்றபடி பாயிரத்தின் உறுப்புகளில் ஒன்றாகிய 'வழி' சொல்லுதற்கு முடியாது; வழி நூலுக்கே பாயிரம் தோன்ற முடியும். நம்மாழ்வாரின் திருவாய்மொழி முதல் நூலாகவே கொள்ளப்படுகிறது. அவருடைய 'அவா' முன்னின்று நடத்-தினும், அவரைக் கருவியாகக் கொண்டு முதல்வனாகிய இறை வனே திருவாய்மொழியைப் பாடுவித்தான் என்பது நம்பிள்ளை யின் அடிப்படைக் கொள்கை. இக்கொள்கையை ஆழ்வாருடைய பாடல்களிலிருந்தே அவர் வகுத்துக் கொண்டார். "என்னால் தன்னை இன்றமிழ் பாடிய ஈசனை"[9] "என்னால் தன்னை

5. மணவாளமாமுனிகள், உ.தே.ர 29.
   கண்ணிநுண் சிறுத்தாம்பு முதலாயிரத்தின் இறுதியில் சேர்க்கப் பட்டதாகப் பிள்ளை லோகஞ்சியர் தம் வியாக்கியானத்தில் விரிவாகத் தெளிவுறுத்தியிருக் கிறார்.
6. தொல்காப்பியம், மரபியல், கழகவெளியீடு, 1972, சூத் 94
7. பேராசிரியர் இக்கருத்தினை மரபியல் 94வது சூத்திரத்தின் உரையில் வெளி பிடுகிறார்.
8. நன்னூல், சூத் 47
9. தி.வா.மொ· 7.9-1

வன்கவி பாடும் என் வைகுந்தநாதனே',[10] ''பண்ணார் பாடல் இன்கவிகள் யானாய்த் தன்னைத் தான்பாடி[11] என்ற அகச் சான்றுகளைக் கொண்டு பொய்யில் பாடல்களான ஆழ்வார் அருளிச் செயல்கள் முதல் நூலாகக் கொள்ளப்பட்டன. அதனால். ஆழ்வாரையும் அருளிச் செயலையும் பற்றிய பாடல்களைத் 'தனியன்கள்' என்றும் தனிப் பிரபந்தங்கள் எனவும் கொண்ட-னரேயன்றிப் பாயிரமாகக் கொள்ளவில்லை.

எனவே, திருவாய்மொழிக்கு உரைப்பாயிரம் ஒன்றே தோன்ற முடியும். இதற்குத் "தகும் உரைகாரர்" தகுதி பெறு-கிறார். அவ்வகையில் திருவாய்மொழிக்குத் தகும் உரைகார-ரான நம்பிள்ளையே அழகியதோர் உரைப்பாயிரத்தைச் செய்-திருக்கிறார்.

## தகும் உரைகாரர்

நம்பிள்ளையின் பல்வகைத் தகுதிப்பாடுகளை அவருடைய வரலாற்றிற் கண்டோம். நம்பிள்ளை திருமங்கையாழ்வாரின் மறுபிறப்பாகவும் திருமங்கை மன்னரினும் சுவைத்திறன் மிக்க-வராகவும் போற்றப்பட்டார்.[12] நம்பிள்ளையின் நன் மாணாக் கராகிய பெரியவாச்சான்பிள்ளை அவடைய புலமைத் திறத்-தினையும் அருளிச் செயலால் போது போக்கும் நலத்தினையும் குறித்துப் பெருமைப்பட்டிருக்கிறார்.[13] சகல சாத்திரங்களிலும் அவர்க்கிருந்த அறிவுவன்மையினை மணவாளமாமுனிகள் போற்றியிருக்கிறார்.[14] உலகியலை உற்றுணர்ந்த பெரும் பட்டறிவாளர் என்பதும் நம்பிள்ளை வாழ்வியல் காட்டுகிறது. இவற்றால் திருவாய்மொழிக்குத் தகும் உரைகாரராக அமைந்த நம்பிள்ளையின் உரைப்பாயிரமே அணியாகத்திகழ்கிறது.

## நுழைவாயில்

நம்பிள்ளை தம் உரைப் பாயிரத்தை 'மஹாப்ரவேசம், என்று குறியிடுகிறார்.[15] திருவாய்மொழிப் பதிகங்களுக்கு இடு

---

10. தி.வா.மொ 7-9-6
11. ,, 10-7-5
12. பெ வா.வியா. பெரி. திரு. 1-1-2
13. ,, 5-8-7
14. மணவாள மாமுனிகள் வியா., ஸ்ரீ.வ.பூ., சூத் 443.
15. [illegible]-9.0 ஈட்டில் 'பிரவேசம்' என்றே குறிக்கப்பட்டுள்ளது.

வதை 'அவதாரிகை' அல்லது 'பிரவேசம்' என்று அரும்பதங்கள் குறிப்பிடுகின்றன. இதேபோல் ஒவ்வொரு பாசுரத்துக்கும் 'பிரவேசம்' அமைக்கப்பட்டுள்ளது. நூல் முழுவதற்கும் உள்ள உரைப்பாயிரமாகையால் அதனை 'மஹாப்பிரவேசம்' என்று பெயரிட்டனர். இதற்குப் 'பெரிய நுழைவு' என்று பொருளாகும். 'மஹாப்பிரவேசம்' என்ற குறியீடு வடமொழியாயினும் தமிழ் இலக்கண மரபின் பின்னணியில் எழுந்தது. "கருவமைந்த மாநகர்க்கு உருவமைந்த வாயில் மாடம்"[16] என்ற இறையனார் களவியலுரைத் தொடர் இதனைத் தெளிவுறுத்துகிறது.

மூவகை நுழைவாயில்

நம்பிள்ளையிட்ட 'மஹாப்ரவேசம்' மூன்று பகுதிகளாக அமைந்துள்ளது. அவை முதல் சிரியப்பதி, இரண்டாம் சிரியப்பதி, மூன்றாம் சிரியப்பதி என்ற முதற்குறிப்புகளால் வழங்கப்படுகின்றன. இம்மூன்றும் மூவகை நோக்கில் அமைந்துள்ளன. முதற்பகுதி திருமந்திரத்தின் உட்பொருளைக் கருதியது, இரண்டாம் பகுதி துவயத்தைத் தழுவியது, மூன்றாம் பகுதி ஆழ்வாருடைய மனவளர்ச்சிகளைக் காட்டுவது என்று அரும்பதகாரர் உணர்த்துகிறார். மேலும் இம்மூன்று பகுதிகளையும் விஷ்ணுபுராணம், இராமாயணம், பாஞ்சராத்திரம் ஆகியவற்றோடும் ஒப்பிட்டுக் காட்டுகிறார், விஷ்ணுபுராணத்திற் போன்று ஐம்பொருள் உண்மைகளையும் இராமாயணத்திற் போன்று அடைக்கல நெறியையும் பாஞ்சராத்திரத்திற்போன்று பக்தி நெறியையும் திருவாய்மொழி உள்ளடக்கியது என்பதை அம்மூன்று பகுதிகள் விரித்துரைப்பதில் நோக்குடையன என்பது அரும்பதகாரரின் உட்கோளாகும். இம்மூவகை நோக்குகளையும் உட்கொண்ட உரைப்பாயிரத்தைக் கற்பார்க்கு வேறுபாட்டைக் காட்டவேண்டியே 'சிரியப்பதி' என்ற தொடரால் தொடங்கும் மூன்று பகுதிகளாக அவ்வுரைப் பாயிரம் பிரிக்கப்பட்டது. ஆனால் இடையிடையில் கேட்கவந்தவர்களுக்காக அப்படித் தொடங்கப்பட்டதாக அரும்பதகாரர் கருதுகிறார். வேறு ஒரு கருத்தும் அவர்க்கு உண்டு. மூன்று நாட்களில் மஹாப்பிரவேசம் விரித்துரைக்கப்பட்டிருக்க வேண்டும் என்றும் அப்போது முதல் நாளின் கருத்தை வழிமொழியும் முறையில் மீண்டும் முன்

16. இறையனாரகப் பொருள், களவியலுரை, சூத் 1: கழகப்பதிப்பு 1969, பக்.2

தொடரை இட்டிருக்கவேண்டும் என்பதும் அக்கருத்தாகும். இம்முறையை ''ஆஹ்நிகத்ரயப்ரக்ரியை'' என்று அவர் குறி-யிட்டு வழங்குகிறார்.[17]

திருவாய்மொழியைக் கற்பார்க்கு அதனை அறிமுகம் செய்ய மூன்றுவகை முன்னுரைகள் தேவைப்படுவதால் அப்படி மூன்று சிரியப்பதிகளை நம்பிள்ளை அமைத்துக் கொண்டார் என்றே கொள்ளலாம்.

மூவகை விருபாடுகள்

சிறப்புப் பாயிரத்தில் இருக்க வேண்டுவன பதினொரு கூறுகள் என்பர். அவை ஆக்கியோன் பெயர், வழி, எல்லை, நூற்பெயர், யாப்பு, நுதலிய பொருள், கேட்போர், பயன், காலம், களன், காரணம் என்பனவாம்.[18] ஆனால் தகும் உரை-காரர்களிடும் உரைப்பாயிரத்தில் இவை அனைத்தும் இடம் பெறுவதில்லை. திருவாய்மொழி தெய்வ நூலாதலின் அதற்-குரிய உரைப்பாயிரத்தை ஒப்பிட்டுப்பார்க்கப் பரிமேலழகரின் திருக்குறள் உரைப்பாயிரம் ஒன்றே உள்ளது. 'தெய்வப்புலமைத் திருவள்ளுவர்' என்று பரிமேலழகர் குறிப்பிடுவதால் திருக்குறள் ஒரு தெய்வ நூலாகித் திருவாய்மொழி உரைப்பாயிரமும் திருக்குறள் உரைப்பாயிரமும் ஒப்பிடுவதற்குக் தகுதி பெறு கின்றன. பரிமேலழகரின் உரைப்பாயிரத்திலும் இப் பதினோரு கூறுகளும் முழுவதுமாக இடம் பெறவில்லை.

நம்பிள்ளையின் உரைப்பாயிரத்தை நன்கு ஆய்வு செய்-தால் அதில் மூன்று பெரும் பொருள்கள் விரிவாக ஆராய்ச்சி செய்யப்பட்டிருப்பது புலனாகிறது. அவற்றை நுவல்வோர்ச் சிறப்பு, நூற்சிறப்பு, நுவல்பொருட்சிறப்பு என்று பெயரிடலாம். இவற்றை வக்த்ருவைலக்ஷண்யம், பிரபந்த வைலக்ஷண்யம், விஷயவைலக்ஷண்யம் என்று அரும்பதகாரர்கள் வடமொழிக் குறியீடுகளால் வழங்குகின்றனர்.

நுவல்வோர்ச் சிறப்பில் ஆழ்வாரின் இறையருட் பேற்றினையும் நூற் சிறப்பில் திருவாய்மொழி மக்களை உய்-விக்கத் தோன்றிய திறத்தினையும் நுவல் பொருட்சிறப்பில் திருவாய்மொழியின் உட்கோளான ஐம்பொருள் திறத்தினையும் நம்பிள்ளை விரிவுக்கு அஞ்சாது ஆராய்ந்து விளக்கியிருக்கிறார்.

17. ஈடு, ம.பி (2), ஏ. அரு., சே.கி.பதிப்பு, 1925, ப. 96

18. நன்னூல், சூ. 47

இம்முறை பெரியவாச்சான்பிள்ளை முதலான மற்ற உரை யாசிரியர்களின் வியாக்கியானங்களிலும் தழுவப்பட்டிருக்கிறது. இம் மூவகைச் சிறப்புகளும் பரிமேலழகரின் திருக்குறள் உரைப்-பாயிரத்திலும்ஒரேதொடரில் நுட்பமாக அமைக்கப்பட்டுள்ளன,

> "இவற்றுள் வழக்கும் தண்டமும் உலகநெறி நிறுத்தற் பயத்தவாவது அல்லது ஒழுக்கம் போல மக்களுயிர்க்கு உறுதி பயத்தற் சிறப்பிலவாகலானும் அவை தாம் நூலானேயன்றி உணர்வு மிகுதியானும் தேயவியற்கை யானும் அறியப்படுதலானும் அவற்றை யொழித்து ஈண்டுத் தெய்வப் புலமைத் திருவள்ளுவரால் சிறப்பு டைய ஒழுக்கமே அறம் என எடுத்துக் கொள்ளப் பட்டது''[19]

என்றஉரைப்பாயிரப்பகுதியுள்'தெய்வப் புலமைத்திருவள்ளுவர்' என்பதால் நுவல்வோர்ச்சிறப்பு உணர்த்தப்படுகிறது; 'மக்களு-யிர்க்கு உறுதிபயக்கும் ஒழுக்கத்தைச் சிறப்புடைய அறமாக எடுத்தோதுவது' என்பதால் நுவல் பொருட்சிறப்பு உணர்த்தப் படுகிறது. 'நூலாலும் உணர்வு மிகுதியாலும் தேயவியற்கை யாலும் அறியப்படுமவற்றை ஒழித்து எல்லார்க்கும் ஒத்த-அறத்தை எடுத்தோதுவது' என்பதால் பிறரால் அறிதற்கு அரிய அறநெறிநுட்பங்களைத் தம் கருணைப் பெருந்திறத் தால் நூலாக்கினார் என்று உணர்த்தப்படுகிறது. இதனால் திருக்குறள் வள்ளுவப் பெருந்தகையின் கருணைப் பெருக்கினால் வெளிப் போந்தது என்ற நூற்சிறப்பு குறிக்கப்படுகிறது. பரிமேலழகர், நம்பிள்ளை முதலான ஆசிரியர்களின் வியாக்கி-யானங்களில் வரும் உரைப்பாயிரங்களை நன்கு அறிந்து பயன்-படுத்திக் கொண்டார் என்பது தெளிவாகிறது.

### அரும்பதகாரர் கருத்து

மேற்கண்ட மூன்று வீறுபாடுகளின் அமைப்பிற்கு ஈட்டின் அரும்பதவுரைகாரர்கள் இரண்டு காரணங்களைக் காட்டு-கின்றனர். ஒன்று, வான்மீகத்தின் செல்வாக்கு. வான்மீகி ராமாயணத்தின் தொடக்கத்தில் இம்மூன்று வீறுபாடுகளையும் இரண்டு சுலோகங்கள் அடக்கிக் காட்டுகின்றன. வடமொழிக் கந்தபுராணத்தில் இராமாயணங்குறித்து வரும் ஒரு சுலோகமும் ஓரளவு காரணம் என்று அரும்பதகாரர் கருதுவர். இரண்டாவது.

19. பரிமேலழகர் உரைப்பாயிரம், திருக்குறள்.

இம் மூவகை வீறுபாடுகளையும் ஆழ்வாரே உடன்பட்டிருக்கிறார் என்பதாம். ''தீது அவம் இன்றியுரைத்த ஏதமில் ஆயிரம்''[20] என்று ஆழ்வாரின் வாக்கு அகச் சான்றாகக் காட்டப்படுகிறது. தீதும் அவமும் ஏதமும் ஆகிய மூவகைக் குற்றமும் இல்லாதது திருவாய்மொழி என்பது கருத்து. நூற் குற்றம், நுவல்பொருட் குற்றம், நுவல்வோர்க் குற்றம் என்ற மூவகைக் குற்றமும் இல்லாதிருப்பது நூல் என்பது பருப் பொருளான இலக்கணம். நூற் சிறப்பு, நுவல்பொருட் சிறப்பு, நுவல்வோர்ச்சிறப்பு ஆகிய மூன்று வீறுபாடுகள் (வைலக்ஷண்யத்ரயம்) பொருந்தி யிருக்க வேண்டும் என்பது நுண்பொருளாக அறியப்படும் இலக்கணம். இக் கருத்தினை ஈட்டில் நம்பிள்ளை உடன்படுகிறார். இவ் அகச்சான்றை நினைவிற் கொண்டே மூவகை வீறுபாடுகளை உரைப்பாயிரத்தில் நம்பிள்ளை விரிவாக விளக்கியுள்ளார்.

நுவல்வோர்ச் சிறப்பு (வக்த்ரு வைலக்ஷண்யம்)

ஆழ்வாரின் பெருஞ்சிறப்புக்களாகத் தாம் கருதுமவற்றை நம்பிள்ளை இப்பகுதியில் அடக்கி மொழிகிறார். அவையாவன:-

*(1)* மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்த ஆழ்வார் இறைவனால் மயர்வற மதிநலம் அருளப்பெற்றுத் தத்துவங்களை உள்ளபடி நன்கு அறிந்து அறிந்தவற்றைப் பிறர் மனங் கொள்ளுமாறு அறிவுறுத்த வல்லவராய்த் தத்துவதரிசிகளில் தலைவரானவர்.

*(2)* விண்ணுளாரிலும்மண்ணுளாரிலும் சீரியராய்த் தமக்கு உவமையில்லாதார் ஒருவராய்ப் பிறர் எல்லார்க்கும் ஓரோ வகையிலே தாமே உவமையாயிருப்பவர்;

*(3)* தமக்கு உண்டான நன்மையை எங்குமுள்ள எல்லார்க்கும் உண்டாகும்படி செய்து உள்ளிருளைப் போக்குபவர்;

*(4)* ''ஞானி என் உயிர்நிலை'' என்று கீதையிலே இறைவனால் கொண்டாடப்பட்ட ஞானிகளில் தலைவராயிருப்பவர்;

20. தி, வா. மொ., 1.6.11

(5) இலக்குவனைப் போன்று பக்தியும் வைராக்கியமும் மிக்கவராயும் தயரதனைப் போன்றும் அருச்சுனனைப் போன்றும் ஆராத பெருங்காதலையுடையராயும் இருப்பவர்.

மேற்குறித்த ஐந்து சிறப்புக்களையும் ஆழ்வாருடைய நூல்களிலிருந்து அகச்சான்றுகளைக் 'கொண்டே நம்பிள்ளை தொகுத்துத் தருகிறார். அது அவருடைய நேர்மைக்குச் சான்றாகும்.

நூற் சிறப்பு (பிரபந்தவைலக்ஷண்யம்)

நூற்சிறப்பை நிறுவுமிடத்து நம்பிள்ளையின் தேர்ந்த புலமையும் ஆழ்வாரிடத்துக் காட்டும் !பெருமதிப்பும் வெளிப் படுகின்றன. உலகில் நூல் இயற்றுபவர் மூன்று பயன்களைக் கருதியே செய்வார்கள். புகழ், பொருள், வழிபாடு என்பன அவை. இவற்றை வடமொழியில் கியாதி, லாபம், பூஜை என்பர். அருளாளர்கள் அங்ஙனம் கருதாது உலகினர் உய்ய வேண்டும் என்பதையே பயனாகக் கொண்டு நூல் இயற்று-வார்கள் அருளாளர்களில் தலைவராகிய ஆழ்வார் உலகினர் உய்ய வேண்டி அரிய நூலைச் செய்தார். அவர் தம் நூலைச் செய்த முறையினை நம்பிள்ளை மிகச் சீரிய வகையில் விளக்கி-யுள்ளார்.

இறைவனால் மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்-வார் இறைவனுடைய தன்மை, வடிவம், பண்புகள், செல்வங் கள் ஆகியவற்றை நனிமிகத் தெளிவாக நுகர்ந்து அது உள்-ளடங்காமல் வழிந்து புறப்பட்ட சொற்களே ஆழ்வாருடைய நூல். இதுவே நம்பிள்ளை கண்டு உணர்த்தியிருக்கும் தனிக் கோட்பாடு. பக்தி இலக்கியங்கள் அனைத்திற்கும் அமைக்கத் தகும் ஓர் இலக்கியக் கோட்பாட்டை நம்பிள்ளை உருவாக்கித் தருகிறார். பெருவேட்கைப் பட்டவன் ஆழமான பொய்கையில் ஆழ மூழ்கும் போது வெளியே ஓசையுடன் புறப்படும் குமிழி-களைப் போன்றது ஆழ்வாருடைய நுகர்ச்சி வெளிப்பாடான ஈரச் சொற்கள். ''ஈறிலின்பத்து இரு வெள்ளம் யான் மூழ்-கினன்''[21] என்று ஆழ்வார் தாமே 'இந்நுகர்ச்சி வெளிப் பாட்டை உணர்த்தியிருப்பதை நம்பிள்ளை உரைப்பாயிரத்தில் சுட்டிக் காட்டுகிறார்.

திருவாய் மொழியின் பிற சிறப்புகள் அனைத்தையும் நம்பிள்ளை கடாவிடைகளாகத் தொகுத்துத்தரும் அழகு

---

21. தி. வா. மொ., 2-6-8

பாராட்டற்குரியது, கற்பவர்களின் நெஞ்சில் பதிவதற்காகவே இம்முறையை ஆள்கின்றார். இவற்றை ஆய்வு செய்தால் பல உண்மைகளும் தெரியவருகின்றன.

வினாக்கள்

(1) ஆழ்வாருடைய நூல்கள் எவ்வகையைச் சேர்ந்தவை?

(2) அவற்றுக்கு மூலம் என்ன?

(3) அவை பிறந்த முறை யாது?

(4) அவை மூலம் என்று அறிவது எப்படி?

(5) அவை பிரமாணம் என்று எப்படி அறிவது?

(6) அவற்றில் கூறப்படும் தலைவன் யார்?

(7) அவற்றைக் கற்பதற்குத் தகுதிபெற்றவர் யார்?

(8) அவற்றைக் கேட்டுநுகர்வோர் (போக்தா) யார்?

(9) அவை எதற்காகச் செய்யப்பட்டன?

இவ்வொன்பது வினாக்களையும் தெரிந்து கொள்ள விரும்பிய சிலர் கேட்க, அவற்றிற்குரிய விடைகளை நம்பிள்ளை உரைப் பாயிரத்தில் தருகிறார். அவ் விடைகள் தமக்கு முன்பே ஆசாரி யர்களால் அளிக்கப்பட்டுள்ளன என்றும் குறிப்பிடுகிறார். ஆனாலும் அவற்றை முறைப்படுத்தித் தொகுத்தபணி நம் பிள்ளையைச் சேரும். இனி, நம்பிள்ளையின் விடைகள் வருமாறு:-

(1) ஆழ்வாருடைய நூல்கள் உறுதிப் பொருளை விளங் கக் கூறுகின்ற நூல்களில் முதன்மையானவை.

(2) இறைவனுடைய எழில் நலன்களை நுகர்ந்து உண் டான அளவில்லாத பெருமகிழ்ச்சியானது வலியச் சொல்லு- விக்கப் பிறந்த நூல்கள் அவை.

(3) இறைவனுடைய திருவருளால் பிறந்த ஞானமே காரணமாகப் பிறந்தவை அவை.

(4) இதனை ஆங்காங்கு வருகின்ற இவருடைய பாசு ரங்களில் அமைந்துள்ள ஓசைச்சிறப்பாலும் சொல் நயத்தாலும் அறியலாம்.

(5) வேதார்த்தங்களை அறிந்த பெரியார் பலரும் ஏற்றுக் கொள்வதாலும் உலக வாழ்க்கையில் வெறுப்புற்றார்க்கு அறிய வேண்டிய வேதார்த்தங்களை இவற்றிலே காண்கையாலும் மிகச் சிறந்த பிரமாண நூல்கள் என்று அறியலாம்.

(6) திருமகள் கேள்வனே இந்நூல்களுக்குத் தலைவன்.

(7) உலக வாழ்வில் வெறுப்புற்று இறைவனுடைய திருவடிகளில் எல்லா அடிமைகளையும் செய்யவேண்டும் என்று விரும்பியிருப்பவர்கள் இந்நூல்களைக் கற்கத் தகுதிபெற்றவர்கள்.

(8) பிறப்பு அறுக்கலுற்றாரும் விண்ணாட்டவரான நித்தியசூரிகளும் எம்பெருமானும் இவற்றின் சுவையைத் துய்ப்போர் ஆவர்.

(9) இறைவனுக்குச் செய்யப்படும் தொண்டாகிய பயனின் தன்மை இப்படிப்பட்டது என்று அறிவிப்பதற்காக இவை தோன்றின.

அறிவு கேடரின் மறுப்பும் நம்பிள்ளையின் எதிர்ப்பும்

கல்வியறிவு நிரம்பாத சிலர் எழுப்பிய ஒன்பது வினாக்களுக்குத் தக்கபடி விடையளிக்கப்பட்டது. அதைத் தொடர்ந்து பெரியோர் வாயிலாகக் கேட்டறியாத சில அறிவிலிகள் ஆழ்வாருடைய நூல்களுக்குச் சில தாழ்வுகளைக் கற்பித்தனர். அவற்றைத் திரட்டித் தருகிறார் நம்பிள்ளை.

(1) ஆழ்வாருடைய நூல்கள் வைதிகர்கட்கு விலக்கப்பட்ட தமிழ் மொழியில் அமைந்தன.

(2) வேதத்திற்கு உரியர் அல்லாதாரும் கற்கின்றனர்.

(3) நான்காம் வருணத்திற் பிறந்தார் ஒருவர் செய்தது.

(3) இவை தமிழ் நாட்டில் மட்டுமே வழங்குகின்றன.

(5) புறச்சமயிகளும் கற்கின்றனர்.

(6) சாஸ்திரங்களில் விலக்கப்பட்ட காமத்தைப் பல இடங்களில் பேசுகின்றன.

(7) சாஸ்திரங்களில் புருஷார்த்தங்களாக விதிக்கப்பட்ட ஐசுவரிய, கைவல்லியங்களைப் புறக்கணிக்கின்றன.

இவ்வேழு தாழ்வுகளையும் வேதமோதிய அந்தணர்களே கற்பித்தனர். இவை அனைத்தும் ஆழ்வாருடைய மொழியும் குலமும் நுவல்பொருளும் பற்றியனவாகும். இத்தாழ்வுகளைக் கற்பித்தவர்களை அறிவு கேடர் என்றும் உண்மை வைதிக-ரோடு பழக்கமில்லாதவர்கள் என்றும் நம்பிள்ளை இகழ்ந்-துரைக்கத் தயங்கவில்லை. அறிவுகேடரின் மறுப்புகளுக்கு அவர் தரும் எதிருரைகள் சிந்தனைக்கு விருந்தாக அமைகின்றன.

1) மொழிவிலக்கு இறைவனைப் பற்றிய நூல்களுக்குப் பொருந்துவதன்று. வடமொழியே கருதினால், அம்மொழியில் எழுதப்பட்ட புறச்சமயிகளின் நூல்களையும் கற்கவேண்டிய-தாகும்.

2) வேதத்துக்கு உரியரல்லாதாராக ஒதுக்கப்பட்டோரும் உண்மை அறிவுபெறவே ஆழ்வார் வேதம் தமிழ் செய்தார்.

3) ஆழ்வாரை வருணத்தைக் கொண்டு அளவிடுவது உய்தியற்ற பெரும் பிழையாகும்.

4) ஆழ்வாருடைய தமிழ்ப் பாடல்கள் பெரியோர்கள் வாழும் எல்லாப் பகுதிகளிலும் வழங்கியதே. வடநாட்டினரான ஞானியரும் அவற்றின் சிறப்புக்களைக் கேட்டு, "அவற்றைக் கற்கைக்குத் தகுதியாகத் தமிழ்மொழி நடையாடும் தேசத்தில் பிறந்திலோமே!" என்று மடைம் வருந்தினர்.[22]

5) புறச்சமயிகளும் கற்பது ஏற்றத்திற்கே காரணமா-கிறது.

6) ஆழ்வார் 'காமம்' என்று குறிப்பது பக்தியையே,

7) ஐசுவரிய, கைவல்லியங்களைப் பழித்தது சிறியது, நிலையற்றது முதலிய குற்றங்களை நினைத்தேயாகும்.

## தலைசிறந்த பிரமாண நூல்

அறிவு கேடர் வினாக்களுக்கு விடையளிக்குமுகத்தால் திருவாய்மொழியின் பல்வகைப் பெருமைகளைத் தொகுத்த

---

22. இச்செய்தி 5—8—1 ஈ-ஐதிஹ்யத்தில் தெளிவாகக் குறிப்பிடப்படுகிறது.

நம்பிள்ளை அதனோடு அமையாது மேலும் எண்வகை உயர்த்திகளைத் திரட்டித் தருகிறார். அவையாவன:-

(அ) ஆழ்வாருடைய நூல்கள் இறைவனுடைய பல்திறத்துப் பெருமைகளைப் பேசுகின்றன :

(ஆ) அவற்றைத் தெளிவாகக் காட்டுகின்றன ;

(இ) கற்பார்மாட்டுப் பக்தியைத் தோற்றுவிக்கின்றன;

(ஈ) தோன்றிய பக்தியை வளர்க்கின்றன;

(உ) கேட்டல், கற்றல் செய்யும் அப்போதே எல்லையற்ற மகிழ்ச்சியை உண்டாக்குகின்றன;

(ஊ) அறுதியிடப்படும் அரும்பொருள்களுக்கு அருமறைகளையே சான்றாகக் காட்டுகின்றன,

(எ) உலகின் தோற்றத்திற்கு இறைவனையே காரணமாகக் காட்டுகின்றன;

(ஏ) இறைவனைப் பற்றிய அறிவாலேயே வீடுபேறு எய்தும் என்று சொல்லுகின்றன.

இவையே ஆழ்வாருடைய நூல்கள் சிறந்த பிரமாண நூல்களாகக் கொள்ளப் போதுமானவை என்பது நம்பிள்ளையின் கருத்து.

நுவல் பொருட் சிறப்பு (விஷய வைலக்ஷண்யம்)

இறைநிலை, உயிர்நிலை, நெறிநிலை, தடைநிலை, வாழ்வுநிலை, ஆகிய ஐம்பெரும் பொருள்களைத் தெளிவுபடுத்தி விரித்துரைப்பதே திருவாய்மொழிக்குச் சிறப்பு என்பர் நம்பிள்ளை. அவற்றுள்ளும் பேரின்பப் பெருவாழ்வாகிற திருத்தொண்டினை வலியுறுத்துவதே முதன்மை நோக்கம் என்றும் அதனை விளக்கிக் காட்டும் முறையில் மற்றவற்றையும் விரிக்க நேர்ந்தது என்பது நம்பிள்ளையின் கோட்பாடு.

திருவாய்மொழியின் அமைப்புச் சிறப்பினையும் உரைப்பாயிரத்தின் இப்பகுதியில் சுட்டிக் காட்டுகிறார். திருவாய்மொழி முழுவதன் சுருக்கம் முதல் திருவாய்மொழி; அதன் சுருக்கம் முதற் பாசுரம்; அதன் சுருக்கம் முதல் அடி. இச்சுருக்க-விரிவு உறவினை நம்பிள்ளை வலியுறுத்துகிறார். ஒரு

நூலின் தொடக்க வரிகள் அருவியாகத் தொடங்கி நூல் முழுதும் பெருகிப் பாயும் ஆறாக வெள்ளமிடவேண்டும் என்பது அவருடைய நூல் அமைப்புக் கொள்கை; இக்கொள்கையை விளக்கவே 'திருவாய்மொழி வாசகமாலை' எழுதப்பட்டது.[23]

நுவல்பொருட் சிறப்பின் கீழேயே ஆழ்வார் காட்டும் உய்வுநெறியையும் உணர்த்துகிறார். அதனை அகச்சான்றுகளைக் கொண்டே நிறுவுகிறார். காய்தல் உவத்தல் அகற்றி ஒரஞ் சாராது அகச்சான்றுகளைத் தழுவி நூல் முழுதும் நின்று நோக்கி ஆழ்வாருடைய சமயக் கொள்கையை எடுத்துக் காட்டும் உரை நேர்மையினை இவ்வுரைப்பாயிரத்தில் காண முடிகிறது.

உய்வு நெறி

திருவாய்மொழியில் அறிவுறுத்தப்படும் உய்வு நெறியைத் தொகுத்துத் தருவதற்கு நற்களனாக உரைப்பாயிரம் பயன் படுத்தப்பட்டுள்ளது. போக்கு அற்றவனும் கைம்முதல் இல்லாதவனும் உய்தி எய்த வேண்டும் என்ற விரிந்த நோக்கில் ஆழ்வார் 'பிரபத்தி நெறி' என்பதைத் தக்க நெறியாக உலகினர்க்குக் காட்டியருளினார். அதுவே ஆழ்வாருடைய சித்தாந்தம் என்று *நோற்ற நோன்பிலேன் (5—7) பதிகத்தைச் சான்று காட்டி உரைப்பாயிரத்தில் நிறுவுகிறார். ஆழ்வாருடைய பாடல்களைக் கொண்டே நம்பிள்ளை வடித்துத் தரும் உய்வு நெறிக் கருத்துக்களாவன :

> 'பிரபத்தி' என்பது இறைவனையே தக்க நெறியாகப் பற்றுவது; பற்றுதற்கு உரியோர் போக்கு அற்றவரும் கைம்முதல் அற்றவரும்; அங்ஙனம் பற்றுவதும் இறைவனாலேயே விளைவிக்கப்படுகிறது ; பிரபத்தி நெறி பக்திநெறிக்கு உறுப்பாகாது தானே தனிநெறியாக இருந்து பயனைத்தர வல்லது ;
>
> பிரபக்தி நெறியைக் கைக்கொண்டோர்க்குப் பொழுது போக்கு திருவாய்மொழி அனுபவமே யாகும்;

---

23. திருக்கோனேரிதாஸ்யை, திருவாய்மொழி வாசகமாலை எனும் விவரணசதகம், நாவல்பாக்கம் தேவநாதாசாரியார் (ப.ஆ) தஞ்சை சரஸ்வதி மஹால் வெளியீடு, 1952, முன்னுரை

இத்தகையோர்க்குப் பலன் ஐந்துறுப்பு அடக்கல் முத்-
லாக இறைமைப்பணி இறுதியான அனைத்தும் ஆகும்;
புலனடக்கம் பிறர்க்குத் தம் முயற்சியால் உண்டாகிறது;
அது இவர்களுக்கு இறைவன் திருவருளால் உண்டாகும்;
புலனடக்கம் உண்டானவாறே இறையனுபவத்துக்குரிய
பக்தி முதலானவை அவன் அருளால் விளையும்; அப்
படி விளைந்த பக்தி முதலானவையும் இறைவன்
அருளால் வளர்க்கப்படும்;
வளர்வதற்கு எல்லை இறைவனடி சேர்வதாகும்.

**நம்மாழ்வாரின் மனநிலைகள்**

ஈட்டின் உரைப்பாயிரம் நம்மாழ்வாரின் நான்கு நூல்-
களையும் உளப்படுத்தியே அமைந்துள்ளது. அந்நான்கு நூல்-
களினூடே ஆழ்வாரின் மனவளர்ச்சியை நுண்ணிதின் உணர்ந்து
வெளிப்படுத்துகிறார் நம்பிள்ளை.

திருவிருத்தத்தில் — இறைநுகர்ச்சிக்குத் தடையான உடல்தொடர்பினை வெறுத்து அதைப் போக்குமாறு வேண்டுகிறார்;

திருவாசிரியத்தில் — அங்ஙனம் வேண்டிய ஆழ்வாருக்கு இறைவன் தன்னுடைய எழிலைக்காட்ட, அதனை அனுபவிக்கிறார்;

பெரியதிருவந்தாதியில் — அவ்வனுபவத்தால் ஆசை கரை புரண்டுபெருகப் பேசுகிறார்;

திருவாய்மொழியில் — இறைவன் தனக்குச் சுவையைப் பிறப்பித்த படியையும் அது பரமபக்தியாகப் பக்குவமான படியையும் பின்னர் உடல்தொடர்பு முற்றும் அறப்பெற்றுப் பேற்றோடு தலைக்கட்டிய படியையும் பேசுகிறார்.

ஆக, உடல் வெறுப்பு, ஆறியிருத்தல், ஆசை வளர்ச்சி, பேற்றின்
மகிழ்ச்சி என்ற நான்கு மனநிலைகளை நான்கு நூல்களிலும்

தேடி உணர்த்துகிறார் நம்பிள்ளை. மேலும் இவற்றை இராமாயணத்துள் வரும் பரதனுடைய மனநிலைகளோடும் ஒப்பிட்டு விளக்குகிறார். அவர் காட்டும் பரதனுடைய மன நிலைகளாவன:-

(அ) கேகய நாட்டிலிருந்து மீண்டபோது கைகேயி அவனை 'அரசே' என்று அழைத்தாள். அப்போது அவன் பட்டது மனவெறுப்பு,

(ஆ) இராமனோடு கொண்ட உறவுமுறைகளையும் அவனுடைய குண நலன்களையும் எண்ணிச் சித்திர கூடம் நோக்கிச் சென்றபோது பரதன் அடைந்தது மனத் தரிப்பு.

(இ) நந்திக் கிராமத்தில் பதினான்கு ஆண்டுகள் இருந்த போது எய்தியது ஆசை வளர்ச்சி.

(ஈ) இராமன் மீண்டு அயோத்திக்கு எழுந்தருளி மணிமகுடம் புனைந்து கொண்டபோது பரதன் எய்தியது பெருமகிழ்ச்சி,

நம்மாழ்வார் நான்கு நூல்களையும் பாடியபோது மன வாழ்க்கையில் ஒரு பரதனாகவே வாழ்ந்தவர் என்பது நம்பிள்ளையின் அரிய கண்டுபிடிப்பாகும். இதனையே பின்னால் வந்த 'ஆசார்யஹ்ருதயம்' என்ற நூல் விரிவாக ஆராய்கிறது.[24]

## அடிப்படைக் கொள்கைகள்

அ) உரைப்பாயிரத்தில் இறையருளியல் நூல்களைக் கற்க விரும்புகின்றவர்கள் அறிந்து கொள்ள வேண்டிய இரண்டு கொள்கைகளைத் தடை விடைகளுடன் ஆய்வு செய்து ஒரு முடிவைத் தருகிறார். ஆழ்வார் இறைவனுடைய எழில் நலன் களில் ஆழமூழ்கி அனுபவித்தார் என்றும் அவ்வனுபவம் உள்ளடங்காது புறம்பொசிந்து சொல் மாலையாக வெளிப்பட்டது என்றும் நம்பிள்ளை கருதுகிறார். இங்கே நம்பிள்ளையின் திறனாய்வு நெஞ்சம் ஒரு வினாவை எழுப்புகிறது. இறை அனுபவம் புறம்பே வழிந்தால், அது

---

24. ஆழ்வாருடைய மனநிலைகள் இலக்குவன், பரதன், சத்துருக்கனன், தயரதன், எசோதை, பிரகலாதன், விடணன், அனுமான், அருச்சுனன் ஆகியோருடைய வாழ்க்கை நிலைகளோடு விரிவாக ஒப்பிடப்பட்டிருக்கிறது.
ஆசார்யஹிருதயம், சூத். 127

கவிதையாய் விழுந்து யாப்பு அமைதிகளைப் பெற்றது எப்படி? ஆழ்வார் பாசுரங்கள், எண்ணி அமைக்கப்பட்ட செய்யுட்கள் அல்ல; அவை தாமாகவே முகிழ்த்த உணர்ச்சி வெளிப்பாடுகள் (Spontaeneous Outflow) என்பது நம்பிள்ளையின் அடிப்படைக் கொள்கை. அப்படியானால் திடீரெனத் தோன்றும் உணர்ச்சி வெளிப்பாடுகள் எப்படி இலக்கணச் சட்டங்களுக்கு உட்பட்டுப் பாயும்? இவ் வினாக்களை எழுப்பி விடை காண்பது பிள்ளையின் ஆய்வுத்திறனைக் காட்டுகிறது. நம்பிள்ளை இதற்கு வான்மீகரின் அனுபவத்தை ஒப்பாகக் காட்டுகிறார். வேட்டுவனான வான்மீகி சோகத்திற் சொல்லிய சாபவுரை பிரமனின் அருளால் ஒரு சுலோகமாக மாறியது. இறைவனுடைய படைப்பில் ஒரு கூறான பிரமனுக்கே இத்தகைய திறன் இருக்குமானால், எல்லாம் வல்ல திருமாலின் திருவருளால்பிறந்த அனுபவ மொழிகள் பாவினங்கள் பொருந்தப் பெறுவதில் வியப்பில்லை என்பர் நம்பிள்ளை. இலக்கணங்களை வகுத்தவர்களும் இறையருள் பெற்ற சான்றோர்களே; இறைவனே அவற்றை அச் சான்றோர்களைக் கருவியாகக் கொண்டு வெளிப்படுத்தினான். அதனால் இறையருள்பெற்ற அனுபவம் முதிர்ந்து புறப்படும் மொழிகள் அனைத்தும் அவ் இறைவனாலேயே உண்டாக்கப்பட்ட சாஸ்திரங்களாகிய இலக்கண நெறிகளைப் பின்பற்றி அமையும். இதுவே நம்பிள்ளை நல்கும் பக்தி இலக்கியக் கோட்பாட்டின் அடித்தளம்.

(ஆ) இறையருளால் அவனை அனுபவித்து நிறைவுற்றவராயிருக்கிற ஆழ்வார் எம்பெருமானைப் பிரிவதும் பிரிந்து நோவுபட்டுக் கூப்பிடுவதும் எப்படி நேர்ந்தன? இதற்கு நம்பிள்ளை நல்கும் சமாதானம் :-

இறைவனுடைய ஒரு குணத்தை நுகரவே, பிறகுணங்களையும் நுகர்வதில் ஆசை பிறக்கும்; அவ் ஆசை பிறக்கவே அவற்றை முறையாகப் பொறுத்திருந்து பெறுவதில் எண்ணம் பிறவாது, ஆசைப்பட்டவை அனைத்தையும் ஒரு சேர ஒரே போதில் நுகர முயன்று அது கிடைக்கப்பெறாததாலும் அவ் அனுபவத்திற்குத் தடையான உடல் தொடர்புகளின் நினைவினாலும் ஆழ்வார் நோவுபட்டுக் கூப்பிடுவது இயற்கையேயாகும். ஆனால் ஆழ்வார் எப்போதும் இடையறவுபடாது

நோவுபட்டு வருந்துபவரும் அல்லர். அவர்க்கு நோவும் நுகர்ச்சி மகிழ்வும் ஒருகாலும் முடியாமல் மாறிமாறி வரும். இத் தன்மையைக் கருதியே ஆழ்வாரை 'தீர்க்க சிந்தயந்தி'[25] என்று பெயரிடுகிறார் நம்பிள்ளை.

(இ) இனி, ஆழ்வாரின் பிரிவுத்துயருக்கு ஒரு முன்னுரையினையும் தருகிறார் நம்பிள்ளை. அருட்பெருங்கடலான இறைவன் ஆழ்வாருடைய இறையனுபவத்தைப் பிரிப்பதற்குக் காரணம் சுவையாக விளக்கப்படுகிறது. அனுபவ மிகுதியை எல்லை மீறி அளித்தால் அதனை ஆழ்வார் உண்டறுக்க முடியாது. அதனால் இடையில் ஒரு பிரிவு தேவைப்படுகிறது. மேலும் பிரிவிற்குப் பிறகு பெறும் இன்பநுகர்ச்சி மேலும் கூடியிருக்கும்.

(ஈ) ஆழ்வார் பாடல்களில் அகப்பொருட் பதிகங்களை ஆய்வு செய்வார்க்கு அறிவுரையொன்றும் நம்பிள்ளையால் வழங்கப்பட்டுள்ளது. கலவிக்கும் பிரிவுக்கும் உள்ளுறையை அடிப்படைக் கொள்கையாக முதன் முன்னமேயே வலியுறுத்து கிறார்.

கலவி : எம்பெருமானை நேரிற் கண்டாற்போன்று அறிவினாற் காண்பது;

பிரிவு : அவனைப் புறக்கண்களால் காண விரும்பி அதனைப் பெறாது மனத்தில் கலக்கமுறுவது.

இக்கலவியும் பிரிவுகளுமே அகப்பொருள் கிளவித்துறையில் அமைந்த பாடல்களாக மலர்ந்தன என்பது பிள்ளையின் துணிபு. இவையே அன்யாபதேசப் பேச்சுக்களை உண்டாக்கின என்பது அவர் கருத்து.

### அவதாரிகைகள்

ஒவ்வொரு திருவாய்மொழிக்கும் முன்னுரையாக உரையாசிரியர் இடுவது 'அவதாரிகை' அல்லது 'பிரவேசம்' எனப்படும். திருவாய்மொழிப் பதிகத்தின் முழுப் பொருளைத் திரட்டித் தருவதும் முன்பதிகத்தோடு இயைபு படுத்துவதும் அவதாரிகைகளின் முதன்மைப் பணியாகும். இயைபு பற்றித் தனியாக ஆய்வு செய்யப்படும்.[26] திருவாய்மொழிப் பதிக

25. ஈடு. ம.பி(1), சே.கி.பதிப்பு, 1925., பக். 82

26. இந்நூல், பக். 80.

மலர்கள் நூற்றையும் இணைத்துத் தொடுக்கும் நாராக அவ-தாரிகைகள் செயல்படுகின்றன. அதனால் அவதாரிகைகளான இத் தோற்றுவாய்களைத் தனியாகத் தொகுத்துக் கற்கும் ஒரு மரபும் ஏற்பட்டது. அவற்றைச் சுருக்கி நூல் வடிவத்திலும் ஆக்கி எழுதியுள்ளனர்.

அவதாரிகையின் அமைப்பில், 1) இயைபுச் சுருக்கம் (2) இயைபு விரிவு 3) பதிகத்தின் கருத்து (பிரமேயம்) 4) தடை விடைகளும் மேற்கோளும் (5) அகப்பொருட் பதிகங்களின் கூற்றுவிரிவு, என்ற ஐந்து பகுதிகள் படிந்துள்ளன.

பாடல்களின் அடிகளை மனத்துட்கொண்டே பதிகத்தின் கருத்தைத் தொகுத்து வழங்குவது நம்பிள்ளையின் நெறி. அவை இன்ன அடிகளை நோக்கியவை என்பதைக் கண்டு பிடித்து எழுதும் பணியை அரும்பதகாரர்கள் செம்மையாகச் செய்கிறார்கள். அவதாரிகைகள் மேற்குறித்த ஐவகை நிலைகளில் வேறு பல அரிய செய்திகளையும் தருகின்றன. உரைப்பாயிரத்தில் எழுதாது விட்ட குறிப்புகள் இவற்றில் இடம் பெறுகின்றன, ஆழ்வாரையும் இதிகாச புராணக் கதைப் பாத்திரங்களையும் ஒப்பீடு செய்யும் நற்களனாக அவதாரிகைகள் பயன்படுகின்றன. நம்பிள்ளையின் முழுப் பார்வைத் திறனும் ஆய்வுத்திறனும் இவற்றில் பளிச்சிடுகின்றன. அவை தனிப் பகுதிகளாகப் பின்னர் ஆய்வு செய்யப்படும்.[27]

## இயைபுகள்

### பாயிர உறுப்பு

உரைப்பாயிரத்தின் ஓர் உறுப்பாக 'இயைபு' கொள்ளப் படுகிறது.பாயிரத்தின் இன்றியமையாத உறுப்புகளாக விஷயம், அதிகாரிகள், பிரயோசனம், சம்பந்தம் என்ற நான்கினை வட நூலாருள் ஒருசாரர் கொள்வர். தமிழ் நூலார் கூறும் 'யாப்பு' என்பதே 'சம்பந்தம்' என்பதாம் என்று சிவஞான முனிவர் கருதுவர். மேலும் "யாப்பு, இயைபு, தொடர்ச்சி என்பன ஒரு பொருட்கிளவி" என்று பிற தமிழ்க் குறியீடுகளையும் அவர் காட்டுவர்.[28] ஈட்டின் அரும்பதகாரர்கள் 'சங்கதி' என்ற வட

27. இந்நூல். இயல் (7) பகுதி(2)
28. சிவஞான முனிவர், தொல்காப்பியச் சூத்திர விருத்தி, கழகவெளியீடு, 1964, பக் 19-22.

சொற் குறியீட்டையே ஆள்கின்றனர். வைணவ உரையாசிரியர்கள் 'அடைவு' என்ற தமிழ்ச் சொல்லையும் பயன்படுத்திய தாக ஈட்டிலிருந்தே அறிய முடிகிறது.[29]

## இயைபும் இடமும்

இயைபு நூன்முகத்தேயும் நூலுக்குள் படலங்கள், ஒத்துக்கள் முன்னரும் இடம் பெறும். இவை எல்லாம் பாயிரமேயாம் என்பர் சிவஞானமுனிவர்.[30] நம்மாழ்வாரின் நான்கு நூல்களுக்குமுள்ள இயைபினைத் திருவாய்மொழி நூன்முகத்தே மகாப்பிரவேசத்துள் விரிவாக விளக்கிய உரையாசிரியர் நம்பிள்ளை திருவாய்மொழிப் பதிகங்களின் இயைபுகளை அங்கேயே கூறுவது கற்பார்க்கு நெஞ்சிற் கொள்ளல் அரிதெனக் கருதி அவ்வப் பதிகங்களின் தோற்றுவாய்களான பிரவேசங்களில் இடம் பெற மொழிகுவர்.

வடமொழிக்கண் சூத்திர யாப்புக்களாகத் தோன்றியபூருவ மீமாம்சை, உத்தர மீமாம்சைகளுக்குப் பாஷ்யங்கள் வரைந்தோர் இங்ஙன் இயைபுகள் அமைத்துக் கொண்டனர். அவற்றை சாஸ்திர, காண்ட, த்விக, அத்யாய, பாத, பேடிகா, அதிகரண, சூத்ரஸங்கதிகள் என்று எட்டு வகைகளாகக் கொண்டனர். சங்கதியாவது, அபிதானப்ரயோஜகஸம்பந்தம் என்பர். பொருள் உணர்த்துவதைப் பயனாகவுடையது இயைபு என்று பொருள். இதனை ஆறுவகைப் பெயர்களாகவும் குறிப்பர். அவையாவன, (1) ஆக்ஷேபஸங்கதி (2) திருஷ்டாந்தஸங்கதி (3) ப்ரத்யுதாஹரண ஸங்கதி (4) உபோத்காத ஸங்கதி (5) அபவாதஸங்கதி (6) பிரஸங்க ஸங்கதி. தமிழ் மொழிக்கண் தொல்காப்பிய உரையாசிரியர்கள் அதிகார இயைபு, ஒத்து இயைபு, சூத்திர இயைபுகளை வரைந்துள்ளனர். இவை யாவும் சாத்திரமும் இலக்கணமுமாகிய பனுவல்களாம். இலக்கியம் தழுவியதாய் 'தாயபனுவல்' [1] எனப்படும் திருக்குறளுக்கு உரைவரைந்த பரிமேலழகர் பால் இயைபு, அதிகார இயைபுகளைச் செவ்விதின் நுதலியே செல்கிறார். சிவஞான போதப்

---

29. 4—6—0ஈ

30. சிவஞான முனிவர், மு.நா., ப.19

31. தொல். பொருளதிகாரம். சூத். 235., பேராசிரியர்உரை, கழக வெளியீடு, 1972

பேருரை எழுதிய சிவஞான முனிவரும் இம்மரபு போற்றி இயைபுகளை நிரல்படக்கோத்து உரை வரைந்தார்.

இன்றயருட் பெருக்கால் விளைந்த பக்தி இலக்கியத்திற்கு இயைபுகள் இடும் வாய்ப்பு நம்பிள்ளை ஒருவர்க்கே முதன் முன்னம் கிட்டியது. அவ் வாய்ப்பினை நன்கு பயன்படுத்திக் கொண்ட நம்பிள்ளை இலக்கிய ஆய்வாளர்க்குப் பல உரை நெறிகளை விருந்தாகப் படைத்திருக்கிறார்.

திருவாய்மொழிப் பதிகங்கள் யாவும் ஆழ்வாருடைய கூற்றுக்களேயாகும். அவற்றுள்.

| | | |
|---|---|---|
| தாமான கூற்று | — | 73 |
| தலைவி கூற்று | — | 17 |
| நற்றாய் கூற்று | — | 7 |
| தோழி கூற்று | — | 3 |
| | | 100 |

ஒரு பதிகத்தில் ஒரு கூற்றே நிகழும், ஒரு கூற்றுக்கும் அடுத்து வரும் கூற்றுக்கும் இடையில் கால இடைவெளி நிகழ்வதுண்டு. ஒரு கூற்றினுள்ளேயே காலம் இடையறவுபட்டதும் ஈட்டில் காட்டப்படுகிறது. பத்துடை, செய்யதாமரை, கண்கள் சிவந்து ஆகிய பாடல்களை[32] ஆழ்வார் அருளியபோது இறைவனுடைய பண்பு நலன்களையும் எழில் மிகுதிகளையும் நினைந்து நைந்து உள்குழைந்து மூவாறு மாதங்கள் மோகித்துத் தரைக்கிடை கிடந்ததை நம்பிள்ளை குறிப்பிடுகிறார். திருவாய்மொழியை முழு முற்றப் பாடி முடிக்கப் பதினெட்டுத் திங்களுக்கு மேற்பட்டிருக்கலாம் என்று இதனால் ஏற்படுகிறது. நம்மாழ்வார் தமது பதினாறாவது பிராயத்தில் பாடத்தொடங்கினார் என்பர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்.[33] ஆழ்வார் முப்பத்தைந்தாவது வயதில் பரமபதித்தாராகப் பெரிய திருமுடி அடைவு தெரிவிக்கிறது.[34] திருவாய்மொழியைப்

32. தி. வா. மொ. 1-3-1
மேலது 3-6-1
மேலது 8-8-1

33. ஆசார்ய ஹ்ருதயம், 187

34. பெரியதிருமுடி அடைவு, எஸ்.கே. அய்யங்கார் பதிப்பு, 1968, ப.6

பாடி முடித்து அவா அற்று வீடுபெற்றதாகவும் அறியப்படு-
கிறது. எனவே ஆழ்வார் நான்கு நூல்களையும் பாடி முடிக்கப்
பதினெட்டு ஆண்டுகள் ஆகியிருக்கலாம். இந்தக் கால நீட்சியில்
ஆழ்வார் பதிகங்களை இசைத்த காலங்கள் ஒரு தொடர்வின
வாய் ஒரு கருத்தினவாய் ஆழ்வாரின் மனநுகர்ச்சிகளின்
தொகுதியாகும். இதனை 'மானஸ அநுபவம்' என்பர். இந்
நுகர்ச்சித் தொகுதியில் அடுத்தடுத்த கூற்றுக்களின் இடையில்
ஆழ்வாரின் அடிமனத்தே நிகழ்ந்த மானஸ அனுபவங்களை
ஆசிரியர் நம்பிள்ளை திறம்படச் சுவைபடப் பிறர் உளங்கொள
வெளிப்படுத்துகிறார். மனம் போனவாறு மொழியாமல் பதி-
கங்களாகிற கூற்றுக்களில் விழும் சொற்களின் குறிப்புகளைக்
கொண்டே அங்ஙனம் வெளிப்படுத்துகிறார். இதனையே பதி-
கங்களின் பிரவேசத்தில் முன்னிடம் பெறச் செய்கிறார். இதுவே
சங்கதி அல்லது இயைபு ஆகும். இவ் வியைபினை முந்-
துறச் சுருங்கச் சொல்லி அடுத்துத் தடைவிடைகளும் மேற்
கோள்களும் தழுவ விரித்துரைப்பது நம்பிள்ளையின் உரை
இயல்பாகும். இம்முறை பிற உரையாளரிடம் காணப்பட-
வில்லை. விரிவான இயைபை முன் மொழியத் தொடங்கினால்,
கற்பார் நெஞ்சில் ஏதுக்களும் மேற்கோள்களும் தடை-
விடைகளும் இடையீடுகளாக நெடிது தங்கி உடனடி
இயைபினை உள்ளம் நழுவ நேரிடும்; சுருங்கவே மொழியின்
திறன் காண் உள்ளங்களும் வினாத்தொடுக்கும் நெஞ்சங்களும்
இகழவும் இழக்கவும் நேரிடும். இதனை நன்குணர்ந்த நம்-
பிள்ளை சுருக்க, விரிவு இயைபுகளைப் பதிகப் பிரவேசந்தொறும்
அமைத்துக் கொண்டார்.

## அடிப்படை

இயைபுகளை எழுப்புவதற்குச் சில அடிப்படைக் கற்களை
நம்பிள்ளை தேர்ந்தெடுத்துத் தொடுக்கிறார். ஆழ்வாரின்
அருளிச் செயலான திருவாய்மொழி வேதாந்த விழுப் பொருளை
நுவலும் பனுவல் என்பதும், குறிப்பாக வேதவியாசரின் பிரம்ம
மீமாம்சையை உள்ளீடாகக் கொண்ட நூல் என்பதும் அவரு-
டைய தலையாய கோட்பாடு. இக்கோட்பாட்டின் அடிப்படை
யில் வேதாந்த சாத்திரப் போக்குக் கொண்டு பதிகங்களை
இயைக்க முயன்றிருக்கிறார். மேலும் திருவாய்மொழி இறை

நிலை, உயிர்நிலை, நெறிநிலை, தடைநிலை, வாழ்வுநிலைகள் ஆகிய ஐம்பொருள் உண்மைகளை விளக்குவது என்பதும் நம்பிள்ளையின் தேறிய உட்கோளாகும். அவற்றைத் திருவாய் மொழி விரித்துரைக்கும் பாங்கினை மகாப்பிரவேசத்திலேயே காட்டி ஓரடிப்படையை எழுப்பிக் கொண்டார். மற்றும் திருவாய்மொழி, திருமந்திரம் துவயம், சரமசுலோகம் என்ற முப்பெரும் மறைமொழிகளையும் விரித்துரைப்பது என்பதும் அவற்றுள்ளும் சிறப்பாக துவயத்தின் பெருவிரிவே அந்நூல் என்பதும் அவருடைய தேர்ந்த கருத்தாகும்.

இம்மூன்று அடித்தளங்களையும் சில பதிகங்களை இயைக்க நன்கு பயன்படுத்திக் கொண்டிருக்கிறார், இவையேயன்றி வேறு சில உத்திகளையும் தம் நுண்மாண் நுழை புலத்தாலும் இலக்கியப் பயிற்சிகளாலும் உலகியல் பட்டறிவுகளாலும் புதுவ-தாகக் கண்டு அவற்றை இயைபுகளில் வெளிப்படுத்துகிறார்.

**நேர் இயைபுகள்**

அடுத்துள்ள இரு பதிகங்களைமட்டும் இணைப்பது நேர் இயைபு ஆகும். இதனை ஸாக்ஷாத் ஸங்கதி என்பர். இவ்வகை நேர் இயைபில் ஆறுவகை உத்திகளை உரையாசிரியர் கையாள்கிறார். ஒரே நேர் இயைபில் ஒன்றுக்கு மேற்பட்ட உத்திகளையும் பயன்படுத்துகிறார்.

**(1) சாத்திர நெறி :**

வியாசர் அருளிய பிரம்ம சூத்திரம் என்ற வேதாந்த சாத்திரம் தத்துவம், உபாசனை என்ற இரு பிரிவுகளைக் கொண்டதாகப் பார்க்கப்படுகிறது, அதனால் அது 'விஷயத்விகம்' என்றும் 'விஷயித்விகம்' என்றும் அழைக்கப்படுகிறது. திருவாய் மொழியின் முதல் இரு பதிகங்களில் இவ்விருமைப் போக்கு நன்கு படிந்திருப்பதைக் கண்டு அவற்றை இயைபுபடுத்துகிறார். *உயர்வறவில் (1-1) தத்துவம் ஆராயப்பட்டு அறுதியிடப்பட்-டுள்ளது; *வீடுமின்முற்றத்தில் (1-2) அத்தத்துவப் பொருளை எய்துவிக்கும் உபாசனை உபதேசிக்கப்படுகிறது. இதனை 'சாஸ்திரப் பிரக்கிரியை' என்று கூறுவர்.

**(2) ஈர்ப்பு விசை :**

ஒரு பதிகத்துள் வரும் ஒரு பாடலின் உயிர்த்தொடர் அடுத்துவரும் பதிகத்தை ஈர்க்கும் ஆற்றலை உணர்ந்தநம்பிள்ளை

அதனைக் கொண்டு இயைபுபடுத்துகிறார். இவ்வுயிர்த்தொடரே ஆழ்வாரின் ஆழ்மனத்தில் பெரும் மாற்றத்தை விளைவிக்கிறது; ஆழ்வாரைப் பெண்ணுடை உடுத்திப் பேசவும் செய்கிறது. இத்தகைய உணர்ச்சி மாற்றங்களை ஐந்து இடங்களில் [34அ] ஆய்வு செய்து இயைபில் அவற்றைப் பயன்படுத்துகிறார்.

(அ) *பத்துடை அடியவரில் (1-3) இறைவனுடைய எளிமைப் பண்பினை ஆழ்வார் அறிவுறுத்துகிறார். அடுத்து வரும் *அஞ்சிறைய மடநாரையில் (1-4) ஆழ்வார் தலைவி-யாகித் தூது போக்குகிறார். ஈண்டு ஆழ்வாருடைய தானாகிய கூற்றுக்கும் பெண்ணாகிய கூற்றுக்கும் இயைபு கண்டுணர்த்துவர் நம்பிள்ளை. *பத்துடைஅடியவரில் (1-3) 'பெருநிலம் கடந்த நல்லடிப் போது'[35] என்ற தொடர் வருகிறது. இத்தொடர் ஆழ்வாருடைய அகத்தில் நிலைபெற்று ஒலித்துக் கொண்டே இருந்தது; ஆழ்வாருக்கு நிலங்கடந்த நெடுமுடி அண்ணலின் நல்லடிப் போதுகளைக் காணவும் தழுவவும் வேட்கையை எழுப்பியது. அவற்றை எய்தப் பெறாத நிலையில் ஆற்றாமை மீதூர்ந்தது. இவ்ஆற்றாமை உணர்ச்சியே ஆழ்வாரைத் தலைவியாக மாற்றிவிட்டது. தலைவியாக மாறி விட்ட ஆழ்வார் இறைவனிடத்துச் சில பறவைகளைத் தூது போக்க முனைகிறார். அதன் விளைவே தலைவி கூற்றான ஒரு பதிகம்.

(ஆ) *பொருமா நீள் படையில் (1—10) ஆழ்வார் தாமான தன்மையில் இறைவனுடைய கைம்முதல் கருதாப் பெருநல் உதவித் திறனை வியந்து போற்றுகிறார். அடுத்த *வாயும் திரையுகளில் (2—1) ஆழ்வார் தலைவியாக மாறிப் பெரிதும் நோவுபட்டுப் பேசுகிறார். இம்மாற்றம் நிகழ்வதைப் பின் வருமாறு இயைபு செய்வர் நம்பிள்ளை:-

> கீழ் 'மணியை வானவர் கண்ணனைத் தன்னதோர் அணியை'[36] என்று சௌலப்பியத்தையும் மேன்மையையும் வடிவழகையும் சொல்லிற்று; இவை ஓரொன்றே போருமிறே மேல்விழப் பண்ணுகைக்கு; இங்ஙனன்றிக்கே

---

34. (அ) 1-4-0ச; 2-1-0ச; 5.3.0ச; 7.4.0ச; 9-5-0ச.
35. தி. வா. மொ. 1-3-10
36. மேலது 1. 10. 11

இவை மூன்றும் குறைவற்ற விஷயமானால் அனுபவி-யாதிருக்கப் போகாதிறே. இவ்விஷயத்தை இப்போதே அனுபவிக்கவேணும் என்று பாஹ்ய ஸம்ச்லேஷ அபேக்ஷை பிறந்தது; அப்போதே நினைத்த பரிமாற்றம் பெறாமையாலே பிறந்த அவஸாத அதிசயத்தை எம் பெருமானோடே கலந்து ஆற்றாமையாலே நோவுபடுகிறளொரு பிராட்டி ........ பாசுரத்தாலே பேசு-கிறார்.[37]

(இ) *பொலிக பொலிகவில் (5—2) ஆழ்வார் தாமான தன்மையில் திருமால் அடியார்களை வாழ்த்துகிறார். அடுத்து வரும் பதிகமான *மாசறு சோதியில் (5—3) மடற்கூற்று நிகழ்-கிறது. இவ்விரண்டினையும் பொருந்த விடுவதற்கும் ஆசிரியர் சொற்றொடர் ஈர்ப்பு விசை உத்தியை மேற் கொள்கிறார். "மலியும் சுடர் ஒளி மூர்த்தி மாயப்பிரான் கண்ணன் தன்னை"[38] என்று வரும் முன்பதிகத்தொடரே ஈர்ப்புத் தொடராக அமைந்து ஆழ்வார்க்கு அளவிறந்த வேட்கையை எய்துவித்து மடலேற ஒருப்படுத்தி மடற் கூற்றையும் வெளிப்படுத்தியது. இவ் இயைபினைப் பின்வருமாறு குறிப்பிடுவர்.

> "'மலியும் சுடரொளி மூர்த்தி மாயப்பிரான் கண்ணன் தன்னை' என்று வடிவழகையும் குணங்களையும் ஸௌலப்யத்தையும் அனுஸந்தித்து; இப்படி ஸுலபனு-மாய் ஆச்சர்யமான குண சேஷ்டிதங்களையுடையவனுமாய், அவை இல்லையேயாகிலும் விடவொண்ணாத வடிவழகையும் உடையனான இவனை பாஹ்யஸம்ச்-லேஷாபேக்ஷை பிறந்து அணைக்கக்கோலிக் கையை நீட்ட, அகப்படாதே கைகழிந்து நிற்க, அத்தாலே கலங்கி மடலெடுக்கையிலே உபக்ரமிக்கிறார்."[39]

(ஈ) * இன்னுயிர்ச் சேவல் (9—5) என்ற பதிகத்தையும் இதே முறையில் முன் நிகழ்ந்த * மையார் கருங்கண்ணியோடு (9-4) இயைப்பர். 'தேவர் கட்கெல்லாம் கருவாகிய கண்ணனைக்

---

37. 2-1.0 ஈ

38. தி. வா. மொ. 5-2-11

39. 5-3.0 ஈ

கண்டு கொண்டேன்'[40] என்பது அங்கு ஈர்ப்புத் தொடராகப் பிள்ளையால் உணர்த்தப்படுகிறது.

தாமான நிலை → பிராட்டி நிலை
(ஈர்ப்புத் தொடர்)

என்பது இவ் இயைபின் படியாகும். இதன் மறுதலைக்கும் இதே படி பொருந்துவதையும் ஆசிரியர் இயைபுகளிற் காணக் கிடக்கிறது.

(உ) * வெள்ளைச் சுரிசங்கில் (7—3) தலைவி கூற்று நிகழ அடுத்துள்ள * ஆழியெழச் சங்கில் (7—4) ஆழ்வார் தாமான நிலையில் இறைவனது வெற்றிகளைப் புகழ்கிறார். இங்கும் 'பேரெயில் சூழ்கடல் தென்னிலங்கை செற்றபிரான்'[41] என்ற தொடரில் இராமாவதாரக் குறிப்பு வெளிப்பட்டு அதன் வழியாகப் பிற வெற்றிகளையும் ஆழ்வார் நினைந்து அதனால் தாமான நிலை எய்திப் பேசிக்களிப்பதாகப் பிள்ளை இயைப்பர்.

எனவே, பிராட்டி நிலை → தாமான நிலை
(ஈர்ப்புத் தொடர்)

என்ற படியையும் உடன்படுவர். இவ்வகை ஈர்ப்புத்தொடர்களில் இடம் பெறும் இறைமை எழில் நலனே ஆழ்வாருடைய பெண் பேச்சுக்களுக்கு நிலைக்களனாகின்றன. இவ்வரிய உத்தி நம்பிள்ளையின் கண்டுபிடிப்பாகும்.

### (3) ஆழ்வார் இயல்பு

சில பதிகங்களில் ஆழ்வாரின் உயரிய ஓர் இயல்பினை உளங்கொண்டு அதற்குச் சேர இயைபு படுத்துவர். தாம் பெற்ற பேரின்ப நுகர்ச்சியினைப் பிறரும் பெற்று மகிழ வேண்டும் என்ற விரிந்த நோக்கினர் ஆழ்வார். இந்நோக்கு ஒன்றே கொண்டு ஆழ்வார் வாய்ப்புக் கிட்டும் போதெல்லாம் உலகினருக்குப் பொருண்மொழிகளையும் முதுமொழிகளையும் உபதேசிக்கத் தவறுவதில்லை.

> "உலகினர் வேண்டாதிருக்கச் செய்தேயும் வெந்து அற்ற அகத்திலே ஒரு கம்பாகிலும் கிடைக்குமோ என்று அவிக்கப் பார்ப்பாரைப் போலே உபதேசிப்பர்; மோஹித்துக் கிடந்தாராகில் கிடக்குமித்தனை போக்கி உணர்ந்தாராகில் பிறர்க்கு ஹிதம் சொல்லியல்லது நிற்கமாட்டார்''[42]

40. தி, வா. மொ. 9-5-8
41. மேலது 7-3-7
42. 4-1-0 ஈ; 9—10—0ஈ

என்று இவ்வியல்பினைப் பிள்ளை உணர்த்துகிறார். திருவாய் மொழிக் கடலைக் கடைந்து கண்ட ஆழ்வாரின் இவ் இயல் பினை ஆசிரியர் இயைபுகளில் நன்கு பயன்படுத்துகிறார்.

* உயர்வற உயர்வில் (1-1) ஆழ்வாரின் தன்நுகர்வு.

* வீடுமின் முற்றத்தில் (1-2) பிறர்க்கு உபதேசம்

தன்நுகர்வு→பிறர்க்குபதேசம் என்ற மாற்றத்தை இயைக்க ஆழ் வாரின் பண்பு ஆசிரியர்க்குக் கைகொடுக்கிறது. தன்நுகர்ச்சிக்குப் பின் ஆழ்வார் அதனைப் பிறருடன் பகிர்ந்து கொள்ள உசாத் துணை பார்த்து அதற்குத் தக்கார் கிடையாமல் எல்லாரையும் திருத்திச் சேர்க்க முனைகிறார். "உபதேசிக்காமல் இருக்க வொண்ணாத ஸ்வபாவம் ஆழ்வாருடையது"[43] என்பது நம்பிள்ளையின் திறனுரை.

பிரிவாற்றாமை → பிறர்க்குபதேசம் என்ற மாற்றத்தை இயைக்கவும் ஆழ்வாரின் இப்பண்புநலத்தினையே பற்றாசாகக் கொள்கிறார். * முடியானேயில் (3-8) ஆழ்வார்க்கு ஆற்றாமை மிகுந்து பெருங் கூப்பீடாகச் சென்றது. அடுத்துச் * சொன்னால் விரோதத்தில் (3-9) ஆழ்வார் உலகிற்கு அறிவுறுத்தத் தொடங்குகிறார், ஆற்றாமையால் கூப்பிட்டவர் இடையில் உலகினரைக் கண்டு அவர்தம் இழவுகளை நினைத்தவாறே தம்மிழவினை மறந்து உலகினர்க்கு நன்மைகளை உபதேசிக்க இழிகிறார். இந்த நிலையை 'வாளேறு காணத் தேளேறு மாயுமாபோலே'[44] என்ற பழமொழி கொண்டு விளக்குவர் பிள்ளை.

## (4) ஆழ்வார் எண்ணம்

ஒரு பதிகம் முடிந்து அடுத்த பதிகம் தொடங்குமுன் இடையில் ஆழ்வார் நெஞ்சில் சில எண்ணங்கள் இழைந்தோடிய தாகக் கொண்டு இயைபு படுத்துவர் ஆசிரியர். * நோற்ற நோன்பில் (5-7) ஆழ்வார் தம்மிடத்து வேறு உபாயம் இன்மை யைத் தெரிவித்து இறைவனைச் சரணம் புகுந்தார். அதற்கு முன் கீழ்ப்பதிகமான * கடல்ஞாலத்தில் (5-6) ஆற்றாமை முறுகிச் சென்றது. ஆற்றாமையோடு சரணம் புக்க நிலையை

---

43. 1-2-0 ஈ

44. தேள் கொட்டித் துடிப்பவன் ஒருவன் வாளால் வெட்டுண்டு துடித்த மற்றொரு வனைக் கண்டதும் தன் துயரை மறப்பது.

இயைபுபடுத்த ஆழ்வாரின் எண்ணம் ஒன்றைப் படைத்து மொழிகுவர். ''முகங்காட்டிலன்; நம்ஆற்றாமையை உபாயமாக எண்ணினனோ அது ஸ்வரூபம் என்று அறியாதே' என்ற நினைவு முதிர ஆழ்வாருக்கு ஞான தசை பிறந்து தம்பேச்சாகக் கொண்டு சரணம் புக்கார் என்று இயைபு காண்பர்.

ஆழ்வார்க்குச் சிலபோது தேவையற்ற அச்சம் எழுவதுண்டு. அப்போது கிளர்ந்தெழும் எண்ணங்களைத் தொகுத்துப் பதிகங்களை இயைபு படுத்துவதும் நம்பிள்ளையின் ஒரு உரை நெறியாகும்.[45]

(5) உரையாடல்:

பதிகங்கள் யாவும் கூற்றுக்களே; இக்கூற்றுக்கள் நிகழும் சிலபோது வினாக்கள் எழுப்பப்பட்டிருக்கலாம் என்பது நம்பிள்ளையின் கொள்கை. 'வினாவின்றிச் செப்பு இல்லை என்ற மரபு அவர்க்குப் பெரிதும் உதவிநிற்கிறது.

*வீடுமின் முற்றத்தில் (1-2) ஆழ்வார் உலகினரைக் குறித்து இறைவனை வழிபட்டுப் பக்தி செய்யுமாறு உபதேசிப் பதாகச் செல்கிறது. அடுத்த *பத்துடையடிவரில் (1-3) அவ் இறைவன் வழிபடற்கு எளியவன் என்று நிறுவப்படுகிறது. இடையில் ஆழ்வார்க்கும் உலகினர்க்கும் இடைநிகழ்ந்ததாகச் சிறு உரையாடலை அமைத்துக்காட்டி இயைபுபடுத்துகிறார். ஆழ்வார்க்கும் இறைவனுக்குமிடையே நிகழ்வதாகச் சில நெடிய உரையாடல்களை இடையிட்டு இயைபு படுத்துவதும் நம்பிள்ளை தழுவிய உரை நெறியாகக் காணப்படுகிறது.

*அஞ்சிறைய மடநாரையில் (1—4) ஆழ்வார் ஆற்றாமைப் பட்டுத் தூது போக்கினார். அடுத்த வளவேழுலகில் (1—5) ஆழ்வார் தற்சிறுமை (நைச்சியம்) பாராட்டி இறைவனை விட்டு அகல முயல்கிறார். இவ்விரண்டு நிலைகளையும் இயைக்கச் சில நிகழ்ச்சிகளையும் நினைவுகளையும் இடைப்புணர்த்து நெடிய உரையாடலை அமைத்துக் கொள்கிறார்.

நிகழ்ச்சி : தூதுபோக்கின் வாயிலாக ஆழ்வார் தம் ஆற்றாமையினை அறிவித்த மறுகணமே இறைவன் நோவுபடவிட்டதற்கு நொந்து ஆனைக்கு உதவ

45. 10-3-0 ஈ

வந்து தோற்றினாப் போலே அரைகுலையத் தலைகுலைய வந்து தோற்றினான்.

நினைவு : விண்ணுளார்க்கு நுகர் பொருளான இறைவனை நாம் அணுகி அவனை அழிக்கை தகாது; ஊருணியிலே கள்ளியை வெட்டி எறிவதா? அவனை விட்டு அகல்வோம்.

உரையாடல் :—

இறைவன் : ''ஆழ்வீர் அகலப் பார்த்தீரோ''?'

ஆழ்வார் : ''அடியேன், அகலப் பார்த்தேன்''

இறைவன் : ''நீர் நமக்குக் கேடு வரும் என்றன்றோ அகலப் பார்த்தது. நீர் அகலவே, தகுதியை முயன்று தேடிக் கொண்டோரே நம்மை அடையத் தகும் என்று உலகினர் நினைப்பர்; அப்படி-யாயின் நமக்கு ஆள் பற்றாது. நீர் கிட்டவே 'ஸர்வாதிகாரம்' என்று தோற்றும்.''

நிகழ்ச்சி : இறைவன் வரையாது தான் உலகளந்த எளிமைப் பண்பினைக் காட்டினான்.

உரையாடல் :—

ஆழ்வார் : ''என்னால் வரும் மேன்மையோ வேண்டுவது?''

இறைவன் : ''உம்மால் வரும் நான்தான் வேணுமோ? வேண்டாவோ? நீர் அகல்வது நம் உயிர்க்கே அழிவுகாணும். நீர் நும் தகுதியின்மைபார்த்து விலகாது எம்மோடு கூடுவது திருவாய்ப்பாடி-யில் வெண்ணெய் போன்று தாரகம் காணும். நீர் அகலில் அவ்வெண்ணெயை விலக்கினார் புக்க உலகம் புகுவீர் கிடீர்''[46]

இவ்வாறு ஆணை கூறி ஆழ்வாரை வருத்தி இசைவித்துக் கூடினான். அதனை * வளவேழ் உலகில் (1-5) விரித்துரைக்-கிறார். இவ்வுரையாடல் அமைப்புக்கு அப்பதிகத்தின் பாடல்-களையும் தொடர்களையும் கருவியாகக் கொள்வர் ஆசிரியர் நம்பிள்ளை. இதே முறையில் * செஞ்சொற்கவியின் (10—7) பிரவேசத்தில் நீண்ட உரையாடலை இடைமடுத்து அதனை * அருள் பெறுவாரோடு (10—6) இயைத்திருக்கிறார்.

---

46. 1-5-0 ஈ

(6) பின்புல நிகழ்ச்சி :

இரு பதிகங்களை இணைக்கச் சில நிகழ்ச்சிகளையும் இயற்கைச் செய்திகளையும் பின்புலமாக அமைத்துக் கொள்கிறார். இறைவன் அரை குலையத் தலைகுலையப் பதறிவந்து ஆழ்வாரைக் கூடுதல், ஆழ்வார்க்கு வீடு தருவானாகப் பாரித்துநிற்றல், உருவெளிப்பாடாகக் காட்சி நல்குதல், ஆழ்வாரையும் அடியாரையும் காண விண்ணோர் வருகை ஆகியவற்றை விரித்துரைத்து இயைபு படுத்துவர்.[47] அகப்பொருட் பதிகங்களின் பிரவேசங்களில் இப்பின்புல நிகழ்ச்சிகள் விரிவாக இடம் பெறுகின்றன.

*கங்குலும் பகலில் (7—2) ஆழ்வார் இட்டகால் இட்டகையினராய்த் தரைக் கிடைகிடக்கத் திருத்தாயார் கூற்றாகச் செல்லுகிறது. அடுத்துவரும் *வெள்ளைச் சுரிசங்கில் (7—3) தலைவி தனிப் போக்கில் ஒருப்பட்டுத் தன் துணிவை வெளிப்படுத்துவதாக அமைகிறது. இவ்விரு கூற்றுக்களையும் இயைக்க வேண்டின், மயங்கிக் கிடந்த தலைவி உணர்ந்து எழுந்ததற்குக் காரணங்காண வேண்டும்.

தலைவி உணர்விழக்க, அவளுக்கு முன்னே தோழியரும் தரைப்பட, திருத்தாயார் ஒருத்தியும் அருகிருந்து தலைவியை ஆற்றுதற்காக இறைவனுடைய எழில் பண்பு நலன்களைச் சொன்னாள். போன உயிரையும் மீட்க வல்லதான குணங்கள் செவிப்பட்டதும் தலைவி உணர்வு தலையெடுக்கப் பெற்றாள். இவ்வாறு தெளிவு பிறந்ததும் 'அவனைக் கிட்டியல்லது நில்லேன்' என்னும் ஆற்றாமையும் பிறந்து அதனைப் பெறாதே துயருற்றாள். அப்போது அவளுடைய விடாய்க்கு ஈடாம்படி அணித்தாகத் தென்திருப்பேரெயிலிலே இறைவன் வீற்றிருக்கும் இருப்பிலே மனம் பறியுண்டு அங்கேறச் செல்லவேண்டும் என்று ஒருப்பட்டாள். பழையபடியே தாயரும் தோழியரும் அவளைச் சூழ்ந்து தகைத்தனர். அப்பொழுது அவர்க்குத் தன் துணிவைக் கூறி 'நானே போனேன் ஆகாமே நீங்கள் என்னோடு உடன்பட்டு அங்கே கொடுபோய்ச் சேர்க்கப் பாருங்கோள்' என்று கூறலுற்றாள். அக் கூற்றே *வெள்ளைச் சுரிசங்காக (7 — 3) விழுந்தது.

---

47. 2-5-0 ஈ; 2-9-0 ஈ; 5.5-0ஈ; 5-2-0 ஈ

பின்புல நிகழ்ச்சியாக இரவு விடிவுகளையும் அமைத்துக் கொண்டு இயைபு இடப்படுகிறது. *மாசறு சோதியில் (5—3) ஆழ்வார் தலைவியாகி மடலேறத் தலைப்பட்டார். அடுத்து * ஊரெல்லாம் துஞ்சியில் (5—4) மடலெடுக்கை தவிர்ந்து உசாத்துணையும்இழந்து ஆறாத்துயரெய்தித் தன் வல்வினையை நொந்து கொண்டும் இறைவனுடைய பண்புநலன்களைச் சிந்தித்துக் கொண்டும் ஒருவாறு தரித்தாளாகத் தலைக் கட்டுகிறது. ஆழ்வார் மடல் எடுக்கை தவிர்ந்ததற்குக் காரணத்தைக் காட்டி இவ்விரு பதிகங்களையும் நன்கு இயைபு படுத்துகிறார் நம்பிள்ளை. 'மடலூரும் போது அபிமத விஷயத்தைப் படத்திலே எழுத வேணுமே, அதுக்கு அவகாசமில்லாதபடி இரவு நெருங்கி நள்ளிரவாய் விழுந்தது'[48] என்பது இயைபு. இரவின் வருகையும் இறைவனால் விளைந்த அற்புதம் என்றே கொள்வர் ஆசிரியர். அதையடுத்துவரும் * எங்ஙனேயோவில் (5-5) இரவு முடிந்து போது விடிந்ததாகக் கொண்டு இயைபு படுத்துகிறார். போது விடிந்ததும் பிறர் எல்லாம் விழித்துத் தலைவியைப் பொடிவாரும் இதம் சொல்லுவாருமாக ஆகப் பெற்றது. அவர்களைக் குறித்துத் தான் இறைவனுடைய வடிவழகிலும் அணிகலச் சேர்த்தியிலும் ஒப்பனையிலும் அகப்பட்டதைக் கூறுவதாக இப் பதிகம் அமைவதை ஆசிரியர் தெளிவுறுத்துகிறார்.

## உள்ளுறை இயைபு

**(1) பிராப்பியப்பிராபகத் தோடர்பு :**

திருவாய்மொழி 'ரஹஸ்யத்ரயம்' எனப்படும் முப்பெரும் மறை மொழிகளை விளக்குவது என்னும் அடிப்படையில் சில பதிகங்களை ஆசிரியர் இயைப்பர். *உலக முண்ட பெருவாயனில் (6—10) ஆழ்வார் இறைவனைச் சரண் புகுகிறார். அதற்குக் கீழே *நீராய் நிலனில் (6—9) ஆழ்வார் அடையத்தக்க பெரும் பேறாகிய பிராப்பியத்தை அறுதியிட்டார். உடன், பிராபகபரமாக *உலகமுண்ட பெருவாயன் (6—10) அமைவதை இயைபுபடுத்திக் காட்டுகிறார். மேலும் இவ்விரு பதிகங்களையும் திருமந்திரம் சரமசுலோகங்களுடன் ஒப்பிட்டும் இயைபினை விளக்குகிறார். பிராப்பிய பரமானது திருமந்திரம்; பிரா

48. 5-4.0 ஈ

பக பரமானது சரமசுலோகம். சில போழ்து, பிராபகம் முன் னாகப் பிராப்பியம் அமையும். அறிந்துகோள் நிலையில் (ஞானதசை)பிராப்பியம் முதலிடமும் செயற்படுத்தும் நிலையில் (அநுஷ்டானதசை) பிராபகம் முன்னிடமும் பெறும். இதனை உட்கொண்டு * தேவிமாரா வாரையும் (8—1) * நங்கள் வரி வளையையும் (8—2) பிராபக—பிராப்பிய வரிசையில் வைத்து இயைபு செய்கிறார்.

(2) அடியார்க்கடிமை :

திருமந்திரத்தில் நம: என்ற சொல்லின் பொருளாகஇறை யடிமை கொள்ளப்படுகிறது. அடிமையின் தொடக்க நிலமாக இறையடிமையும் எல்லை நிலமாக அடியார்க்கு அடிமையும் ஏற் கப்படுகின்றன. திருமந்திரத்தின் தேறிய பொருளாகஅடியார்க்கு அடிமையினையே திருமங்கையாழ்வார் வலியுறுத்தியிருக் கிறார்.[49] இக்கொள்கையை இயைபு நெறி ஒன்றாக ஆசிரியர் பயன் படுத்துகிறார். *கருமாணிக்கமலை (8-9) என்ற பதிகம் தோழி கூற்றாக 'அறத்தொடு நிற்றல்' என்ற துறையில் அமைந்திருக்கிறதுஅடுத்து நிகழும்*நெடுமாற்கடிமையில்(8-10) ஆழ்வார் தாமான தன்மையில் அடியார்க்கடிமையின் சிறப்புக் களை விரித்து ஓதுகிறார். இவ்விரு பதிகங்களையும் இணைத் தல் உண்மையில் அரிய செயலேயாம். அறத்தொடுநிற்றலாகிய *கருமாணிக்கமலையில் (8-9) தோழி தலைவியின் மேன்மை களை எடுத்து மொழியும்போது அவள் தனக்கும் பிறர்க்கும் உரியவள் அல்லள்; எம்பெருமானுக்கே அற்றுத் தீர்ந்த அடிய வள் என்பதைக் கூறிப் பெற்றோர் அவளைப் பிறன் ஒருவ னுக்கு மணமுடிக்காது மணவிலக்குச் செய்கிறாள். இப்பதிகத் தில் இறைவற்கேயான அடிமை தெளிவுறுத்தப்பட்டதுஆகிறது. இனி அடுத்து மொழியத்தக்கது அடியார்க்கேயான அடிமை ஆகிறது. அதனால் *நெடுமாற்கடிமை (8-10) என்ற பதிகம் நன்கு இயைபுபட்டு நிற்பதை நம்பிள்ளை இனிது விளக்குகிறார்.

இடைப்பிறவரல் இயைபு:-

இருபதிகங்கள் அடுத்தடுத்து இயைபுபட்டு அமைவதா யிருக்க ஊடே ஒரு பதிகம் இடைப்பிறவரலாகப் புகுவதையும் ஆசிரியர் உற்றுணர்ந்து விளக்குகிறார். *வாயும் திரை உகளில்

49. பெ. தி. மொ., 8—10—3

(2-1) ஆழ்வார் தலைவியாக மாறி ஆற்றொணாத் துயரெய்தித் தம்மைப் போல் பிற உயிர்ப்பொருள்களும் உயிரல் பொருள்களும் பிரிவாற்றாமைப் பட்டுத் துடிப்பதாகக் கருதி அவற்றுக்குமாகச் சேர்த்துத் தாம் ஒருவரே துக்கப்படுவதாகச் செல்கிறது. இப்பதிகத்தில் ஆழ்வார்க்கு ஓடுகிற துயர் சொல்லும் தரமன்று. இத் துயர் தீர இறைவன் ஓடிவந்து ஆழ்வாரைக் கூடுகிறான். அக் கூட்ட மகிழ்ச்சியை ஆழ்வார் தம் நிலையில் *ஊனில் வாழுயிரில் (2-3) வெளியிடுகிறார். இவற்றுக்கு இடையில் *திண்ணன் வீடு (2-2) என்ற பதிகம் செருகி நிற்கிறது. இதில் ஆழ்வார் இறைவனுடைய 'சருவேசுவரத் தன்மை'யினை உலகுக்கு உணர்த்துகிறார். இப்பதிகத்தை இடைப் பிறவரலாகக் கொண்டு அதன் வரவுக்கும் ஒரு காரணத்தைக் காட்டுகிறார் ஆசிரியர். தம்மோடு கூடியவன் சருவேசுவரன் என்ற எண்ணம் ஆழ்வார்க்கு மின்னலைப்போல் பளிச்சிடவே கலவியின்பத்தைக் கூறப்புகுந்தவர் சற்றுத் தாழ்த்து அவனுடைய அத் தலைமையினைப் பிறர் உளங்கொளப் பாடலாகப் புனையத் தொடங்கினார் என்று விளக்குவர் ஆசிரியர். *வாயும் திரைஉகளில் (2-1) வரும் 'மூவா முதல்வா' என்ற தொடரே[50] இடைப்பிறவரலாக ஊடுபுக்கு ஒரு பதிகமாகக் கிளைவிட்டது என்றும் வேறு வகையாக ஒருங்கவிட்டுக் காட்டியிருக்கிறார். திருவாய்மொழி நூறு பதிகங்களில் இவ்வாறு இடைப் பிறவரலானவை மூன்று என்பது ஈட்டில் காட்டப்பட்டிருக்கிறது. *திண்ணன் வீடு (2-2); *கையார் சக்கரம் (5-1); *நல்குரவும் செல்வமும் (6-3) என்பன இடைப்பிறவரலாக விளைந்த திருப்பதிகங்களாகும்.

## தொடர் இயைபு

**(1) பண்புத்தொடர் :-**

இறைவனுடைய பண்புகளில் ஒவ்வொன்றை ஒரு பதிகம் வெளிப்படுத்துவதாக நம்பிள்ளையின் திருவுள்ளம். இவ் அடிப்படையில் சில பதிகங்களைக் கீழ்ச் சென்ற பதிகங்களோடு ஒரு தொடராக இயைத்துக் காட்டுவது ஆசிரியர் மேற்கொண்ட உத்தியாகும். நேர் இயைபோடு இத்தொடரியைபு ஆங்காங்கே சுட்டிக் காட்டப்படுகிறது. சிங்க நோக்காகக்

---

50. தி. வா. மொ: 2—1—10

காட்டப்படும் இவ் இயைபினால் திருவாய்மொழியின் தொடர்ப் பொருளை ஆசிரியர் கற்பாருள்ளத்தே நிலை நிறுத்துகிறார்.

*பரிவதில் (1-6) அவதாரிகையில் கீழ்ச்சென்ற ஐந்து பதிகங்களிற் கூறப்பட்ட இறைமைப் பண்புகளோடு பின்வருமாறு இயைபுபடுத்துவர்:-

(1—1)ல் அவனுடைய உயர்வற வுயர்வைத்தாம் அனுபவித்தார்;

(1—2)ல் உயர்வற உயர்ந்த அவன் வழிபடற்குரியோன் என்றார்.

(1—3)ல் வழிபாட்டுக் குறுப்பாக அவன் எளிமையை அருளினார்.

(1—4)ல் அதற்குறுப்பாகப் பிழைபொறுக்கும் இயல்பினன் என்றார்.

(1—5)ல் அதற்கு அடியார்கச் சீல குணத்தவன் என்றார்.

(1—6)ல் அதனால் எளிய வழிபாட்டை ஏற்கும் இயல்பினன் என்றார்.

(2) விடாய்த் தொடர் ;

*பாலனாயேழுலகில் (4—2) ஆழ்வார் ஆற்றாமை தலையெடுக்கப்பெற்றுத் தாய் கூற்றாக அதனை வெளிப்படுத்துகிறார். இவ் ஆற்றாமை ஈண்டுத் தலை எடுத்ததை விளக்குவதற்காகக் கீழ்ச் சென்ற நான்கு பதிகங்களின் கருத்துக்களைத் தொகுத்து இயைபு காட்டுகிறார்.

* முடியானேயில் (3—8) தாமும் தம் உறுப்புக்களுமாகப் பெருவிடாய்ப் பட்டுக் கூப்பிட்டார்;

* சொன்னால் விரோதத்தில் (3—9) பிறரெல்லாம் பிறவற்றுக்காகப் பெருவிடாய்ப்படத் தாம் ஒருவரே அங்ஙன் ஆகாமை பெற்றதற்காக உகந்தார்;

* சன்மம் பலபலவில் (3—10) அவ்வளவில் அமையாது இறைவனை ஏத்தத் தகுதி பெற்றதற்காக மகிழ்ந்தார்;

* ஒரு நாயகத்தில் (4—1) உலகினர் பற்றி நிற்கும் பொருள் களின் குறைவு, நிலையின்மைகளை உணர்த்தி அவற்றை விட்டு இறைவனைப் பற்றுங்கோள் என்றார்.

பெருவிடாய்ப்பட்டுக் கூப்பிட்டு அலமாப்படைந்த ஆழ்வார் உலகினரைத் திருத்த அருளிச் செய்தன யாவும் அவர் களுக்கு உடலாகாது ஆழ்வார்க்கே மேலும் தெளிவைப் பிறக் கும் படியாக அமைந்தது. களை பறிக்கப்பட்ட பயிர்போலே, இறைவன் பக்கலில் ஆசை மேலும் பணைக்கவே உடலாயிற்று. ஆகவே *முடியானேயில் (3—8) பிறந்த விடாய் பிற சுவைகளால் சற்றுத் தலைமடிந்து கிடந்து உபதேசங்களால் களைகட்ட தாக ஆகி மீண்டும் தலையெடுத்தது. அதன் விளைவாகப் *பாலனர் யேழுலகு (4—2) என்ற பதிகத்தில் ஆழ்வார்க்குப் பெண்ணாகிய நிலை மீண்டும் பிறந்தது என்று தொடர் இயைபு காட்டுவர் ஆசிரியர்.

உருவக இயைபு

பதிகங்களின் தொடர் இயைபினையே கண்முன் நிறுத்திக் காட்டும் உருக்காட்சித் தொடராகவும் நம்பிள்ளை இயைத்துப் புது நெறியை உரையுலகிற்கு வழங்கியிருக்கிறார்.

*ஆடியாடியில் (2—4) —ஆழ்வாரது ஆற்றொணாத்துயர்;
*அந்தாமத்தன்பில் (2—5)—துயர்தீரக் கலவி நிகழ்ந்தபடி;
*வைகுந்தாவில் (2—6) —கலவியாற் பிறந்த மகிழ்ச்சி;
*கேசவன் தமரில்(2—7)—அம்மகிழ்ச்சி தொடர்புடையார் பக்கலிலும் பெருகியபடி.

இந்நான்கு மனவுணர்வுகளை ஆசிரியர் வானம் பார்த்து வாடிய பயிர் செழிப்புறப் பெருமழை பொழிந்து வெள்ளம் பெருகிய நிலைகளாக உருவகித்துக் காட்டுவர்.

*ஆடியாடியில் (2—4) — ஒரு நீர்ச்சாவி வாடினபடி;
*அந்தாமத்தன்பில் (2—5) — அது தீரக் காரார் கருமுகில் பொழிந்தபடி;
*வைகுந்தாவில்(2—6)—அது வெள்ளமிட்டுப்பெருகினபடி
*கேசவன் தமரில் (2—7)—அது இரு கரையும் புரண்டபடி.

தொலை இயைபு

ஆழ்வார் திருவுள்ளத்தில் ஓடிய சில இழப்புணர்ச்சிகள் இடையில் தலைமடிந்து கிடந்து பல பதிகங்களுக்கு அப்பால் மீண்டும் ஊற்றெடுத்துத் தொடருகின்ற தன்மையினை ஆசிரியர் நன்கு உணர்ந்து அவற்றை இயைபு செய்வர். *மாசறு சோதியில் (5-3) ஆழ்வார் பெருவிடாய்ப்பட்டுக் கையும் மடலுமாக நிற்கும் நிலையை எய்தினார். இதனைக் கீழ் ஆறு பதிகங்களுக்கு அப்பாலிருந்த மன நிலையோடு தொடர்புறுத்திக் காட்டுவர்.

*ஏறாளுமிறையோனில் (4-8) ஆழ்வார் தம்மிடத்தும் தம் உடைமைகளிடத்தும் நசையற்றபடியை வெளிக் காட்டியும் இறைவனுடைய முகம் பெறாது பேரிழவுபட்டிருந்தார். அதனையடுத்துப் பிறவகைச் சுவைகள் இடையீடுபட்டன. பிறரைக் குறித்து உபதேசித்தும் அதற்கு அடி இன்னதென ஓர்ந்தும் உபதேசங்கேட்டுத் திருந்தினோரை வாழ்த்தியும் இப்படியாகத் தம் செயல் யாவும் இடைமடிந்து கிடந்து மீண்டும் பழைய இழவே தலையெடுத்து விடாயைப் பிறப்பித்தபடியால் மடலெடுக்கையில் ஒருப்பட்டார் என்று இயைத்துக் காட்டுகிறார் ஆசிரியர். இடையிட்டனவற்றை 'ரசாந்தரங்கள்' என்று குறிப்பர் அவர்.[51]

இழவு உணர்ச்சியே யன்றிக் கலவியால் விளைந்த இன்ப நுகர்ச்சியும் 'ரசாந்தரங்களால்' மறைந்து கிடந்து வாய்ப்புக் கிட்டியபோது மீண்டும் துளிர்க்கும் என்பதையும் நம்பிள்ளை ஓரிடத்தில் தொலை இயைபு காட்டி நிறுவுகிறார்.

*உருகுமாலில் (9-6) ஆழ்வார் தம்மோடு இறைவன் தலைமாறிப் பரிமாறியதை நினைத்து மகிழ்வதாகச் செல்கிறது. இதற்குக் கீழும் மேலும் ஆற்றாமையே பெருகிச் செல்ல இடையில் ஆழ்வார் மனம் ஆறியிருந்து மகிழக் காரணம் கீழே எட்டுப் பதிகங்களுக்கு அப்பால் *இருத்தும் வியந்தில் (8—7) பிறந்த கலவி பின்னாட்டுவதே என்பர் ஆசிரியர். பின்னாட்டுதல், ஊற்றெடுத்தல் என்ற இரண்டும் நம்பிள்ளை ஆக்கிக் கொண்ட குறியீடுகளாம்.

---

51. 5-3-0 ஈ

தொடங்கியதை முடித்தல் என்னும் நியாயத்திலும் தொலைப்பட்டுக் கிடக்கும் பதிகங்களை இயைத்திருக்கிறார். முதற்பதிகமான *உயர்வறவில் (1—1)தாம் தம்முடைய பேற்றுக்கு உபாயமாகச் சொன்ன பிரபத்தியோடு *சார்வே தவ நெறியைத் (10—4) தலைக்கட்டுவதாக விரிவாக ஆய்வு செய்து முதற்பதிகத்தின் முடிப்புரையாக இயைபு செய்கிறார்.

## பெட்டி இயைபு

திருவாய்மொழி நூறு பதிகங்களும் முப்பெரும் மறைமொழிகளை வெளிப்படுப்பன என்னும் கோட்பாட்டில் ஆங்காங்கே பதிகங்களைத் தொகுத்து இயைபுகளைக் கூறுவர் ஆசிரியர். தம்முடைய அக் கோட்பாட்டினை வலியுறுத்தவும் பொருத்தவும் பரந்துகிடக்கும் பதிகங்களில் கற்பாருடைய நெஞ்சினை அவ்வப்போது ஈடுபடுத்தி அம்மறை உண்மைகளைப் புரிந்து கொள்ளச் செய்யவும் இவ்வகை இயைபினை மேற்கொள்கிறார். இதனைப் ‘பேடிகா ஸங்கதி’ என்பர் ஆத்தான் சீயர்.[52]

*ஒரு நாயகத்தில் (4—1) இறைவனுடைய திருவடிகளே உபாயம் என்று சொல்லப்படுகிறது. இவ்விடத்தில் பெட்டி இயைபினைக் காட்டியிருக்கிறார்.

1,2,3 பத்துக்கள் — ஸ்ரீமதே நாராயணாய நம:
4,5,6 ,, — ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே

இங்ஙனம் முதல் ஆறு பத்துக்களும் துவயத்தின் இரு தொடர்களை விளக்கி நிற்பதை விரிவாகக் காட்டுவர். பெட்டியும் மூடியும் போலும் இரு கூறுபட்டு இயைந்து நிற்பதை ஆசிரியர் விளக்குகிறார்.

## இயைபின்மை இயைபு

பதிகங்களை எவ்வாறேனும் இயைக்கவே உரையாசிரியர் முயல்கிறார். இங்ஙன் முயன்று வருந்தி இயைபுகளைக் காணல் வேண்டுமா? இயைபில்லாமற் பதிகங்கள் தோன்றாவோ? இவ்வினாக்கள் பிள்ளையின் திறன்காண் நெஞ்சில் எழுந்ததும் உண்டு.

---

52. 4-1-0 ஈ., சீ. அரு.

*வீற்றிருந்தில் (4-5) ஆழ்வார்க்குக் கழிபேருவகை பெருக்கெடுத்துச் செல்கிறது. இறைவன் தன் செல்வம் முற்றவும் ஆழ்வார்க்குக் காட்டித்தர அதனாற் பிறந்த பெரு மகிழ்ச்சியால் அவனுக்குப் பல்லாண்டு பாடி வாழ்த்துவதாக இப்பதிகம் அமைகிறது. அடுத்த *தீர்ப்பாரையாமினியில் (4-6) ஆழ்வார் ஆழங்காணா ஆற்றாமையில் வீழ்ந்து தளர்ச்சி எய்தி அதனைத் தோழி கூற்றில் வைத்துப் பேசுகிறார். மகிழ்ச்சியின் எல்லையிலிருந்து சடக்கெனத் துயரின் முடிவுக்கே செல்வதனை எப்படி இயைப்பது? இதற்கு முன்னெல்லாம் மகிழ்வும் துயரும் மாறிமாறி வரும்போது இடையில் இறைவன் பிரிந்தானாகக் கூறி ஒருவாறு இயைபுபடுத்திச் சென்றார் இங்கு இயைபு ஒன்றை வலியச் செய்ய வேண்டுவதில்லை என நினைந்து 'இயைபின்மையே இயைபு' என்று எம்பார் கூறியதை ஏற்றுக் கொள்கிறார்.[53] ஆயினும் அதோடு அமையாது பொருந்தவிடவும் பார்க்கிறார். இயைபு காட்டாது ஒழியின் ஆழ்வாரின் இடையறாத மன ஒழுகலாற்றைத் தடைப்படுத்தியதாக முடியும் என்று அஞ்சினார் போலும்.

நம்பிள்ளையின் இயைபுகளே தனி இலக்கியமாகக் கருதப்பட்டு மரபு வழியாகக் கற்போரால் பெரிதும் போற்றப்பட்டிருக்கின்றன. மணவாள மாமுனிகள் என்ற பெரியார் ஈட்டில் வரும் இயைபுகளைத் திரட்டி 'திருவாய்மொழி நூற்றந்தாதி' என்ற தனித்தமிழ் நூலாகச் செய்திருக்கிறார். அந்நூலின் உரைப்பாயிரத்தில் ''ஈட்டின் சங்கதியேயாயிற்று இவர் தாம் இப்படி ஸங்கிரகித்து அருளிச் செய்கிறது'' என்று பிள்ளைலோகஞ்சீயர் குறிப்பிட்டிருக்கிறார்.

### சுருதிச் சாயை

#### (1) உபநிடதச்சாயை :-

நம்மாழ்வார் அருமறையின் பொருளையே அழகிய தமிழில் வெளிப்படுத்தினார் என்பது உரையாசிரியரின் தலையாய கோட்பாடு. இக் கோட்பாட்டை அடியொற்றி உரை வகுத்த இடங்கள் உள. ஆங்கு வடமொழி மறைத் தொடர்களின் சாயலைத் திருவாய்மொழியிற் கண்டு தெளிவுபடுத்து-

---

53. 4.6.0 ஈ

வர். *ஓராயிரமாய் (9-3) என்ற பதிகத்துள் 'நாராயணன்' என்ற சொற்பொருளின் விளக்கமாய் ஒரு பாசுரம் அமைகிறது.

'அவனே அகல்ஞாலம் படைத்திடந்தான்
அவனே அஃதுண்டுமிழ்ந்தான் அளந்தான்
அவனே அவனும் அவனும் அவனும்
அவனே மற்றெல்லாமும் அறிந்தனமே'[54]

இப் பாசுரத்தின் மூன்றாம் அடிக்குப் பொருள்கூறல் அரிதே-யாகும். அதற்குக் கருத்து, பிரமன் சிவன் இந்திரன் ஆகிய மூவரின் தோற்றரவு நிலைபேறு இயக்கங்கள் யாவும் அவனாகிய நாராயணன் இட்ட வழக்கு என்பதாம். அம் மூவர்களின் பெயர்கள் இல்லாதிருக்கச் செய்தேயும் உபநிடத வாக்கியம் கொண்டு அப்பெயர்களைக் காண்கிறார். அவனும் அவனும் அவனும் என்று சுட்டுப்பெயர்களாகவே இங்கு எடுத்திருப்பது உபநிடதச் சாயை என்பது பிள்ளையின் கருத்தாகும். நாராயணா நுவாகத்தில் ''ஸ: ப்ரஹ்மா ஸ: சிவ: ஸ: இந்த்ர:' என்று வருகிறது.[55] அதில் மும்முறை வரும் ஸ: என்கிற பதத்தையே ஆழ்வார் வெளியிட்டு வேதம் தமிழ் செய்கிறார் என்பதை வலியுறுத்துகிறார் ஆசிரியர்.

(2) உபநிடதத் தொடர்

சொற்பொருளை விளக்குமிடத்தும் சுருதித் தொடர்களைக் காட்டுவது பிள்ளையின் அரிய நெறியாகும் 'சுரர்அறிவருநிலை விண்'[56] என்ற தொடரில் விண் — மூலப்பிரகிருதி என்றே பொருள் கொள்வர்; ஆகாயம் என்ற நேர்பொருளைக் கொண்டிலர்.

''கார்க்கி வித்யையிலே ஆகாச சப்தத்தாலே மூலப் ப்ருக்ருதியைச் சொல்லுகையாலே இவரும் ஆகாச சப் தத்தாலே மூலப்ரக்ருதியை அருளிச் செய்கிறார்''[57]

என்பது, உரைக் குறிப்பு. பிருகதாரண்ய உபநிடதத்தில் 'அஸ்

54. தி. வா. மொ. 9—3—2
55. நாராயண அநுவாகம், 6:11
56. தி. வா. மொ. 1—1—8
57. 1-1-8 ஈ

மிந்கலு ஆகாச ஓதச்ச ப்ரோதச்ச'[58] என்ற வாக்கியத்தில் ஆகாச சப்தம் 'மூலப்ரக்ருதி' என்ற பொருளில் வருகிறது. அதனைத் தழுவியே தமிழ் மறையான திருவாய் மொழியிலும் அமைகிறது என்பது பிள்ளையின் கருத்து.

(3) உயிர்மறை மொழி

வேத தாற்பரியங்களை உளத்துக் கொண்டு ஆழ்வார் அருளிய சொற்பிரயோகங்களையும் அவை வருமிடத்து நினைவாகக் காட்டுவது பிள்ளையின் உரையியல்பாகும். 'திட விசும்பு எரிவளி நீர்நிலம் இவை மிசைப், படர்பொருள் முழுவதும் ஆய்'[59] என்ற தொடர்க்கு "ஐம்பெரும் பூதங்களையும் அடியாகக் கொண்டு மேலே பரந்து விரிந்துள்ள பொருள்கள் எல்லாவற்றையும் உண்டாக்கி'' என்று பொருள் கூறினர். ஈண்டு 'ஆய் என்ற எச்சத்தை 'ஆக்கி' என்று பிறவினையாகத் திரித்துக் கொண்டார். ஆழ்வார்தாமே 'ஆக்கி' என்று பிறவினைப் பொருளாக ஓதியிருக்க அடுக்குமே!'ஆய்' என்பானேன், என்னில் ''பஹுஸ்யாம்''[60] (பலபொருள்களாக விரிகின்றேன்) என்கிற தன் மலர்ச்சியே ஆகையாலே'' என்று ஆழ்வார் தொடர்க்கு அடிப்படையான மறைமொழியைக் காட்டுவர். ''வைதிக நிர்த்தேசம் இருக்கிறபடி''[61] என்றும் சுட்டிக் காட்டுகிறார். இதனால், விசிட்டாத்வைத நெறிக்கு உயிரான மறைமொழியை ஆழ்வார் தம் திருவுள்ளத்திற்கொண்டு பாடினார் என்று நூல் கற்பார்க்குப் பிள்ளை உணர்த்த விரும்புகிறார்.

(4) உபநிடத நிலைக்களன்:-

வேத நடைகளைப் பின்பற்றியும் உரை எழுதுவதில் திறன் மிக்கவர் நம்பிள்ளை. 'பேருமோர் ஆயிரம் பிற பல உடைய எம் பெருமான்'[62] என்ற பாசுரத்தொடருக்கு ''ஓர் ஆயிரம் பேரும் பிற(வும்) பல உடைய எம்பெருமான்'' என்பதாகக் கூட்டி

58. பிரு. உப., ஆனந்தவல்லி; 6:3

59. தி. வா. மொ,, 1—1—7

60. தைத். உப., ஆனந்தவல்லி, 6;3

61. 1-1-1 ஈ

62. தி. வா. மொ. 1-3-4

'எண்ணற்ற திருநாமங்களையும் திருமேனிகளையும்உடையவன்' என்று பொருள் விரித்தார் இங்கு 'பிற' என்ற சொல் திருமேனியைக் காட்டுவதற்குக் காரணம் கூறுகிறார். சாந்தோக்கியத்தில் 'நாமரூபேவ்யாகரவாணி' (பெயர்களையும் உருவங்களையும் உண்டு பண்ணுகிறேன்)[63] என்று பெயரோடு உருவமும் சேரக் கூறப்பட்டிருத்தலின் தாமும் அவ்வாறே 'பிற' என்பதற்குத் திருமேனி என்று கொண்டதாகக் காட்டுகிறார். விளங்காப் பல பொருள் ஒரு சொல்லிற்குச் சார்பினால் பொருள் பணிக்கலாம் என்பது நன்னூலிற்கண்டது.[64] அந்தச் சார்புக்கு நிலைக்களனை உபநிடதத்திலிருந்து காட்டுகிறார் நம்பிள்ளை.

(5) வேத மொழிபெயர்ப்பு :

வேத வாக்கியங்களின் மொழிபெயர்ப்பாக வருமிடங்களையும் ஆங்காங்கே எடுத்துக்காட்டி உரையிடுவர் ஆசிரியர். 'கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு'[65] என்ற தொடரில் கண் என்பதற்குக் 'காப்பாற்றுபவன்' என்ற ஒரு பொருளைக் கூறியும் அவர் அமைந்திலர். அத்தொடர் வேத வாக்கியத்தின் மொழியாக்கமாகக் கிடப்பதை உணர்ந்து அதனையே சிறப்புடைப் பொருளாகக் காட்டுவர். 'சக்ஷுர் தேவாநாமுதமர்த்யாநாம்' (விண்ணோர்க்கும் மண்ணோர்க்கும் கண்)[66] என்ற மறைமொழியை எடுத்துக்காட்டி 'சுருதி அர்த்தத்தை அருளிச் செய்கிறார்' என்று முடிக்கிறார். 'வேம்கடங்கள் மெய்ம்மேல் வினை முற்றவும்'[67] என்கிற பாசுரத் தொடருக்குப் பல வேத வாக்கியங்களைக் காட்டிப் பொருள் பணிக்கிறார். அம்முறையை 'வேதாந்தத்திற் சொல்லுகிற கட்டளை' என்று குறியீடு செய்து வழங்குவர்.[68]

(6) மீமாம்சை நெறி :

மீமாம்சையிற் கண்ட விதிகளைப் பின்பற்றியும் பொருள் நிருவகிப்பதில் வல்லவர் நம்பிள்ளை. முதல் திருவாய்மொழி

---

63. சாந். உப., 6:3
64. நன்னூல், சூ. 390
65. தி, வா. மொ., 1-8-3
66. எசுர்வேதம், 4.6:8
67. 1-8-3 ஈ
68. 3.3.6 ஈ; 9—9—0 ஈட்டிலும் இக்குறியீட்டை வழங்குவர்

ஆறாம் பாடலில் 'நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர், நின்றிலர் இருந்திலர் கிடந்திலர் திரிந்திலர்' என்று வருகிறது, இப்பாட்டின் கருத்தாவது, நிற்பவர்கள் இருப்பவர்கள் கிடப்பவர்கள் திரிபவர்கள் ஆக இப்படிப்பட்ட முயற்சிகளைச் செய்வோரும் நில்லாதவர்கள் இராதவர்கள் கிடவாதவர்கள் திரியாதவர்கள் ஆக இப்படிப்பட்ட முயற்சிகளை விட்டவர்களும் இறைவனிட்ட வழக்கே என்பதாம். இங்கே முயல்வோரையும் முயற்சிவிட்டோரையும் சொல்லியிருந்தாலும் அவர்கள் இங்குக் கருதப்படவில்லை. கீழே நாலாம் பாட்டிலேயே, நாம் அவன் இவன் என்று தொடங்கி பண்பிகளான எல்லாரையும் சேரப் பிடித்து அவர்கள் யாவரும் இறைவனிட்ட வழக்கே என்பது சொல்லி முடிக்கப்பெற்றது. ஆதலால் கூறியது கூறல் என்ற குற்றம்வாராதபடி 'நின்றனர்' என்ற பாசுரத்திற்குப் பொருள் வகுக்கும் கடப்பாடு உரையாசிரியர்க்கு ஏற்படுகிறது. அதனை வேத வாக்கியங்களைக் கொண்டு நிறைவேற்றுகிறார்.

வேதத்தில் யாகம் செய்பவன் சோமபானம் செய்ய வேண்டும் என்று சொல்லப்பட்டது. சோமபானமாவது சோமலதை (ஆட்லாங்கொடி)யின் சாற்றினைப் பருகுவதாம், அந்தக் கொடியை எப்படிப் பெறுவது என்று ஆராய்ச்சி பிறக்கிறது. காடுகளில் தேடிப் பிடிப்பதா. விலை கொடுத்து வாங்குவதா? என்று விசாரம் வருகையில் 'கோ அர்க்கமேவ ஸோமம் கரோதி'[69] என்கிற வாக்கியமானது பசுவைக் கொடுத்து சோமலதையை வாங்கவேண்டும் என்கிறது. அந்த வேதத்திலேயே 'அருணயா பிங்காக்ஷ்யா ஸோமம் க்ரீணாதி'[70] என்றும் ஓதிற்று. சோமலதையின் விலையான பசு சிவப்பு நிறம் உள்ளதாயும் பிங்க வர்ணமான கண்ணுடையதாயும் இருக்க வேண்டும் என்று சொல்லிற்று. ஆக, சிவந்த பசுவைக் கொண்டு சோமலதையை வாங்க வேண்டும் என்று சொல்லி-யிருந்தாலும், பசுவைக் கொண்டு வாங்க வேண்டும் என்பது முன்னரே கூறப்பட்டிருப்பதால், கூறப்படாததே விதிக்கப்பட வேண்டும் என்ற கொள்கையால் சிவப்பு நிறம் மட்டுமே விதிக் கப்படுவதாகக் கொள்ளப்படுகிறது. இதே முறையைக் காட்டி

---

69. எசுர்வேதம் 6-1:45

70. மேலது

'நின்றனர் இருந்தனர் கிடந்தனர்' என்பவற்றிற்கு நிற்றல் இருத்தல் கிடத்தல் நில்லாமை இராமை கிடவாமை முதலிய தொழிற் பண்புகளையே பொருளாகப் பணித்தார் நம்பிள்ளை. நின்றனர் முதலியன பண்பிகளைக் காட்டும். நிற்றல் முதலியன பண்புகளைச் சுட்டும். ஆக, சேதனர்களின் முயல்வும் முயற் றின்மையுமாகிய பண்புகளனைத்தும் இறைவனிட்ட வழக்காக அமையும் என்று அரியபொருள் உரைத்தார் ஆசிரியர். இதனை 'விசேஷண அம்சத்திலே நோக்கு' என்பர்.[71] இங்கே, 'லோஹி. தோஷ்ணீஷா ருத்விஜ: ப்ரசரந்தி' என்ற மற்றொரு வேத வாக்கியமும் ஈட்டில் காட்டப்படுகிறது. அபிசார வேள்வியில் வேட்போராகிய 'ரித்விக்குகள்' தலைப்பாகையுடன் உலவ வேண்டும் என்று முன்னர் ஓரிடத்தில் விதித்துப் பிறகு வேறோரிட த்தில் சிவப்பு நிறமுள்ள தலைப்பாகையுடன் உலவக் கடவர்கள் என்றும் விதிக்கப்படுகிறது. பின்னதில் 'சிவப்பு' மட்டுமே விதிக்குப் பொருளாக மீமாம்சாகாரர்களால் கொள்ளப் படுகிறது. இவ்விரண்டு எடுத்துக்காட்டுக்களைக் கொண்டும் வேதக் கட்டளையில் பொருள் காணும் நெறியைத் தமிழுல-கிற்கு வழங்கியவர் நம்பிள்ளை.

சாமாநாதிகரண்ய நியாயம் (ஒரே வேற்றுமையிற் படித்தல்)

(1) விளக்கம் :-

சமானமான அதிகரணத்தை உடையது, சாமானாதி க்ரண்யம் ஆகும். சமானம்—ஒன்று; அதிகரணம்—இடம்; ஒரே இடத்தையுடையன என்று பொருள். இடம் என்பது சொல் நிகழும் பொருளைக் காட்டும். ஒரு பொருளைக் காட்டும் பல சொற்கள் சாமானாதிகரணம் ஆகும். ஒவ்வொரு சொல்லும் ஒரு காரண வகையால் அப்பொருளைச் சுட்டும். அச் சொற் கள் ஒரு வினை முடிவு கொள்ளும்போது ஒரே வேற்றுமையை ஏற்கும். ஆதலால் சாமானாதிகரண்யத்தை ஒரே வேற்றுமை யிற் படித்தல் என்று கொள்ளலாம். வடமொழியாளர் ''பிந்ந ப்ரவ்ருத்தி நிமித்தாநாம் சப்தாநாம் ஏகஸ்மிந் அர்த்தே வ்ருத்தி : ஸாமாநாதிகரண்யம்'' என்று இலக்கணம் கூறுவர்.

''பகலவன் பரம்பொருள் ஆகிறான்'' என்பது சாமானா திகரண்யம். பகலவன், பரம்பொருள் என்ற இரு சொற்களும்

---

71. தி.வா. மொ. 8—8—4.

ஒரே வேற்றுமையில் இடம்பெறப் படிக்கப்பட்டுள்ளன. பகவ வனும் பரம்பொருளும் ஒன்றாகக் கருதப்படத்தக்க முறையில் இவ்வாக்கியம் அமைந்துள்ளது. இத்தகைய வாக்கியங்கள் வேதாந்தங்களில் வருகின்றன. 'அபேதசுருதி' என்று இவற்றைப் பெயரிட்டழைப்பர். இவற்றுக்கு மாறாக பேத சுருதிகளும் பார்க்கப்படுகின்றன. 'பரம்பொருள் பகலவனைப் படைக்கிறான்' என்று வந்தால் அது பேதசுருதி ஆகும். ஈண்டு சாமானாதிகரண்யத்திற்கு மாறான 'வையதிகரண்யம்' இடம் பெறுகிறது. இத்தகைய வாக்கியங்களோடு 'பரம்பொருள் பகலவனைச் சரீரமாகவுடையவன்' என்பது போன்ற வாக்கியங்களும் வருகின்றன. இவற்றையே 'கடக சுருதி' என்பர். அத்வைதிகள் அபேத சுருதிகளைக் கொண்டு பேத சுருதிகளைத் தள்ளினர். துவைதிகள் அதற்கு மாறாக பேத சுருதிகளைக் கொண்டு அபேத சுருதிகளைத் தள்ளினர். இராமானுசர் கடக சுருதிகளைக் கொண்டு பேத, அபேத சுருதி வாக்கியங்களை ஒருங்க விட்டார். அதுவே விசிட்டாத் வைதமதமாகும். இதே முறையில் நம்பிள்ளையும் திருவாய் மொழித் தொடர்களில் வரும் 'ஸாமாநாதிகரண்ய நிர்தேசங்களை' ஒருங்க விடுவர். இந்த நியாயத்தின்படி, 'பகலவன் பரம்பொருள் ஆகிறான்' என்பதைப் பரம்பொருளுக்குச் சரீரமாயிருக்கும் சரீர ஆத்துமபாவம் கொண்டு 'பகலவன் தன்னுள்ளே உறையும் பரம்பொருளுக்குச் சரீரம் ஆகிறான்' என்று பொருள் விரிக்கவேண்டும். ஆழ்வார் திருவாய்மொழித் தொடக்கத்திலேயே, 'உடன்மிசை உயிர் எனக் கரந்து எங்கும் பரந்துளன்'[72] என்கிற தொடரால் சரீர ஆத்தும பாவத்தைக் காட்டுவர். இதன் அடியாக ஸாமானாதிகரிக்கப்பட்ட பல சொற்களுக்கு ஈட்டில் எளிதாகப் பொருள் தெரிவிக்கப்படுகிறது. சரீர ஆன்ம உறவைத் தவிரவும் வேறு பல உறவுகளின் அடிப்படையிலும் சாமானாதிகரணங்களை நம்பிள்ளை விளக்கியுள்ளார்.

**(2) சான்றுகள்**

(1) ''திண்ணன் வீடு முதல் முழுதும் ஆய்''[73]

'இறைவன் வீடு ஆகிறான்' என்பது இத்தொடர்க்குப் பொருள். இதற்கு இறைவன் வீட்டைஉடையவனாகிறான்' என்று

72. மேலது 1-1-7

73. மேலது 2-2-1

பொருள் விரிப்பர் பிள்ளை. 'நிர்வாஹ நிர்வாஹ்ய பாவம்' அடியாகவந்த ஸாமாநாதிகரண்யம் என்பர். இறைவனால் நிருவகிக்கப் படுவது வீடு என்று கருத்து.

(2) ஒருபாடலில் 'திண்மதியை'[74] என்று இறைவன் சுட்டப்படுகிறான். 'மதியைக் கொடுக்குமவனை' என்று பொருள் குறிப்பர் பிள்ளை. மதியையும் இறைவனையும் ஒன்றாக்கிச் சொன்ன ஸாமாநாதிகரண்யத்துக்கு அடிப்படை 'ஜன்ய ஜனகபாவம்' என்பர். தோற்றுவிப்போன் - தோற்றுவிக்கப்படும் பொருட்டொடர்வு என்பதாகும்.

(3) ஓரிடத்து 'மூவராகிய மூர்த்தியை'[75] என்று ஆழ்வார் மூவரையும் மூர்த்தியையும் ஒன்றாகப்படித்தார். இதற்கு அடிப்படையை அதே பாடலில் ஆழ்வாரே கூறுவதைப் பிள்ளை காட்டுவர். 'மூவர்க்கும் முதல்வன் தன்னை' என்பது அடுத்து வரும் தொடர். "இதனால் ஸாமானாதிகரண்யம் சொரூபத்தால் அன்று; கார்ய காரணபாவ நிபந்தனம் என்கிறது" என்பது ஈடு.[76] சிவன் அயன் இந்திரர்க்குக் காரணமானவன் இறைவன் என்பது பொருள், இன்னும் சரீர ஆத்ம பாவம், விசேஷண விசேஷ்ய பாவம் இவற்றின் அடிப்படையிலும் பொருள் நிருவகிப்பர் பிள்ளை.[77]

'ஸாமாநாதிகரண்ய நியாயத்தின் அறிவு இன்றிக்கே எளியராயிருப்பார்க்கும் பொருள் நிருவகிக்கும் சில புடைகளையும் பிள்ளை காட்டியிருக்கிறார்.

'அவாவறச்சூழ் அரியை அயனை அரனை அலற்றி
அவாவற்று வீடு பெற்ற குருகூர்ச் சடகோபன் சொன்ன
அவாவிலந்தாதிகளால் இவையாயிரமும் முடிந்த
அவாவிலந்தாதி இப்பத்தறிந்தார் பிறந்தார் உயர்ந்தே'[78]

என்பது திருவாய்மொழி ஈற்றுப்பாசுரம். 'அயனை அரனை' என்பதற்கு 'ப்ரஹ்மருத்ரர்களுக்கு அந்தராத்மாவானவனை' என்று ஸாமாநாதிகரண்யத்துக்குப் பொருள் கூறினார். சரீர–

---

74. மேலது 2-3-6
75. மேலது 3-6-2
76. 3-6-2 ஈ
77. 8-4-11 ஈ, 8-8-4 ஈ
78. தி. வா. மொ. 10.10-11

ஆத்மபாவம் அடியாகப் பிறந்தது சாமானாதிகரண்யம் என்று கருத்து. இதை அறியாதார்க்கு வேறு பொருள் நிறுவும் முறை ஒன்றையும் காட்டுகிறார்.

(அ) அயனை - அரனை - அவாவற்று - அரியை - அலற்றி - வீடுபெற்ற

(ஆ) அயனை - அரனை - அவாவறச் சூழ்அரியை அலற்றி — அவா வற்று வீடு பெற்ற

என்ற இரண்டுவிதமான கொண்டு கூட்டுக்களைக் காட்டுகிறார். இப்படிக் கூட்டிப் பொருள் கொள்ள முடியாத இடங்களே மிகுதி. அங்கெல்லாம் ஸாமாநாதிகரண்ய நியாயத்தைப் பின் பற்றியே பொருள் கூறியிருக்கிறார். திருவாய்மொழியில் தான் சாமானாதிகரண்யமாகவரும் பெயர்களைக் கொண்ட தொடர் கள் மிகுதியாகவுள்ளன. இத் தொடர்களுக்குப் பொருள் நிறுவு தல் உண்மையில் அரிய செயலாகவே கருதப்பட்டது. திருவாய் மொழிக்குண்டான இவ் அருமைப்பாடு பெரியவாச்சான் பிள்-ளையால் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. அரி, அயன், அரன் என்ற பெயர்கள் இவ்வாறு முதற்பதிகம் தொடங்கி இறுதிவரை ஒரே வேற்றுமையில் படிக்கப்பட்ட இடங்கள் பல என்றும் அதே போன்று நீர், நிலன், சுடர்கள் என்றவற்றோடும் அவ்-வாறே படிக்கப்பட்ட இடங்களும் பல என்றும் எடுத்துக்காட்டி அத்தகைய இடர்ப்பாடுகள் திருப்பல்லாண்டிலே இல்லை என்றும் பெரியவாச்சான்பிள்ளை கூறுவர்.

## முரண் இணைப்பு

திருவாய்மொழிப் பாடல்களுக்கு ஊடே சில கற்பனை-களைப் பொருந்தவிட்டு முரண் விளையாதவாறு இணைத்துக் காட்டும் உரை உத்தியைப் பட்டரிடம் கேட்டு அதைப் பெருக்கிக் கொண்டவர் நம்பிள்ளையே ஆவார்.

(1) 'எந்தையே என்றும்[79] என்ற பாடலில் ஆழ்வார் இறைவனுடைய திருப்பெயர்களைச் சிந்தையுள் வைப்பதற்கும் நாவினாற் சொல்வதற்குத் தமக்குத் தகுதியின்மையை நினைத்து அகலப்புகுந்தார். விண்ணுளார்க்கே அத்தகுதி உரியது என்றும் அவர்களாலே ஏத்தப்படும் அவனைத் தாம் துதிப்பது

79. மேலது 1-10-7

புரோடாசத்தை நாய் தீண்டினாலொக்கும் என்றும் ஆழ்வார்க்குக் கருத்தாகப் பிள்ளை விளக்குவர். அதனால் திருநாமம் சொல்லத்தகாத இடத்திலும் கேட்கத் தகாத இடத்திலும் ஆழ்வார் புகக் கருதினாராதல் வேண்டும். அடுத்த பாடலில், 'செல்வநாரணன் என்ற சொற் கேட்டலும், மல்கும் கண்பனி நாடுவன் மாயமே'[80] என்று ஆழ்வார் வியப்பு எய்துகிறார். இங்கே, 'செல்வ நாரணன்' என்ற திருநாமத்தை யார், எவ்விடத்துச் சொன்னார்? ஆழ்வார் எவ்வாறு கேட்டார்? என்ற வினாக்கள் எழும். அவற்றிற்கெல்லாம் விடையிருப்பதற்காகப் பிள்ளை அருமையான கற்பனை செய்துகாட்டுகிறார் :-

> ''நாம் இதுக்கு முன்பு நினைத்தும் பேசியும் தப்பச் செய்தோம், இனித் தவிரும் இத்தனை' என்று 'அவன் குணங்கள் நடையாடாததோரிடத்திலே கிடக்க வேணும் என்று போய், ஒரு குட்டிச் சுவரிலே முட்டாக்கிட்டுக் கொண்டு கிடந்தார்; அங்கே வழிபோகிறான் ஒருவன் சுமை கனத்து 'ஸ்ரீமந் நாராயணன்' என்றான்; அச் சொல்லைக் கேட்டுத் தம்முடைய கரணங்கள் அங்கே ப்ரவணமாகிறபடியைக் கண்டு விஸ்மிதராகிறார்',[81]

உரையாசிரியர் இவ்விடத்து ஆழ்வாராக மாறி அவருடைய மனப் பயணங்களைத் தாம் நுகர்ந்து வெளிப்படுத்திய நிலையைக் காணமுடிகிறது. பெரியவாச்சான் பிள்ளையுரையில் இந்த இணைப்புக் கற்பனை இல்லை.

(2) 'இன்றென்னைப் பொருளாக்கி'[82] என்ற பாசுரத்தில் ஆழ்வார் தம்மை முன்பு கைவிட்டதற்குக் காரணத்தையோ அன்றி இப்போது தம்மை ஏற்றுக் கொண்டதற்குக் காரணத்தையோ ஒரு மறுமாற்றமாகக் கூறியருள வேண்டும் என்று இறைவனிடத்து உணர்த்தினார். அவரே அடுத்த பாடலில் 'உற்றேன் உகந்து பணிசெய்து'[83] என்று மனம் ஆறுதல் அடைகிறார். இதற்கு இடையில் ஆழ்வாரை ஆற்று

---

80. மேலது 1-10-8

81. 1-10-8 ஈ

82. தி. வா. மொ. 10-8-9

83. மேலது 10-8-10

விக்க இறைவன் நிகழ்த்திய நீண்ட உரையாடலைத் தடை விடைகளுடன் உரையாசிரியர் அமைத்துக் காட்டுகிறார். இவை யாவும் ஆழ்வார் நெஞ்சில் அரும்பியவை; பாசுரங்களாக மலராதவை. அவற்றையும் ஆழ்வாராக உருமாறிக் கண்டு உணர்ந்து பாடல்களை இணைக்கிறார் பிள்ளை. அவ்வுரையாடலின் போக்கு வருமாறு அமைகிறது :

ஆழ்வார் : பிரானே! அறிவற்ற அசேதனத்துக்குச் சமமாகக் கிடந்த என்னை இன்று நீ ஒரு பொருளாகக் கருதி உன்னையே எனக்குள் முழுமையாக வைத்தாய். ஆனால் உன் திருவருளைப் பெறாத அன்று என்னைக் கைவிட்டிருந்தாய். அன்று கைவிட்டது ஏன்? இன்று என்னைப் பொருளாக்கி எனக்குள் புகுந்தது ஏன்? இவ்விரண்டில் ஒன்றிற்குக் காரணத்தை நீ சொல்லியருளவேண்டும்.

இறைவன் : இதற்குக் காரணத்தை நாம் சொல்ல வேண்டுமோ? நீரே அறியீரோ?

ஆழ்வார் : அடியேன் அறியேன். ஸர்வஜ்ஞரான தேவரீரே அருளிச் செய்ய வேணும்.

இறைவன் : ஆனால், நாம் உம்முடைய நெஞ்சிலே புகுந்த போது உடன்பட்டு இருந்தீரே ; அத்தாலே காணும் உம்மை இன்று அங்கீகரித்தோம்.

ஆழ்வார் : அப்படியொன்றும் இல்லை. யான் ஒட்டி இசைந்து) என்னுள் இருந்துவன் என்றிலன்; தேவரீர் தாமே ஒட்டி (சங்கற்பித்து) என்னெஞ்சுள் புகுந்தீர்.

இறைவன் : அப்படிப் புகுந்த பின்பாகிலும் எம்மை விரும்பினீர் அன்றோ! அதனால் அங்கீகரித்தோம்.

ஆழ்வார் : பிரானே! உன்னை விரும்பித் தொழும் மனமும் நீ தந்தது அன்றோ!

இறைவன் : அப்படியானால், நம்மை விரும்பும் போது நம்மோடு கூட வேறு விஷயங்களையும் விரும்பாதிருந்தீரே! அதனால் அங்கீகரித்தோம்.

ஆழ்வார் : பிரானே, என்னைத் தீ மனம் கெடுத்தாய்! என்-

கிறபடியே விஷயாந்தரங்களில் மனம் மறுவலிடாத படி செய்ததும் நீ அல்லவா?

இறைவன் : இவை என்று மில்லையானாலும், நாம் அருளிய மதி நலத்தை வளர்த்துக் கொண்டீரன்றோ! அதனால் உம்மை அங்கீகரித்தோம்.

ஆழ்வார் : பிரானே, 'காதல் கடல் புரைய விளைவித்த காரமர் மேனிக் கண்ணன்' என்கிற படியே அந்த மதிநலத்தையும் வளர்த்தது உன் செயலன்றோ?

இதற்கு மேல், இறைவனால் பதிலிறுக்க இயலவில்லை. நாணம் மிக்கவனாய்க் காலாலே தரையைக் கீறி நின்றான். இறுதியாக ஆழ்வாரைப் பார்த்து,

''ஆழ்வீர்! நீர் பெற வேண்டிய பேற்றைப் பெற்று விட்டீர்; அதுவே போராதோ. அதனை நுகராதே அப்பேறு வந்த வழியை ஆராயவேண்டுமோ? தேங்காய்க்கு இளநீர் புக்க வழியை ஆராய்ந்த பிறகா விடாய்த்தவன் குடிப்பது?'' என்றான். ஆழ்வாரும் சமாதானம் அடைந்தார்.

'' உற்றேன் உகந்து பணிசெய்து உனபாதம்
பெற்றேன் ஈதே இன்னம் வேண்டுவது எந்தாய்''

என்று கூறி மகிழ்ச்சியைத் தெரிவித்தார்.

இவ்வுரையாடலை அமைக்க ஆழ்வாருடைய பாசுரத் தொடர்களையே பிடிமானமாகப் பற்றுகிறார் நம்பிள்ளை. பெரியவாச்சான் பிள்ளை இந்த நெடிய உரையாடலை விரித் துரைக்கவில்லை.

## சொற்சுவையும் பதிகப்போக்கும்

திருவாய்மொழிப் பதிகங்களில் சில சொற்களுக்குப் பொருள் அறுதியிட நேரும்போது, முழுப் பதிகத்தில் ஓடும் பொதுச்சுவைக்குச் சேர எடுப்பதா அன்றிச் சொல்லின் தனிச்சுவை நோக்கி எடுப்பதா என்ற உரைச் சிக்கல் எழுகின்ற இடங்கள் உள்ளன. அவற்றில், சில இடங்களில் 'சப்த ஸ்வாரஸ்யத்திற்கு' முதன்மை அளிக்கிறார்.

**(1) சொற்சுவை :-**

*வாயும் திரையுகளில் (2—1) ஆழ்வார் பிறவெல்லாம் தம்மைப் போல் ஆற்றாது வருந்துவனவாகக் கொண்டு

அவற்றுக்குமாகச் சேர்த்துத் தாமும் வருந்துவதாகச் செல்லு-கிறது. அங்கே, இருளை விளக்குமிடத்து,

''ஆற்றாமை சொல்லி அழுவோமை நீ நடுவே
வேற்றோர் வகையிற் கொடிதாய் எனையூழி
மாற்றாண்மை நிற்றியோ வாழி கனை இருளே''[84]

என்கிறார் ஆழ்வார். ஈண்டு கீழும் மேலும் போகிறபடி பிர-கரணபலத்தால்' ஒரு பொருளும் 'சப்த ஸ்வாரஸ்யம்' என்பது கருதி ஒரு பொருளும் பணிக்க இடமுண்டு.

பிரகரணபலம் : ''தமஸ் என்று ஒரு பதார்த்தமாய், 'அதுதான் ஒளிமழுங்கி அடங்கியிருக்கை ஸ்வபாவம்' என்று அறியாதே, அபிமத விச்லேஷத்தாலே ஒளி மழுங்கி வாய்விட்டுக் கூப்பிடவும் மாட்டாதே நோவு படுகிறபடியைக் கண்டு, 'உன் இழவு கனத்திருந்தது' என்கிறாள். வகுத்த விஷயத்திலே நாம் எல்லாம் நெஞ்சிழந்து கூப்பிடாநிற்க, நீ உன் ஆற்றாமையைக் காட்டி நலியா நின்றாய்; உன் அவஸாதம் நீங்கி நீ ஜீவித்திடுக.'',

சொற்சுவை : ''தான், பிரிவாற்றாதார் அநேகர்கூடக் கட்டிக் கொண்டு கூப்பிடாநிற்க, இருள் வந்து முகத்தை மறைக்க, அத்தைப் பார்த்து, ஆற்றாமைக்குப் போக்குவிட்டுத் தரிக்க வொட்டாதே நீ வலிய வந்து நலியக் கடவையோ ? என்கிறாள்'

'வேற்றோர் வகையில் கொடிதாய் ... மாற்றாண்மை நிற்றி-யோ' என்ற தொடரிலுள்ள சொற்களின் சேர்த்தி நயத்தால் பிரகரண பலத்தால் வரும் பொருளை முற்கூறாது பிற்கூறு-கிறார். இதற்குச் சேர 'வாழி' என்பதற்கு ''வழிபறிப்பாரை 'உடன்பிறந்தீர்' என்னுமாபோலே'' என்று பொருள் கூறுவர்.

**(2) பிரகரணபலம் :-**

ஆனால், அறியாக்காலத்துள்[85] என்கிற பாடலில் பிர-கரணத்துக்குச் சேராத பொருளைத் தள்ளிவிடுகிறார்.

' அறியாக் காலத்துள்ளே அடிமைக் கண் அன்பு செய்வித்து
அறியா மாமாயத்து அடியேனை வைத்தாயால்'

என்பது ஆழ்வார் விண்ணப்பம். சொற்கள் கிடந்தவாறே கொண்டு'அறிவு நடையாடாத தசையிலே ஸம்பந்தஞானத்தைப்

84. மேலது 2.1.7
85. மேலது 2-3.3

பிறப்பித்து, பிறந்த ஞானத்தை அழிக்கக் கடவதான தேஹ ஸம்பந்தத்தோடே பின்னையும் வைத்தாய்' என்று பொருள் பணிக்க இடமுண்டு. இதில் ஆழ்வார் இன்னாப்பாலே பேசுவ தாக ஏற்படுகிறது. ஆனால் முன்னும் பின்னும் ஆழ்வார் உள்ளத்தில் இனிமையுணர்ச்சியே நடையாடாநிற்க, இடையில் இவ்வொன்றிலும் இழவு தோற்றப் பொருள் நிருவகிப்பது ஆழ்வார் திரு உள்ளக் கிடக்கைக்கு முரணாம் என்று கருதி னார் நம்பிள்ளை. அதனால் 'அறியா மாமாயத்து அடியேனை-அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து-வைத் தாயால்' என்று கூட்டிப் பொருள் செய்து இறைவனின் பேருபகாரத்தை ஆழ்வார் மகிழ்ந்து கூறுவதாக அறுதியிட்டார்.

(3) மிறுக்கிய பொருளாட்சி :-

ஆழ்வார் இயல்புடன் பொருந்திவருதற்காகவும் பிரகரண விரோதம் வாராமைக்காகவும் 'மிறுக்கியோஜித்துப்' பொருள் நிருவகிப்பர் நம்பிள்ளை.

*ஆராவமுதே (5-8) என்ற பதிகத்தில் ஆழ்வார் ஆர்த்தி யோடே உலகிற் கால்பாவாதபடி துடித்துச் சரணம் புகுகிறார். இறுதியில் பலனுரைக்கும் போது, 'காமர் மானேய் நோக்கி யர்க்கே' [86] என்று தலைக்கட்டுகிறார். 'மானை ஏய்ந்த நோக் கையுடைய மகளிருக்குக் காமுகராவர்' என்னாது 'காமுகரைப் போலே யாவர்' என்று உபமானமாக ஆக்குவர். அதாவது, மகளிர்க்குக் காமுகர் இனியராவது போல் இறைவனுக்கும் அடியார்க்கும் இனியராவர் என்று கருத்து. இப்படிக் கூறா தொழியின் ஆழ்வார் இயல்புக்குச் சேராது, கீழ்ப்பாசுரங்க-ளோடு முரண்படும். ''மேலும் 'விப்ரலம்பகர் வார்த்தை' யாகக் கொள்ளப்பட்டு ஆழ்வார் 'பிராமாணிகர்' அன்றிக்கே-யொழிவர்'' ஆயின், அவர்களுக்குப் 'போல்' என்று உவமஉருபு இல்லையே என்பார்க்கும் விடையிறுக்கிறார். ''முற்றுவமை என்றொரு லக்ஷணம் இருக்கிறபடி'' என்று குறித்து உவ-மானம் புகாதவிடத்தே உவமேயமும் வரக்கடவது என்று அதற்கு விளக்கமும் தந்து 'தாவி வையம் கொண்ட தடந்தா-மரைகள்' [87] என்று பிரயோகமும் காட்டுவர்.

---

86. மேலது 5-8-11
87. மேலது 6-9-9

இவற்றால் 'சப்த ஸ்வாரஸ்யம்' ஒன்று தவிர்த்துப் பிற இடங்களில் ஆழ்வார் இயல்புக்கும் பிரகரணத்துக்கும் முரணாகாதபடி பொருள் நிருவகிப்பது பிள்ளையின் வழியாகத் தேறுகிறது.

## சொல் ஆட்சிநயம் காட்டல்

பாடல்களின் சில சொற்கள் ஆழ்ந்த கருத்துக் கொண்டவையாயிருக்கும். அவற்றிற்கு ஈடாக வேறு சொற்களைப் பயன்படுத்தினால் அந்தக் கருத்து இழந்தேபோகும். அத்தகைய இடங்களைக் காட்டி இணையான சொற்களையும் எடுத்து மொழிகுவது பிள்ளையின் உரைநெறிகளுள் ஒன்றாகும்.

(1) சான்றுகள் :-

(1) 'வினைகளை வேரறப் பாய்ந்து[88] — 'போக்கி' என்னாதே பாய்ந்து என்றதால் 'சினம் தோற்றுகிறது' என்று குறிப்பர்.

(2) பல்பிறவியில் படிகின்றயான்'[89] — 'விழுகின்ற' என்னாதே 'படிகின்ற' என்பதற்கு— ''இவ்வனர்த்தத்திலே வெறுப்பின்றிக்கே பொருந்தியிருக்கை. வர்த்தமான நிர்தேசத்தால் (நிகழ்காலம்) இன்னம் தறை கண்டதில்லை என்கை'' என்பது பிள்ளையின் நயவுரை.

(3) எருதேழ் தழீஇ'[90]—'வென்று'என்னாதே'தழீஇ'என்பதற்கு அவளைத் (நப்பின்னை) தழுவினாப் போலே இருக்கிற தாயிற்று எருதுகளோடு பொருததும். ஆகையாலே தழீஇ என்றது' என்பது நயங்காட்டும் உரை.

(4) 'மனத்தை வலித்து'[91] — மனத்தை 'மீட்டு' என்னாதே வலித்து என்பதற்கு — 'அவற்றிலே நெஞ்சுபட்ட உறுதியை நினைத்து' என்று சொல்நயமுணர்த்துவர்.

(5) கண் துயில் 'அறியாள்'[92] — 'கண்துயில் கொள்ளாள' என்னாதே 'அறியாள்' என்பதற்கு'' — கலவியில் அவன்

88. மேலது 3-2-1
89. தி. வா. மொ. 3—2—2
90. மேலது 4—2—5
91. மேலது 5—1—4
92. மேலது 7—2—1

உறங்கவொட்டான்;பிரிவில் விரஹம் உறங்கவொட்டாது' என்பதை உணர்த்துவர்.

## இசை நுட்பம்

*(1)* **இசைஅறிவு :-**

திருவாய்மொழி ஆயிரமும் 'பண்ணார் பாடல் இன்கவிகள்[93] என்றும் 'பண்தலையிற் சொன்ன தமிழ்'[94] என்றும் நன்குணர்ந்தவர் உரையாசிரியராகிய நம்பிள்ளை. அவாவில் அந்தாதியாகிய சடகோபர் தமிழ் 'நிறம் கிளர்ந்த அந்தாதி'[95] யாக அமைந்து 'இசைமாலைகள்'[96] ஆகித் தொக்குக்கழிந்த சுளை போல் இனிமைதானே வடிவெடுத்துத் திகழ்வதைப் பிறருக்கு உணர்த்துவதையும் தம் கடப்பாடாகக் கருதினார் நம்பிள்ளை. ஆழ்வாருடைய அருளிச் செயல்களைப் பண்ணிலே ஏற்றி இசைக்க வல்லாரே கேசவன் தன் அடியாராவர் என்றமுடிவை கொண்டவர் உரையாசிரியர். 'இசையொடும் பண்ணில்பாட வல்லார் அவர்கேசவன்தமரே'[97] என்ற ஆழ்வார் திருவுள்ளத்தை அடியொற்றியே அங்ஙன் முடிபுகொண்டார். திருவாய்மொழியை முழுதும் நுகர்தற்குத் தக்கோர் பாலேய் தமிழராய் இசைகாரராய்ப் பத்தராயுமுள்ளோரே என்பதும் சடகோபரின் திருவுள்ளமாகும்.[98] இயற்றமிழும் இசைத் தமிழும் பக்தி உணர்வும் கூடிய ஒரு பசுங்கூட்டே திருவாய் மொழியை நுகர வேண்டும் தகுதி என்பதை உணர்ந்தே உரையிடுவர் ஆசிரியர் நம்பிள்ளை. ஈட்டில் வரும் சில இசைநுட்ப உரைகளைக் கொண்டு நம்பிள்ளை தமிழ்ப் பண்ணிசைகளில் பயிற்சி பெற்றிருந்தார் என்று கொள்ளமுடிகிறது. திருவரங்கம் பெரிய கோயிலில் பணியாற்றிய அரையர்கள் வாயிலாக இசையறிவை அவர் ஈட்டியிருக்கலாம். இராமாநுசருக்குத் திருவாய்மொழியை பண்ணிசையில் ஆழ்வார் திருவரங்கப் பெருமாள் அரையர் ஓதுவித்தார் என்றும் அங்ஙன் ஓதுவிக்கவல்லார் பலர் திருவரங்கத்துள் 'செந்தமிழ் பாடுவார் வீதி'யில் நிறைந்திருந்தனர் என்றும் 'ராமாநுஜார்ய திவ்யசூரிசரிதையில் பிள்ளை

---

93. மேலது 10—7—5
94. மேலது 2—8—11
95. மேலது 5—4—11
96. மேலது 4.5-6; 4-5-2; 4-5-5.
97. மேலது 2-6-11

லோகஞ்சீயர் கூறுவர்[98அ].

### (2) பாசுரங்கள் :

திருவாய்மொழிப் பொருளை உணர்தற்கும் இசையறிவு இன்றியமையாதது ; ஆழ்வாருடைய உணர்ச்சிகளை இசை கொண்டே காணமுடியும் என்பது நம்பிள்ளையின் அடிப்படைக் கொள்கை. ஆழ்வாருடைய பாடல்கள் வெறும் புலமையின் வெளிப்பாடன்று; இறையருளின் வெளிப்பாடேயாகும். இதனை உணரத் திருவாய்மொழிப் பண்கள் உதவுகின்றன. திருவாய்மொழி மஹாப் பிரவேசத்திலேயே இக்கருத்தினைத் தெரிவிக்கிறார் 'பகவத் பிரசாத லப்தமான திவ்விய சக்ஷுர் மூலமாகப் பிறந்தன என்னுமிடம் ஸ்வரவசன வ்யக்திகளாலே அறியலாம்'[99] என்பது பிள்ளையின் கருத்து. ஆகவேதான் அருளிச் செயலான பாடல்களைப் 'பாசுரங்கள்' எனக் குறியிட்டு வழங்கினர்.

### (3) பாசுரமான காரணம்

திருவாய்மொழிப் பாடல்கள் பாசுரங்களாக விழுந்தமைக்கும் நம்பிள்ளை ஒரு காரணம் மொழிகிறார். 'ஆற்றாமையாலே துடித்த துடிப்பு ஆடல் ஆனாற்போலே ஆற்றாமையாலே கூப்பிட்ட கூப்பிடும் பாடலாய் விழா நின்றது'[100] என்பது அவருடைய அபிப்பிராயமாகும். 'இசையும் கூத்தும் கவிதையுடன் பிறப்புறவு உடையனவாகும்' என்பர் தமிழண்ணல் அவர்கள்.[101]

### (4) இசைக்குறிப்பு - சான்றுகள்

(1) பராங்குசநாயகியான நிலையில் ஆழ்வார் சில குயில்களைத் தூது போக்குவதற்காக அழைக்கிறார். "போற்றியான் இரந்தேன் புன்னை மேலுறை பூங்குயில்காள்"[102] என்று அவற்றை விளிக்கிறார். இங்கு 'போற்றி' என்பதை எச்சமாகக்

---

98. மேலது 1-5-11
98 (அ) பிள்ளைலோகஞ்சியர், ராமாநுஜார்ய திவ்யசூசரிசரிதை, ப, 62.
99. ஈடு ம.பி (I), சே. கி. பதிப்பு, ப. 143.
100. தி. வா. மொ. 6-1-6
101. தமிழண்ணல், (பு.பெ), 'ஒப்பிலக்கிய அறிமுகம்', ப.129
102. தி. வா, மொ, 6-1-6

கொள்ளாது வியங்கோளாகக் கொண்டு வாழ்த்துவதாக ஆசிரியர் உரையிட்டார். "புன்னையிலே தன் ஆர்த்தத்வநி படும்படி உயரப் 'போற்றி' என்கிறாள்" என்று உரை வகுத்தார். இப்படி உரையிட்டதற்குக் காரணம் கூறும்போது 'இவ்வர்த்தத்துக்கு நிர்ணாயகம் இசையாயிற்று' என்று பட்டர் வாய்மொழியாகக் குறிப்பிட்டதை வலியுறுத்துகிறார்.

(2) *பாமருமூவுலகும் (7-6) என்ற திருவாய்மொழியில் ஆழ்வார்க்கு ஆற்றாமை அளவிறந்து செல்கிறது. அந்நிலையில்' 'என்று கொல் சேர்வது அந்தோ!' [103] என்று பாசுரமிடுகிறார். 'அந்தோ' என்ற சொல்லுக்கு 'நான் முடிந்தேன்' என்று பிள்ளை உரையிடுகிறார். 'ஸ்வரம்' கொண்டு அங்ஙனம் உரை கண்டதாக அரும்பதகாரர் உணர்த்துகிறார்.

(3) 'அஞ்சிறைய மடநாராய்!' [104] என்று தலைவி நாரையின் கால்களில் விழும்போது 'நாராய்' என்ற இசை நீட்சியின் பின்னணியில் சிறு குழந்தையொன்று அன்பின் மிகுதியால் தாயருகே சென்று 'அம்மே' என்று அரவணைப்பதைக் கண்டு வெளிப்படுத்துகிறார். 'ஸ்வரத்துக்கு பாவம்' [105] என்று இதனைச் சொல்லுவர் பிள்ளை.

(4) ஸ்வரம் மட்டுமன்றித் 'தாளம்' கொண்டும் சில போது ஆழ்வாரின் ஆற்றாமை மிகுதியை அறியவேண்டியிருக்கும். 'ஆடியாடி அகம் கரைந்து' [106] என்று தலைவியின் தளர்ச்சியைத் திருத்தாயார் வருணிக்குமிடத்து, "முதல் ஆடி என்கிறதிற் காட்டில் இருகால் மட்டு 'ஆடி' என்றதில் அவஸாதத்தின் மிகுதி தாளம் கொண்டு அறியுமித்தனை' என்று உரைக்குறிப்பை வரைகிறார். இரண்டாமுறை ஒரு தாளம் ஏறியிருக்கும் என்று அக்குறிப்பினை அரும்பதகாரர் விளக்குவர், [107]

(5) திருவாய்மொழிப் பதிகங்களில் ஆழ்வார்க்கு ஓடும் மெய்ப்பாடுகளையும் ஓசை கொண்டு அறிந்து உணர்த்துவர் ஆசிரியர். *அங்குமிங்கும் (8—3) என்ற பதிகத்தில் இறைவனு-

---

103. மேலது 7-6-2

104. மேலது 1-4-1

105. 1.4.1 ஈ

106. தி. வா, மொ, 2-4-1

107. 2.4.1 ஈ

டைய மென்மையை அறிந்து பரியக்கடவார் ஒருத்தருமில்லை; நானும், உதவப் பெறுகிலேன் என்று அவருடைய தனிமைக்கு வெறுத்து அச்சங் கொண்டார். அவ்வச்சம் அடுத்த பதிகத்தில் நீங்கிற்று. 'அந்த பயம் நீங்கிற்று என்னுமிடம் இயல் தழைப்பிலே தெளிந்திருக்கிறபடி கண்டதே' என்று குறிப்பிடுகிறார். இயல் தழைப்பாவது பாசுரத்தின் ஓசை வேறுபாடாம்.[108]

(6) பாசுரங்கட்கிடையில் ஆழ்வார் புதுச் சொற்களைப் புணர்க்குமுன் கால் வாங்கமாட்டாதே நைந்திருந்தபடிகளை யெல்லாம் இசையிலே காண வேண்டும் என்பர் நம்பிள்ளை. 'கண்கள் சிவந்து பெரியவாய் வாயும் சிவந்து கனிந்துள்ளே'[109] என்று ஆழ்வார் அனுபவித்து வரும்போது 'கண்ணிலே துவக்குண்டு கால்வாங்கமாட்டாதே இருக்கிற இருப்பு இசை யிலே காணுமித்தனை' என்று இசை அறிவின் தேவையினை வலியுறுத்துகிறார்.[110] மனநிறைவோடு ஆழ்வாரின் விடாயை அறிய வேண்டுமானாலும் இசையறிவு தேவையே. *முடியானே (3—8) என்ற திருவாய் மொழியில் ஆழ்வாரின் விடாயை விளக்கப்புகுந்த நம்பிள்ளை 'இவர்க்கு இதில் ஓடுகிற விடாயின் பெருமை இசையின் ஓசையிலே காணுமித்தனை. புகும் கிரமங் கள் எல்லாம் இல்லை. இதில் முதலிலே உயர்ந்த தானமாயி ருக்கும்' என்று கூறுகிறார்.[111]

'ஏயில்'[112] 'மேற்கிளை'[113] பஞ்சமமாகிறபண்[114] என்றகுறி யீடுகளைத்தவிர வேறுஇசைத்தமிழ்க் குறியீடுகளைக்குறித்திலர், சொற்பெருக்கினூடே பாசுரங்களைப் பண்ணோடு இசைத் துக்காட்டி விளக்கியிருத்தல் கூடும்; இசை வல்லுநர்க்குமுன் திருவாய்மொழியின் இசைத்திறத்தினை ஆராய்ச்சி செய்திருத் தலும் கூடும். அதன் விளைவாகத் திருவாய்மொழியைச் சாம வேதத்தோடு ஒப்பிட்டு நினைக்கும் நெறியை நம்பிள்ளை

108. 8-4-1 ஈ
109. தி - வா மொ . 8 . 8-1
110. 8-8-1 ஈ
111. 3-8-0 ஈ
112. 4-6- ஈ 2
113. 9-5-4 ஈ
114. 9.9.2 ஈ

அறிஞரிடையே உண்டாக்கினார். நம்பிள்ளையின் ஈட்டைப் பட்டோலை கொண்ட வடக்குத் திருவீதிப் பிள்ளையின் திருக்குமாரரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் திருவாய்மொழியைச் சந்தோக சாமத்தோடு ஒப்பிட்டு அதற்குப் பண், பாலையாழ் என்றும் அறுதியிடுகிறார்.[115] மேலும் ஓசை, பண், இசை, தாளம் ஆகியன திருவாய்மொழிக்குச் 'செய் கோலங்கள்' என்றும் குறிப்பிடுவர்.[116] இக்கருத்துக்கள் யாவும் நம்பிள்ளையின் சொற்பெருக்கில் செய்த ஆராய்ச்சியின் விளைவாகும்.

### கூத்தியல் நுட்பம்

(1) மெய்ப்பாடுகள்:-

திருவாய்மொழிப் பாசுரங்கள் இயலும் இசையும் புணர்ப்புண்டு அமைந்தது போல் மெய்ப்பாடும் அவற்றோடு பொருந்திக்கிடப்பதை உரையாசிரியர் வாய்ப்புக் கிட்டும் போதெல்லாம் சுட்டிக்காட்டுவர். திருவாய்மொழியில் ஓடும் மெய்ப்பாடுகள் இரு திறத்தன என்பது ஆசிரியரின் கருத்தாகத் தெரிகிறது.

(2) அக நினைவும், இறைவன் அவதாரமும் :-

முதற்கண் நம்மாழ்வாரின் அகநினைவுகளில் இறைவனுடைய திரு அவதாரக் காட்சிகள் எழும்போது அவை யாவும் முத்தமிழ்க்குட்பட்ட கூத்தியலிற் கண்ட இலக்கண நெறிமுறைகளைப் பின்சென்றே அமைந்தன என்பது நம்பிள்ளை காட்டும் பேருண்மையாகும். ஆடற்கலையில் வல்லான் ஒருவன் ஆடினாப் போலேயாயிற்று இறைவன் ஆழ்வாருக்குக் காட்டிய 'அவதார சேஷ்டிதங்கள்' என்பர் நம்பிள்ளை.[117] அஞ்சன வண்ணனாகிய கண்ணபிரான் கஞ்சன் வஞ்சம் கடத்தற்காக அவதரித்துச் செய்தன யாவும் 'ஆடல்கள்' என்பர் இளங்கோவடிகள். அவற்றுள் குடக் கூத்து ஒன்றை அடியார்க்கு நல்லார் விளக்குவர்.[118] இதனால் இறைவனது 'அவதார சேஷ்டிதங்கள்'

---

115. ஆசாரியஹிருதயம், சூ. 52

116. மேலது சூ. 69

117. 7-6-2 ஈ

118. அடியார்க்கு நல்லார் உரை. சிலப் 6-46;

கூத்துக்களாக நடிக்கப்பட்டன என்று கொள்ளலாம். நம்பிள்ளையோ ஆழ்வாருடைய அகநுகர்ச்சியில்நிகழ்ந்த அவதாரச் செயல்கள் யாவும் கூத்துக்களாகவே உருவாயின என்று கொள்கைப்படுத்துகிறார். ஆழ்வார் இறைவனைக் 'கூத்தா' என்று அழைக்கும் போதெல்லாம் இவ்வுண்மையை நம்பிள்ளை உணர்த்திச் செல்கிறார். இறைவன் கண்ணனாய்க் குன்றமெடுத்த காட்சி ஆழ்வார் அகத்திரையில் உருவாகின்றபோது அக்கண்ணபிரான் 'திரிபங்கிலட்சணத்துடன்' நின்றான் என்றும் அது ஒரு கூத்து என்றும் அது வல்லார் ஆடினாப் போலே 'ஆகர்ஷகமாயிருந்தது' என்றும் நம்பிள்ளை குறிப்பிடுகிறார்.[119] 'குன்றெடுத்து ஆநிரை மேய்த்து அவை காத்த எம்கூத்தாவோ'[120] என்ற தொடரில் 'கூத்தா' என்ற விளி கொண்டு அங்ஙனம் குறிப்பெழுதுகிறார். இறைவன் திரிவிக்கிரமனாய் உலகளந்த வரலாறு ஆழ்வார் மனத்தில் நிகழ்ந்து அதனை வெளியிடும்போது 'முடிபாதம் எழ' என்பர் ஆழ்வார். அத்தொடர்க்கு உரையிடும் நம்பிள்ளை 'திருமுடியளவும் திருவடிகள் கிளர' என்று முதற்குறிப்பிட்டு உடன் 'முடிமேலே பாதம் எழ' என்றும் உரை காட்டுவர். 'நிருத்த லக்ஷணத்துக்காக' அப்படி உரை காட்டியதாகக் காரணமும் காட்டுகிறார்.[121]

### (3) தலைமகளின் மெய்ப்பாடுகள் :-

அடுத்து ஆழ்வார் தலைமகளாக நிலைமாறிப் பாடுங்கால் ஆழ்வாருடைய திருமேனியில் மெய்ப்பாடுகள் நிகழ்ந்தன என்று நம்பிள்ளை விளக்குவர். அம்மெய்ப்பாடுகள் 'அபிநயங்களாகவும் ஹஸ்த முத்திரைகளாகவும்' அமைந்தன. 'அஞ்சிறைய மடநாராய் அளியத்தாய் நீயும் நின், அஞ்சிறைய சேவலுமாய் ஆவாவென்று எனக்கு அருளி'[122] என்று தலைவி நாரைகளைத் தூது விடும்போது 'எனக்கு' என்று குறிப்பதன் அழுத்தத்தைக் காட்ட, "விரஹம் தின்றதன் வடிவைக் காட்டுகிறார்". என்று குறிப்பிடுவர். ஆழ்வார் தலைவியான நிலையில் ஆற்

---

119. 7-6-2 ஈ

120. தி. வா. மொ. 7.6-2

121. 7.4-1 ஈ

122. தி. வா, மொ. 1—4—1

றாமை மீதூர்ந்து சொல்லப்புக்க வார்த்தையைத் தலைக் கட்ட மாட்டாதே ஹஸ்தமுத்திரையாலே தலைக்கட்டியதையும் ஆங் காங்கே சுட்டிக் காட்டியிருக்கிறார்.[123] *கடல் ஞாலம் (5-6) என்ற திருவாய்மொழியில் ஆழ்வார் தலைமகளாய் மாறி இறைவனாகவே அபிநயித்து அவனுடைய பேச்சுக்களையும் செயல்களையும் அனுகரித்துக் காட்டியதை நன்கு விளக்குகிறார்.

**(4) கூத்தியல் உரைவிளக்கம் — அடிப்படை :-**

நம்பிள்ளையின் இத்தகைய உரை விளக்கங்கள் அரையர் சேவையை அடிப்படையாகக் கொண்டு அமைந்தன என்னலாம். ஆழ்வார் பாடல்களை அரையர்கள் இசைகூட்டிப்பாடியும் அனுகரித்து ஆடியும் மகிழ்வித்தபோது நம்பிள்ளை அவற்றை உன்னித்து உணர்ந்த காரணத்தால் மெய்ப்பாடு தெரிய உரை விளக்கம் கூறும் தூண்டுதலைப் பெற்றார். அரையர் ஆடல்களில தமக்கு முன்னிருந்த ஆசாரியர்கள் செய்த அவிநயத் திருத்தங் களை முற்றும் அறிந்திருந்ததும் அங்ஙன் உரையிட நல்வாய்ப் பாயிற்று.

**உரையாடல் நுழைப்பு**

**1) உரையாட்டு இடையீடு :-**

திருவாய்மொழிப் பாடல்களுக்கு உரையிடும்போது ஆழ் வார்க்கும் இறைவனுக்கும் ஊடே நிகழ்ந்த உரையாடல்களாகச் சிலவற்றை இடைமடுத்து உரைவரைகுவர். ஆழ்வாருடைய கூற்றுக்களிலிருந்து எதிர்த்தலையான இறைவனுடைய கூற்றுக் களைப் பொருத்தமாக ஊகித்துஉணர்த்துவர்.' அவன் வார்த்தை நடுவில் இல்லையானாலும் இடையீடு பொறுக்கக் கடவது'[124] என்று தாம் பற்றும் உரையாடல் உத்தியான இடையீட்டைக் கற்பார் மனங்கொள்ள வேண்டும் என்று வேண்டுகிறார். திருவாய்மொழி அகப்பொருட் பாசுரங்களிலேயே மிகுதியாக இவ் இடையீட்டைப் புகுத்துகிறார். அவ் இடையீட்டிற்குக் காரணத்தையும் அவர் குறிப்பிடத் தவறவில்லை. பாவபந்தம் அடியாக வந்த கலவியாகையாலும், நினைவும் அத்தலையாலே வந்ததாகையாலும்உரையாட்டானஇடையீடுவிழுந்தது என்பது

123. 1-4-1 ஈ

124. 6.2.1 ஈ

அவர்காட்டும் இரு காரணங்கள்.[125] காதல் முன்னாகக் கலந்த கலவியாதலால் ஒரு கருத்தை உள்ளடக்கியே தலைவி கூற்று நிகழும்; தலைவி நினைந்து பேசுகின்ற சொற்கள் யாவும் அவன் கூற்றுக்கு மறுமாற்றங்களே என்ற அடிப்படையை இதனால் அமைத்துக் கொள்வர். இவ்வடிப்படையில் நின்றே *மின்னிடை மடவார் (6-2) என்ற பதிகம் முழுவதுக்கும் உரை கூறுகிறார். தலைவி ஊடிப்பேசிய பேச்சுக்களாதலால், இறைவனாகிய தலைமகனுடைய மாற்றங்களைப் பொருத்தமாக இடைச்செறித்து உரை வகுத்துச் செல்கிறார். அவற்றைத் தலைவன் தலைவி கூற்றுக்களாகத் தொகுத்தால் ஓரங்க நாடகமாக அமையும் முறையில் அவ்வுரை திகழ்கிறது.

தூதுபோக்கும் திருவாய்மொழிகளில் தலைவிக்கும் தூது போக்கப்படும் பறவைகளுக்குமிடையே நிகழ்வதாயும் சில உரையாடல்களை உரையாசிரியர் தொகுத்திருக்கிறார்.

பின்னணி உரையாடல்:-

ஆழ்வார் தாமான தன்மையில் பேசுகின்ற பாசுரங்களை விளக்கச் சிலபோது உரையாடலை முன்மொழிந்துகொள்கிறார்.

> உண்டாய் உலகேழ் முன்னமே உமிழ்ந்து மாயை யால்புக்கு
> உண்டாய் வெண்ணெய் சிறுமனிசர் உவலை யாக்கை நிலைஎய்தி
> மண்தான் சோர்ந்த துண்டேலும் மனிசர்க் காகும்பீர் சிறிதும்
> அண்டா வண்ணம்மண்கரைய நெய்யூண் மருந்தோ மாயோனே![126]

இறைவன் : வாரீர் ஆழ்வீர்; திருவாய்ப்பாடியில் நிகழ்ந்த வரலாற்றைக கேட்டறியீரோ :

ஆழ்வார் : அடியேன், அறியேன்:

இறைவன் : முன்பு ஒரு காலத்தில் பூமியை எடுத்து வயிற்றிலே வைத்தோம்; பின்பு அது தன்னை வெளிநாடு காண உமிழ்ந்தோம். அதில் ஏதேனும் எஞ்சியிருந்-தது உண்டோ என்று கருதித் திருவாய்ப்பாடியில் வெண்ணெய் விழுங்கினோம்.

---

125. மேலது

126. தி, வா. மொ. 1—5—8

ஆழ்வார் : அதனை இதுக்குப்பரிகாரமாகச் செய்தாயோ? அது ஒரு காலவிசேஷத்திலே; இது வேறு ஒரு கால விசேஷத்திலே;

இறைவன் : ஆனால் நாம் இதை ஏதுக்காகச் செய்தோம்? அறிவீரோ?

ஆழ்வார் : அன்பர்களின் கைபட்ட பொருள் உனக்குத் தாரக மாகையாலே செய்தாயத்தனை.

இறைவன் : அப்படி ஆனால் அவ்வெண்ணெய் போலவே உம் முடைய கலவியும் நமக்குத் தாரகங்காணும்; ஆன பின்பு நீர் உம்மைக் கொண்டு அகல்வீராகில், திருவாய்ப்பாடியில் வெண்ணெய் விலக்கினார் புக்க உலகம் புகுவீர் கிடீர் !

இவ்வுரையாடலின் தொகுப்பாகவே மேற்காட்டிய பாடல் விளைந்திருக்கிறது என்பது நம்பிள்ளையின் கருத்து. மேலும் விரித்து எழுதத்தக்க வகையில் பிள்ளை உரையாடலைச் செறி-வுடன் ஈண்டு வரைந்திருக்கிறார். பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான்த்தில் இவ்விடத்தில் இவ்வுரையாடல் அமைக்கப்-படவில்லை. ‘எம்மாவீடு’ என்ற பாசுர வியாக்கியானத்திலும் இதுபோன்ற நெடிய உரையாடலைக் காணலாம்.[127]

திருவாய்மொழிப் பதிகங்களை இயைப்பதற்கு இத்தகைய உரையாடலைத் தனிஉத்தியாக நம்பிள்ளை நன்கு பயன்படுத்தி-யிருக்கிறார்.

## தொடர்வினா அமைப்பு

**(1) அடிப்படை :-**

திருவாய்மொழிப் பாசுரங்களில் குறிப்பை உட்பொதிந்து நிற்கும் தொடர்களுக்கு உரையிடுவதில் நம்பிள்ளை புதுநெறியை முதன் முன்னம் புகுத்தினார். அத் தொடர்கள் ஆழ்வார் அகத்தில் உருவாவதற்கு முன் பல வினாக்கள் பின்னிப் பிணைந்து நின்று அத்தொடர்களை உந்தின என்பது பிள்ளை யின் அரிய கொள்கையாகும். இந்த உத்தியைப் பின்னர் வந்த

---

127. 2-9-1 ஈ

வைணவ உரையாசிரியர்கள் தழுவிக் கொண்டனர். பிள்ளை-யிடம் பாடம் கேட்டுப் பின் உரையிட்ட பெரியவாச்சான் பிள்ளையும் தம் இருபத்து நாலாயிரத்தில் இந்த உத்தியை மேற்கொண்டிருக்கிறார். ஆயினும் பல்வகைத் தொடர் வினாக்களை உரையாகத் தொகுத்து அடுக்கும் முறை ஈட்டி-லேயே அழகுபடமிளிருகிறது.

(2) சான்றுகள் :

(1) 'நரசிங்கா என்று வாடிவாடும் இவ்வாணுதலே'[128] :

'நரசிங்கா' என்ற விளி தலைவி கூற்று. அதன்னைத் திருத் தாயார் எடுத்துமொழிகிறாள். 'நரசிங்கா!' என்ற சொற்குக் கருத்தாக ஆறு வினாக்களைத் தொகுத்திருக்கிறார்.

1. தமப்பன் பகையானாலோ நீ உதவலாவது? நீர் தாமே பகையானால் உதவலாகாரதோ ?
2. ஞானமும் அனுட்டானமும் உடையோர்க்கோ உதவ-லாவது? பக்தி நிஷ்டர்க்கு உதவலாகாதோ?
3. ஆண்களுக்கோ உதவலாவது? பெண்களுக்கு உதவ-லாகாதோ?
4. சேராத வடிவு சேர்த்து உதவிலோ உதவலாவது? இருந்தபடியே உதவலாவார்க்கு உதவலாகாதோ?
5. ஒரு அதிகாரி, கால, அங்கநியதிகள் என்ற கட்டுப் பாடுகள் வேணுமோ?
6. இவளுடைய காப்புக்கு ஏதேனும் முகம் பண்ண வேணுமோ?

திருத்தாயாரின் அனுவாத மொழியில், இத்துணை வினாக் களும் தொடையுண்டன என்பது குறிப்பு. நரசிங்க அவதாரத் துக் கதைச் செய்திகள் ஈண்டு பொருத்தமான வினாக்களாக அமைக்கப்பட்டன.

(2) 'உலகமுண்டபெருவாயா'[129]:

ஆழ்வார் திருமலை எம்பெருமானை ஆர்த்தராய் அடைக் கலமாகப் பற்றும் திருவாய்மொழியில் இறைவனை'உலகமுண்ட

128. தி. வா. மொ. 2-4-1

129. மேலது 6-10-1

பெருவாயா' என்று கூவி விளிக்கிறார். இவ்விளியின் பின்னணியில் எழுந்த வினாக்கள் பத்தினைத் தொடுத்து உரையிடுகிறார் பிள்ளை.

1. தேவரீர் திருவடிகளைக் கிட்டாதவன்று எனக்கு உண்டான தளர்த்தி பத்துப் பிரளயத்தோபாதி போராதா?

2. காக்கப்படும் பொருளின் அளவன்றிக்கே விஞ்சியிருக்கும் பாரிப்பை உடையவனே! உன்பாரிப்புக்கும் என் ஆர்த்திக்கும் என்ன சேர்த்தியுண்டு?

3. நீ அறிந்த சம்பந்தமும் ஆபத்துமே கைம்முதலாகக் காப்பவனன்றோ?

4. ஒரு விபூதிக்காக ஆபத்து வரிலோ நோக்குவது?

5. பிரளயக் கடலில் அழுந்துவாரையோ நோக்குவது?

6. ஆசைப்படாதாரையோ நோக்குவது?

7. சரீரத்துக்கு வரும் ஆபத்தையோ நோக்குவது?

8. ஜலப்பிரளயத்திலே அகப்படிலோ நோக்குவது?

9. பிறரால் வரும் ஆபத்தையோ நோக்குவது?

10. சரணம் புகாதாரை ரக்ஷிக்கவேணும் என்று நியதியுண்டோ?

'அந்திப்போது அவுணன் உடல் இடந்தானே'[130] என்ற இடத்திலும் இது போன்று பல அடுக்கு வினாக்களைத் தொகுக்கிறார். உலகளந்த வரலாறு போன்று பிற அவதாரச் செய்திகள் வரும் இடங்களில் நம்பிள்ளை இத்தகைய உத்தியைக் கையாளத் தவறுவதில்லை.

*(3)* ஏதுவினாக்கள்:-

இனி வினாவாக அமைந்த சில தொடர்களில் உறையும் ஏதுக்களையும் தொடர்வினாக்களாக வெளிக் கொணர்ந்து காட்டும் இடங்களும் உள.

130. மேலது 7.2.5

''வள்ளலே மதுசூதனா என்மரகத மலையே உனைநினைந்து
எள்கல் தந்த எந்தாய் உன்னை எங்ஙனம் விடுகேன் ?''[131]

உன்னை எங்ஙனம் விடுகேன்? உதாரனல்லை என்று விடவோ? விரோதி நிரஸநனல்லை என்று விடவோ? வடிவழகில்லை என்று விடவோ? உன் விஷயத்தில் இப்படி ஈடுபட நான் உன்னை விட ஸம்பாவனை உண்டோ? உன்னை அநுஸந்தித்தால் இதர விஷயங்களில் விரக்தனான நான் விட ஸம்பாவனை உண்டோ''[132]

இவ்வினாக்கள் எல்லாம் வள்ளல், மதுசூதன். மரகதமலை. எந்தாய்என்ற சொற்களின் பொருளாற்றலால் பெறப்பட்டவை. அச்சொற்களை 'ஹேது கர்ப்பங்கள்' என்பர் அரும்பதகாரர்.

### சங்கிலித் தொடர்

(1) விளக்கம் :-

இறைவனுடைய உறுப்பு நலன்களை ஆழ்வார் எண்ணிப் பாடுமிடங்கள் பல. அங்கெல்லாம் அவ் உறுப்புக்களை ஒரு கோவைபட இணைத்து உரை செய்குவர் நம்பிள்ளை.

(2) சான்றுகள்

(1) 'கருவண்ணம் செய்யவாய் செய்யகண் செய்யகை செய்யகால்'[133]

'' இத்தலையை அநந்யார்ஹமாக எழுதிக்கொண்ட வடிவு; அதுதான் மிகையாம்படி 'நான் உனக்கு' என்றாற் போலே சொல்லப்புக்கு விக்கின திருப்பவளம்; அது உக்தி மாத்ரமன்று, அகவாயிலுமுண்டு என்று தோற்றுகிற திருக்கண்கள் ; அத்தை க்ரியா பர்யந்தமாக அநுஷ்டிக்கிற திருக்கைகள் ; அவை அத்தனைக்கும் தோற்று விழும் துறையான திருவடிகள்''

---

131. மேலது 2.6.4
132. 1—7—4 ஈட்டிலும் இம்முறை தழுவப்பட்டுள்ளது
133. தி. வா. மொ. 6.1-7

(2) 'கருமா ணிக்க மலைமேல்மணித்
தடந்தாமரைக் காடுகள்போல்
திருமார்பு வாய்கண்கை உந்திகால்
உடைஆடைகள் செய்யபிரான்.'[134]

''பற்றாசான பெரிய பிராட்டியார் எழுந்தருளியிருக்கும் திருமார்வு :

அவள் வழியாக உறவு பண்ணினார்க்கு அநுகூலபாஷணம் பண்ணுகிற திருப்பவளம் ;

இன்சொல்லுச் சொல்லப்புக்கு அநுகூல தர்சனத்தாலே தடுமாறினால் குறையும் தலைக்கட்டிக் கொடுக்கும் கண்;

நோக்குக்குத் தோற்றாரை அணைக்கும் கை;
உத்தேச்ய பூமியிலே விழா நின்றால் நடுவே
காற்கட்ட வல்ல திரு உந்தி;
இவை எல்லாவற்றுக்கும் தோற்று விழும் திருவடிகள்;
அங்கே கிடந்து அனுபவிக்கும் திருப்பீதாம்பரம்.

## அளவை நெறி

**(1) அளவை நெறி-பயன்பாடு :-**

பேரறிவாளரான நம்பிள்ளை தருக்க மீமாம்சைகளில் பெரும் புலமை படைத்தவர். 'பிரதிபக்ஷ நிரஸனத்துக்கு உறுப்பாக' இவற்றில் புலமை தேடிக் கொண்டிருந்தார் என்பர் பெரியவாச்சான் பிள்ளை. தருக்க நெறிகளில் நுண்மாண் நுழை புலம் மிக்கோராதலால், திருவாய்மொழிப் பதிகங்களின் தாற்பரியங்களை ஆழ்வார் இயல்புக்கு முரணாகாதவாறு நிருவகிக்கிறார்.

**(2) அபத்தம் காட்டுதல் :-**

•வீடுமின் முற்றத்தில் (1-2) ஆழ்வார் பக்தியை உலகினருக்கு உபதேசிக்கிறார். ஆழ்வார் உபதேசிக்கும் பக்தி ஸாத்ய பக்தியா, அன்றி ஸாதன பக்தியா என்று ஆராய நேர்கிறது. ஸாதனபக்தி எனக் கொண்டால் வரும் முடிவு-

---

134. மேலது 8.9.1

களைச் சேர்த்து அவை எல்லாம் 'அபத்தம்' என்று காட்டி மறுதலையான ஸாத்ய பக்தியே என்று கொள்ள வைக்கிறார்.

(3) ஏற்றுமறுத்தல் :-

சில இடங்களில் எதிர்த்தலைக் கூற்றை உடன்பட்டு அதற்கு ஒரு காரணம் கற்பித்துத் தம்முடிவை நிறுவுதலும், அவ் எதிர்த்தலைக் கூற்றை நேராக மறுத்துத் தம் முடிவு நிறுவுதலும் என இருபால் மறுப்பாகஅமைத்தலும் செய்கிறார். இறையருட் பேற்றுக்கு வெறுப்பின்மையும் எதிர் கொள் முகமும் (அத்வேஷம், ஆபிமுக்கியம்) வேண்டுவன என்பது ஓர் கொள்கை. அவை இரண்டும் 'பேற்றுக்கு சாதனம்' என்பது ஒரு சார் முடிவு. அவை சாதனமே ஆனாலும், இறையருட் பேற்றின் கனத்தை நோக்கச் சாதனமாகக் கொள்ளத்தகாது. இதனை 'ஒருவன் ஒரு எலுமிச்சம் பழம் கொடுத்து ராஜ்யம் பெற்றால் அது விலையாயிராதே' என்று உலகியல் காட்டி விளக்குவர். அடுத்து உடனே அவை ஆராயப்புகின் சாதனமே அன்று என்று நிறுவுகிறார். 'ஆராய்ந்தால் அவற்றைப் பிறப்பித்தவனும் அவனே' என்பது அவர் முடிப்புரை.[135] இதனை * பொருமாநீள் படை (1-10) பிரவேசத்திற் காணலாம்.

(4) கடாவிடைகள் :-

நம்பிள்ளையின் தருக்க நெறி ஆய்வின் முழுமையை *ஒன்றும் தேவும் (4-10) திருவாய்மொழிப் பிரவேசத்தில் காண முடிகிறது. 'திருமாலே பரம்பொருள்' என்ற முடிவை நன்கு விவாதித்து நிருணயித்திருக்கிறார். 'இன்ப துன்பங்களுக்குக் காரணம் யாது?' என்று தொடங்கி 'நாராயணனே பரம் பொருள்' என்று முடிக்கிறார். அக் கடா விடைகளாவன:-

இன்ப துன்பங்களுக்குக் காரணம் யாது?

ஒரு நியாமகன் (வகுத்தான்) அநுபவிக்கச் செய்கிறான். புண்ணிய பாபங்களே அநுபவிக்கச் செய்வதாகக் கொண்டால் என்ன?

அவை அசேதன கிரியைகள் (அறிவற்ற வெறும் செயற்பாடுகள்) அவற்றுக்கும் பலன் அளிக்க ஒரு சேதனன் தேவை. ஆகையால், அவைஅநுபவிப்பிக்கவில்லை.

135. 1–10–0ஈ

அபூர்வம்' என்பது பலன் அளிப்பதாகக் கொண்டால் என்ன?

அதுவும் அசேதனமே; ஒரு சேதனனைக் கற்பிக்க வேண்டி வரும். ஆதலின், பரமசேதனன் நெஞ்சிற்-பட்டு நிக்கிரக அனுக்கிரக ரூபங்களால் இன்ப துன்-பங்கள் விளைகின்றன என்று கொள்வதே பொருந்தும்.

'அந்தப் பரம சேதனனின் ஸ்வரூப ஸ்வபாவங்களை எப்படி அறிவது ?

பிரத்யக்ஷத்தால் முடியாது, பொறிகட்குப் புறமா கையால்; ஆகமங்களால் முடியாது, புருடனால் செய்யப்பட்ட குற்றமுடைத்தாகலின்; ஆதலின், ஸாத் விக புராணங்களால் விளக்கமுறுகின்ற வேதமே பிரமாணமாகக் கொண்டு அறியக்கடவது.

ஸாத்விக புராணம் என்று புராணபேதம் கொள்ளலாமா?

குணபேதங்களாலே புருஷபேதங்களைக் கொண்டு அவ்வழியாலே புராணபேதம் கொள்ளலாம்.

வேதத்தில் இரு பிரிவுகள் ஏன்?

தத்துவம், அதை வழிபடல் என்ற இருமையால்;

வேதத்தின் மூலம் உபாசிக்கப்படும் பொருள் யாது?

உலகுக்குக் காரணவஸ்துவே வழிபடற்குரியது;

காரண வஸ்து யாது ?

'நாராயணன்' என்ற சொல்லுக்குப் பொருளாக இருப்பது;

அது யாங்ஙனம்?

அச்சொல் காரண இடுகுறிகையாயாலே

நீண்டதடைவிடைகளுடன் பல நியாயங்களைக் காட்டிக் கொள்கையை நிறுத்தும் உரை நெறிகளைக் காணும் போது இறையனார் களவியலுரைகாரரை நினைப் பூட்டுகிறார் *மாலை நண்ணி (9—10) பிரவேசத்தில், ஆழ்வார்க்கு உடலிறுதிக்கண் வீடுபேறா அன்றி வினை யழிவிற்கண் வீடுபேறா என்பதை மிக விரிவாகத்தடை விடைகளுடன் ஆய்வு செய்து உடலிறுதிக்கண்ணேயே வீடுபேறு என்பதை நிலைநிறுத்துகிறார். மேலும், ஆழ்வார்க்கு உடல் அழிவு சரணம் புக்கவப்போதே விளையாது நான்கு நூல்கள் அருளுமளவு கால நீட்-டிப்பு நிகழ்ந்தற்குக் காரணத்தையும் கடாவியறிந்து தெளிவு பெறுத்துகிறார்.

# இயல்:- 4. உத்தித்திறன் (தொடர்ச்சி)

## தொடர்களைப் பிரித்தல்

வடமொழியாளர் வியாக்கியானத்திற்கு இலக்கணம் கூறு கையில், "பதச்சேத: பதார்த்தோக்தி: விக்ரஹோ வாக்ய யோஜநா ஆக்ஷேபஸ்ய ஸமாதாநம் வ்யாக்யாநம் பஞ்சலக்ஷணம்' என்று கூறுவர். அவற்றில் பதங்களைப் பிரித்தல் பொருளை உணர்ந்து கொள்ள இன்றியமையாததாகும். ஆழ்வார் பாசுரங் களில் ஒன்றுக்கு மேற்பட்ட சொற்கள் புணர்ப்புண்டு விழுந்த போது ஆழ்வார் திருவுள்ளத்தில் ஓடிய கருத்துக் கோவையைக் காண அப்பாடல்களில் வரும் சொற்றொடர்களைப் பல்வகை யானும் பிரித்துப் பொருள் காண்பது நம்பிள்ளையின் ஒரு உரைகாண்நெறியாகும். அவற்றுள் பிரகரணத்துக்குப் பொருந்து மவற்றை முன்மொழிதல் பிள்ளையின் இயல்பாகும்.

**சான்றுகள்:-**

(அ) 'முன்னல் யாழ்பயில் நூல் நரம்பின் முதிர்சுவையே'[1] என்று ஆழ்வார் இறைவனை விளிக்கிறார். இத்தொடரை மூன்று வகையாகப் பிரித்துப் பொருள் காண்பர் நம்பிள்ளை.

(1) முன்னல் யாழ்பயில் நூல்

முனல் யாழ்பயில் + நூல் → முரல் + யாழ் + பயில் + நூல்; ஈண்டு முரல் என்பது முனல் ஆகி, முனல் விரித்தல் விகாரப் பட்டு முன்னல் ஆகியது என்பது அவர் கருத்து. "முரலுகின்ற யாழ் விஷயமாகப் பயில்கின்ற நூல் முறையில் நரம்பிலே தடவப்பட்டு முதிர்ந்த சுவை' என்பது தொடர்ப் பொருள்.

(2) முன்னல் + யாழ்பயில் + நூல்......சுவையே: முன்னல் என்பது உன்னல் என்று பொருள்பட்டுச் சுவைக்கு அடைமொழி யாகிறது என்பர், "இனிமையாலே அது, அது என்று வாய் புலற்றும்படியிருக்கை" என்று அதை விளக்குவர்.

(3) முன் + நல் + யாழ்பயில் + நூல்: ஈண்டு முன் நல் என்பன நூலுக்கு அடைமொழியாக்கப்பட்டன. "பழமையாய் அது தான் நன்றாய் யாழ் விஷயமாக அப்யசிக்கப்படுவதான நூல்" என்பர்.

(ஆ) "செய்குந்தாவருந் தீமை உன்னடியார்க்குத் தீர்த்து"[2]

---

1. தி. வா. மொ. 2 - 3 - 7
2. மேலது 2 - 6 - 1

*(1)* செய்குந்தாவருந் தீமை = செய் + குந்தா + வரும் + தீமை :

''செய்யப்பட்டுக் குந்தாவாய் (தப்பாவாய்) வரும் தீமை'' என்று பொருள் கூறுவர்.

*(2)* செய்கும் + தாவரும் + தீமை :
''செய்யப்பட்டுக் கடக்க அரிதான தீமை'' என்பது மற்றொரு பொருள்,

(இ) 'நின் மாட்டாய மலர் புரையும் திருவுருவம்'[3]

*(1)* நின்+ மாடு + ஆய (மாடு = பக்கம்) = ''உன் பக்க லிலேயான''

*(2)* நின் + மட்டு + ஆய (மாடு → மாட்டு = தேன்) = ''மதுஸ்யந்தியாகையாலே நிரதிசயமான திருமேனி.'' தேன் பெருகும் மலர் போன்ற திருமேனி என்று பொருள்.

*(3)* நின் + மாடு + ஆய (மாடு = செல்வம்) = ''உன்னு டைய நிதிபோலே''

## சொல்லும் பொருளும்

**பொருள்கூறும் முறை :**

பாடலில் வரும் அரிய சொற்களைச் சிலபோது தனித் தெடுத்துப் பொருள் கூறுவது பிள்ளையின் இயல்பு. இன்ன சொல்லுக்கு இப்பொருள் என்று எழுதுவதில்லை. 'இன்ன சொல் இதற்குப் பேர்' என்று குறிப்பிடுவது நம்பிள்ளையின் தனிவழியாகும். எடுத்துக் காட்டாக, '' 'மருள்' என்று 'அறிவின் மைக்குப் பேர்' '' என்ற விளக்கம் காண்க.[4] பிள்ளையின் ஈட்டில் வரும் சொற்பொருள் காட்டும் முறைகளிற் சில வருமாறு :-

| | |
|---|---|
| சிறை என்று சிறகு[5] | ஒற்கமாவது நடுங்குதல்[9] |
| அலங்கல் என்பது மாலை[6] | பண் ஆகிறது கானம்[10] |
| பால் என்றது இடம்[7] | வேற்றொர் உண்டு சத்துருக்கள்[11] |
| கோழி என்கிறது மயிலை[8] | கட்டல் களைதல்[12] |

3. மேலது 3-1-4
4. 10-6-1 ஈ
5. 1-4-1 ஈ
6. 3-10-9 ஈ
7. 1-7-2 ஈ
8. 9-5-4 ஈ
9. 1-8-4 ஈ
10. 2-6-11 ஈ
11. 2-1-7 ஈ
12. 1-3-5 ஈ

**வடமொழிப் பொருள் :-**

தமிழ்ச் சொற்களுக்குப் பொருளை வடமொழியில் காட்டுவது பிள்ளையின் ஒரு நெறியாகும். பரிதியாரின் குறள் உரையிலும் இப்போக்குக் காணப்படுகிறது. இதற்குக் காலத்தின் செல்வாக்கே காரணம். இதனால் ஒரு அரிய நற்பயன் விளைந்திருக்கிறது. வடமொழிக் குறியீடுகளான சமயக் கோட்பாட்டுச் சொற்களுக்கு ஏற்ற தூய தமிழ்ச் சொற்களை நாம் பெறமுடிகிறது. அவற்றில் சில பின்வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| கிருபை | — அளி[13] | ஆவிர்ப்பாவம் | — தோற்றம்[23] |
| ஸர்வேசுவரன் | — தம்மான்,[14] அம்மான் | உத்ஸவம் | — சாறு[24] |
| புருஷார்த்தம் | — சிறப்பு[15] | ஸ்வபாவம் | — இயல்வு[25] |
| ஏகார்ணவம் | — மூழ்த்த நீர்[16] | ஸ்தைர்யம் | — வன்மை[26] |
| வியாப்தி | — சூழ்ச்சி[17] | ஸ்வாமி | — திருவடி[27] |
| விசசேதம் | — தவிவு[18] | ஸம்ருத்தி | — மல்லை[28] |
| மோக்ஷம் | — இறப்பு[19] | ப்ராப்யம் | — சார்வு[29] |
| நித்யசூரிகள் | — மேலாத் தேவர்[20] | பாபம் | — செடி[30] |
| போக்தா | — மணாளன்[21] | ஸம்பந்திகள் | — உற்றார்[31] |
| மர்யாதை | — கட்டு[22] | ஞாதிகள் | — சுற்றத்தவர்[32] |

**வழக்கச் சொல் :-**

பறவை. விலங்குகள், பூக்களைக் குறிக்கும் சொற்களுக்குத் தம் காலத்து வழக்கச் சொல்லால் பொருள் கூறுகிறார்.

---

13. 1 - 4 - 1 ஈ
14. 1 - 5 - 9 ஈ, 5 - 1 - 7 ஈ
15. 2 - 9 - 4 ஈ
16. 3 - 1 - 7 ஈ
17. 3 - 2 - 4 ஈ
18. 3 - 4 - 4 ஈ
19. 4 - 1 - 10 ஈ
20. 5 - 1 - 8 ஈ
21. 6 - 6 - 1 ஈ
22. 6 - 6 - 10 ஈ
23. 6 - 8 - 11 ஈ
24. 7 - 4 - 2 ஈ
25. 7 - 6 - 10 ஈ
26. 7 - 7 - 2 ஈ
27. 8 - 4 - 7 ஈ
28. 9 - 1 - 6 ஈ
29. 10 — 4 — 1 ஈ
30. 1 - 5 - 7 ஈ
31. 9 — 1 — 1 ஈ
32. 9 — 1 — 1 ஈ

கணவலர் — காக்கணம்பூ[33] புதா — பெருநாரை[36]
குருகு — கொய்யடிநாரை[34] கடையா—மூங்கிற்குழாய்[37]
பூவை — நாகணவாய்ப்புள்[35]

அரிய விளக்கங்கள் :-

'துந்தி என்று திருநாபிக்குப் பேர்.'[38] கொப்பூழைக் குறிக்கும் இச்சொல் இன்று 'தொந்தி' என்று வழங்குகிறது.

வைகும்-கழிகின்ற.[39] நெடுகுதல் என்றும் வேறிடத்துக் கூறுவர்.[40] நச்சினார்க்கினியரும் சிவஞான முனிவரும் முதற் பொருளைக் கொண்டனர்.[41]

நமன்றெழுதல்-வணங்கிக் கொண்டு எழுதல்[42]. நமன்று என்பது 'நமவென்று' என்பதன் தொகுத்தலாய்க் கொள்ளப் பட்டது. அதாவது 'நம:' என்று சொல்லி எழுதல் நம:- வட சொல்

கழிகோல் ''முன்னணைக்கன்று பசுக்களோடே போனால் முலையுண்ணாமைக்குக் 'கொறுக்கோல்' என்று அதன் மூஞ்சி யிலே கட்டிவிடுவர் அத்தைச் சொல்லுதல்''[43]

குதிரி : குத்ஸிதஸ்திரீ குந்திரி என்று ஆகிப்பிறகு குதிரியாயிற்று எனக் கொண்டு 'தடையில்லாப் பெண் என்று பொருள் கூறினார். மேலும் குதிரிஎன்பது செப்பு செப்பாவது அணிகலன் இடுவது. பெண்ணுக்கு அணியான நாணும் நிறையும் இடப்பெறாத வெறும் செப்பாகிய சரீரம் என்று பொருள். மூன்றாவதாக, பனைமடலைக் குதிரை யாகப் பண்ணிக் கையிலே யுடையவள் என்றும பொருள் குறித் தார்.[44]

---

33. 1—2—8 சு
34. 1—4—4 சு
35. 1—4—8 சு
36. 6—8—9 சு
37. 4—8—4 சு
38. 1—3—9 சு
39. 2—6—1 சு
40. 6—4—3 சு
41. நச்சினார்க்கினியர் உரை, சீவகசிந்தாமணி, உ. வே. சா (ப. ஆ), 1969, செ. 156, ப. 84; சிவஞான முனிவர், தொல்காப் பியச் சூத்திரவிருத்தி, கழக வெளியீடு. 1954, ப, 53.
42. 3-3-7 சு
43. 4-8-4 சு

கன்: தொழில், செம்பு; செம்புத் தொழிலாளரைக் 'கன்னார்' என்பது வழக்கு.[45]

தீ: தித்திப்பு[46]

தீம்: இனிமை[47]

## வரையறைகள்

விளக்கம்:

சில சொற்களுக்கு நீண்ட அரிய விளக்க வரையறைகள் வரைவது ஈட்டிற் காணப்படும் அரிய நெறியாகும். அவை நயமிக்கனவாகவும் குறிப்பிற்குச் சேர்வனவாகவும் உளவியல் உலகவியல் தழுவியனவாகவும் அமைதலைக் காணமுடிகிறது.

சான்றுகள்:-

(அ) மாணி—"உண்டு என்று இட்டபோதோடு இல்லை என்று தள்ளிக் கதவடைத்த போதோடு வாசியற முகம் மலர்ந்து போம்படி இரப்பிலே தழும் பேறின வடிவையுடைய னானபடி"[48]

இஃது மாணியிலுள்ள 'மாண்' என்ற பகுதியின் விளைவான வரையறை.

(ஆ) ஸௌலப்பியமாவது—ஸ்ரீ வைகுண்டம் கலவிருக்கையாக உடையவன் அங்கு நின்றும் ஸம்ஸாரிசேதனர் நின்ற இடத்தே வந்து அவதரித்து எளியனாகை;"

ஸௌசீல்யமாவது — "இப்படி, தாழவிட்டால் 'சிறியார் அளவில் நம்மைத் தாழவிட்டோமே' என்று தன் திருவுள் ளத்திலுமின்றிக் கேயிருக்கை."

ஆர்ஜவகுணமாவது; "இப்படி, பொருந்தினால் நினைவும் சொலவும் செயலும் ஒருபடிப்பட்டிராதே பல வகைப்பட்ட சேதனரோடு தான் பரிமாறுமிடத்தில் அவர்கள் போனவழி தனக்கு வழியாம்படி தான் அவர்களுக்குச் செவ்வியனாய்ப் பரிமாறுகை"[49]

---

44. 5-3-9 ஈ
45. 5-8-1 ஈ
46. 5-9-8 ஈ
47. 6-4-2 ஈ
48. 1-4-3 ஈ
49. 1-8-0 ஈ

எளிமை, சீலம், செம்மை ஆகிய மூன்று நலன்களை ஒன்றோ டொன்று தொடர்புபடுத்தி நுண்ணிய வேறுபாடுகளைத் தெளி வாக்கி விளக்கம் அமைக்கப் பட்டிருக்கிறது, இவற்றிலிருந்து ஸௌலப்யம், ஸௌசீல்யம், ஆர்ஜவம் என்ற வடசொற்களுக்கு நேரான எளிமை, தாழ்ச்சி, செவ்வி ஆகிய தமிழ்ச் சொற்கள் கிடைக்கின்றன.

(இ) இந்திரியங்களைப் 'பொறி' என்பதன் காரணம்: "சில பதார்த்தங்களை வறை நாற்றத்தைக் காட்டி முடிக்குமா போலே, சப்தாதிகளிலே மூட்டி நசிப்பிக்கையாலே 'பொறி'என்கிறது."[50]

(ஈ) குடக்கூத்து:- "இடையர் செருக்குக்குப் போக்கு விட்டு ஆடுவது ஒரு கூத்து" "பிராம்மணர் ஐச்வர்யம் விஞ்சி-னால் யாகங்கள் பண்ணுமாபோலே, இடையர் ஐச்வர்யம் மிகுந்தால் செருக்குக்குப் போக்கு விடுவது ஒன்று"[51]

களனிழைத்தல்:- "க்ஷுத்ர தேவதைகள் வந்து ஸந்நிதி பண்ணும் ஸ்தலங்களிலே, நாற்சந்தி தொடக்கமான வற்றிலே அவற்றுக்குச் சொல்லுகிற நியமங்களோட இடுதல்"[52]

குரவைக்கூத்து:-' கைகோத்துக்கொண்டாடும் கூத்திறே[53]
குணாலை:- "தடுகுட்டம், அதாவது அடைவுகெடப் பண்ணும் விகாரம்"[54]

குழகுகை:- "யுவாக்களாயிருக்குமவர்கள் எதிர்த்தலை தங்களுக்கு அபவ்யமானால் அவர்களைச் சேரவிட்டுக் கொள்ளுகைக்காகப் பண்ணும் சேஷ்டிதங்கள்"[55]
'குழைதல்' என்று இக்காலத்தே வழங்குகிறது.

கோயின்மை செய்தல்:- 'எதிர்த்தலை இசைவின்றிக்கே யிருக்க அவர்கள் லீலோபகரணங்களை எடுத்துக் கொள்வது'[56]

50. 2-8-4 ஈ
51. 4-4-6 ஈ
52. 4-6-4 ஃ
53. 6-4-1 ஈ
54. 3-5-3 ஈ
55. 6-2-6 ஈ
56. 6-2-6 ஈ

(ஊ) கோட்டை : 'புறம்புள்ளாரால் புகுர வொண்ணாததுமாய் உள்ளுள்ளாரால் புறப்படவும் ஒண்ணாதே புக்கவிடமும் புறப்பட்ட விடமும் தெரியாததாயிருக்கும்' [57]

கையறை: ''கையும்அணியும் வகுத்து அங்கோடு இங்கோடு உலாவிப் படை பொருத்தி 'நீங்கள் இன்னபடி செய்யக் கடவிகோள்; நாங்கள் இன்னபடி செய்யக் கடவோம்' என்று கைதட்டிவிடுதல்''. [58]

(எ) பொய் : 'பிறரைப்பகட்டுகை'

கைம்மை : 'ஸர்வக்ஞனும் 'இது மெய்' என்று பிரமிக்கும் படியான பெரும் பொய்' [59]

(ஏ) அசுணமா : 'இவை பிடிகொடாது ஒன்றுக்கும்; அவை பிடிக்க நினைத்தார் முற்படப் பாடுவார்கள்; அது கேட்டு நெஞ்சு நெகிழும்; அனந்தரம் பறை யடிப்பார்கள்; இதில் வன்மையாலே பட்டுக்கிடக்குமாம்' [60]

(ஐ) மறை : 'நாஸ்திகராயிருப்பார்க்குத் தன்படிகளை மறைக் கையால் மறை' [61]

(ஒ) முந்நீர்: 'ஆற்றுநீர் ஊற்றுநீர் வர்ஷ ஜலம் என்றுசொல்லு கிறவற்றை' மேலும் 'முன்னீர்' என்று கொண்டும் விளக்கம் தருகிறார்.

முன்னீர் : படைப்பு அடைவில், நீரைப் படைத்த பிறகே அண்டம் படைக்கப்பட்டது என்ற வேத வாக்கியத்தைக் கொண்டு முற்பட்ட நீர் என்பர்'. [62]

(ஓ) கற்றல் : 'முதல் நடுவு இறுதி தன் நெஞ்சிலே ஊற்றிருக் கும்படி வாஸனை பண்ணுகை' [63]

---

57. 4-9-9 ஈ

58. 7-4-5 ஈ

59. 5-1-1 ஈ

60. 6-9-9 ஈ

61, 3-1-10 ஈ

62. 3-2-1 ஈ

(ஔ) கேட்டல் : 'கற்றான் ஒருவன் ஒரு பொருளை விளக்கினால் அத்தைப் புத்திபண்ணி விசுவசித்திருக்கை.'[64]

## வடசொற்பொருள்

பாசுரங்களில் வரும் வடசொற்களுக்குப் பொருள் குறிக்கும் போது அவ்வடசொல்லுக்குள்ள தாதுவின் பொருந்திய பொருள்கள் அனைத்தையும் நினைவிற்கொண்டு எழுதுவது நம் பிள்ளையின் முறையாகத் தெரிகிறது.

**சான்றுகள் :-**

(அ) '' பூவில் நான்முகனைப் படைத்த தேவன்'' :
மேற்கண்ட தொடரில் 'தேவன்' என்றசொற்குப் பொருளாக,

'' சதுர்முக ஸ்ரஷ்டாவாகையால் வந்தத்யுதியைச் சொல்லுதல், இது தன்னை லீலையாக உடையவன் என்னுதல், ஸௌந்தர்யாதிகளால் வந்த விளக்கம் என்னுதல்''[65]

ஈண்டு, ஒளி, விளையாட்டு, விளக்கம் என்ற மூன்று பொருள் வரைகிறார். 'திவு' என்கிற வடமொழித் தாதுவின் பல் பொருளில் ஈண்டுப் பொருந்தியனவற்றை அப்படி எடுத்து வரைகிறார்.

(ஆ) வடசொல் தமிழில் தற்பவமாக வரும் போது அதன் வடமொழி வடிவங்களைக் கொண்டு பல்பொருள்வரைதலும் அவருடைய மற்றொரு நெறியாகக் காணப்படுகிறது.

''என் சவிப்பார் மனிசரே'' என்கிற தொடரில் சவிப்பார் என்பதை ஜபிப்பார், சபிப்பார் என்ற இரு சொற்களின் தற்பவமாகக் கொண்டு இருபொருள் வரைகிறார். ''அவர்கள் இருந்து செவிப்பறை பறைந்து ஜபிக்கிறது 'என் என்பது? என்னுதல்; அவர் சாபாநுக்ரஹ ஸமர்த்தரோ? என்னுதல்'' என்பது அவர் வரையும் இருபொருள்கள்.[66]

---

63. 7-5-3 ஈ
64. 7-5-3 ஈ
65. 2-2-4 ஈ
66. 3-5-5 ஈ

## இருமொழிப் பொதுச் சொற்கள்

சில சொற்கள் வடமொழியிலும் தமிழிலும் ஒரே வடிவா யிருக்கும், ஆனால் பொருள் வேறுபட்டிருக்கும். அத்தகைய சொற்கள் வருமிடத்து இருவகைப் பொருளையும் காட்டுவது பிள்ளையின் நெறியாகக் காணப்படுகிறது.

சான்றுகள் :-

*(அ)* 'அசுரர்கட்குத்தீமை செய் குந்தா'[67]

'குந்த :' என்பது வடமொழியில் இறைவனுக்குப் பெயராகப் படிக்கப்பட்டிருக்கிறது. அதுவே தமிழாகி விளி யேற்றிருக்கிறது என்று ஒரு பொருள். குருந்தம் என்ற தமிழ்ச் சொல் இடைக்குறையாய் 'குந்தம்' என்றாகி விளி ஏற்றிருக் கிறது என்று மற்றொரு பொருள். குருந்தமலர் வெள்ளை நிற முடையது. வெண்மை புனிதத்திற்கு அடையாளம். ஆகவே, 'புனிதமானவனே' என்று அதற்குக் கருத்துப் பொருள் காண்பர்.

*(ஆ)* ''வேம் கடங்கள்'[68]

'கடன் என்ற தமிழ்ச்சொல் 'கடம்' என்றாகிப் பன்மை விகுதி பெற்றதாகக் கொண்டு தேவர் முனிவர் தென்புலத்தார்க்கு இறுக்கும் தொல் கடன்கள் என்று ஒரு பொருள். 'கடம்' என்ற வடசொல் தற்பவம் பன்மைவிகுதி பெற்றதாகக் கொண்டு 'பாபங்கள் நசிக்கும்' என்று பொருள் வரைந்தார்.

## வடமொழியாக்கம்

தமிழ்த்தொடர்களை வடமொழியாக்கம் செய்துகொண்டு அதற்கு ஏற்பப் பொருள் வரைதல் இவ்வுரையாளரிடத்தே மட்டும் காணப்படும் அரியநெறியாகும்.

சான்றுகள்

*(அ)* 'பத்துடை அடியவர்' :[69] பத்தரான அடியவர் என் னாதே பத்து உடை அடியவர் என்றதால், பத்தியைக் கனத்த *(மிக்க)* உடைமையாகக் கொண்டோர் என்றுபொருள் சுட்டு கிறார். பத்துடை = பக்திமான், என்று கொண்டு 'மான்' என்ற

---

67. தி. வா. மொ. 2 – 6 — 1
68. மேலது 3 - 3 . 6
69. மேலது 1 — 1 — 6

மதுப்பு (விகுதி) பூமாவிலே என்பர். அதாவது மதுப்பிற்கு நிறைவு என்பது பொருளாகும் ஆகவே 'கனத்த' என்ற பொருளைக் கொண்டார்.

(ஆ) 'திருவுடை மன்னரைக் காணில்,[70] என்பதற்குக் 'குறை வற்றஐச்வர்யங்களையுடைய ராஜக்களைக்காணில்' என்று பொருள் பணித்தார். திருவுடை என்பதை 'ச்ரீமாந்' என்றாக்கி அதன் பூமா ப்ரத்யயத்தின் (விகுதிப் பொருளைத்) தழுவினார்.

## உலக, அரசியல் வழக்குகள்

உலகவழக்குகளை உன்னித்துக் கண்டு நன்கு பட்டறிவு கைவரப் பெற்றவர் நம்பிள்ளை, நாட்டார் நகரத்தார் வழக்-கங்களையும் அரசியலதிகாரிகள் சாமந்தர்கள் பேரரசர்கள் இயல்புகளையும் உரையிடுவதற்கு நன்கு பயன்படுத்துகிறார். வேறு உரையாளர் எவரும் இத்துணை அளவு தம் கால வழக்குகளைக் காட்டி உரை செய்யவில்லை. இவர் காட்டும் வழக்குகளும் மாந்தர் மன இயல்புகளும் உவமைகளாகவும் தனிச்செய்தித் திரட்டுக்களாகவும் ஆங்காங்கே மிளிருகின்றன.

சான்றுகள் :

(1) 'வீடுமின் முற்றவும்'[71] என்றவிடத்து முதலிலேவீடுமின் என்பானேன் என்னில், என்று வினா எழுப்பி உலகவழக்குகள் காட்டிச் சமாதானம் செய்கிறார்,

சிறு குழந்தை பாம்பு ஒன்றைக் கைப்பிடித்தால், முதலில் 'கீழேபோடு' என்றுதானே கூறுவார்கள்; தீக் கொளுவிய அகத்தில் உறங்குமவனை 'வெளியேவா' என்றுதானே முதலில் கூவுவார்கள். பிறகே 'பாம்பு' என்றும் 'நெருப்பு' என்றும் உணர்த்துவார்கள்.

(2) 'அவரவர் சமயந்தொறும் தோய்விலன்'[72] உயிர்ப் பொருள் உயிரல் பொருளாகிய அனைத்திலும் ஊடுபுக்கு உறை

---

70. மேலது 4 — 4 — 8

71. மேலது 1 , 2 . 1

72. மேலது 3 . 4 . 10

யினும் அவற்றினுடைய குற்றங்களில் தோய்வு இல்லாதவன் இறைவன் என்பர் ஆழ்வார். உயிரல் பொருளாகிய அசித்தின் சேர்த்தியன்றோ இன்ப துன்பங்கட்குக் காரணம், அப்படியே அசித்தினுள் வியாபிக்குமிடத்து அதன் குற்றம் இறைவனைத் தொடாதோ என்னில், தருக்கநெறிகளாலோ வேதாந்த வாக்கியங்கள் கொண்டோ கூறாது கற்பார் உளங்கொள்ளுமாறு உலகியல் காட்டிச் சமாதானம் கூறுகிறார் :

> "சிறைக் கூடத்தில் சிறையனும் கிடந்தான், ராஜ குமாரனும் இருந்தான். சிறையன் கர்மம் அடியாக ப்ரவேசிக்கையாலே துக்க ஹேதுவாயிற்று; ராஜ குமாரன் இச்சையாலே ப்ரவேசிக்கையாலே போக ரூபமாயிருந்தது"

(3) "முடியானே (3—8) என்ற திருவாய் மொழியில் ஆழ்வார்க்கு அளவிறந்த பெருவிடாய் அகத்துப் பிறந்து அது கரை புரண்டு ஐம்பொறிகளும் விடாய்த்து ஒன்று மற்றதன் செய்கையை ஆசைப்பட்டும் அவை எல்லாவற்றினுடைய செயல்களைத் தாம் ஆசைப்பட்டும் தம்மிலும் விடாய்த்த பொறிகளும் அவற்றினும் விடாய்த்த தாமுமாய்க் கிடந்து துடித்தார். அவருடைய துடிப்பை உணர்த்துவதற்கு உலகியற் காட்சி ஒன்றை எடுத்துக் காட்டுவர் :

> "க்ஷாம காலத்திலே பஹுப்ரஜனானவன் தன் பசிக்கு ஆற்றமாட்டாதே ப்ரஜைகள் பசிக்கு ஆற்றமாட்டாதே, அவற்றின் வாயிற் சோற்றைத் தான் பறித்து ஜீவிப்பது, தன் வாயிற் சோற்றை அவை பறித்து ஜீவிப்பதாய் 'என் பசிக்கு என் செய்வேன்? என் ப்ரஜைகளின் பசிக்கு என் செய்வேன்? என்னுமாபோலே"[73]

(4) 'உண்டும் உமிழ்ந்தும்'[74] என்ற பாடலில், இறைவன் உலகை உண்டு உமிழ்ந்து கடந்து இடந்து செய்த வரலாறுகளை அடுக்கிக் 'கண்டவாற்றால் தனதே உலகென நின்றான்' என்று குறிப்பிடுவர். பிரமாணங்கள் வேண்டாதே இச் செயல்

---

73. 3.8-0 ஈ

74. தி. வா. மொ. 4.5.10

க்ளைக் கொண்டே இறைவனுக்கே இவ்வுலகு உரியது என்பதை ஆழ்வார் கருத்தாகக் கொண்டு அதனைத் தெளிவுறுத்த,

> ''ஒருவன் ஒரு க்ஷேத்ரத்தைத் திருத்துவது கமுகுவைப்பது எருவிடுவதாய்க் கிருஷிபண்ணா நின்றால் 'இது இவனது' என்று அறியலாமிறே''

என்ற உலகியல் காட்டுகிறார்.

(5) தளிர்நிறத்தால்[75] என்ற பாட்டில், 'களிமலர்த் துழாய் அலங்கல் கமழ் முடியன்' என்ற தொடர்க்கு உரையிடும்போது இறைவன் கலம்பக மாலை கொண்டு முடியில் வளையம் சூடி-னாலும் ஆழ்வார்கள் அவற்றைத் திருத்துழாய் என்றே சொல்லுவார்கள் என்ற ஒரு மரபைக் காட்டுகிறார். அதனைக் தெளிவிக்க,

> 'பாண்டியர்கள் மற்றையார் கருமுகைமாலையைக் கொண்டு வளையம் வைத்தாலும் அவர்களுக்கு அஸாதாரணமான வேம்பு மற்றையவற்றை யிட்டிறே கவி-பாடுவது''

என்ற அரசியல் மரபை எடுத்துக் காட்டுகிறார்.

(6) *நண்ணாதார் முறுவலிப்பவில் (4—9) ஆழ்வார் உலகரின் போக்குகளையும் கொடுஞ் செயல்களையும் நினைத்து வருந்துகிறார். அதில்

> '' மறுக்கிவல் வலைப்படுத்திக் குமைத்திட்டுக் கொன்றுண்பர்
> அவப்பொருளை அறிந்து ஓரார் இவை என்ன உலகி-
> யற்கை''[76]

என்று உலகரின் கொடுவியல்பை ஆழ்வார் வருணிப்பர். இவ் வடிகட்குப் பிள்ளை உலகியற்கைகளைக் காட்டிப் பொருளை உணர்த்துவர்.

> ''கிராமணிகள் திரவ்யார்ஜனம் பண்ணும்படி:
> 'ஸாது' என்று தோற்ற வர்த்திப்பான் ஒருவன், 'ஒரு தேசத்திலே வர்த்தியா நின்றால் ஓரபாச்ரயத்தைப் பற்றியிருக்க வேணும்' என்று ஒரு கிராமணிபாடே சென்று சேரும். 'இவன் சாது' என்று தோற்றினவாறே

---

75. மேலது 4-8-5
76. மேலது 4.9.6

'உன்னை இன்னாரும் இன்னாருமாக இன்னபடி சொன்னார்களீ' என்னும்; அவன் பீதனாய், 'இவன் நமக்கு ரக்ஷகன்' என்று விச்வஸித்தபடியாலே அதுக்குப் பரிஹாரம் என்?' என்று இவன் தன்னையே கேட்கும்; 'உனக்கு ஒன்று வந்தால் சொல்லலாவதில்லாதபடி என் அகத்திலே உனக்குள்ள அர்த்தத்தையும் உன் க்ஷேத்ரத்தையும் என் பேரிலே திரிய விட்டுவை' என்னும் இப்படி இவன் நெஞ்சை மறுகப் பண்ணி, இவனுக்கு இவை கொண்டு தப்ப வொண்ணாதபடி தன் பக்கலிலே அகப்படுத்திப் பின்பு இவனிட்ட காசு தன்னையடையத் தன் பேரிலே செலவு எழுதிச் சிகைக்கடிப்பிக்கும். இவன் இருக்குமாகில் ஒரு நாள் வரையில் சிலரை ஆச்ரயித்துத் தொடரிலோ? என்று இவனை ஹிம்ஸிக்கும்''

இவ்விளக்கமின்றேல், 'உலகினர் விலங்குகளை வலைப்படுத்திக் கொன்று உண்பர்; அது அறமன்று என்பதை அறியார்' என்றே பொருள் கொள்ளத் தோன்றும். ஆழ்வார் உலகினரின் கொடுமைகளை உருவகப் படுத்துகிறார் என்பதை உணர்ந்து மேற்கண்டவாறு பொருள் விளக்கம் செய்கிறார் நம்பிள்ளை. இக்கொடுமனம் இன்றும் உலகில் காணப்படுவதுதான். அதன் மாறாத இயல்பை அறிந்தவர் பிள்ளை.

### பேச்சு வழக்குகள்

பேச்சு வழக்குகளை அறிந்து அவற்றைக் கொண்டு சொற்களையும் தொடர்களையும் எளிதாக விளக்குவது ஈட்டின் ஒரு உரைநெறியாகக் காணப்படுகிறது. அவற்றை 'வழக்கச் சொல்' என்று குறிப்பர்.

**சான்றுகள் :-**

*1)* நுவலாதே இருந்தொழிந்தாய் [77] : "நுவலாதே இருந்தாய் என்னுதல், நுவலாதே ஒழிந்தாய் என்னுதல் செய்ய அமையாதோ? இரட்டிப்பேன் என்னில், 'வந்தொழிந்தான்' போயொழிந்தான்' என்னக் கடவதிறே, வழக்கச் சொல் இருக்கிறபடி.''

---

77, மேலது 1 . 4 . 8

(2) 'பற்றிலன் ஈசனும்'[78]: பற்றிலன் என்பது பற்றிலான் என்பதன் குறுக்கலாகக் கொண்டு 'பற்றில் உள்ளவன்' என்று பொருள் கொண்டார். அதற்கு,

> 'இன்னான் இங்கு உண்டோ? என்றால், இங்கில்லை யவன் அகத்திலான்' என்னக் கடவதிறே,

என்ற பேச்சுவழக்கைக் காட்டுவர்.

(3) 'கொண்டானேழ் விடை'[79]: 'ஏழ்விடை வென்றான்' என்னாதே 'ஏழ்விடை கொண்டான்' என்றதற்கு "இன்னபடை வீட்டைக் கொண்டான்'' என்ற வழக்கத் தொடரைக் காட்டுவர்

(4) 'பெரியகிதயுகம் பற்றிப் பேரின்ப வெள்ளம் பெருக[80] பற்றி-தொடங்கி என்று பொருள் கொள்ள, "கிண்ணகம் இத்தைப் பற்றிப் பெருகிற்று'' என்ற பேச்சுவழக்கை நினைவூட்டு கிறார்.

(5) 'பண்கொள் ஆயிரம்'[81]கொள்-மிக்கிருத்தல் என்று பொருள் காட்டுவதற்காக 'ஈழம் பிரம்பு கொண்டது' என்னும் சொல்வழக்கைக் காட்டுகிறார்.

(6) 'எடுத்த பேராளன் [82] 'எடுத்த' என்ற சொல் நிதியைக் கண்டெடுத்த பேற்றைக் காட்டும் என்பதை விளக்க, முன்பு வறியனாய்ப் போந்தவன், பெருக்க வாழப் புக்கவாறே "இவன் எடுப்பு எடுத்தான்'' என்னும் பேச்சுவழக்கைக் காட்டு கிறார்.

ஆழ்வார் அருட் பாடல்களில் பேச்சுவழக்குகளும் நிறைந் திருப்பதை உரையாசிரியர் உணர்ந்தே உரையிடுகிறார். கொடுந்தமிழ் வழக்கு விழுந்திருப்பதையும் அவர் ஓரிடத்து நினைவுபடுத்துகிறார். 'அறுக்கும் வினை'[82(அ)] என்ற பாசுரத்தில், குறுகும் என்பதைக் குறுக்கும் என்று பிரயோகித்தது மலைநாட்டு வழக்கு என்று ஓர் ஐதிஹ்ய முகத்தால் சுட்டிக் காட்டுவர்.

---

78. மேலது 1.2.6
79. மேலது 1.8.7
80. மேலது 5.2.3
81. மேலது 6.1.11
82. மேலது 8.1.3
82 (அ) மேலது 9.8.1

(7) 'இவைபத்தும் வீடே'[83]; இத்தொடருக்கு 'இப்-பாடல்கள் பத்தும் வீட்டைத்தரும்' என்று பொருள் தருகிறார். மக்களின் பேச்சு வழக்குகள் ஆழ்வார் பாசுரங்களில் விழுந்துள்-ளன என்ற கருத்தினராகலின் அதைப் பயன்படுத்தியிருக்கி-றார். அவருடைய விளக்கம்,

> "இச்செய் அடைய நெல்' என்றால் நெல்லை விளைக்கு மது என்று காட்டுமாப் போலே, இவை பத்தும் வீடு என்றது, வீட்டை விளைக்கும் என்ற படியாய்"

என்பதாம்.

(8) 'தானாம் அமைவுடை நாரணன்'[84] என்ற தொட-ரையும் உலகநடைப் பேச்சுவழக்குக் கொண்டு பொருள் விளக்குகிறார்,

> "ஒருவன் ஒருவனை உனக்கு ஜீவனம் என்ன வேணும்? என்றால் தன் புத்ராதிகளையும் கூட்டிக் கொண்டு 'எனக்குக் க்ல நெல்லு வேணும்' என்னா நின்றானிறே; அப்படியே இவை யடங்கலும் தன் 'அஹம்' சப்தத்-துக்குள்ளே அடங்கித் தான் இவற்றுக்கு அபிமானியாய் இருக்கும்படியைச் சொல்லுகிறது"

**கதை விரிவுகள்**

பாடல்களில் கதைக் குறிப்புகள் அடங்கிய இடங்களில் பிள்ளை சற்று விரிவாகவே குறிப்பினை விளக்குகிறார்.

**சான்றுகள்**

(அ) 'கொல்லா மாக்கோல் கொலைசெய்து பாரதப்போர்
எல்லாச் சேனையும் இருநிலத்து அவித்த எந்தாய்'[85]

என்று ஆழ்வார் கண்ணபிரானை விளிக்கிறார். பாரதப் பெருஞ் சமரில் கண்ணன் தேர் செலுத்தியளவுதானே, அவன் கொலை செய்தது யாங்ஙனம்? கொலைக்குக் கருவியாகக் கொல்லாமாக்கோல் பயன்பட்டது எவ்வாறு? என்ற வினாக் களை எல்லாம் மனத்துட் கொண்டு கதை விரிவு செய் கிறார்.

---

83. மேலது 1-1.11
84. மேலது 1.3.3
85. மேலது 3-2.3
இக்கதை நிகழ்ச்சி இம்முறையில் பாரதத்தில் சொல்லப்படவில்லை. இதனை வேறு புராணங்களிற் கண்டுகொள்க என்பர் அரும்பதகாரர்.

'துர்யோதனனும் அர்ஜுனனுமாக கிருஷ்ணன் பள்ளி கொண்டருளா நிற்கச் செய்தே படைத்துணை வேண்டி வந்து, துர்யோதனன் திருமுடிப் பக்கத்திலே யிருந்தான்; அர்ஜுனன் திருவடிகளின் பக்கத்திலே யிருந்தான்; பள்ளி யுணர்ந்தருளி, 'ராஜாக்கள் போந்ததேன்'? என்ன; துர்யோதனன் 'நான் முற்படவந்தேன்' என்ன, ... 'நீர் முற்படவந்ததுக்குக் குறையில்லை; நங்கண் முற்படப் பட்டது இவன் பக்கலிலே' என்று அவனுக்காகத் தான் சில வழக்குச் சொல்லி, உங்களுக்கு வேண்டுவது என்? என்ன, 'படைத்துணை வேண்டிவந்தோம்' என்ன, 'ஆகில் நாராயண கோபாலர்களை ஒருவன் கொள்ளுவது, என்னை ஒருவன் கொள்ளுவது' என்ன, அசேதன கிரியா கலாபங்களைப் பற்றுவாரைப் போலே துர்யோதனன் அவர்களைக் கொண்டு போக, பீஷ்மாதிகள் கேட்டு, தப்புச் செய்தாய்' இனி கிருஷ்ணன் ஆயுதம் எடாதவனாக வேண்டிக் கொண்டு போராய்' என்ன, அவனும் வந்து 'நீ ஆயுதம் எடாதொழிய வேணும்' என்ன, 'அப்படியேயாகிறது' என்று சொல்லி விட்டுக் கொலைக்குப் பரிகரமின்றிக்கே குதிரையை நடத்துகிற கோலைக் கொண்டு முடித்துப் பொகட்டான்'

(ஆ) 'மார்க்கண்டேயனுக்கு வாழுநாள்'[86] என்ற விடத்தில் மார்க்கண்டேயன் வரலாற்றை விரிவுக்கஞ்சாது விளக்குவர்.

''மாதா பிதாக்கள் இவனை ஒப்பித்து விளையாட விட, அங்கே ஓர் அசரீரி வாக்யம் 'இவனுக்கு ம்ருத்யு குறுகிற்று' என்று சொல்ல, அத்தைக் கேட்டு பித்ராதிகள் வெறுக்க, 'இதுக்கு நீங்கள் அஞ்சவேண்டா, நான் பரிஹரித்துக் கொள்கிறேன்' என்று இவன் சென்று தேவரை ஆச்ரயிக்க, அவரும் பச்சையிடும் நாள் எல்லாம் இடுவித்துக் கொண்டு ஒரு நாளிலே வந்தவாறே தலைக் கடையையும் புழைக் கடையையும் அடைத்து ஜடையை விரித்துக் காட்டி, உன்னோபாதி

86. தி. வா. மொ. 7.5.7

ஆறல் பீறல் காண் என் காரியமும்; அருகில் மாலையைப் பாராதே என் தலையில் ஜடையைப் புத்தி பண்ணாய்' என்று காட்டி, 'ஆனால் நெடுநாள் பச்சை யிட்டு ஆசிரயித்த நீ பேசாதே போக வொண்ணாதிறே; உனக்கோர் ஆச்ரயம் காட்டப் பாராய்' என்று அவன் ஸௌலப்யாதி குணங்களையும் மோக்ஷ ப்ரதத்வாதி குணங்களையும் உசாவிக் கொண்டு ஸர்வேச்வரன் பக்கலேறச் சென்றான் ... ... ... 'ஐயோ ம்ருத்யு பீதனாய் வந்தாயாகாதே' என்று திருவுள்ளத் திலே கொண்டு, 'துர்மானியான இவன் கொடுவந் தான்' என்று பாராதே, ஒரு பிராட்டி புருஷகார மாக வருவாரைக் கைக்கொள்ளுமாபோலே கைக் கொண்டு ... ...''

இவ்வண்ணம் கதைவிரிவுகளைக் கூறுமிடங்களில், உரையாசிரியர் புறச்சமயங்களை நகைச்சுவைபட இகழ்ந்துரைப்பதற்கு நல் வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொள்கிறார்.

### விளக்கக் கதை

பாடல்களில் சில கருத்துக்களைத் தெளிவுறுத்தத் தாமறிந்த கதைகளை உரைக்கண் ஆசிரியர் இடம்பெறச் செய்திருக்கிறார். சில கதைகளை முழு வடிவத்தில் தருகிறார். சிலவற்றை அறிந்த தொடர்களைக் காட்டி நினைவுறுத்துகிறார். அவ்விடங்களில் அரும்பதகாரர்கள் கதையின் முழுவடிவத்தைத் தருகின்றனர்.

**சான்றுகள் :**

(1) 'அடங்கெழில்' [87] என்ற பாடலில், இறைவனுக்கும் ஆன்மாவுக்குமுள்ள உறவு ஒன்றே அறியவேண்டுவது என்றும் அவ்வுறவுணர்ச்சி கைவரப்பெற்றால் இறைவனைக் கிட்டப் பெறலாம் என்றும் கருத்துக்கூறி அதனைவிளக்க ஒரு வியாபாரி யின் கதையைக் குறிப்பிடுகிறார்.

''ஒரு வ்யாபாரி, ஸ்த்ரீ கர்ப்பிணியான ஸமயத்தில் அர்த் தார்ஜனம் பண்ண வேணும் என்று போவது; அவளும் பிள்ளை பெற்று, அவனும் பக்வனாய்த் தனக்கும் தமப்பனாருடைய வ்யாபாரமே யாத்ரையாய் அவனும்

87. மேலது 1, 2-7

போய் இருவரும் சரக்குப் பிடித்துக் கொண்டுவந்து ஒரு பந்தலிலே தங்குவது; அது இருவருக்கும் இடம் போராமையாலே அம்பறுத்தெய்ய வேண்டும்படி விவாதம் ப்ரஸ்துதமான சமயத்திலே, இருவரையும் அறிவானொருவன் வந்து, 'இவன் உன் பிதா, நீ அவன் புத்ரன்' என்று அறிவித்தால், கீழ் இழந்த நாளைக்கு சோகித்து இருவர் சரக்கும் ஒன்றாய், அவன் ரக்ஷகனாய், இவன் ரக்ஷ்யனாய் அந்வயித்து விடுமிறே''

(2) 'வேங்கடங்கள்'[88] என்கிற பாடலில் ''வேங்கடத்துறைவார்க்கு நம என்றபோதே வினைகள் உருமாயும்'' என்று ஆழ்வார்க்குக் கருத்தாக, அதனை விளக்க வேதாந்தங்களில் சொல்லுகிற படிகளையும் காட்டினார். மேலும் கடலுக்குத் தொடுத்த அம்பை அவன் (கடலரசன்) நாலடி வரநின்றவாறே சினந்தணிந்து 'உன் பகைவரைச் சொல்லுக' என்று கூறிய இராமனுடைய வரலாற்றுத் துணுக்கினையும் எடுத்துக் காட்டினார். இவற்றோடு அமையாது 'ஒருவன் எதிர்கொள் இன்முகம் காட்டிய அளவே கொண்டு அவன் செய்த குற்றங்களை மறப்பவன் இறைவன்' என்பதைத் தெளிவுறுத்துவதற்காக ஒரு கதையையும் வரைகிறார் நம்பிள்ளை:

''பண்டு தலையில் மயிரின்றிக்கே யிருப்பான் ஒருவன் நெற் பரிமாறா நின்றானாய் அங்கே ஒருவன் சென்று 'மயிரைப் பேணாதே நீர் தனியே நின்று பரிமாறா நின்றீர்' என்ன, 'ஏன்தான் நடந்ததீ' என்ன, 'ஒன்றுமில்லை, கண்டுபோக வந்தேன்' என்ன;
'ஆகில் ஒரு கோட்டையைக் கொண்டுபோகலாகாதோ?' என்று எடுத்துவிட, அவன் அத்தைக் கொண்டு வாரா நிற்கச் செய்தே எதிரே ஒருவன் வந்து 'இது எங்கே பெற்றது?' என்ன, ''உன்தனை மொட்டைத் தலையன் தந்தான்' என்றானாய், அவன் அத்தைச் சென்று அங்கே 'இன்னான் உம்மை வைது போகா நின்றான்!' என்ன, 'அடா! என் நெல்லையும் கொண்டு என்னையும் வைதுபோவதே?' என்று தொடர்ந்து வந்தானாய்,

88. மேலது 3.3.6

அவன் புரிந்து பார்த்து, 'ஏன்தான் குழல்கள் அலைய அலைய ஓடிவரா நின்றதீ' என்ன, 'ஒன்றுமில்லை இன்னம் ஒரு கோட்டை கொண்டுபோகச் சொல்ல வந்தேன் என்றானாம்''.

இதனை பட்டர் அருளிச்செய்த இதிஹாஸம் என்பர் பிள்ளை. 'மொட்டைத் தலையன் விஷயமான இதிஹாஸம்' என்றுகதைப் பெயர் மட்டிலும் குறிக்கிறார் பெரியவாச்சான் பிள்ளை. இதனை ஓர் ஐதிஹ்யம் என்பர் அரும்பதகாரர்.

*(3)* சில துணுக்குக் கதைகளும் பிள்ளை கையில் பயன் பட்டு உரை விளக்கம் தருகின்றன

'ஆய்ச்சியாகிய'[89] என்ற பாடலில்,' ''வெண்ணெய் களவு போயிற்று என்ற வார்த்தை பிறந்த அளவிலேயே கண்ணன் அது தன்னளவிலே புகும் என்று நினைத்து அழப்புகும்'' என்று நயவுரைகூறி அதனைச் சிறுகதையால் விளக்குகிறார்:

> ''மடம் மெழுகுவார் ஆர்?' என்ன, 'அச்ரோத்ரியன்'
> என்றார்கள்; 'இப்பரப் பெல்லாம் என்னாலே
> மெழுகப் போமோ?'' என்றான்.''

*(4)* கதையைக் காட்டும் தொடர்களைமட்டும் சில இடங் களில் சுட்டுவர். நீண்ட கதையாக வளருமிடங்களில், இடங் கருதி அப்படிச் செய்திருக்கலாம். பிள்ளையின் விரிவுரையில் கதை முழுதும் சொல்லப்பட்டு, பட்டோலை கொண்ட வடக் குத் திருவீதிப்பிள்ளையால் அங்ஙனம் சுருக்கத் தொடர் குறிக் கப்பட்டிருக்கலாம்.

அ) 'மானேய் நோக்கி[90] பாசுரத்தில், 'கூனே சிதைய உண் டைவில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா' என்று வருகிறது. கூனியின் முதுகில் வில்லால் தெறித்தவன் இராமன். ஆனால் ஆழ்வார் 'கோவிந்தன்' என்று குறிப்பிடுகிறார். இராமன் செய்த பொல்லாங்கு கண்ணன்மீது விழுந்தது: இந்த நயத்தை 'போம் பழி எல்லாம் அமணன் தலையோடே என்னுமாபோலே' என்று கதைக் குறிப்பை உவமைத் தொடராக்கி விளக்குகிறார். இதனை

---

89. மேலது 6.2.11
90. மேலது 1.5.5

நெடிய கதையாக அடைய வளைந்தான் அரும்பதம் விளக்க மாகச் சொல்லுகிறது.

ஆ) *தீர்ப்பாரையாமினி (4-6) பிரவேசத்தில், 'மோர் உள்ள தனையும் சோறேயோ' என்ற கதைத் தலைப்பைக் காட்டுகிறார். சீயர் அரும்பதம் அதனை விளக்கும்.[91] மேலும், ஒட மேற்றிக் கூலிகொண்டது,[92] செருப்பு வைத்துத் திருவடிதொழுதது,[93] அட்டதொழியச் சுட்டது கொண்டது,[94] ஆகிய கதைத் தலைப்புகளை ஈட்டிற் காண்கிறோம். அவற்றை விரித்துரைக்கும் பணியை அரும்பதகாரர்கள் திறம்படச் செய்துள்ளனர்.

## இலக்கண மரபு நெறிகள்

விகுதி பிரித்துக் கூட்டுதல் :-

'அற்றிறைபற்றே'[95] என்ற தொடர்க்கு 'அற்று இறையைப்பற்று' என்று பொருள் கூறி, அதிலும் உயரிய பொருளைக் காண்பதற்காக, "விபக்தியை மாறாடி இறையைப் பற்றி இத்தை அறப்பார்" என்று குறிப்பு வரைகிறார்.

அற்று + இறை(யைப்) + பற்று
| |
வினைஎச்சம் ஏவல்வினை

அறு + இறை (யைப்) + பற்றி
| |
ஏவல்வினை வினைஎச்சம்.

'அற்று' என்ற எச்சத்தின் விகுதியைப் 'பற்று' என்பதோடு கூட்டிப் 'பற்றி' என்றாக்கி, 'அற்று' என்பதை 'அறு' என்று நிறுத்திப் பொருள் வரைகிறார். பற்றுக்களை அறுப்பதற்கும் இறைவனைப் பற்றியே செய்தல் வேண்டும் என்ற சீரிய பொருளை இதனாற் பெறவைக்கிறார்.

எச்சத்திரிபுகள்

பொருளுக்கு ஏற்றவகையில் எச்சங்களின் வாய்பாடுகளைத் திரித்துக் கொள்வர். சில எடுத்துக் காட்டுக்கள் ;-

---

91. 4.6.0 ஈ
92. 7.10.11 ஈ
93. 8.6.5 ஈ
94, 4.6.4 ஈ
95. தி. வா. மொ. 1.2.5

நலங்கழல் வணங்கி ... மாளும்[96] : வணங்க
மற்றும் மற்றும் முற்றுமாய்[97]: முற்றும்ஆக
ஊனொட்டி நின்று என் உயிரில் கலந்து[98] : நின்ற
பயிற்றவல்லார்கட்கு[99]; பயிலவல்லார்கட்கு
நீராய் நிலனாகி[100]: நிலனாக; நிலனாக்கி

விகுதி பிரித்துக் கூட்டியும் எச்சங்களைத் திரித்தும் சொற்களை நலிந்து அரிய பொருளைக் காணும் உரை உத்தியை ''சப்தங் களை நியமித்தல்'' என்பர். வடமொழியில் மீமாம்சகர்கள் இந்நெறியைத் தழுவியுள்ளனர். திருமாலையில் ''காவலில் புலனை வைத்து'' என்ற தொடருக்கு வியாக்கியானம் செய்யும் போது, ''காவல் இல்லாதபடி புலனை வைத்து'' என்று சொல்லை நலிந்து பொருளுக்கு முக்கியத்துவம் கொடுத்து உரைசெய் வர் பெரியவாச்சன் பிள்ளை[100அ]

தமிழ்ச்சிறப்பு இலக்கண மரபுகளை மனத்துட்கொண்டு உரை வகுப்பது பிள்ளையின் இயல்பாகும். ஆங்கெல்லாம் பயன் படுத்திக் கொண்ட இலக்கணச் சூத்திரங்களை வெளிப்படை யாகக் குறித்திலர்.

'ஒக்கலை வைத்து முலைப்பால் உண்என்று தந்திட வாங்கிச்
செக்கஞ் செகஅன்று அவள்பால் உயிர்செக வுண்ட பெருமான்' [101]

இங்கு ''கண்ணனுக்குக் கொடுத்த நஞ்சு தமக்குக் கொடுத்தது போன்று இருத்தலால் 'தந்திட' என்கிறார்.'' என்று பொருள் கூறுகிறார்,

அவற்றுள்,
தரு சொல்வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை ஆயீரிடத்த [102]

---

96. மேலது 1 . 3 . 8
97. மேலது 1 . 5 . 4
98. தி. வா. மொ. 1 . 7 . 7
99. தி. வா. மொ. 3 . 10 . 11
100. மேலது 6 . 10. 2
100 (அ) தி. மா. 1. பெ. வா, பி. வியா.
101. தி, வா, மொ 1 . 9 . 5
102, தொல். கிளவியாக்கம், சூ. 29

''வாய் முலைதந்த'' [103], ''தரும் அருள்,'' [104] என்ற இடங்களிலும் இச்சூத்திரத்தைப் பயன்படுத்துவர்,

தொகை விரிவு :

தொகைகளைப் பொருட்பொருத்தமுறப் பிரித்துக் காட்டியும் வேற்றுமை மயக்கங்களைத் தெளிவுபடுத்தியும் உரை காட்டுவர்.

சான்றுகள் :

*(1)* கைசெயப்பாலதான கோலவடிவு=கைசெய் (கை)க்கு அப்பாலதான கோலவடிவு [105] என்று விரிப்பர்,

*(2)* செடியார் ஆக்கை அடியாரைச் சேர்தல் தீர்க்கும் = அடியார்க்கு ஆக்கை சேர்தலைத் தீர்க்கும் என்று பொருள் குறிப்பர். [106]

*(3)* விண்ணுமாய் விரியும் எம்பிரானையே...கண்ணுள்ளே நிற்கும். ஈண்டு எம்பிரான் என்று முதல்வேற்றுமையாகக் கொண்டார். ''பிரதமையை த்விதீயை ஆக்கி 'எம்பிரானை, என்று கிடக்கிறது'' என்பது பிள்ளையின் குறிப்பு[107] பெயர்ச்சொல் எல்லா விபக்தியிலும் (வேற்றுமை உருபோடும்) ஒட்டலாயிருக்குமாகையால், பொருட் பொருத்தம் நாடி உருபு விவரிக்கலாம் என்று பிள்ளை கருதுவர்[108] ஏழாம் வேற்றுமையுருபு தொக்குவரும் ஓரிடத்தில் 'ஸப்தமி அர்த்தே பிரதமை' என்கி-றார்.[109] 'விபக்தி வியத்யயம்' என்று உருபு மயக்கத்தைக் குறிப்பிடுகிறார்.[110]

*(4)* உருபை விரிக்கும்போது எல்லா வகையிலும் விரித்துக் காட்டுவதும் உண்டு.

(யான்) கற்கும் கல்விக்கு எல்லையிலன்[111]:

---

103. தி. வா. மொ. 4 . 3 . 4
104. மேலது 8 . 7 . 2
105. 8 . 2 . 9 ,,
106. 1 . 5 . 7 ,,
107. 1 . 10 . 2 ,,
108. 4 . 10. 8 ,,
109. 8 . 6 . 10
110. 10 . 10 . 5 ,,
111. தி. வா. மொ. 5 - 6 . 2

எல்லையிலன்= எல்லை (யை) + இலன் (கற்றப்பரப்புக்கு ஓர் எல்லையில்லை)

எல்லை (க்கண்) + இலன் (கல்வியின் எல்லைக் குள்ளே நிற்கிறேனல்லேன்)

எல்லை (இல்) + அன் (வேதாந்தமாகிய எல்லை யின் உளேன்)

தொகைச் சொற்களை வேற்றுமைத் தொகையாகவும் உம்மைத் தொகையாகவும் பிற தொகையாகவும் பொருட் பெற்றிக்கு ஏற்ப விரிப்பதும் உண்டு.

(5) பாவியல் வேத நன்மாலை[112]: 'வேநன்மாலை'யை வேற்றுமைத் தொகையாகக் கொண்டு 'வேதத்தின் நன்றான மாலை' என்று முதற்பொருளும் உம்மைத் தொகையாகக் கொண்டு'வேதமும் நன்மாலையும்'என்று இரண்டாம் பொருளும் காட்டுகிறார். நன்மாலையாவது புருஷ ஸூக்தம் என்பர்.

மிகைச் சொல்:-

ஒரு சொல் மிகையாக இருக்குமாயின் அதற்கும் ஒரு கருத்தினைக் கற்பித்து உரையிடுவர். "ஏறனைப் பூவனைப் பூமகள் தன்னை"[113]என்ற இடத்தில் 'தன்னை' என்று 'அவர் களில் இவளுக்குண்டான முதன்மை' தோற்றுகிறதாகக் காட் டுவர். மிகைச் சொல்லை எடுத்துமொழியாது உளத்துக் கொண்டே பெரும்பாலும் உரையிடுகிறார். அம்மிகைச்சொற் களைப் பிரித்துக் காட்டும் பணியை அரும்பதகாரர்கள் செய் கிறார்கள்.

விசேடித்தல் :-

இயற்பெயர் சொல்ல வேண்டுமிடத்து அன்மொழித் தொகையாக்கியும் வினைப் பெயராக்கியும் சிறப்பித்தும் கூறு மிடங்களில் அங்ஙனம் விசேடித்ததற்குச் சில கருத்துக்களை வரைந்து செல்கிறார். "கோவைவாயாள் பொருட்டு ஏற்றின் எருத்தம் இறுத்தாய்[114] என்ற பாடல் அடியில் 'நப்பின்னை'

112. மேலது 4 - 2 - 3
113. மேலது 2 - 2 - 3
114. மேலது 4 - 3 - 1

என்னாது விசேடித்ததன் மூன்று குறிப்புகளை விரித்துரைக்கிறார். அவை வருமாறு :-

> ''தன்னைப் பேணாதே அவனுக்கு இவ்வெருதுகளின் மேலே விழவேண்டும் படியாயிருக்கும் அவயவ சோபை என்கைக்காகச் சொல்லுகிறது.''

> ''ருஷபங்களை முன்னிட்டு 'இவற்றை யடர்த்தாருக்கு இவளைக் கொடுக்கக் கடவோம்' என்று இவளை அலங்கரித்து முன்னே கொண்டு வந்து நிறுத்தினார்கள்; 'இவளை அணையலாமாகில் இவற்றை முறித்தாலாகாதோ'' என்று தன்னைப் பேணாதே அவற்றின் மேலே விழுந்தான்.''

> ''நம்பி மூத்தபிரான் முற்படவந்து கிட்டினவிடத்து 'இவன் தலையிலே வெற்றி கிடந்தால் செய்வது என்?' என்று வெறுப்பாலே அவாங்முகியாய் இருந்தாள்; க்ருஷ்ணன் வந்து தோற்றினவாறே ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே ஸ்மிதம் பண்ணினாள்; அப்போதை அதரத்தில் பழுப்பு இருந்தபடி.''

இயற்கை அழகு, ஒப்பனையால் வந்த அழகு, புன்முறுவலால் வந்த அழகு ஆகிய இம்மூன்றினையும் விசேடித்தலாற் பெற வைத்தார் என்பது பிள்ளையின் உட்கோள்

விணைமுடிபு காட்டல் ;-

பாசுரங்களின் பதங்களை ஆற்றொழுக்காகவே எடுத்து உரை செய்வது பிள்ளையின் வழக்கம். பாசுரத்தின் பிண்டப் பொருளை அவதாரிகையில் பொழிப்பாக்கி முன் மொழிந்து கொள்வதால், பாசுர விரிவுரையைக் கற்பாருக்கு வினைமுடிபு தெரிதல் இயற்கையாக அமைகிறது. இன்றியமையாத் தேவை எழுந்தால் வியாக்கியானத்தின் இறுதியில் 'அந்வயம்' காட்டுவதுண்டு.[115] அப்படிக் காட்டுமிடத்தில் இடையில் வருவித்துரைத்த சொற்களையும் கூட்டி எழுதுவர்.[116] வியாக்கியா

---

115. 1-1-2 ஈ

116. 1-1-6 ஈ; 2.5.7 ஈ; 9-7-2 ஈ

னத்தில் நடுவிடத்திலேயே பொருள் தெளிவிற்காக அந்வயம் காட்டுவதும் காணப்படுகிறது.[117] அந்வயத்தை 'யோஜனை' என்றும் கூறுவர் இவர்.

திருவாய்மொழி முதற்பாடலின் தொடர் அமைப்பை நம்பிள்ளை ஆய்வு செய்திருக்கிறார்.

"உயர்வற உயர்நலமுடையவன் யவன், அவன்
மயர்வற மதிநல மருளினன்;
மயர்வற மதிநலமருளினன் யவன், அவன்
அயர்வறு மமரர்கள் அதிபதி;
அயர்வறு மமரர்கள் அதிபதி யவன், அவன்
துயரறு சுடரடி தொழுதெழு"

என்று ஒரே தொடராகப் பின்னிக் காட்டுகிறார். இதனை 'வாக்யைக வாக்ய பாவத்தாலே யோஜனை' என்பர் அவர். இதனை 'ஆவ்ருத்தி யோஜனை' (மறுமொழிதல்) என்று குறிப்பிட்டு மறுமொழியாத 'அனுவ்ருத்தியோஜனை' ஒன்றையும் அடையவளைந்தான் காட்டுகிறது :

"உயர்வற உயர் நலமுடையவன் யவன், அவனான
மயர்வற மதிநலமருளினன் யவன், அவனான
அயர்வறு மமரர்களதிபதி யவன், அவன்
துயரறு சுடரடி தொழுது எழு"

இரண்டாவது யோஜனையாக,

உயர்வற உயர்நலம் உடையவன் யவன், அவன்
துயரறு சுடரடி தொழுதெழு என்மனனே;
மயர்வற மதிநலம் அருளினன் யவன், அவன்
துயரறு சுடரடி தொழுதெழு என்மனனே;
அயர்வறும் அமரர்கள் அதிபதி யவன், அவன்
துயரறு சுடரடி தொழுதெழு என்மனனே

என்று தனித்தனித் தொடராகவும் காட்டுகிறார். இதனை 'வாக்ய பேதம் பண்ணி யோஜனை' என்பர் அவர். அப்படித் தனித்

---

117. 2-6-10 ஈ 9-9-11 ஈ

தனித் தொடராகக் கற்பித்ததற்கும் தாற்பரியம் காட்டுவர்.[118] இறைவனது நலன்களை ஒவ்வொன்றாக எண்ணித் தொழுவது ஆழ்வார்க்குக் கருத்தாகத் தாற்பரியம் கூறுகிறார். இங்ஙனம் ஒரு தாற்பரியத்தைத் தழுவாவிடின் 'வாக்யபேதம்' என்ற குற்றமாகும்.[119]

ஒரு பாடலுக்கே, இருவகை அந்வயம் காட்டுதலும்[120] ஒரு சொல்லையோ தொடரையோ இடைநிலைத்தீவகமாக ஈரிடங்களிற் கூட்டுதலும்[121] ஒரு பாட்டின் வினையை அடுத்து வரும் பாட்டிற்கூட்டி உரைத்தலும் ஈட்டிற் காணப்படுகின்றன.[122]

## இலக்கணக் கோட்பாடுகள்

ஒரு நூலுக்கு உரை வரையும்போது சொற்களின் இலக்கணக் குறிப்புகளைச் சுட்டிக் காட்டுவது பண்டைய உரை நெறிகளில் ஒன்று. பொருளைத் தெளிவுபடுத்துவதற்கும் பொருளின் சிறப்பை உணர்வதற்கும் சொற்களைச் சரியாகப் பிரித்துப்பொருள்கொள்வதற்கும்இலக்கணம் துணைபுரிகின்றது. இம் மூன்று காரணங்களுக்காகவே நம்பிள்ளை இலக்கண மரபுகளைத் தம் பேருரையில் ஆங்காங்கே சுட்டிச் செல்கிறார்.

இலக்கணக் குறிப்புகள் ஈட்டில் மிகச்சிறு அளவிலேயே இடம் பெறுகின்றன. பெருவரவிற்றான இலக்கணக் குறிப்புகளும் குறியீடுகளும் இலக்கிய நுகர்ச்சிக்குத் தடையாகிவிடும்; இலக்கண நுட்ப ஆய்வாக உரைநூல் மாறிவிடும். திருவாய்மொழியின் பொருள் நலன்களையும் தத்துவச் செறிவுகளையும் பக்தி வளங்களையும் விளக்கிக் காட்டுவதனையே பெரும் பணியாகக் கொண்டவர் நம்பிள்ளை. ஆயினும் திருவாய்மொழிப் பாடல்களில் உறைந்திருக்கும் இலக்கண நுட்பங்களை அறியாதவரல்லர். அவற்றை அகத்துட் கொண்டு நயவுரையிட்ட இடங்கள் பலவாகும். ஆங்கெல்லாம் தாம் அகத்துட் கருதிய இலக்

118. யவன் .... அவன் என்ற தொடர் அமைப்பு வடமொழிக்குரியது. யற்சத்தம் வந்தபின் தற்சத்தம் வருவது வடநூலார் மதம் என்பர் பிரயோக விவேக நூலுடையார். (சூ. 45) திருக்குறள் 423, 341 ஆகிய இரண்டு குறள்களில் இவ்வமைப்பு படிந்திருப்பதையும் அவர் காட்டுவர்.

119. சேனாவரையம், தொல், கிளவியாக்கம், சூ. 1

120. 10 - 2 - 4 ஈ

121. 10 - 1 - 2 ஈ; 1 - 10 - 5 ஈ 3 - 1 - 4 ஈ; 3 - 1 - 8 ஈ;

122. 6 - 8 - 8 ஈ

க்ணச் சூத்திரங்களை வெளிப்படையாக உரையிற் கூறவில்லை. அப்பணியைப் பிற்கால அரும்பதகாரர்களுக்குப் பெரும் பொறுப்பாக்கிச் சென்றிருக்கிறார்.

குறியீடுகள் :-

நம்பிள்ளை காட்டும் தமிழ் இலக்கணக் குறிப்புகள் பெரும் பாலன வடமொழிக் குறியீடுகளாலேயே விளக்கப்பட்டிருக்கின் றன. அவையாவன:

அவதாரணம் [123]
அவ்யயம் [124]
ஆத்மநீபஹு வசனம் [125]
உபலக்ஷணம் [126]
ஏவகாரம் [127]
ஔபசாரிகம் [128]
வர்த்தமான நிர்தேசம் [136]
வ்ருதி [137]
விபக்தி [138]
விபக்தி வ்யத்யயம் [139]

க்ரியை [129]
சசப்தம் [130]
ப்ரதமை, த்விதீயை, ஸப்தமி [131]
பரோக்ஷநிர்தேசம் [132]
யச்சப்தம் [133]
லக்ஷணை [134] ல்யப்பு [135]
வீப்ஸை [141]
ஸம்போதனம் [142]
ஸம்சயோக்தி [143]
விபரீத லக்ஷணை [140]

இதை உற்று நோக்கினால் ஒருண்மை புலப்படுகிறது. தமிழ் இலக்கணக் குறிப்புகளை வடமொழிக் குறியீடுகளைக் கொண்டு புலப்படுத்தும் ஒரு போக்கு தமிழகத்தில் பரவியிருந்த காலத்தை நம்பிள்ளை ஈடு எடுத்துக்காட்டுகிறது. வீர சோழியத்தில் இப் போக்கு தெளிவாகப் பதிந்திருக்கிறது. மேலும் வடமொழி வையாகரணிகளைத் தெளிவுறுத்தும் முதன்மை நோக்கும் நம்பிள்ளைக்கு இருந்தது என்பதும் தெளிவாகிறது. ஆனால்

123. 5 - 10 - 11 ஸூ; 9 - 3 - 2 ஸூ; 3 - 8 - 2 ஸூ
124. 4 - 4 - 1 ஸூ; 4 - 7 - 1 ஸூ 4 - 10 - 11 ஸூ;
125. 9 . 7 - 1 ஸூ
126. 1 - 1 - 11 ஸூ; 5 - 1 - 2 ஸூ; 6 - 2 - 1 ஸூ
127. 7 - 5 - 3 ஸூ
128. 1 - 3 - 5 ஸூ
129. 9 - 8 - 8 ஸூ
130. 2 - 9 , 5 ஸூ
131. 8-6-10 ஸூ; 9-10-8 ஸூ 1-10-2 ஸூ
132. 5 - 1 - 1 ஸூ
133. 1 - 3 - 4 ஸூ
134. 5 - 4 - 7 ஸூ
135. 2 - 9 - 1 ஸூ
136. 3 - 7 - 1 ஸூ, 9 - 4 - 1 ஸூ
137. 2 - 9 - 1 ஸூ
138. 4 - 10 - 8 ஸூ
139. 10 - 10 - 5 ஸூ
140. 8 - 3 . 4 ஸூ, 8-5 . 2 ஸூ 2 . 1-6 ஸூ
141. 8 -10 - 2 ஸூ

வடமொழிக் குறியீடுகளைக் கொண்டே உரை முழுவதையும் நிரப்பினாரல்லர். தமிழ்க் குறியீடுகளையும் உரிய இடங்களில் அவர் ஆள்கின்றார். அவற்றுட் சில வருமாறு :-

அசை[144]
இரட்டிப்பு[145]
கடைக்குறைத்தல்[146]
குறைத்துக் கிடக்கிறது[147]
சாரியை[148]
செய்யுட்பாடு[149]
செய்யுளின்பம்[150]
தேற்றேகாரம்[151]
நீட்டிக் கிடக்கிறது[152]
முற்றுவமை[153]
மீமிசை[154]
மெலித்துக் கிடக்கிறது[155]
மெல்லினம்[156] மெல்லொற்று[157]
வல்லொற்று[158]

குறியீட்டுச் சொற்களைச் சுட்டாமல், இலக்கண நுட்பத்தை விளக்குவதே ஈட்டிற் காணப்படும் பொதுவான போக்காகும்.

**சொல் ஆராய்ச்சி :**

செய்யுளில் வரும் சொற்களில் சில பாவிலக்கணத்திற்குச் சேரச் சிலபோது விகாரப்பட்டு வருவதுண்டு. அப்போது சொற்களின் இயல்பான வடிவத்தை ஆய்வுசெய்து புலப்படுத்த வேண்டியது உரையாசிரியர் கடமையாகிறது. அத்தகைய இடங்களில் உரையாசிரியரின் இலக்கணக் கோட்பாடுகள் வெளிப்படுத்தப் படுகின்றன.

**செய்யுள் விகாரம் (நீட்டல்) :**

(1) வீடுமின்[159] "வீடுமின் முற்றவும்"
"வீடுமின்" என்பது விகாரப்படாத சொல்வடிவம் என்பது நம்பிள்ளையின் கோட்பாடு. ஆயினும் 'விடுமின்' என்பதே நீட்டல் விகாரப்பட்டுக் கிடக்கிறது என்ற பிறர் மதத்தையும் அவர் காட்டுகிறார். 'வீடுமின்' என்பதனை நீட்டும் வழி நீட்டலுக்கு உதாரணமாகக் காட்டுவர் சேனாவரையர்.[159அ]

142. 2-3-1 ஈ; 7-1-8 ஈ
143. 5-6-1 ஈ
144. 6-5-10 ஈ
145. 4-7-1 ஈ
146. 7-5-11 ஈ
147. 1-2-6 ஈ
148. 5-1-1 ஈ
149. 10-3-2 ஈ
150. 9-10-8 ஈ
151. 7, 4, 7 1
152. 1.2, 1 ஈ
153. 3—8—3 ஈ; 5—8—11 ஈ
154. 4—8—3 ஈ
155. 5—5—4 ஈ
156. 1—2—8 ஈ
157. 1—2—9 ஈ
158. 1—2—8 ஈ
159. தி. வா. மொ. 1—2.1
159.அ. தொல்; சொல்; எச்சவியல், 7

(2) விராய்[160] : ''விராய் மலர்த்துழாய்''
'விரை' என்ற சொல் நீட்டல் விகாரப்பட்டு 'விராய்' என்று கிடப்பதாகக் கொண்டு 'மணம்மிக்க மலர்த்துழாய்' என்று பொருள் குறிக்கிறார் நம்பிள்ளை.

விரை → விரய் → விராய் என்று விகாரத்தின் நிலைகளாக நம்பிள்ளை கருதுவர்.

'அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயெ னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்[161]

என்ற தொல்காப்பியச் சூத்திரத்தை அவர் அகத்துட்கொண் டாராதல் வேண்டும்.

(3) அராவு[162]: ''கொம்பராவு நுண்ணேரிடை''
'அரவு' என்ற சொல் 'அராவு' என்று நீட்டிக் கிடைப்பதாக நம்பிள்ளை கருதுகிறார்.

'கொம்பராவு' என்பதை உம்மைத் தொகையாகக் கொண்டு, 'கொம்பினையும் அராவினையும் நேர்கின்ற நுண் ணிய இடை' என்று பொருள் விரிக்கப்பட்டுள்ளது. அதற்குத் தக, 'அரவு' என்பது 'அராவு' என்று நீட்டிக் கிடப்பதாகவும் குறிக்கப்படுகிறது. அதனால் 'அரவு' என்பதே சொல்லின் இயல்பான வடிவமாகப் பிள்ளையால் கருதப்பட்டதாகத் தெரிகிறது. நச்சினார்க்கினியர் 'அரா' என்பதே இயல்பான வடிவம் என்ற கருத்தினர். அது 'அரவு' என்று உகரம் பெற்றும் வரும் என்பது அவர்க்குக் கருத்து.[163] இதனால் அரா → அரவு → அராவு (நீட்டல்) என்ற நிலைகள் தெரி கின்றன. 'அ ர வு' → 'அ ர ா வு' என்ற இரண்டாவது நிலை யினையே நம்பிள்ளை தம் உரையிற் காட்டியிருக்கிறார்.

---

160. தி. வா. மொ. 1 — 7 — 6
161. தொல் . எழுத்ததிகாரம், கழக வெளியீடு, 1972, சூ.56
162. தி. வா. மொ, 1 — 10 — 3
163. ''அரவுயர் கொடி', 'முழவுயர் தோள்' என இவை, குறியதனிறுதிச் சினை கெட்டு, வருமொழி உயிர் முதன்மொழியாய் வருதலின் வகர உடம்படுமெய் பெற்று உகரம் பெறாது முடிந்தன'' என்று 'குறியதனிறுதி' (தொல்! எழுத். 234) என்ற சூத்திரத்தின் உரையில் நச்சினார்க்கினியர் எழுதுவதால் அவர் 'அரா' என ஆகார ஈறாகக் கொண்டார் என்பது விளங்கும்.

செய்யுள் விகாரம் (குறுக்கல்) :-

"பற்றிலன்" : "பற்றிலன் ஈசனும்"[164]
'பற்றிலன்' என்பதைப் 'பற்றிலான்' என்ற சொல்லின் குறுக்கல் விகாரமாகக் கொண்டு அதற்குப் பொருளை உலக வழக்குக் கொண்டு நிறுவுகிறார் நம்பிள்ளை. "இன்னான் இங்குண்டோ?" என்றால், "இங்கில்லையவன், அகத்திலான்" என்னக்கடவதிறே — என்பது பிள்ளையின் எடுத்துக்காட்டு. அகத்திலுள்ளவனை 'அகத்திலான்' என்பது போல், பற்றில் உள்ளவனைப் 'பற்றிலான்' என்று கொள்ளப்பட்டது. இறைவனாகிய ஈசன் உயிரினங்களோடு பற்றுக் கொள்ளும் இயல்வினன் என்பது அத் திருவாய் மொழிப் பதிகத்தின் கருத்தாதலால், அப்படிப் பொருள் காணும் தேவை உரையாசிரியர்க்கு எழுந்தது. இன்றேல், ஈசன் யாரொடும் பற்றுக் கொள்ளாதவன் என்ற முரணிய கொள்கை ஏற்படும். இங்கு இலக்கண மரபும் உலக வழக்கும் சேர்ந்து நேரிய பொருளைக் காண நம்பிள்ளைக்குக் கை கொடுத்தன. இதே போன்று 'கல்விக்கு எல்லையிலன்'[165] என்ற இடத்திலும் 'எல்லையிலான்' என்றாக்கி 'எல்லையில் உள்ளோன்' என்று பொருள் பணித்தார்.

செய்யுள் விகாரம் (மெலித்தல்)

(1) நகந்தாய் [166] "நகந்தாய் நரசிங்கமதாய வுருவே" 'நகத்தாய்' என்பது 'நகந்தாய்' என்று மெலித்தல் விகாரப் பட்டது. 'வல்லொற்றை மெல்லொற்றாக்கிக் கிடக்கிறது என்பர் பிள்ளை இது எதுகையின்பம் நோக்கியதாகும்.

(2) ஒடுங்கு[167] "இறையுள்ளி ஒடுங்கே" ஈண்டு இருவகை இலக்கணக் குறிப்புக்களைத் தருகிறார்.

(அ) 'ஒடுங்கு' என்னுதல் 'ஒடுக்கு' என்னுதல்

(ஆ) மெல்லினமான ஙகரத்தை வல்லொற்றாக்கி 'ஒடுக்கு' என்று கிடக்கிறதாதல்.

---

164. தி. வா. மொ. 1— 2 — 6
165. மேலது 5 — 6 — 1
166. மேலது 9 — 4 — 7
167. மேலது 1 — 2 — 8

முதற் குறிப்பின்படி 'ஒடுங்கு' என்பதைத் தன்வினையாகவும் தன்வினையில் வந்த பிறவினையாகவும் கொண்டார். இரண்டாம் குறிப்பின்படி, 'ஒடுக்கு' என்ற சொல்லே மெலிந்து 'ஒடுங்கு' என்று கிடப்பதாகக் காட்டுவர்.

**பிற விகாரங்கள்**

*(1)* அறிவியந்து[168] 'அறிவு வியந்து' என்பது தொகுத்தல் விகாரப்பட்டு 'அறிவியந்து' என்றாயிற்று என்பர் பிள்ளை. 'வியத்தல்' என்ற சொல் 'கொடுத்தல்' என்ற பொருளைக் காட்டும் என்று நிகண்டு கொண்டு நிறுவி 'அறிவைக் கொடுத்து' என்று உரை எழுதுவர்.

*2)* மனப்பரிப்பே [169]: "பரிபென்று துக்கம். அதிலே ஒரு ஒற்றெழுத்து ஏறினாலும் அவ்வர்த்தத்தயே காட்டக் கடவது" என்பது நம்பிள்ளையின் உரைக் குறிப்பு. பரிப்பு என்பது பரிபு என்பதன் விரித்தல் விகாரமாகக் கொள்ளப்பட்டது இன்றை பதிப்புக்களில் 'பரிவென்று துக்கம்' என்று பிழைபட அச்சிடப்பட்டுள்ளது.

*3)* தரு -தருக [170]: 'தருக' என்பதன் விகாரமாகத் 'தரு' என்பதைக் கொள்கிறார். இதே போன்று, 'புகுதுக' என்பதன் விகாரமாக 'புகுத' என்பதைக் கொள்கிறார். இம் முறையான குறிப்பு ஈட்டில் மட்டும் காணப்படுகிறது.

**குறைச் சொற்கள் :-**

வலித்தல் முதலிய ஆறு விகாரங்களும் செய்யுளில் தொடை நோக்கி வருவன. குறைகள் மூன்றும் ஒரு மொழிக்கண் செய்யுளில் தொன்று தொட்டுப் பயின்று வருவனவாகும். இதனைப் பரந்த தமிழிலக்கியங்களிற் காணலாம். குறைந்த சொற்கள் தனிப் பெயராகவே நிகண்டுகளிலும் வழங்கத் தொடங்கின. "ஒருமொழி மூவழிக் குறைதலும் அனைத்தே" [171] என்ற

---

168. மேலது 1 - 1 - 8
169. மேலது 6 - 4 . 6
170. மேலது 9 . 8 . 8
171. நன்னூல், எழுத்; சூ, 156

சூத்திரத்தின்படி, திருவாய்மொழியில் பயின்றுவரும் குறைச் சொற்களை அவை வருமிடங்களில் நம்பிள்ளை எடுத்துக்காட்டி இயல்பான முழுவடிவங்களையும் காட்டுகிறார்.

| | | |
|---|---|---|
| உதரம் [172] | உரம் | இடைக்குறை |
| மிக்க [173] | மிக | ,, |
| ஊர்தி [174] | ஊர் | கடைக்குறை |
| கைத்து [175] | கை | ,, |
| கங்குல் [176] | கங்கு | ,, |
| மருங்குல் [177] | மருங்கு | ,, |
| இகுளை [178] | இகுள் | கடைக்குறை |
| பாபம் [179] | பா | ,, |
| கைசெய்கை [180] | கைசெய் | கடைக்குறை |
| வதுவை [181] | வது | ,, |
| முகுந்தன் [182] | குந்தன் | தலைக்குறை |

வடமொழிச் சொற்களும் செய்யுட்களில் தற்பவமாகிக் குறை தலை அடையும் என்பதும் மொழிக்கண் இக்குறைப்புக்கள் யாவும் செய்யுளின்பம் கருதிக் கவிஞர் புதிது புதிதாகச் செய்து கொள்வனவே என்பதும் நம்பிள்ளையின் கொள்கையாகத் தெரிகிறது. இலக்கண விளக்க உரையாசிரியர், இராமாநுச கவிராயர் ஆகியோர் இக் கருத்தினர் [183]

போலி :

(1) வலம் → வரம்[184] (ல/ர)

வரம் என்பதற்குப் போலியாக 'வலம்' என்பதாகக் கொண்டு வலம் சிரேஷ்டம் என்று பொருள் குறித்தார். ஈண்டு 'ரலயோ ரபேத:' என்ற வடமொழி விதி கொள்ளப்பட்டதாக அரும்பத காரர் கருதுகிறார்.

---

172. 1.3.1 ஈ
173. 4.5.3 ஈ
174. 3.8.1 ஈ
175. 2.1.3 ஈ
176. 5.4.7 ஈ
177. 5.4.7 ஈ
178. 6.3.9 ஈ
179. 7.5.11 ஈ
180. 8.2.9 ஈ
181. 1.6.2 ஈ
182. 7.9.7 ஈ
183. நன்னூல் விருத்தியுரை, ச. தண்டபாணி தேசிகர் (ப.ஆ) பாரிநிலையம் வெளியீடு 1971. அடிக்குறிப்பு ப. 200.
184. தி. வா. மொ. 1.3.8

(2) வியன்ற → வியந்த[185] (த/ற)

'தவ்வுக்கு றவ்வாய் வியத்தல்-கடத்தலாய் அளவைக் கடந்திருக்' கும் என்றபடி' என்பது பிள்ளையின் குறிப்புரை.

(3) கேள் → கேழ்[186] (ள்/ழ்)

(4) திண்ணன் → திண்ணம்[187] (ம்/ன்)

'மகர இறுதி அஃறிணைப் பெயரின், னகரமோடுழறா நடப் பனவுளவே'[188] என்பது இலக்கணம். ஆனால் அரும்பதகாரர் 'மனக்கள் உறழவரும்' என்ற ஒரு சூத்திரத்தைக் காட்டுகிறார்.

(5) முனல் → முரல்[189] (ன/ர)

(6) கருளப்புள் → கருடப்புள்[190] (ள/ட)

கருடன் என்ற சொல் கருளன் என்று வருவதாகப் பிள்ளையின் கோட்பாடு. டவுக்கு ள போலியாக வரும் என்பதற்கு வேதத் திலிருந்து சான்றுகாட்டுவர். 'அக்நிமீடே' என்பது 'அக்நிமீளே' என்று வழங்குவதைக் காட்டுகிறார்.

உபலட்சணம்

'எடுத்தமொழி இனம் செப்பலுமுரித்தே' என்பது தொல் காப்பியம்.[191] இதைக் கொண்டு ஒரு மொழி அதன் இனயான பிறவற்றையும் காட்டுவதைப் பிள்ளை பலவிடங்களிலும் காட்டு கிறார்.

(1) நில விசும்பு ஒழிவற [192]: இவை அஞ்சுக்கும் உபலக்ஷணம்

(2) வானே மாநிலமே[193]: பஞ்ச பூதங்களுக்கும் உபலக்ஷணம்.

---

185. மேலது 1 . 4 . 11
186. மேலது 1 . 9 . 7
187. மேலது 2 . 2 . 1
188. நன்னூல், எழுத்ததிகாரம், சூ. 122
189. தி. வா. மொ. 2 - 3 - 7
190. மேலது 5 - 7 - 3
191. தொ, ளிவியாக்கம், சூ. 60
191, தி. வா. மோ, 1 . 1 . 10
193. மேலது 5 . [ . 2

(3) ஊரும் புள் கொடியும் அஃதே[194]:இது நித்ய சூரி களுக்கும் உபலக்ஷணம்·

(4) மின்னிடை[195];தேஹ குணங்களுக்கு உபலக்ஷணம் மடவார்கள் : ஆத்மகுணங்களுக்கு உபலக்ஷணம்.

உபசார வழக்கு

(1) உயர்வு - வருத்தம் [196]: காரணத்தைக் காரியமாக உபசரித்தது என்பர்.

(2) விண் - மூலப்பிரகிருதி[197]: காரியத்தைக் காரணமாக உபசரித்தது என்பர்.

(3) அம்பகவன்: ''பகவச் சப்தம் முக்கியமாக வசிப்பது இவன் பக்கலிலே, அல்லாதார் பக்கலிலே ஔப சாரிகம்''[198]என்பர்.

(4) கன்மம்[199]: கன்மம் என்று கன்ம பலனை நினைக் கிறது என்பர்.

இலக்கணை

ஒன்றற்குரியதை மற்றொன்றிற்கு அமைப்பது இலக்கணை. இலக்கணைச் சொல் குறிப்புச் சொல்லாகும்.இலக்கணை வழக்கு இலக்கணைக் குறிப்பு என்று குறிப்பிடுவர் பரிமேலழகர். இலக்கணையில் ஒன்றான 'லக்ஷித லக்ஷணை'யைப் பின்பற்றி அரிய உரைக்குறிப்புகளை நம்பிள்ளை வழங்கியுள்ளார்.

'பொரு அல்லன்' [200] என்ற தொடருக்குத் 'தடையை உடையவன் அல்லன்' என்று பொருள் கொள்கிறார். ''பொரு என்று ஒப்பாய், ஒப்பாவது நேர் நிற்குமதாய் அத்தால் தடை யைச் சொல்லிற்றாய்த் தடையை உடையவன் அல்லன் என்கை'' -- என்பது நம்பிள்ளையின் விளக்கம்.

'சென்னி பொருமே [201] என்ற தொடருக்கு 'என்தலை யானது சேரும்' என்று பொருள் கொள்கிறார். ''பொரு என்று

---

194, மேலது 10.2.3
195. மேலது 6,2.1
196, மேலது 1.1.1
197. மேலது 1.1.8
198. மேலது 1.3.5
199. மேலது 6-2.6
200. மேலது 1.7.10
201. மேலது 1.9.11

ஒப்பாய், ஒப்பாவது சேருகையாய் 'சேரும்' என்றபடி.' — என்பது நம்பிள்ளையின் விளக்கம்.

'தேவர்கட்கெல்லாம் விருத்தா' [202] என்ற தொடருக்கு 'தேவர் கட்கெல்லாம் தலைமகன்' என்று பொருள் கொள்கிறார். விருத்தன் → கிழவன் → தலைமகன் என்பது லக்ஷிதலக்ஷணையாற் பெறப்பட்ட பொருளாகும்.

விபரீத லட்சணை (எதிர்மறையிலக்கணை)

இது குறிப்பினால் எதிர்மறைப்பொருளைக் காட்டும்: குறிப்பு சார்பினாலும் பதிகத்தின் தாற்பரியத்தாலும் பெறப் படுகிறது.

(1) ஆழிப் பெருமானார் மெய் வாசகம் கேட்டு [203] மெய்யாவது பொய் என்பர்.

(2) நல்லைபோ நெஞ்சே[204]: போ-வா என்பர்.

(3) பேரிலை [205]: சிற்றிலை.

இலக்கணை விளக்கம்

தூப்பால வெண்சங்கு[206] என்ற தொடருக்கு 'குறைவற்ற இடத்தையுடைத்தாயிருக்கிற சங்கு' என்று பொருள் குறித்த நம்பிள்ளை தூய்மை என்ற சொல் குறைவறுதலைக் காட்டுமோ? என்ற வினாவை எழுப்பி "அவன் இவ்வர்த்தத்தில் தூயன் காண்' என்கையாகிறது-அதில் குறைவற்றிருக்கும் என்கையிறே. லக்ஷணையிருக்கிறபடி" என்று விளக்கமளிக்கிறார். இது இலக்கணைக்கு நம்பிள்ளை தரும் எடுத்துக்காட்டாகும்

அடுக்குத் தொடர்

அடுக்குத் தொடரை 'வீப்ஸை' என்னும் வடசொற்குறியீட்டாலும் 'இரட்டிப்பு' என்ற குறியீட்டாலும் வழங்குகிறார். அசைநிலை, பொருள்நிலை (விரைவு, கோபம், மகிழ்ச்சி, அச்சம், துன்பம்) இசைநிறை ஆகியனபற்றிச் சொற்கள் அடுக்கி

---

202. மேலது 9.4.6
203. மேலது 2.1.6
204. மேலது 2.3.1
205. மேலது 8.3.4
206. மேலது 5.4.7

வரும் என்பர் நன்னூலார்.[207] இவை தவிரப் பிற காரணங்களாலும் அடுக்குத் தொடர்கள் வருவதைப் பிள்ளை காட்டு-கிறார்.

(1) உணர்ந்து உணர்ந்து[208] — நையாயிக வைசேடிகரை மறுப்பது.

(2) தொழுது தொழுது நின்று ஆர்த்தும்[209] — தொழுகை தானே பயனாயிருக்கிறபடியைக் காட்டுவது.

(3) போய்த்தானே தானேயானாலும்[210] — தான் மட்டுமாயே இருக்கையைத் தெரிவிப்பது

(4) நாராயணா என்று என்று[211] — உபாயமாகவும் உபேயமாகவும் கருதுவதைத் தெரிவிப்பது,

ஆகுபெயர்

ஆகுபெயரை வடமொழி உதாரணத்தாலேயே எங்கும் குறிப்பிடுவது நம்பிள்ளையின் இயல்பு. 'மஞ்சா: க்ரோசந்திபோலே' என்ற தொடரைப் பல இடங்களிலும் ஆள்கின்றார். 'தொட்டில் அழுகிறது' என்று அத் தொடர்க்குப் பொருள். அழுகிறது என்ற வினை கொண்டு தொட்டில் என்ற சொல் குழந்தையைக் காட்டுவதாகக் கொள்ளப்படும். ஆகுபெயரும் இலக்கணையும் குறிப்புச் சொல்லாயினும், தமிழ் ஆகுபெயரானது வடமொழி இலக்கணையிலிருந்து வேறுபட்டது என்பது நம்பிள்ளையின் கருத்தாகத் தெரிகிறது. ஆகவே தான். லக்ஷணை என்ற குறியீட்டை ஆளாது ஆகுபெயர்ப் பொருண்மை விளங்குமாறு எடுத்துக் காட்டு ஒன்றால் ஆகுபெயர்களை வடமொழி வாணர்க்கு அறிமுகப்படுத்துகிறார்.

மங்கல வழக்கு

ஆகுபெயரை விளக்கியது போன்றே மங்கல வழக்குகளையும் எடுத்துக் காட்டுக்களால் விளக்குகிறார். 'நன்பகல் என்றது செவ்வாய்க் கிழமையை மங்களவாரம் என்னுமாபோலே'

207. நன்னூல் சொல்; பொதுவியல் சூ. 44
208. தி.வா/மொ. 1 - 3 - 6
209. மேலது 5 - 2- 2
210. மேலது 8 - 10 - 2
211. மேலது 4 - 7 - 11

என்றும் 'கள்ளியை மஹாவ்ருக்ஷம் என்கிறவோபாதி' என்றும் எடுத்துக் காட்டுக்களால் விளக்குகிறார்.[212]

அந்தாதி

திருவாய்மொழியில் பொருளிசை அந்தாதியாய் அமைந்து கிடக்கும் இரண்டு இடங்களைக் காட்டியுள்ளார்.

(1) ''கருவளர்மேனி நங்கண்ணன் கள்வங்களே'' [213] என்பது ஒரு பாடலில் ஈற்றடி. அடுத்து வரும் பாடலின் முதலடி:

''எங்கண்ணன் கள்வம் எனக்குச் செம்மாய்நிற்கும்''[214] ஈண்டு நான் என்றும் யாம் என்றும் பர்யாயம் ஆகையாலே, பொருளிசை அந்தாதியாய் இருப்பதாகக் கூறுவர். மேலும், முதல் பாடலில் ஈற்றடியில் 'எங்கண்ணன்' என்று பாடமிருந்த தாகில் நேரே கிடக்கும் என்றும் ஒரு குறிப்பு வரைகிறார். நேரே கிடத்தலாவது 'இயலிசை அந்தாதி' என்று அரும்பத காரர் விளக்குவர்.

(2) ''புரிவதுவும் புகைபூவே''[215] என்பது ஈற்றடி. ''மதுவார் தண்ணந்துழாயான்''[216] என்பது அடுத்து வரும் முதலடி. ஈண்டு அந்தாதியைப் பொருத்த விடப்பார்க்கும் உரையாசிரியர், ''பூவாகில் மதுவோடே கூடியல்லது இராமை யாலே சேரும் என்று சொல்லுவார்கள் தமிழர்'' என்று பொருளிசையந்தாதியின் அமைப்பைக் காட்டுகிறார். மேலும் கீழில் 'வதுவார்' என்று பாடமானால் போரச் சேரும் என்று இயல் இசை அந்தாதியாக்கவும் வழிகாட்டுவர்.

---

212. 4 - 7 - 2ஈ; 4 - 8 - 1ஈ
213 தி.வா.மொ. 9 - 6 - 5
214. மேலது 9 - 6 - 6
215. மேலது 1 - 6 - 1
216. மேலது 1 - 6 - 2

# இயல் 1. நம்பிள்ளை அருளிய திருவாய்மொழி உரைத்திறன்

## தமிழ்நூல் மேற்கோளாட்சி

### முந்துநூற் பயிற்சி

ஓர் இலக்கிய அல்லது இலக்கண உரையாசிரியருக்குத் தாம் உரை எழுதப்போகும் நூலில் மட்டும் நன்கு பயிற்சி இருந்தால் போதாது. அதற்கு முன்னர் எழுந்த இலக்கியம் இலக்கணம் உரைநூல், நிகண்டுகள் ஆகியவற்றிலும் நன்கு பயிற்சியிருத்தல் வேண்டும். இப்பயிற்சியினால் மூல நூலாசிரி-யரின் உட்கோளைத் தெளிவுபடுத்த முடிகிறது. திருவாய் மொழிக்குப் பேருரைவரைந்த நம்பிள்ளை நம்மாழ்வாரின் பிற நூல்களையும் மற்றையாழ்வார்களின் நூல்களையும் நன்கு பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். ஏறத்தாழ இரண்டாயிர-மிடங்களில் அவற்றை மேற்கோளாக ஆண்டிருக்கிறார். ஆழ்வார் பாசுரங்களைத் தவிரச் சங்க நூல்களான எட்டுத்தொகை பதினெண் கீழ்க்கணக்கு முதலியவற்றிலிருந்தும் தொல்காப்பி யம், இறையனார் களவியலுரை யாப்பருங்கலக்காரிகை முதலிய இலக்கண நூல்களிலிருந்தும், நிகண்டுகளிலிருந்தும், சிலப்பதி-கார அரும்பதவுரையிலிருந்தும் கம்பருடைய இராமாயணத்தி-லிருந்தும், பல மேற்கோள்களைச் சான்றுகளாகக் காட்டியிருக் கிறார். அவற்றை நம்பிள்ளை சான்றாக ஆண்ட முறைகளை ஆய்வு செய்தால் அவருடைய உரைத்திறனை நன்கு மதிப்பிட முடியும்.

### தொல்காப்பியம்

தொல்காப்பியத்தில் களவியல் உரியியல்களிலிருந்து இரண்டு சூத்திரங்களை எடுத்தாளுகிறார் நம்பிள்ளை. "தேவர் கட்கெல்லாம் விருத்தா"[1] என்று நம்மாழ்வார் பரம்பொருளை ஓரிடத்து அழைக்கிறார் இதற்குப் பொருளாக நம்பிள்ளை- "இனி அவ்வருகில்லை என்னும்படி உயர்ந்தவர்களுக்கும் அவ்-வருகானவனே" என்று எழுதுகிறார். ஈண்டு 'விருத்தன்

1. தி.வா.மொ 9-4-6

என்பதற்குத் "தலைவன்" என்று பொருள் கொண்டார். 'விருத்தன்' என்பது முதியோன் என்று தான் வடமொழியிற் பொருள்படும். வயதில் முதியோன் என்பது எப்படித் 'தலைவன், என்ற பொருளைத் தரும்? அப்பொருளைக் கொண்டதற்கு நம்பிள்ளை, "தலைமகனையும் தலைமகளையும் 'கிழவனும் கிழத்தியும், என்று தமிழர் சொல்லக் கடவர்களிறே" என்று சமாதானம் காட்டுகிறார்.

இத் தொடர்,

ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோ னாயினும் கடிவரை யின்றே [2]

என்ற தொல்காப்பியச் சூத்திரத்திலிருந்து மேற்கோளாகத் தழுவப்பட்டிருக்கிறது. வடமொழியான 'விருத்தன்' என்பதைக் 'கிழவன்' என்றாக்கிக் 'கிழவன்' என்பது செய்யுள் வழக்கில் தலைமகனைக் குறிக்கும் என்று இச்சூத்திரத்தாற் கொண்டார்.[3] இங்ஙனம் வடசொல்லை அதன் பொருள்தரும் தமிழ்ச் சொல்லாக்கி அத்தமிழ்ச் சொல்லின் மற்றொரு பொருளைக் குறிக்கும் முறையை 'லட்சித லட்சணை' என்பர். பூதத்தாழ்வார் கண்ணபிரானைக் 'கூந்தல்வாய் கீண்டான்'[4] என்றுகுறிக்கிறார். இங்குக் கூந்தல்→கேசம்→கேசி என்னும் அசுரனைச் சுட்டுகிறது. "கூந்தல் எரிசினம் கொன்றாய்'[5] என்ற பரிபாடற்பகுதிக்கு உரையிடும் பரிமேலழகரும் 'கூந்தல்'என்ற சொல் குறித்து, 'இப்பெயர் கேசம் என்னும் முதல்நிலையாக முடிந்தமையின் அதன் பொருண்மை பற்றிக் கூந்தல்என்றார்' என்றெழுதியிருப்பதுமுண்டு. நம்பிள்ளை வடசொல்லில் தொடங்கித் தமிழ்ச் சொல்லில் முடித்துப் பொருள் கொண்டார். இம்முறையைப் பெரியவாச்சான்பிள்ளை தம்முரையிலும் பிரமாணம் காட்டாது அப்படியே பின்பற்றியிருக்கிறார்.[6]

---

2. தொல் ,களவியல், சூத்.2
3. 'கிழவன்' என்ற சொல் ஆண்டில் முதிர்ந்தோரையும் குறித்துவரும். 'மூத்துடன் நடுங்கிநிற்கும் இக்கிழவனை' (தேவா 648,4) - தமிழ்லெக்சிகன், ப.936 இப்பொருளில் 'கிழம்'என்பது பகுதி.
4. இ.தி.அந்.93
5. பரிபாடல், 3:31
6. பெ.வா.பி.வியா., பெரி-.திரு 7-10-7

'அன்று உரு ஏழும் தழுவிநீ கொண்ட ஆய்மகள்
அன்பனே என்னும்'[7]

என்ற பாசுரத்தில் உரு என்பதை உருமுஎன்றதன் தொகுத்தல் விகாரமாகக் கொண்டு 'இடிபோலப் பயங்கரமான குரலையுடைய ஏறு' என்று பொருள் நிறுவினார் நம்பிள்ளை. இனி 'உரு' என்றதையே உரிச்சொல்லாகக் கருதி 'மிடுக்குத் தான் வடிவுகொண்டாற்போலே' என்று மற்றொரு பொருளும் வரைந்தார். அப்பொருள் கோடற்குச் சமாதானமாக '' உருஉட்கு என்றுஉரிச்சொல்லு '' என்றெழுதிப் போந்தார். இத்தொடர் தொல்காப்பியத்தில் உரியியலில் 'உருவுட் காகும் புரையுயர்பாகும்'[8] என்ற சூத்திரத்தின் பகுதியாகும். இதனால் மிடுக்கு — அச்சம் விளைப்பது என்பது பிள்ளை கொண்ட பொருளாகவும் தேறுகிறது.

**இறையனார் களவியலுரை**

இறையனார் களவியலுரையிலிருந்து தலைமகன் தலைமகட்குரிய இலக்கணங்களை அப்படியே தழுவிக் கொண்டிருக்கிறார் நம்பிள்ளை. மாசறு சோதி (5—3) முன்னுரையில், 'அறிவு, நிறைவு, ஓர்ப்பு, கடைப்பிடி என்றாற் போலே. சொல்லுகிற நாயக லட்சணங்கள் நாயகனுக்குண்டாய், நாண், மடம், அச்சம், பயிர்ப்பு என்றாற்போலே சொல்லுகிற நாயகியுடைய லட்சணங்கள் நாயகிக்குண்டாய்'' என்று எழுதிப் போருவர்.[9] இவ்விலக்கணங்கள் யாவும் களவியலுரையிற் காணப்படுகின்றன.[10]

மேலும் திருவாய்மொழியில் அகப்பொருட்பாடல்களுக்கு விளக்கங்கள் எழுதுவதில் களவியலுரைக் கருத்துக்களுக்கு முரணாகாதவாறும் காத்துக்கொண்டார். களவியலுரை, மற்றும் தொல்காப்பியப் பொருளதிகாரம், திருக்குறட் காமத்துப்பால் முதலியவற்றைச் சாத்திரமாகக் கொண்டு அவை வரையறுக்கும் விதிவிலக்குகளுக்குப் பெருமதிப்புக் கொடுத்தனர் திவ்வியப் பிரபந்த உரையாசிரியர்கள். இராமாநுசர் ஒருமுறை இறையனார் களவியலுரைக் கருத்துக்கு முரணாவதாகக்

7. தி.வா.மொ 7-2-9
8. தொல்., உரியியல், சூத்.4
9. 5-3-0ஈ
10. களவியலுரை, சூத்.2

காட்டித் திருமாலையாண்டானுடைய பொருள் ஆட்சியை மறுத்திருக்கிறார்.

திருவண்வண்டூரிலுள்ள திருமாலிடத்து வண்டுகளைத் தூதுவிடும் நம்மாழ்வார்.

மாறில் போர்அரக்கன் மதிள்நீறெழச் செற்றுகந்த
ஏறு சேவகனார்க்கு என்னையும் உளள் என்மின்களே''[11]

என்று தூதுச் சேதியைச் சொல்லிவிடுகிறார். இதற்கு வியாக்கியானமாகத் திருமாலையாண்டான் ''நாயகிதானும் இன்னமும் அவரை எதிர்நோக்கி உயிரோடிருப்பதாகச் சொல்லுங்கள்'' என்று பொருள்பட உரைத்தாராம். அதைக் கேட்ட இராமாநுசர் 'அழகிது; ஆகிலும் இன்றியமையாமை; என்ற தமிழரதொரு பிரவாதமுண்டு; அதாகிறது — ஒரு தலையுண்டானால் ஒரு தலையின்றிக்கேயிராது. இரண்டு தலையுமுண்டாதல், இரண்டு தலையுமின்றிக்கே யொழிதல் இத்தனையாயிற்று. அதில் தாமுளராகையாலே இத்தலையும் உண்டு என்கை நிச்சிதம்; ஆனபின்பு, பிரதிகூலித்தாரைக் கிழங்கெடுத்துப் பொகட்டு அநுகூலித்தார் தலையிலே முடியை வைத்து கிருதக்கிருத்தியராய் 'இனிக் கர்த்தவ்ய சேஷமில்லை' என்று இருக்கிறவர்க்கு இன்னமும் ரட்சிய வர்க்கம் ஒன்றுண்டு என்று சொல்லுங்கோள்'' என்று நிருவகித்தாராம்.[12]

தலைவி உயிரோடிருப்பதைத் தலைவன் கேட்டு அறிய வேண்டுவதில்லை. தலைவனான தான் உயிர்பெற்றிருப்பதைக் கொண்டே அறியலாம். தலைவிபால் தலையாய கற்பு அமைந்துகிடக்கும். தலைவற்கு ஒன்று நிகழ்ந்து உயிர் பிரியுமாயின் தலைவியின் உயிரும் அக்கணமே உடன்பிரியும். இத்தன்மையினைத்தான் தமிழர் 'இன்றியமையாமை' என்று சிறப்புறக் கூறுவதாக இராமாநுசர் குறிப்பிட்டார்.

களவியலுரைகாரர் தலைமகனது நினைவுகளை எழுதும் போது, 'யான் பிரிந்தவிடத்து என் குறிப்பின்றி இறந்துபடாள்'[13] என்று குறிப்பிட்டிருக்கிறார். மேலும், வேட்கையை வரையறை செய்யவேண்டுங்காலத்து, ' வேட்கை என்னோ-

11. தி.வா.மொ 6-1-10
12. 6-1-10ஈ
13. களவியலுரை, சூத் .2

வெனின், ஒருவர் ஒருவரை இன்றியமையாமை''[14] என்று வரைந்திருக்கிறார். இக்கருத்துக்களையே 'தமிழரது பிரவாதம்'என்று இராமாநுசர் போற்றியிருக்கிறார். பிரவாதமாவது சிறப்புக் கூற்றாகும். ஆதலால் 'இலங்கையுட் சிறையிருந்த செல்வியைச் சிறைமீட்டுச் செய்யவேண்டுவன செய்து முடித்தானாய்த் திருவண்வண்டூரில் வில்லுங் கையுமாகத் தங்கிவிட்டான் அவன்; இன்னமும் பிறவிச் சிறையிலிருந்து அவனால் காக்கப்பட வேண்டிய ஒருத்தி உளள்' என்ற கருத்துப்பொதியுமாறு உரை நிறுவித் தமிழ் அகப்பொருள் மரபுகளைக் கௌரவித்தார் இராமாநுசர். இக்கருத்தே தமக்கும் உடன்பாடாதலின் நம்பிள்ளை இராமாநுசருடைய கருத்தை வலியுறுத்தித் தழுவிக் கொண்டார்.

**பாவிலக்கண நூல்கள்**

நம்பிள்ளை செய்யுள் இலக்கண ஆராய்ச்சியில் இறங்குவதில்லை. அவ் வாராய்ச்சியை இலக்கிய அனுபவத்திற்கு இடைக் கல்லாகக் கருதுமவர் அவர். யாப்பருங்கலக்காரிகையின் முதற் காரிகையின் ஒரு பகுதியான, 'எழுத்தசை சீர், பந்தம், அடி, தொடை, பாவினம்' என்பதை மட்டும் இரண்டிடங்களில் எடுத்தாண்டிருக்கிறார்.[15] கவிக்கு உறுப்பாவன இவை என்பதைக் காட்டவே அப்பகுதியைச் சுட்டியிருக்கிறார். 'தளவேழ் முறுவல்,[16] என்ற தொடருக்கு 'முல்லை போன்ற முறுவல் என்று பொருள்கூறி, முறுவலுக்கு முல்லையை உபமானமாக ஆக்குவதற்கு மேற்கோளாகப் 'பல்லுக்குத் தோற்ற பனிமுல்லை'[17] என்ற யாப்பருங்கலக்காரிகை மேற்கோட்பாடலைக் காட்டுகிறார்.

**சங்க நூல்கள்**

பாட்டும் தொகையுமான சங்க நூல்களில் குறுந்தொகைப் பாடல்கள் இரண்டினை மேற்கோளாக ஈட்டிற் காண்கிறோம். அவற்றுள் ஒன்று பட்டரால் தமது சொற்பொழிவில் எடுத்தாளப்பட்டது. 'என் நீர்மை கண்டிரங்கி'[18] என்ற விடத்தில்

---

14. மேலது
15. ம.பி (1) ; 1-2-11ஈ
16. தி.வா.மொ 1-5-1
17. யாப்பருங்கலக்காரிகை ஒழிபியல், காரிகை. 51
18. தி.வா.மொ. 1-4-4.

தலைவியோடுகூடிய காலத்தும் அவளது பசலையைக் கண்டவன் தலைவன் என்பதற்குப் பிரமாணமாக,

ஊருண் கேணி உண்துறை தொக்க
பாசியற்றே பசலை காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்தலானே[19]

என்ற குறுந்தொகைப் பாடல் காட்டப்படுகிறது பட்டர் வாய் மொழிவுரையால் வந்த இப்பிரமாணம் நம்பிள்ளையால் பொன்னேபோல் தழுவப்பட்டது. இக் குறுந்தொகைப்பாடலோடு பொருள்தொடர்புள்ளதான,

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு[20]

என்ற திருக்குறளையும் ஒரு சேரக் காட்டினார் பட்டர்.

இதைப்போன்றே மற்றோரிடத்திலும் நம்பிள்ளை குறுந்தொகையையும் திருக்குறளையும் ஒரே பாடல் உரையில் ஒரு சேரத் தழுவியிருக்கிறார். பிரிவஞ்சிப் பேசும் தலைமகளான ஆழ்வார், தலைவன் தன்னைப் புணர்தொறும் பெறும் இன்பமானது அப்புணர்ச்சியினும் விஞ்சி நிகழுமாற்றைக் கூறுவதாக,

தகவிலை தகவிலையே நீ கண்ணா
தடமுலை புணர்தொறும் புணர்ச்சிக்காராச்
சுகவெள்ளம் விசும்பிறந்து அறிவை
மூழ்க்கச் சூழ்ந்து...[21]

என்ற ஒரு பகுதி வருகிறது. 'புணர்தொறும் புணர்ச்சிக்கு ஆராச் சுகவெள்ளம்' என்பதை விளக்குமிடத்துப் 'புணருகை ஒருபோதாய் சுகம் நிரதிசயமாயிருக்கும்' என்று குறிப்பிடுவர் நம்பிள்ளை. புணர்ச்சியின் அளவுச் சிறுமைக்கும் இன்ப நுகர்ச்சியின் அளவிறந்தமைக்கும் ஒரு பிரமாணமாக,

19. குறுந்தொகை, 399

20. திருக்குறள், 1187

21. தி.வா.மொ.10-3-2

நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினு மாரள வின்றே சாரல்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தே னிழைக்கும் நாடனொடு நட்பே.[22]

என்ற குறுந்தொகைப் பாடலை முழுவதுமாக எடுத்துக்காட்டிச் சிறிது விளக்கமும் காட்டுகிறார் நம்பிள்ளை. 'குறிஞ்சிப்பூக் கொண்டு பெருந்தேன் இழைக்கை' என்பதை உயிர்வரியாகக் கொள்கிறார். குறிஞ்சிப்பூ உருவில் சிறிது; இழைத்ததோ அளவிற் பெருந்தேன். இம்முரண் அழகில் ஈடுபட்டு உள்ளுறை உணர்ந்தவர் நம்பிள்ளை. இப்பாடலில் நட்பைப் புணர்ச்சி-யின்பமாகக் கொண்டு அது எல்லாப் பொருளையும் தன்னகப்-படுத்தும் வானையும் குளப்படியாக்கிவிட்டது என்பது நம்பிள்ளையின் கருத்து.[23]

'இரவின் வந்துஎம் இடைமுலை பொருந்தித்
துணிகண் அகல வளைஇக் கங்குலின்
இனிதின் இயைந்த நண்பு'[24]

என்ற அகநானூற்றுப் பாடலில் புணர்ச்சியானது 'நண்பு' என்று குறிப்பிடப்பட்டுள்ளது நம்பிள்ளையின் உரைக்கு அரண் செய்கிறது. மேலும் ஆழ்வார் கூற்றில் 'சுகவெள்ளம் விசும்-பிறந்து' என்பதில் விசும்பை வானாகக் கொண்டு குறுந்-தொகைப்பாடலைக் காட்டியதோடு அமையாது விசும்பைப் பரமபதமாகக் கொண்டு புணரின்பம் பரமபதத்தையும் எல்லை மீறியது என்று மற்றொரு பொருளையும் நம்பிள்ளை குறிப்-பிடுகிறார். அப்படியானால் புணர்ச்சியின்பம் பேரின்பமயமான பரமபதத்தையும் மீறிய சுகத்தைத் தரவல்லது என்பதற்குச் சான்று வேண்டுமன்றோ! திருக்குறட்காமத்துப்பாலில் தலைவன் கூற்றாக வரும் ஒரு குறட்பா அழகிய சான்றாக நம்பிள்ளையால் திருவாய்மொழிப் பேருரையில் இடம்பெற்றுவிடுகிறது.

தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணா னுலகு[25]

---

22. குறுந்தொகை,3. இக்குறுந்தொகைப் பாடலைத் தொல்காப்பியம் களவியல் 147ஆம் சூத்திரவுரையில் மேற்கோளாகக்காட்டி 'இது நிறுத்தற்கட் கூறியது' என்பர் நச்சினார்க்கினியர். நம்பிள்ளை இதனைக் களவியலைச் சார்ந்ததாகக் கொண்டார்.

23. 10-3.2ஈ குளப்படி-ஆடுமாடுகளின் கால் குளம்புகள் பதிந்து ஏற்பட்ட குழி,

24. அகநானூறு, 328

25. திருக்குறள், 1103

என்பது அத்திருக்குறள். திருவாய்மொழியில் வருவது தலைவி கூற்று; திருக்குறளில் வருவதோ தலைவன் கூற்று கூறியோர் வேறுபடினும் கூற்றினுட்கோள் மாறாத இருவேறு இலக்கியப் பகுதிகளைக் கற்போர் சுவைக்குமாறு விருந்தாகப் படைத்த நம்பிள்ளையை ஒரு மொழியுள் ஒப்பிலக்கிய முன்னோடி என்று கருதலாம்.

எட்டுத்தொகையுள் மற்றொரு நூலாகிய கலித்தொகை-யின் சில பாடற்கருத்துக்களை மட்டும் நம்பிள்ளை பயன்படுத்திக் கொண்டனர் என்பதற்குச் சான்றாக ஈரிடங்கள் உள்ளன. திருவாய்மொழியில்,

> 'பிணியவிழ் மல்லிகை வாடை தூவப்
> பெருமதமாலையும் வந்தன் றாலோ'[26]

என்று பிரிவஞ்சிய தலைமகள் மாலைக்காலத்தின் வருகையை வருணிக்கிறாள். 'வாடைதூவ மாலையும் வந்தன்று' என்னும் சேர்த்தியில் ஈடுபட்ட நம்பிள்ளை, 'மத்தகஜமானது முன்னே தலைப்பறை கொட்டவருமாபோலே வாடையை முன் நடக்க விட்டுக் கொண்டாய்த்து மாலை வருகிறது' என்ற உவமையால் விரிப்பர். இவ்வுவமை,

> 'நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
> பறையறைந் தல்லது செல்லற்க என்னா
> இறையே தவறுடையான்'[27]

என்ற பாடலுள் பயின்ற உவமையோடு பெரிதும் ஒன்றுபட் டிருக்கிறது. மற்றோரிடத்தில் கலித்தொகைப்பாடவில்,

> அன்னையும் யானும் இருந்தேமா இல்லீரே
> உண்ணுநீர் வேட்டேன் எனவந்தாற்கு ......[28]

என்று வருங்கருத்தை. 'அபிமத விஷயம் (காதலி)இருந்தவிடத்தே தண்ணீர் என்று புகுருமா போலே'[29] என்று உவமையாக்கினார். இவற்றால் நம்பிள்ளை சங்கநூல்களைக் கற்றிருந்தார் என்றும் அவற்றை அருள்நூலின் கருத்துக்களுக்குச் சான்றுகளாகப் பயன்படுத்தினார் என்றும் அறியப்படும்.

26. தி.வா.மொ. 10-3-5
27. கலித்தொகை, 56
28. மேலது 51
29. 10-7-1ஈ

**திருக்குறள் மேற்கோள்**

திருவாய்மொழிப் பேருரையான ஈட்டில் திருக்குறளே பேரளவாக இடம்பெறுகிறது. ஐந்து இடங்களில் முழுக்குறளை யும் காட்டுகிறார்; ஆறிடங்களில் திருக்குறள் தொடர்களை மேற்கோளாக எடுக்கிறார்; ஓரிடத்தில் குறட்சொல்லை ஏற் கிறார்; ஈரிடங்களில் குறளை உரைநடைப்படுத்தியாளுகிறார். அவற்றை முறையாக ஆய்வுசெய்து சில முடிவுகளைக் கொள்ள லாம்.

**சான்றுகள் :-**

(1) 'மலர் மாதர் உறை மார்பன்[30] என்ற இடத்தில் மலரிலே பிறந்த பிராட்டி மாலின் மார்பிலே உறைவதற்கு நயமிக்க காரணம் ஒன்றை நம்பிள்ளை காட்டுகிறார். பிராட் டியின் பிறப்பகமான மலரினும் மிக மெல்லியதாயிருக்கிறதாம் திருமாலின் திருமார்பு; திருமார்பின் மென்மையை நோக்க அம்மலர் நெருஞ்சியாகத் தோற்றுமாம். 'தான் பிறந்த பூ நெருஞ்சிக் காடாம்படியான மார்பு படைத்தவன்' என்பது ஈட்டுத்தொடர். இனி மலர் நெருஞ்சியாகுமோ? என்ற ஐயத் தைத் திருக்குறளைக் கொண்டு அகற்றுகிறார்.

'அனிச்சமும் அன்னத்தின் தூவியும் ம தர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்'[31]

என்ற குறளை மொழிகுவர்.

(2) *மாசறுசோதி (5–3)யில் மடலெடுக்கத் துணிந்த பராங்குச நாயகி தோழியைக் குறித்து. 'ஊரவர் கவ்வை தோழி என் செய்யுமே?' என்று கேட்கிறாள். ஊராரின் பழிச்சொல் தனக்கு உயிர் தரிக்கவே காரணமாகுமதொழிய வேறொன்றும் செய்யாது என்பது தலைவியின் குறிப்பு. இதனை, 'ஊரார் பழி புகழாம் எல்லையிலேயன்றோ நாம் நிற்கிறது; அவர் சொல்லுகிறவிது நமக்கு அவத்யமோ? தாரகமாமித்தனையன்- றோ''[32] என்று தலைவிமொழிகளாகவே விரித்துரைப்பர் நம்பிள்ளை. மேலும் ஊர்ப்பழி அங்ஙனம் உயிர்நிற்கத் தார- கம் என்பதற்குப் பிரமாணங் கூறுமிடத்து, '' 'அலரெழிலாருயிர் நிற்கும்' என்னக் கடவதிறே'' என்று

30. தி.வா.மொ. 4-8-2
31. திருக்குறள் 1120
32. 5.3.1ஈ

'அலரெழ ஆருயிர் நிற்கும் அதனைப்
பலரறியார் பாக்கியத் தால்'[33]

எனவரும் குறளின் ஒரு பகுதியை மேற்கோள்காட்டுகிறார். இத் திருக்குறளை மேலும் இரண்டிடங்களில் சான்றாகக் காட்டு-கிறார்.

தனிப்போக்கிலே சென்ற தலைவியைக் குறித்து வருந்திய திருத்தாயார்

'சேரிபல்பழி தூஉய் இரைப்பத் திருச்கோளூர்க்கே
நேரிழை நடந்தாள் எம்மையொன்றும் நினைத்திலளே'[34]

என்று இரங்கிக் கூறுகிறாள். இவ்விடத்துப் 'பழிதூஉய் இரைப்ப ...நடந்தாள்' என்ற தொடர்பையுணர்த்தப் புகுந்த நம்பிள்ளை ''அலரெழில் ஆருயிர் நிற்கும்'' என்று வழிக்கு தாரகமாமிறே'' என்று குறிப்பிடுகிறார். இதனால் பழிச்சொற்கள் வழிக்குத் துணையாம் என்பதைக் குறள்கொண்டு நாட்டுகிறார்.

வெள்ளைச்சுரிசங்கு (7-3) என்ற திருவாய்மொழியில் ஆழ்வார் நாயகியாக மாறித் தலைவனைத் தேடித் தென்-திருப்பேரெயிலுக்குப் போக முடிவு செய்ததைப் பாசுரமிடு-கிறார் அருகிருந்த தோழியர் தலைவியின் முடிவு ஊரும் நாடும் நகரமும் இகழ்ந்து பழிதூற்றுதற்குக் காரணமாகிவிடும் என்றதாகக் கொண்டு அவர்களைக் குறித்துத் தலைவியான ஆழ்வார்

'நகரமும் நாடும் பிறவும் தேர்வேன்
நாண் எனக்கில்லை என் தோழிமீர்காள்'[35]

என்று அறுதியிடுகிறாள் நகரத்தினர், நாட்டினர் பழியையே தான் தேடுவதாகத் தலைவி குறிப்பாலுணர்த்துவதாக நம்பிள்ளை வியாக்கியானமிட்டு அவர்கள் பழி இவளுக்குத் தேட்டமாகி உயிர்காக்கும் என்பதற்குப் பிரமாணமாக 'அலரெழ வாருயிர் நிற்கும்' என்ற குறட்பகுதியைக் காட்டுகிறார்.[36]

---

33. திருக்குறள், 1141
34. தி.வா.மொ. 6.7.9
35. மேலது 7-3-10
36. 6.7.9 ஈட்டின்படி 'அலரெழிலாருயிர் நிற்கும்' என்ற பாடம் கிடைக்கிறது. (திருக்குறள் 1141). இக் குறட்பாவில் வரும் 'ஆருயிர்' என்பதைத் தலை-வனுடைய உயிரைக்காட்டுவதாகக் கொள்வர் பரிமேலழகர். நம்பிள்ளை தலைவியின் உயிரைக் காட்டுவதாக் கொள்வர்.

(3) *வைகல்பூங்கழிவாய் (6—1) என்ற திருவாய்மொழியில் ஆழ்வார் அன்னங்களைத் தூதுவிடுகிறார் பேடும் சேவலுமாய்த் திரிகின்ற அவ்வன்னங்களை,

'உணர்த்தல் ஊடல் உணர்ந்துடன் மேயும் மடவன்னங்காள்'[37]

என்று தலைவி கூவி அழைக்கிறாள். அவ்வன்னங்கள் ஊடி உணர்ந்து புணர்ந்து இன்பம் நுகருகின்றன என்பது குறிப்பு. ஊடலும் உணர்தலும் புணர்தலும் ஆகிய மூன்றுமே இன்ப நுகர்ச்சியின் பாற்பட்டு 'போகப்ரகாரம்' மூன்றாகுவன என்பது நம்பிள்ளையின் கருத்து.[38] அதற்குச் சான்றாக,

> ஊட லுணர்தல் புணர்த லிவைமூன்றும்
> காமத்தாற் பெற்ற பயன்[39]

என்ற ஒரு குறளைக்காட்டுகிறார். இன்றைய பதிப்புக்களில் இக்குறள்

> ஊட லுணர்தல் புணர்தலி வைகாமம்
> கூடியார் பெற்ற பயன் [40]

என்றே காணப்பட்டுப் பரிமேலழகருரையும் அங்ஙனமே அமைந்து கிடக்கிறது. பரிமேலழகருக்கு முற்பட்டவரான நம்பிள்ளையின் காலத்தில் இக்குறள் இவ்வடிவிலும் வழங்கப் பட்டிருக்கலாம்.

(4) நம்பிள்ளை ஓரிடத்தில் காமத்துப்பால் குறட்பா ஒன்றை முழுதும் எடுத்து அதற்குப் பொழிப்புரையும் உடன் வரைந்திருக்கின்றார்.

> 'உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும்
> எல்லாங் கண்ணன்' [41]

என்று கூறிக் கண்ணீர் மல்கிய தன் மகள் திருக்கோளூர் நோக்கித் தனிப்போக்கிலே யிழிந்தாள் என்று திருத்தாயார் இரங்குவதாக ஒரு பாசுரம். சோறு நீர் வெற்றிலை என்னாது உண்ணும் பருகும் தின்னும் என்று அடைமொழிகளை யிட்டுக் கூறியதன் கருத்தை விவரிக்கிறார் நம்பிள்ளை. சோறும் நீரும்

---

37. தி.வா.மொ. 6.1-5
பாசுரத்தில் 'உணர்தல்' என்பது எதுகை நோக்கி 'உணர்த்தல் என்றாயிற்று என்று கொள்வர் நம்பிள்ளை.
38. 6-1-5ஈ
39. மேலது
40. திருக்குறள், 1109
41. தி.வா.மொ. 6-7.1

வெற்றிலையும் உயிர் நிலைப்பதற்கும் நிலைத்தபின் உடல் வளருகைக்கும் வளர்ந்த போதே சுவைப்பதற்குமாக வேண்டுவனவாம். ஆயினும் அவை வேட்கை கூடியவழியே ஒருவரால் விரும்பத்தக்கனவாகிச் சுவை மிகப் பயப்பதாய் அமையும் இதை விளக்குவதற்குப் பிரமாணமாக,

> வேட்டப் பொழுதில் அவையவை போலுமே
> தோட்டார் கதுப்பினாள் தோள் [42]

என்ற அருமைத் திருக்குறளைக் காட்டி அதற்குப் பொழிப்பாக,

> ''அபேட்சையுடைய போதில் அந்தவந்த சோறு தண்ணீர் வெற்றிலை போலாகுமிறே தோடு பொருந்தின கதுப்பையுடையவள் தோளின் ஸம்ச்லேஷம் [43]

என்றும் வரைந்துள்ளார். குறளில் 'அவை' என்பதற்கு 'மிக இனியவாயபொருள்கள்' என்றுமட்டுமே பரிமேலழகர் விளக்குவர். நம்பிள்ளையோ 'அவையவை' என்ற அடுக்கின் அழுத்த முணர்ந்து 'அந்தவந்த சோறு தண்ணீர் வெற்றிலை' என்று விரித்துணர்த்துவர். ஒருவனால் விரும்பப்படும் நுகர்பொருட்களை இம்மூன்றிலும் அடக்கிக் காட்டுவர் அவர். இவற்றை வடநூலார் தாரக, போஷக, போக்ய வஸ்துக்கள் என்பர். புணர்ச்சியுள் மகிழ்ந்த தலைவன் தலைவியைத் தாரக போஷக போக்கிய வஸ்துக்களாகக் கொண்டு, அவள் தோள் நலம் நுகர்ந்தான் என்பது நம்பிள்ளையின் கருத்தாகும்

(5) ஓரிடத்தில் பராங்குசநாயகியின் காதலனுபவத்துக்கு மேற்கோளாகக் காமத்துப்பால் புணர்ச்சிவிதும்பலில் ஒரு குறளைக் காட்டுவர். தன் கையைவிட்டு நீங்கிய தலைவி திருக்கோளூர் சென்று தலைவனைக் கண்டபோது படும் பாட்டைத் திருத்தாயார் நினைந்து கண்ணநீர் சோருகிறாள்.

> சென்றுதன் திருமால் திருக்கண்ணும் செவ்வாயும் கண்டு
> நின்றுநின்று நையும் நெடுங்கண்கள் பனிமல்கவே [44]

'நின்று நின்று நையும்' என்பதற்குச் சுவையான விளக்கமளிப்பர் நம்பிள்ளை. தலைவனுடைய கண்ணையும் செவ்வாயையும் கண்டு அவளுக்கு 'அப்படிப் பிரிந்தானே' என்று சினம் பிறக்க

42. திருக்குறள் 1105 'வேட்ட, பொழுதில்' என்பது இன்றைய பதிப்புகளின் பாடம். ஈட்டில் 'வேட்டப் பொழுதில்' என்ற பாடம் கிடைக்கிறது.

43. 6-7-1ஈ

44. தி.வா.மொ. 6-7-6

வில்லையாம்; அவனைக் கண்டபோது அவனுடைய அலமாப்-பைக் கண்டு தன் சினம் மறந்து அவனுடைய பிழையும் மறந்து அவனை நினைந்து மனம் நையத்தொடங்கினள் 'கண்டால் முன்புத்தைப் பிரிவை நினைக்க அறியாள்! எதிர்த்தலை படு-கிறது கண்டு ஈடுபடுகிறபடி' என்று வியாக்கியான மிட்டதோடு அமையாது. பிரிந்த தலைவனைக் கண்டபோது அவனுடைய குற்றம் தோற்றாது என்பதற்குப் பிரமாணமாக,

> காணுங்காற் காணேன் தவறாய காணாக்கால்
> காணேன் தவறல் லவை[45]

என்ற குறட்பாவை முழுவதுமாக மேற்கோள்காட்டுகிறார்

(6) 'வானம்' என்ற சொல்லுக்குப் பொருள் 'மழை' எனக் காட்டவும் 'நீர்' என்பது 'நீர்மை என்ற பொருளில் வரும் எனக் காட்டவும் 'வீழ்தல்' என்பது 'விரும்புதல்' என்ற பொருளில் வரும் எனக் காட்டவும் திருக்குறட்பாக்களையே பிரமாணங்களாக எடுக்கிறார் நம்பிள்ளை. வாழிய வானமே'[46] என்றவிடத்தில். "(வானமே) மேகத்தைச் சொல்லுதல், ஆகாசத்தைச் சொல்லுதல்" என்று இருபொருள் வரைந்த நம்பிள்ளை வானம் என்பது ஆகுபெயராக மேகத்தைக் காட்டு-லதன்றி 'வானம்' என்பதற்கே மேகம்' என்ற பொருளாகக் குறிப்பிடுகிறார் வானம் என்று மேகத்துக்குப் பேர்' என்று பொருள்கூறிய நம்பிள்ளை அதற்குச் ச ன்று காட்டவேண்டி "'வானம் வழங்கா தெனின்' என்றானிறே தமிழனும்'[47] என்று குறிப்பிடுகிறார்.

> தானம் தவமிரண்டும் தங்கா வியனுலகம்
> வானம் வழங்கா தெனின்[48]

என்ற குறட்பா அது. ஆகுபெயரை விடாது உரையிற்காட்டிச் செல்லும் இயல்பினரான பரிமேலழகரும் வானம் என்பதை ஆகுபெயராகக் குறித்திலர் என்பது நோக்கத்தக்கது.

'நீரென்னே என்னாதே நீளிரவும் துஞ்சுவரால்'[49]

---

45. திருக்குறள், 1286
46. தி.வா.மொ. 2-1-5
47. 2-1-5ஈ
48. திருக்குறள், 19.
49. தி.வா.மொ. 5-4-5

என்ற அடியில் 'நீர்' என்பதற்கு 'நீர்மை' என்று கொண்டார். பண்பு விகுதியின்றி வந்ததாகக் கருத்து அப்படிப்பட்ட ஆட்சி உண்டு என்பதற்கு,

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு [50]

என்ற முழுக்குறட்பாவையும் சான்று காட்டுகிறார். நீர்மைய' என்பது 'நீர' என்று பிரயோகிக்கப்பட்டதால் நீர்மை என்பது 'நீர்' என்றும் வரும் என்பது நம்பிள்ளையின் கருத்தாகும்.

'வாழ்தல் கண்டீர்,[51] என்ற திருவாய்மொழிப்பாசுரத்தில், வடமதுரைப் பிறந்தவன் வண்புகழே வீழ்துணை' என்கிறார் ஆழ்வார். அங்கு 'வீழ்துணை - ஆசைப்படும்துணை' என்று பொருள் வரைந்தார் நம்பிள்ளை. அப்பொருளுக்குச் சான்றாக ''தாம் வீழ்வார் தம் வீழப் பெற்றவர்' என்னக் கடவதிறே ஆசாயுக்தரை'' என்று குறள் ஒன்றைக் காட்டி விர்வுரை வரைகிறார்.

தாம் வீழ்வார் தம் வீழப்பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி [52]

என்பது அவர்காட்டிய குறட்பா. வீழ்தல் - காதலித்தல் என்ப தாகப் பரிமேலழகரும் பொருள் கொண்டார்.

(7) திருக்குறட் பாடல்களின் அடிகளையும் நம்பிள்ளை உரிய இடங்களில் உரைநடைப்படுத்திப் பயன்கொண்டிருக் கிறார். 'கேட்பார்கள்' [53] என்ற பாசுர வியாக்கியானத்தில் 'கற்றிலனாகிலும் கேட்க வேண்டுவதுண்டிறே' என்று,

கற்றிலனாயினும் கேட்க அஃதொருவன்
ஒற்கத்தின் ஊற்றாம் துணை [54]

என்ற குறளின் ஒரு பகுதியை உரைநடையாக்கி எழுதியிருக் கிறார். ஆழ்வார் பாசுரங்களைப் பலவிடத்தும் உரைநடைப் படுத்தி ஆளும் இயல்பினர் நம்பிள்ளை என்பதும் குறிக்

50. திருக்குறள், 782
51. தி. வா. மொ. 9-1-8
52. திருக்குறள், 1191
53. தி. வா. மொ. 7-5-3
54. திருக்குறள், 414

கொள்ள வேண்டியதொன்று. இம்முறையைப் பரிமேலழகரும் பின்பற்றியிருக்கிறார். 'நயமான பாடல்களின் அடியை உரை நடையில் எழுதிச் செல்வது பரிமேலழகர் இயல்பு'[55]

**பழமொழியும் நல்வழியும்**

கீழ்க்கணக்கு நூல்களில் திருக்குறளையடுத்துப் பழமொழி நானூற்றிலிருந்தும் சிலமேற்கோள்களை ஈட்டிற் காண்கிறோம்.

'மாய்த்தல் எண்ணி'[56] என்ற பாசுரத்தில் 'மாயப்பேய் உயிர் மாய்த்த...மாதவா' என்ற தொடரழகில் ஈடுபட்டு 'மாதவா — 'தீ நாள் திருவுடையார்க்கில்லை' என்கிறபடியே இவ்வபாயங்களில் இவன் தப்பிற்று அவள் நெஞ்சோடே கடாட்சிக்கையிறே' என்று நயமுரைப்பர் நம்பிள்ளை. ஈண்டு பழமொழி நானூற்றுப் பாடலின்[57] இறுதியடியை அப்படியே காட்டியிருக்கிறார். நம்பிள்ளை ஈட்டில் பலவிடங்களில் காணப் படும் ஒரு பழமொழி 'நெற் செய்யப் புல் தேயுமாபோலே' என்பதாம். ஓரிடத்தில் நெற் செய்யப் புல்தேயுமாபோலே இவர்கள் ஊன்ற அவை தன்னடையே தேயுமத்தனை'[58] என்று வரைகிறார். இப்பழமொழியும் பழமொழி நானூற்றில்[59] காணப்படுவதொன்றாம் இப்பழமொழி நானூற்றுப் பாடலின் மற்றொரு பகுதியான உவமேயத்தை 'என்கொலம்மான்'[60] என்ற பாசுர வியாக்கியானத்தில் எடுத்திருக்கிறார். "நெடும் பகை தற் செய்யத் தானே கெடும் என்னுமாபோலே இவன் இவ்விடத்தே வர்த்திக்க ஆஸுர வர்க்கம் முடிந்து போய்த்து' என்பது அவ்விடத்து ஈடு.

நல்வழிப் பாடல் ஒன்றில் வரும் பழமொழியை நம்பிள்ளை தம் ஈட்டில் எடுத்தாளுகிறார். 'அம்மிதுணையாக ஆறிழிகை யிறே இவனைவிட்டு உபாயாந்தரத்தைப் பற்றுகை'[61] என்று எழுதும்போது

'அம்மிதுணையாக ஆறு இழிந்தவாறொக்கும்
கொம்மைமுலை பகர்வார் கொண்டாட்டம்[62]

55. மு. வை. அரவிந்தன், உரையாசிரியர்கள், 1977, ப. 417
56. தி.வா. மொ. 4.1-4
57. மேலது 2-3-5
58. 5-2-4ஈ
59. பழமொழிநானூறு, 83
60. தி. வா. மொ. 10-7-4
61. 2-7-3ஈ
.26 நல்வழி, 10

என்ற பாடல் நம்பிள்ளையின் பேருரையில் மேற்கோளாக மலருவதைக் காண்கிறோம்.[63]

**கம்பராமாயாணம்**

நம்பிள்ளை கம்பராமாயணத்தை இளமையிலேயே கற்றிருந்தார். கம்பருடைய சொல்லாட்சியும் வருணனைத் திறனும் அவருடைய மனத்திற்பதிந்திருந்தன. நஞ்சீயராகிய தம் ஆசிரியரிடம் பெரியதிருமொழி ஓதிவரும்போது,

> கரிய மாமுகில் படலங்கள் கிடந்தவை
> முழங்கிடக் களிறு என்று
> பெரிய மாசுணம் வரையெனப் பெயர்தரு
> பிரிதி எம்பெருமானை.[64]

என்ற பாடலின் பொருளாக, 'முகிற் கூட்டங்களின் இடியோசையைக் கேட்ட மலைப்பாம்புகள் களிறென்று கருதி மலை பெயர்ந்தாற் போல் பெயர்ந்து புற்றினுள் அஞ்சி ஒளிந்தன' என்று நஞ்சீயர் உரைத்தார் நம்பிள்ளையும் 'இதுவோ இதுக்கருளிச் செய்யும்படி' என்று கேட்டார்; நீர் இப்படிக் கேட்கும்போது ஒன்றை நினைத்தல்லது கேளீர், அத்தைச் சொல்லும்' என்று நியமித்தார் ஆசாரியர். நம்பிள்ளையும் அப்போதே பெயருகையாவது போக்குவரத்து இரண்டுக்கும் சாதாரணமாயிற்றிருப்பது இனித்தான் மலைக்குச் சிறப்புச் சொல்லுமவர்கள்'மலைபாம்புகள் யானையை விழுங்கும்'என்னக் கடவர்கள், ஆகையாலே இடியொலிகேட்ட ம சுணம் யானை-யாகக் கருதி இரைவேட்டுமலை பேர்ந்தாற்போலேகிட்டுமாயிற்று என்றாகுமே'' என்று விரித்துரைத்தார் நஞ்சியரும் பிள்ளையின் விளக்கத்தை ஆராய்ந்து 'அதுவேயிறே பொருள்' என்று போரக் கொண்டாடியருளினார். இதனைப் பெரியவாச்சான் பிள்ளை நம்பிள்ளை சொல்லக் கேட்டுத் தம் வியாக்கியானத்தில் மறவாது குறித்து வைத்தார்.

களிற்றை மலைவாழ் அரவு விழுங்குவதாகத் தேவாரத்தில் ஒரு குறிப்பு உளது[65] நம்பிள்ளை தம் வியாக்கியானங்களில்

63. இதனால் நல்வழி செய்த ஔவையார் கி.பி. 12ம் நூற்றாண்டிற்கு முற்பட்டவர் என்று ஆகிறது.
64. பெரி, திரு. 1-2-10
65. தேவாரம், திருக்கயிலாயம், முதல் திருமுறை, 2.

யாண்டும் தேவாரத் தொடர்களை மேற்கோளாக எடுத்திலர். அதனால் இந்த வருணனை பிற நூல்களிலிருந்தே அவரால் எடுக்கப்பட்டிருக்கவேண்டும். நற்றிணையில், 'ஞால்வாய்க் களிறு பாந்தட் பட்டெனத், துஞ்சாத்துயரத்தஞ்சு பிடிப்பூசல், நெடுவரை விடரகத் தியம்பும்' என்று ஒரு வருணனை வருகிறது.[66] ஆனாலும் கம்பராமாயணத்தில்,

> இடிகொள் வேழத்தை எயிற்றொடும் எடுத்து
> உடன் விழுங்கும் கரிய மாசுணம் கற்றறிந்தவர் என
> அடங்கிச் சடைகொள் சென்னியர் தாழ்விலர் தாம்
> மிதித்தேறப்படிகள் தாம் எனத் தாழ்வரை கிடப்பன
> பாராய்.[67]

என்ற பாடலே பிள்ளையின் எண்ணத்திலுறைந் திருக்கவேண்டும். திருமொழிப் பாசுரத்தில் 'மாசுணம்' என்ற சொல் வருதலையும் பிள்ளையின் விடையில் 'மலைப் பாம்புகள் விழுங்கும்' என்ற சொல் வருதலையும் ஒரு சேர்த்து நோக்கினால் கம்பருடைய பாடலே நம்பிள்ளையால் நினைக்கப்பட்டதாதல் வேண்டும்.

நம்பிள்ளை தம்முடைய ஈட்டில் கம்பராமாயணத்திலிருந்து இரண்டு பாடல்களை மேற்கோள் காட்டியிருக்கிறார்.

> 'தீமுற்றத் தென்னிலங்கை ஊட்டினான் தாள்நயந்த
> யாமுற்ற துற்றாயோ வாழி கனைகடலே'[68]

என்று தலைவி கடலை வினவுகிறாள். இப் பாசுரப் பகுதியில் 'தென்னிலங்கையைத் தீ முற்ற ஊட்டினான்' என்று கொண்டு நயவுரை எழுதும் நம்பிள்ளை, 'இராவண பயத்தாலே முன்பு அரைவயிறாக ஜீவித்த அக்னி ... வயிறு நிறையவுண்டு ஜீவிக்கப் பெற்றதாயிற்று, பெருமாளை அண்டை கொண்ட பலத்தாலே' என்பர். மேலும் இலங்கையை உண்ட எரி தெவிட்டியது என்பதையும் உணர்த்தவிரும்பிய நம்பிள்ளை ''செந்தீயுண்டு தேக்கிட்டதே' என்னக்கடவதிறே'' என்ற கம்பராமாயணப் பாடலொன்றைக் காட்டுகிறார்.

இலங்கை எரியூட்டுபடலத்தில்

> ''நின்று வெந்துமா நீறெழுகின்றது செந்தீத்
> தின்று தேக்கிடுகின்றது தேவர்கள் சிரிப்பார்''[69]

என்பது இராவணன் கூற்று. இராவணன் சினக்கும் அளவிற்

---

66. நற்றிணை, 14.
67. கம்பராமாயணம், அயோத், கா., சித்திரகூடப்படலம், 34.
68. தி. வா. மொ. 2-1-3
69 கம்பராமாயணம், சுந்தர., இல. எரி, படலம்; 46.

குச் செந்தீ இலங்கை நகரை முற்ற உண்டு தெவிட்டியிருக்கிறது என்பது தெரிகிறது. இராவணன் கூற்றின் ஒரு கூற்றைத்தான் நம்பிள்ளை மேற்கோளாகக் காட்டினர். ஆழ்வார் பாசுரத்தில் 'ஊட்டிய' என்ற சொல்லினாற்றலால் அத்தீ தெவிட்டவும் விடாது உண்ணச் செய்தான் என்பது பெறப்படுவதால் தேக்கிடும் அந்நிலைக்குத் தக்க மேற்கோளாகக் கம்பரின் வாக்கினை எடுத்துக் காட்டியிருக்கிறார்

கம்பருடைய பாசுரங்களை வான்மீகத்தோடும் ஒப்பிட்டுப் பார்த்தவர் நம்பிளை என்பதும் புலனாகின்றது.

'நின்றவாறும் இருந்தவாறும் கிடந்தவாறும்நினைப்பரியன'[70]

என்ற பாடலடியில் கிடந்தவாற்றுக்குப் பெருமாள் வருணனை வழிவேண்டித் தரைக்கிடந்ததைப் பொருளாகப் பணிப்பர் பிள்ளை. கடற்கரையில் இராகவன் கிடந்த திருக்கோலத்தை வான்மீகர் 'அஞ்சலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிசிச்யே மஹோததே:'[71] என்று வருணித்திருப்பதை அவ்விடத்து ஈட்டில் எடுத்துக் காட்டி 'ப்ரதிசிச்யே' என்ற சொற்கு நயவுரையாக 'ஒரு கடலோடே ஒரு கடல் ஸ்பர்தித்துக் கிடந்தாப் போலே' என்று எழுதுவர். உடனே அப்பொருட்கிணங்கிய கம்பர் பாடல் நினைவிற்கு வரவே, ''கருணை என்னுங் கடல் கருங்கடலை நோக்கிக் கிடந்ததே' என்றானிறே'' என்று குறிப்பிடுகிறார். இதனால் வான்மீகியாரின் ஒரு சொல்லைப் பொருட்டெளிவு படவும் நயவுணர்வு பிறப்பவும் கம்பர் விரித்துப் பாடியதை நம்பிள்ளை தெளிவாக உணர்த்தியிருக்கிறார்.

'கருணையங்கடல் கிடந்தனன் கருங்கடல் நோக்கி'[72] என்பது கம்பர் பாடல். இதைச் சற்று விரித்து உரைநடைப் படுத்திக் காட்டினார் நம்பிள்ளை. இதே பாடலை,

'ஞாலத்தூடே நடந்தும் நின்றும் கிடந்தும் இருந்தும்[73] என்று தொடங்கும் பாடலின் ஈட்டிலும் எடுத்துக் காட்டியிருக்கிறார். அவ்விடத்தில் கம்பர் பாடலின் அடியை உரைநடைப்படுத்தாது பாடலில் கிடந்தவாறே எடுத்தாளுகிறார்.

---

70. தி. வா. மொ. 5 - 10 - 6
71. வான்மீகி இராமாயணம், யுத். 21-1
72. கம்பராமாயணம், உயுத்., வருணனை., 5
73. தி. வா. மொ. 6 - 9 - 3

“கருணையங் கடல் துயின்றனன் கருங்கடல் நோக்கி. என்னும் படியிறே”[74] என்பது ஈடு. முன்னுதாரணத்தில் ‘கிடந்தது’ என்று எழுதியவர் ‘துயின்றனன்’ என்று குறிப்பிட்டிருக்கிறார். இதனால் ஒருண்மை தெளிவாகிறது. நம்பிள்ளை காலத்திலேயே அப்பாடலில் பாடபேதம் தோன்றி விட்டது என்று கருதலாம். தம்காலத்து வழங்கிய இரண்டு பாடங்களையும் நம்பிள்ளை காட்டியதாகவே கொள்ளலாம்’ ஒரு நூலில் பாடபேதம் விளையச் சில நூற்றாண்டுகளாவது கழிந்திருக்க வேண்டும். நம்பிள்ளை கி. பி. 12 ஆம் நூற்றாண்டின் பிற்பாதியில் வாழ்ந்தவர். எனவே கம்பர் அவர்க்கு முற்பட்டவராதல் வேண்டும். ஆதலால் மூன்றாங் குலோத்துங்கன் காலத்தில் (கி. பி. 1178-1218) கம்பராமாயணம் எழுதப்பட்டு கி. பி. 1185ல் அரங்கேற்றப்பட்டதாகக் கொள்வாருடைய முடிவு பொருந்தாமற்போகிறது.[75] மேலும் நாதமுனிகளால் ஏற்றுக் கொள்ளப்பட்டு முன்னோர்களின் இசைவு பெற்றதாலேயே நம்பிள்ளை கம்பருடைய பாசுரத்தை மேற்கோளாகக் காட்டினர் என்று தெளிவாகக் கொள்ளலாம். சங்கநூல்களையும் நிகண்டுகளையும் உதாரணங்காட்டியதும் பட்டருடைய வழியைப் பின்பற்றியதேயாம். இவற்றால் நாதமுனிகள் காலத்திலேயே கம்பர் தம்முடைய இராமகாதையை அரங்கேற்றினார் என்பது தெளிவாகிறது. அண்மைக்கால ஆய்வாளர்களும் அம்முடிபினராகக் காணப்படுகின்றனர்.[76] அம்முடிபுக்கு நம்பிள்ளை ஈடு அரண் செய்கிறது.

கம்பராமாயணத்தை முதன்முதலில் உரையகத்து மேற்கோளாகக் காட்டிய பெருமை நம்பிள்ளையையே சேரும். நம்பிள்ளை சென்ற நெறியிலேயே பெரியவாச்சான் பிள்ளையும், அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும், மணவாள மாமுனிகளும் தம் வியாக்கியானங்களில் கம்பர் பாடல்களைப் பிரமாணமாகக் காட்டினர். வைணவ ஆசாரியர்களான திவ்வியப் பிரபந்த உரையாசிரியர்களே கம்பர் பாடல்களைப் பிரமாணமாக ஏற்றுக் கொண்டனர் என்பது கருத்திலிருத்த வேண்டிய உண்

74. 6-9-3 ஈ

75. ரா. இராகவையங்கார் இக்கருத்தினர், இதனை தி வை. சதாசிவ பண்டாரத்தார் மறுத்திருக்கிறார். தி. வை, சதாசிவ பண்டாரத்தார், இலக்கிய ஆராய்ச்சியும் கல்வெட்டுக்களும், 1961, பக். 21,

76. Kambar lived and wrote his epic between 857 and 880 A.D. in the days of Aditta Chola (870–907 A.D) — M. Arunachalam, “The Date of Kambar”, — கம்பன்விழாமலர், சென்னை, 1975. ப. 99

மையாகும். தொல்காப்பிய உரையாசிரியர் ஒருவரும் கம்ப ராமாயணப் பாடல்களை மேற்கோளாகக் காட்டவில்லை. நச்சினார்க்கினியரும் பரிமேலழகரும் முறையே புறத்திணை யியலிலும் திருக்குறள் உரையிலும் இராமனுடைய செய்திகளைக் குறிப்பிட்டனரேயன்றி அவ்விடங்களில் கம்பராமாயணப் பாடல் ஒன்றையும் மேற்கோள்காட்டவில்லை.[77] அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரவுரையில் ஒட்டக் கூத்தர் இயற்றிய உத்தரகாண்டச் செய்யுளைக் காட்டியவர் ஓரிடத்தும் கம்பர் பாடலைத் தொடவில்லை.[78] இந்நிலையில் கம்பராமாயணத்தைப் பிரமாண மாக ஏற்றுப் பெருமை சேர்த்தவர் நம்பிள்ளையே ஆகிறார். மிகப்பரந்து விரிந்த ஈட்டில் கம்பருடைய பாசுரம் இரண்டே எடுக்கப்பட்டாலும் ஏடுபடுத்தப்படாது நம்பிள்ளை ஆற்றிய விரிவுரைகளில் கம்பர் பாடல்கள் பலவும் செவிக் குணவாகப் படைக்கப்பட்டிருக்கும் என்று கருதுவதில் பிழையொன்று-மில்லை.

**நிகண்டுகள் :**

சேந்தன் திவாகரத்திலிருந்து சில சூத்திரங்கள் நம்பிள்ளை ஈட்டில் எடுக்கப்பட்டுள்ளன. தமிழ் நிகண்டுகளை நன்கு உருச் செய்து தரித்திருந்தவர் நம்பிள்ளை. 'பாஷையில் அழுத்தமான ஞானத்தை நம் முன்னோர் இந்நிகண்டுப் படனத்தாலே மிகுதி யும் அடைந்து வந்தனர்' என்பர் ரா, இராகவையங்கார். நம்பிள்ளை காலத்தில் திவாகரமே பெருவழக்கிலிருந்தது போலும். திவாகர நிகண்டு சங்ககாலத்தே தோன்றிய பெருமை யுடையது என்பது ரா. இராகவையங்கார் முடிபாகும்.[79]

''உலகமென்பது உயர்ந்தோர் மாட்டு''[80]

---

77. நச்சினார்க்கினியர் உரை, தொல்., புறத்திணை இயல், சூத். 12. 'கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமும்' என்பதற்கு விளக்கமாக, ''இராமன் இலங்கை கொள்வதன்முன் விடணற்குக் கொடுத்ததுறை....'' என்பர், நச். பரிமேலழகர் 773 ஆம் குறட்பாவுரையில் ஊராண்மையை விளக்குங்கால், :'இலங்கையர் வேந்தன் போரிடைத்தன்தானை முழுதும் படத் தமியனாகப்பட்டானது நிலைமை நோக்கி அயோத்தியர் இறை மேற்செல்லாது 'இன்று போய் நாளை நின்தானை யோடு வா' என விட்டாற் போல்வது'' என்பர். பரிமேலழகர் தம் வழக்கத் தின்படி கம்பர் பாடலை விரித்து உரைநடையாக்கிக் கொண்டார். பாடல் அடி களைக் காட்டவில்லை.

78. அடியார்க்கு நல்லார் உரை, சிலப், பதிகம் அடி 42

79. ரா, இராகவையங்கார், 'நிகண்டுகள்', மறுபதிப்பு, செந்தமிழ், தொகுதி 72 பகுதி — 4, 1978 ப. 26,

80. 6 , 3 , 8ஈ; 6 , 9 , 7 ஈ

"பாயலும் பள்ளியும் பாழியும் படுக்கை"[81]
"கழுது பேயும் பரணும்"[82]
"குழல் கூழை ஓதி"[83]
"மயங்கல் கூடலும் கலவியும்"[84]
"நிழற்றலும் மிழற்றலும் நிரம்பாமென்சொல்"[85]

என்பன ஈட்டில் எடுக்கப்பட்ட திவாகரச் சூத்திரங்களாம்.

விளங்கா மேற்கோள்கள் ;-

நம்பிள்ளை ஈட்டில் வரும் சில தமிழ் மேற்கோள்கள் இன்ன நூலிலிருந்து எடுக்கப்பட்டது என்று அறியமுடியவில்லை. அவற்றுள் சிலவற்றை உற்று நோக்கினால் வெண்பாவாலான நூல்களிலிருந்து எடுக்கப்பட்டிருக்கலாம் என்று தெரிகிறது.

"கலியர்சோற் றின்மேல் மனம்"[86]
"உண்டி யுடல்காட் டும்"[87]
"முறுவல் எடுத்த கலம்"[88]
"தான்சென்று மண்மகள் தைவந்தான்"[89]
"தக்க தாமரைக் கண்"[90]

என்பன அவ்விளங்கா மேற்கோள்கள்.

சிலப்பதிகாரம் அரும்பதவுரை :-

'ஊரவர் கவ்வை' என்ற பாசுரத்தின் ஈட்டில்,
"'விபீஷணஸ்து தர்மாத்மா' என்றார்களிறேதங்களை விட்டுப்,

போருவதற்கு முன்னே; இவன் இக்குடியிலுள்ளார் படியல்லன்; இவனுக்கு வாசியுண்டு; அந்தவாசி

81. 2-2-6 ஈ
82. 4.6-7 ஈ
83. 6-2-2 ஈ
84. 6-10-8 ஈ
85. 9-5-1 ஈ
86. 4-3-7
87. 4-3-8 ஈ; 5-10-6 ஈ
88. 5-1-6 ஈ
89. 5-4-8 ஈ
90. 5-10-3 ஈ

தன்னைச் சொல்லுகிறது 'தர்மாத்மா' என்று.
'மறக்குடி யறஞ்செய்யக் கெடும்' என்றதிறே',[91]

என்று ஒரு பகுதிவருகிறது. இறைவன்பால் அன்பு செலுத்து மிடத்து ஊரவர் பழியிடுவார்கள். அப்படிப் பழியிட்டார் உண்டோ எனில், சூர்ப்பணகை வீடணனைக் குறித்து 'தர்மாத்மா' என்றவிடமுண்டு. மறக்குடியிற் பிறந்த அவன் அறஞ் செய்யத் தலைப்பட்டதால் அக்குடியிற் பிறந்தாள் ஒருத்தியாலேயே பழி தூற்றப்பட்டான். 'தர்மாத்மா என்றது சூர்ப்பணகை கருத்தால் பழியென்று காட்டினார் நம்பிள்ளை. இக்கருத்தை வலியுறுத் தவே 'மறக்குடியறஞ் செய்யக் கெடும் என்றதிறே' என்றார்.

சிலப்பதிகாரத்துள் வேட்டுவவரியில்,

'மறக்குடித் தாயத்து வழிவளஞ் சுரவா
தறக்குடி போலவிந் தடங்கினர் எயினரும்'[92]

எனவரும் அடிகளுக்குக் குறிப்புரை எழுதிய அரும்பதவுரைகாரர்,

''இது'மறக்குடி அறஞ் செய்யக் கெடும்' என்னும் வழக்கு''

என்று குறிப்பெழுதுவர். இவ்வழக்கை அறிந்திருந்தவர் நம் பிள்ளை என்றோ சிலப்பதிகார அரும்பதகாரரின் குறிப்பைப் பயன் கொண்டனர் என்றோ கொள்ளலாம்.[93]

**அமுதனார், அருளாளப்பெருமாள் எம்பெருமானார் நூல்கள்:**

இராமானுசர் காலத்து வாழ்ந்த அருந்தமிழ்ப் புலவர் திருவரங்கத்து அமுதனார். இவர் இராமானுசர் மீது 'இராமானுச நூற்றந்தாதி' என்னும் ஒப்பரிய நூலைப் பாடினார். இராமானுசரே அந்த நூலைக் கேட்டுப் பாராட்டியுள்ளார்.[94] அதன் பெருமதிப்புணர்ந்த பெரியோர்கள் அதனை ஆழ்வார்களின் அருளிச் செயலுக்கு இணையாகக் கொண்டனர். நாலாயிரஅடைவில் இயற்பாவோடு சேர்த்து ஓதப்படுகிறது. இத்துணைப் பெருமைகள் வாய்ந்த இராமானுச நூற்றந்தாதியை நம்பிள்ளை, ஈட்டில் ஓரிடத்தும் மேற்கோளாக எடுக்கவில்லை.

---

91. 5-3-4 ஈ
92. சிலப்; 12: 14,15
93. அடியார்க்கு நல்லார் இவ்வழக்கைக் காட்டவில்லை.
94. கோயிலொழுகு.

அருளிச் செயல் பாசுரங்களைப் பல நூற்றுக்கணக்கான இடங்களில் மேற்கோள் காட்டிய பிள்ளை இராமானுச நூற்றந்தாதியை ஏன் எடுக்கவில்லை? என்ற வினா எழுகிறது.

திருவரங்கத்தமுதனார் பட்டர் காலத்திலும் நம்பிள்ளை காலத்திலும் வாழ்ந்திருந்தார்.[95] அவரைப் 'பிள்ளை அமுதனார்' என்று நம்பிள்ளை ஈட்டில் ஆறு இடங்களில் குறிப்பிடுகிறார்;[96] பெரியவாச்சான் பிள்ளையும் தமது திருமொழி வியாக்கியானத்தில் ஆறு இடங்களில் அப்படியே குறிப்பிட்டிருக்கிறார்.[97] இவர்கள் குறிப்பிடும் 'பிள்ளை அமுதனார்' திருவரங்கத்தமுதனாரின் மகனார் என்று நாலாயிர திவ்வியப் பிரபந்த அகராதி தொகுத்த பார்த்த சாரதி அய்யங்கார் கருதுகிறார் [98] ஒரு அரும்பதகாரர் பிள்ளை அமுதனாரை ஒரு அரையராக எண்ணி விட்டார்.[99] உண்மையில் திருவரங்கத்தமுதனாருக்கே பிள்ளை அமுதனார் என்ற பெயர் வழக்கு இருந்தது. இது இராமானுச நூற்றந்தாதிக்கு மணவாள மாமுனிகள் எழுதிய விரிஷுரையால் தெளிவாகிறது. நூற்றந்தாதி உரைப்பாயிரத்தில் "அனவரதம் எம்பெருமானார் திருவடிகளைச் சேவித்துக் கொண்டு போரா நின்றுள்ள பிள்ளை அமுதனார்" எனறு குறிப்பிடுகிறார் மேலும் ஸ்ரீவசனபூடண வியாக்கியானத்திலும் பிள்ளை அமுதனார் அருளிச் செய்ததாக நூற்றந்தாதித் தொடரையும் காட்டியிருக்கிறார்.[100] இவற்றால் பிள்ளை அமுதனார் என்பவர் இராமானுச நூற்றந்தாதியின் ஆசிரியர் என்பது உறுதியாகிறது.

இனி, பிள்ளை அமுதனாரின் பொருளாட்சிகளைக் காட்டிய நம்பிள்ளை அவர் செய்த தமிழ் நூலை மட்டும்

---

95. இராமானுசர் பரமபதித்த பின்னரும் 43 ஆண்டுகள் அமுதனார் வாழ்ந்திருந்தாராக மு.இராகவையங்கார் கணக்கிட்டிருக்கிறார்.-மு,இராகவையங்கார்,சாசனத் தமிழ்க்கவிசரிதம், 1961, ப. 86 இதனால், நம்பிள்ளைக்கு 33 அகவை நிறைவு எய்தும் வரை அமுதனார் வாழ்ந்திருந்தார் என்பது பெறப்படுகிறது.

96. 1.5.2 ஈ; 4-9-2 ஈ; 5-1-7 ஈ: 6-1-6 ஈ; 6.8.1 ஈ; 10-3-4 ஈ

97. பெ. வா. பி, வியா; பெரி. திரு. 3-7-1
மேலது 6-8-7
மேலது 7-1.1
மேலது 8-1-8
மேலது 9-2-1
மேலது 9-5-1

98, திவ்யப் பிரபந்த அகராதி, பார்த்தசாரதி அய்யங்கார் (தொ. ஆ) 1963, ப. 644.

99. பெரி. திரு 8-1-8 அரும்பதம்.

100. ம. மா. வியா; ஸ்ரீவ. பூ., சூ. 426

மேற்கோளாக எடுக்க வில்லை. அதே வழியைப் பின் பற்றிப் பெரியவாச்சான் பிள்ளையும் தமது பேருரைகளில் மேற்கோளாக எடுக்கவில்லை. திருக்குருகைப்பிரான்பிள்ளானும் நஞ்சீயரும் கூட அவ்வாறே எடுத்தாண்டிலர், முதன்முதலாக ஆறாயிரப்படி குருபரம்பராப் பிரபாவத்தில் நம்பிள்ளையின் சீடரான பின்பழகிய பெருமாள் சீயரே இராமானுச நூற்றந்தாதிப் பாடல்களைக் காட்டியுள்ளார். அதனையடுத்து இராமானுச நூற்றந்தாதியை மேற்கோளாக ஆண்டவர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார். அவரும் ஆசார்ய ஹ்ருதய சூர்ணிகையில் ஒரு துணுக்கையே காட்டியுள்ளார்.[101] நாலாயிர திவ்யபிரபந்த வியாக்கியானத்தில் முதன் முதலாக மணவாளமாமுனிகளே நூற்றந்தாதியை மேற்கோளாகக் காட்டுகிறார்.[102] அவரே நூற்றந்தாதியைப் பல இடங்களில் ஸ்ரீவசனபூஷண வியாக்கியானத்தில் மேற்கோளாக ஆள்கின்றார்.[103] மேலும் தாம் இயற்றிய ஆர்த்திப் பிரபந்தம் என்னும் தமிழ் நூலில் அதனை ‘எதிராசர் அந்தாதி’[104] என்று குறிப்பிட்டுப் பல்வகையாலும் பாராட்டி அதனை எல்லோரும் கற்கும்படி வேண்டுகிறார்.

இவற்றால் பிற வியாக்கியான ஆசிரியர்கள் நூற்றந்தாதியைப் புறக்கணித்ததும் மணவாள மாமுனிகள் அதற்கு உயிரூட்டிப் பிரச்சாரம் செய்தும் மேற்கோளாக எடுத்தும் மதிப்பை ஈட்டித்தந்தார் என்பதும் புலனாகின்றன. நம்பிள்ளையும் பிறரும் அமுதனாரிடம் கொண்ட மாறுபாட்டிற்குக் காரணம் யாது? ஐதிஹ்யங்களாலும் குருபரம்பரைக் குறிப்பாலும் ஒருவாறு காரணத்தை ஊகிக்க முடிகிறது. அமுதனாருக்குப் பட்டரிடத்து வெறுப்புணர்ச்சி இருந்தது. “பட்டரோடே அமுதனார் வெறுத்தருளித் தாம் ஆழ்வானுடைய வெற்றிலைச் செருக்கிலே பிறந்தவர்; நான் ஆழ்வானுடைய ஞானச் செருக்கிலே பிறந்தவன் அன்றோ? என்று சொல்லிவிட” என்று ஆறாயிரப்படி குருபரம்பரையில் ஒரு செய்தி வருகிறது.[105]

---

101. ஆசாரியஹ்ருதயம், சூத். 155, 204
102. ம. மா. வியா., பெ. ஆ. திரு. 1-8—9
103. ம. மா வியா., ஸ்ரீவ. பூ., சூத். 91, 243, 347, 412, 426
104. ஆர்த்திப்பிரபந்தம், 49
105. ஆ. கு. ப. பி., எஸ். கி. அய்யங்கார் பதிப்பு, ப. 339

இவ்வெறுப்புணர்ச்சிக்குக் காரணம் புலமைச் செருக்காகலாம் என்று தெரிகிறது. அமுதனாருடைய பொருளாட்சிகளைப் பட்டர் மறுத்திருக்கிறார், அவர் பொருள் நிருவகிக்கத் திண றியபோது அதைக் கேட்டுப் பட்டர் பொருளைத் தெளிவுறுத்தி யிருக்கிறார். 'கறவா மடநாகு தன் கன்றுள்ளினாப் போல்' என்ற திருமொழிப் பாடலுக்குப் பொருள் சொன்ன போது பிள்ளை அமுதனார் 'மிடிபட்டார்' என்றும் பட்டரே பொருந் திய பொருளைப் பணித்தார் என்றும் பெரியவாச்சான்பிள்ளை குறிப்பிட்டிருக்கிறார்.[106] 'போற்றியான் இரந்தேன்' என்ற திருவாய்மொழிப் பாடலுக்குப் பொருள் காண்பதிலும் இரு வர்க்கும் வேறுபாடிருந்தது. பட்டருடைய சொற்பொழிவுரை களைப் பிள்ளை அமுதனார் நேரிற் கேட்காது திருவிருந்த வரைமார்பன் என்பாரைக் கேட்டுவரச் செய்து அறிந்து கொண்டார்.[107] இவற்றை எல்லாம் நோக்கப் பிள்ளை அமு தனார் பட்டரிடத்து அபசாரப் பட்டிருந்தார் என்றும் அத னாலேயே மனம்வருந்திய நம்பிள்ளையும் பிறரும் அவருடைய நூலை மேற்கோளாக ஆளவில்லை என்றும் அறியமுடிகிறது. இக்கருத்துப்பற்றி எழுதிக் கேட்ட போது காஞ்சிபுரம் ஸ்ரீ. உ. வே. பி. ப. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி,

> ''நூற்றந்தாதி உடையவர் நியமித்ததே, அப்போதே இயல் சேவைகளில் கொள்ளப்பட்டிருந்தும் இடைக் காலத்தில் ஆதரிப்பார் இல்லையாயினரோ என்று சங்கிக்க வேண்டிய தாகிறது. மணவாளமாமுனிகள் காலத்திலேயே அதற்குப் பிரசாரம் ஏற்பட்டது. பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானமும் செய்தருள வில்லையே! 'அமுதனார்க்கும் பட்டர்க்கும் ஸௌம னஸ்யக் குறைவு இருந்ததாக ஒரு பேச்சு; கறவா மடநாகு வியாக்கியானத்தில் ''அமுதனார் மிடிபட் டார்'' பார்க்க''[108] என்று தெரிவித்துள்ளார்.

அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்ற ஆசிரியர் ஞானசாரம், பிரமேயசாரம் என்னும் இரு தமிழ்நூல்களைச்

---

106. பெ. வா. பி. வியா., பெரி. திரு 6 - 1—6
107. 6 - 1 - 6 ஈ
108. பி. ப, அண்ணங்கராசாரியர் இந்நூலாசிரியருக்கு எழுதிய கடிதம் நாள் 28 - 7 - 1977.

செய்துள்ளார். இவரும் இராமானுசருடைய சீடராயிருந்து அவருடைய அன்பைப் பெற்றவர். இவ்விரு நூல்களையும்கூட நம்பிள்ளை பிரமாணமாக ஓரிடத்தும் காட்டவில்லை. இதற்குக் காரணம் புலப்படவில்லை. பிள்ளை அமுதனார், அருளாளப் பெருமாள் எம்பெருமானார் ஆகிய இருவருடைய நூல்களையும் மேற்கோள்காட்டச் சந்தர்ப்பமில்லையாதலால் அவற்றைஎடுக்க வில்லை என்று சிலர் கருதுகின்றனர் பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் நூற்றந்தாதியைக் காட்டியுள்ள பகுதியைக் காண்பார்க்கு அங்ஙனம் கருத இட மில்லை. மேலும். *பொலிக பொலிக (5-2) என்ற திருவாய் மொழிப் பதிகத்திற்கும் இராமானுச நூற்றந்தாதிக்கும் உள்ள ஒற்றுமைக் கூறுகளைப் பிள்ளை லோகஞ்சீயர் ஸ்ரீவைஷ்ணவ சமயாசார நிஷ்கர்ஷத்தில் மிகத் தெளிவாகக் காட்டியுள்ளார்.[109] அதை நோக்கினால், நம்பிள்ளையோ பெரியவாச்சான் பிள்ளையோ அதே பதிகத்தில் இராமானுச நூற்றந்தாதியைக் காட்டியிருக்கலாம் என்று நினைக்கத் தூண்டுகிறது. மதுரகவி யாழ்வாரின் கண்ணிநுண் சிறுத்தாம்பை மேற்கோளாக எடுத்த இடங்களிலும்[110] இராமாநுச நூற்றந்தாதியைக் காட்டப் பொருத்தம் உள்ளது ஆயினும் காட்டவில்லை.

## ஐதிஹ்யங்கள்

**பிள்ளை வரலாறும் பேருரை விளக்கமும்:-**

நம்பிள்ளையின் பேருரைக்குத் தனிச்சிறப்பை ஈட்டித் தருவது ஐதிஹ்யங்கள் ஆகும். மணிமேகலையுள் பத்துவகைப் பிரமாண அளவைகளில் ஐதிஹ்ய அளவை ஏழாம் அளவையாக எண்ணப்படுகிறது. மேலும்

> ஐதிகம் என்பது உலகுரை இம்மரத்து
> எய்திய தோர்பேய் உண்டெனத் தெளிதல்

என்றுஅதற்கு விளக்கமும்கூறப்படுகிறது. (மணிமே., 27: 49. 50) ஆனால் கதையோடு கூடிய சிறப்புப் பொருள்களையே ஐதிஹ்-யங்கள் என்று திவ்வியப்பிரபந்த உரையாசிரியர் கூறுவர். புராணக் கதைகளை உள்ளடக்கிய உரைப்பகுதிகளை இங்ஙன்

---

109 பிள்ளைலோகஞ்சீயர், ஸ்ரீவைஷ்ணவ சமயாசார நிஷ்கர்ஷம், ஸ்ரீவை, இ. மு. சபை பதிப்பு, ப. 80

110. 3.6-4 ஈ, 3-7-6 ஈ

வழங்குவதில்லை. ஆழ்வார்கள் ஆசாரியர்கள் வாழ்க்கைச் செய்திகளையும் பிற அரசியல் நிகழ்ச்சிகளையும் உள்ளடக்கிய உரை விளக்கங்களையே 'ஐதிஹ்யம்' என்று வழங்குவர். பெரியவாச்சான்பிள்ளை உரையில் முதன் முதலில் இவை இடம் பெறுகின்றன. ஆயினும் ஈட்டில் தான் இவை பெருமளவிற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஈட்டில் வரும் ஐதிஹ்யங்களைத் தொகுக்கும் முயற்சியைச் செய்துள்ளனர். சில ஐதிஹ்யங்களுக்கு விளக்கவுரையும் எழுதியுள்ளனர்.[111] ஆயினும் அவற்றை வகைப்படுத்தி அவை உரைவிளக்கத்திற்கு உதவி செய்த முறைகள் ஆய்வு செய்யப்படவில்லை; ஐதிஹ்யங்களால் வெளிப்படும் பிற செய்திகளும் முழுமையாக ஆய்வு செய்யப்படவில்லை.

ஆசாரியர்களில் நாதமுனிகள் தொடங்கி நஞ்சீயர் வரை பலரையும் இவற்றில் காணமுடிகிறது. சோழப் பேரரசர்களையும் சாமந்தர்களையும் முதலமைச்சர்களையும் அரசவைப் புலவர்களையும் இவற்றில் சந்திக்க முடிகிறது. ஏறத்தாழத் தமிழகத்தின் ஐந்நூறு ஆண்டு வரலாற்று நிலைகளையும் அக்காலப் பகுதியில் வைணவ சமயத்தின் வளர்ச்சிகளையும் சேவைகளையும் நன்கு தெளிவிப்பதில் இவை கல்வெட்டுக்களையும் செப்புப்பட்டயங்களையும் போல் பயன் தருகின்றன.

உரையாசிரியரான நம்பிள்ளையே இவற்றில் ஒரு பாத்திரமாக உலவுகிறார் அவருடைய வாழ்க்கைச் செய்திகள் உரைக்கு ஒளியை ஊட்டுகின்றன. தம்முடைய அனுபவங்களை அவர் சொல்லும் போது மூல நூலாசிரியரை அவர் எப்படி அணுகியிருக்கிறார் என்பது புலனாகிறது. நம்பிள்ளை தம்மைப் பற்றிக் கூறியன அனைத்தையும் வடக்குத் திருவீதிப் பிள்ளை ஏடுபடுத்தத் தவறவில்லை. நம்பிள்ளை கூறியபடியே தன்மை வாய்பாட்டில் எழுதியவற்றைத் தவிர, அவர் பிற சமயங்களில் வாய்மொழிந்தவற்றையும் படர்க்கை வாய்பாட்டில் வடக்குத் திருவீதிபபிள்ளை உரையில் இடங்கண்டு ஏற்றியிருக்கிறார். இக்கால முறையில் அடிக்குறிப்பாக அமைக்க வேண்டுவன அவை. நம்பிள்ளை 'பிராஸங்கிகமாக ஓர் உருவிலே

---

111. ஆ. அரங்கனாதமுதலியார் என்பவர் திருவாய்மொழி ஐதிஹ்யங்களைத் தொகுத்து 'பகவத் விஷயம்' என்ற நூலில் வெளியிட்டார். (1939). பி. ப. அண்ணங்கராசாரியார் 1953ல் நாலாயிர திவ்வியப் பிரபந்தவியாக்கியானங்களில் வரும் ஐதிஹ்யங்கள் அனைத்தையும் 'ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலா' என்ற நூலில் வெளியிட்டிருக்கிறார்.

அருளிச் செய்தார்[112] என்று வடக்குத் திருவீதிப்பிள்ளை ஓரிடத்தில் குறிப்பிடுகிறார், இதனால் ஏடுபடுத்துவதற்கு முன் தாம் பல உருக்களில் கேட்ட செய்திகளையும் பிற்காலத்தார் இழக்காவண்ணம் சேர்த்திருக்கிறார் என்று அறியலாம். நம் பிள்ளையைப் பற்றிய செய்திகள் மட்டும் 29 இடங்களில் இடம் பெறுகின்றன.[113] நம்பிள்ளை என்று 7 இடங்களிலும் பிள்ளை யென்றே 7 இடங்களிலும் பெயர் குறிக்காமல் தன்மை ஒருமைச் சொற்களால் 5 இடங்களிலும் அவை வருகின்றன. பெயர் குறிப்பிடாமல் படர்க்கையாக வரு வனவற்றில் 10 இடங்கள் நம்பிள்ளையையே குறிக்கின்றன என்று அரும்பதகாரர்கள் கருதுகின்றனர். நம்பிள்ளைக்கும் வேல்வெட்டிப்பிள்ளை, பெற்றி, சிறியாத்தான் ஆகிய மூவருக்கு மிடையே தனித் தனியாக நிகழ்ந்த உரையாடல்களும் நம் பிள்ளை கேட்க அவருடைய ஆசிரியரான நஞ்சீயர் அளித்த பதிலுரைகளும் நம்பிள்ளை பட்டரிடத்தே தாம் நேரில் கேட்ட செய்தியும் ஈட்டில் பதிவு செய்யப்பட்டு ஆய்வாளர்களுக்குப் பெரு விருந்து நல்குகின்றன. இவை தமிழ் உரையிலக்கியங் களில் ஈட்டின் தன்னிகரற்ற தனிப்பெரும் சிறப்பாகும். பெரிய வாச்சான் பிள்ளையும் தம் திருவாய்மொழி உரையில் தம்மைப் பற்றிய செய்தியொன்றையும் குறித்துவைத்திலர்.

இனிப் பிற ஐதிஹ்யங்களை நம்பிள்ளை பயன்படுத்திய வகைகள் ஆய்வு செய்யப்படும். பொதுவாக ஐதிஹ்யங்கள் ஏழு வகைகளில் ஈட்டில் அமைக்கப்படுகின்றன.

**உவமையால் உயர்ந்த உத்தமர்கள் :-**

பாடற்பொருளுக்கு ஏற்ற முறையில் இலக்கியமாகச் சுட்டத்தகும் பெரியோர்களும் அவர் செயல்களும் ஐதிஹ்யங் களாக மாற்றப்பட்டு உரை விளக்கம் செய்கின்றன.

வெறிவிலக்குகின்ற தோழி கூரத்தாழ்வானோடு ஒப்பிடப் படுகிறாள்.[144] காதல் நோயால் நோவுபடுகிற மகளின் துயரத்தை நினைத்த திருத்தாயார், அவள் படுகிற பாடுகளையும் சொல்லு கிற வார்த்தைகளையும் சொல்லி, அவை கண்டு தான் பொறுக்க மாட்டாமல் நோவுபடுகிறபடியையும் முறையிடுகிறாள். திருத்

112. 3-8-9 ஈ

113. காண்க : பின் இணைப்பு (2)

114. 4-6-1 ஈ

தாயார் மனம் புண்பட்டுத் துடிக்கிற நிலைமையை விளக்க விரும்பும் நம்பிள்ளை "ஆழ்வான் திருநயனங்கள் நோவுபட்ட பின்பு எம்பெருமானார் திருவுள்ளம் நோவுபட்டாற்போலே காணும், திருத்தாயார் திருவுள்ளமும்" 'என்று உவமை இடு கிறார்.[115] 'நெஞ்சமே சொன்னேன்'[116] என்கிற இடத்தில் ஆழ்வார்க்கு ஒடுகிற இருவகை மனப்பாங்குகளை விவரிக்கும் போது திருக்கோட்டியூர் நம்பியையும் கீதாசாரியனான கண்ண னையும் உவமை காட்டுகிறார். 'இறைவனைப் பற்றிய உண்மை களைப் பிறர் அறியலாகாது என்றிருக்கைக்கு ஒரு திருக்கோட் டியூர் நம்பியோடு ஒப்பர்; சொன்னால் அல்லது தரிப்புக் கொள்ளாமைக்கு ஒரு கீதாசாரியனோடு ஒப்பர்; என்பது விளக்கம். 'ஒடுங்கவவன் கண்'[117] என்ற பாடலில் 'ஆக்கை விடும்பொழுது எண்ணே என்கிறார் ஆழ்வார். மனத்தை இறைவன் பக்கலில் பொகட்ட பிறகு, யாக்கையின் முடிவினை எதிர் நோக்கியிருத்தல் தகும் என்பது பொருள். அப்படி ஆக் கையின் முடிவுகாலத்தை மகிழ்வுடன் எதிர் நோக்கி இருந்தவ ராக எம்பெருமானாரைச் சுட்டிக் காட்டுகிறார். 'ஆவிதி கைக்க'[118] என்ற பாடலில் ஆழ்வார் 'கூவிக்கொள்ளும் காலம் குறுகாதோ?' என்று ஏங்குகிறார். இப்படி ஏங்குவார் உண் டோ? என்ற கேள்விக்கு விடையாகப் பிள்ளானுடைய வாழ்க்கை யிலிருந்து ஒரு நிகழ்ச்சியைக் காட்டுகிறார். "பிள்ளானுடைய அந்திம தசையிலே நஞ்சீயர் நோவறியப் புக்கு இருக்க, 'கூவிக் கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ' என்று பலகால் சொல்ல, இதைக் கேட்டு சீயர் அழ;}'சீயரே? நீர் கிடந்து அழு கிறது ஏன்? அங்குப் போய்ப்பெறப் புகுகிற பேறு இதிலும் தண்ணிது என்று தோன்றியிருந்ததோ? என்று பணித்தான்' என்பது ஈடு காட்டும் அந்நிகழ்ச்சியாகும்' 'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே'[119] என்ற ஆழ்வாரின் மயக்க நிலைக்கு அரசன் யானை கழுத்தில் ஏறக்கண்ட நாத முனிகள் அவனைத் திருமாலாகக் கருதி மயங்கியது காட்டப்படு கிறது. அந்நிகழ்ச்சி மிகவுருக்கமாக வருணிக்கப்படுகிறது.

---

115. 4 - 4 - 10 ஈ

116. தி. வா. மொ. 1 · 6 - 10

117. தி. வா. மொ. 1 - 2 . 9

118. மேலது 6 . 9 · 9

119. மேலது 4 - 4 . 8

''நாதமுனிகள் ராஜா ஸாமந்தன் தலையிலே அடியையிட்டு ஆனை கழுத்திலே புக்கபடியைக்கண்டு, 'ஸர்வேசுவரன் ப்ரஹ்மாதிகள் தலையிலே அடியிட்டுப் பெரிய திருவடியை மேற் கொள்ளும்படி இது வாகாதே!'' என்னா மோஹித்தார் என்று ப்ரஸித்தமிறே''

இவ்வாறு நாதமுனிகள் மோஹித்து மூர்ச்சித்த படியை விரித்துரைத்தார். அத்துடன் அமையாது நாதமுனிகள் மற்றொரு முறை அங்ஙனமே மோஹித்து அதுவே இறுதியாகத் திருநாட்டுக்கு எழுந்தருளிய நிகழ்ச்சியினையும் விரிவுக்கு அஞ்சாது வருணித்துள்ளார்:-

'' ராஜா ஸபரிகரமாக கங்கை கொண்ட சோழபுரத்தேறப் போகச் செய்தே, பெரிய முதலியார் (நாதமுனிகள்) மன்னனார் திருவடிகளிலே ஸேவித்திருக்கச் செய் தேபெண்பிள்ளை வந்து,

'நம் அகத்திலே ஒரு குரங்கும் இரண்டு வில்லிகளும் ஒரு பெண்ணுமாக வந்து புகுந்தார்கள்' என்றவாறே,

'பெருமாளும் இளைய பெருமாளும் பிராட்டியும் ஐந்த்ர வ்யாகரண பண்டிதனும்' என்று புத்தி பண்ணிப் பின்தொடர்ந்துபோய், போகிறார்கள், போகிறார்கள்' என்னக் கேட்டுக் கீழை வாசலிலே சென்றவாறே

'இப்படி போகிறவர்களைக் கண்டிகோளே''? என்று வாசலிலவர்களைக் கேட்க, அவர்கள் 'கண்டிலோம்' என்ன, அதுவே ஹேதுவாகத் திருநாட்டுக்கு எழுந்தருளினாரிறே''.

எடுத்துக்காட்டுகள்

ஆழ்வாருடைய உள்ளக் கிடக்கை நன்கு புலனாகச் சில பெரியோரின் வாழ்க்கைச் சம்பவங்களை ஐதிஹ்யங்களாகக் கூறுவர் நம்பிள்ளை, அவை அக்காலத்தார் கண்ணாற்கண்டனவாக இருந்தன. அவற்றை 'திருஷ்டாந்தம்' என்பர் அரும்பதகாரர்.

இறைவன் தமக்குச் செய்த பேரருள் திறத்தினை நினைந்து ஆழ்வார் ''பலரடியார் முன்பருளிய பாம்பணை அப்பன்''[120] என்று வியக்கிறார். 'முன்பு' என்பதை இடமுன்னாகக் கொண்டும் 'பலரடியார்' என்பதை வியாசர், பராசரர்,

---

120. மேலது 7-10.5

வான்மீகி, முதலாழ்வார்களான அடியார்களைக் குறிப்பதாகக் கொண்டும் பொருள் உரைத்தார் நம்பிள்ளை. இத்தனை அடியார் இருக்க அவர்களைக் கொண்டு திருவாய்மொழியைப் பாடுவியாது அவர்தம் முன்னிலையிலேயே தம்மைக் கொண்டு இன்கவிபாடுவித்த கருத்தாகக் கொண்டார் பிள்ளை. பாடு வித்ததினும் அவர்முன்பாகப் பாடுவித்ததே ஆழ்வார் உள்ளத்தை உருக்கியது. இது ஆழ்வார்க்கு இறைவன் நல்கிய பெரிய வரிசை யாகும். இவ்வாறு இக்காலத்தும் இத்தகைய வரிசை பெற்-றார் உளர் என்பதை நம்பிள்ளை ஒரு எடுத்துக்காட்டு நிகழ்ச்சி யால் தம்முடைய மாணாக்கருக்கு நிரூபிக்கிறார். அது பிற் காலத்தவர்க்குச் சிறந்த ஐதிஹ்யமாக இலங்குகிறது.

இராமானுசர் காலத்தில் ஒரு அரசன் திருமால் கோயில் களை நலிவுபடுத்தினான்; அதைக் கேள்வியுற்ற அவர் திருவரங் கத்திற்கும் நலிவு பிறக்கும் அளவிற் செய்வதென்? என்று வருந்தினார். 'இவ்வூரை விடாதே நோக்கிக் கொண்டு கிடந்-தோம்; இவ்விடத்துக்கும் அழிவு வரும்படி கொடியோர் மேலிடாநின்றனரே; மேல் செய்ய அடுப்பது என்? என்று தம் ஆசிரியராகிய பெரிய நம்பிக்கு அறிவித்தார். அவரும் 'நான் பெருமாளுடைய திருவெல்லையிலே ஒரு வலம் வரும்படியாக உம் சீடர்களிலே ஒருவரைப் போரவிடுவது' என்ன, எம்பெரு மானார் அதற்கு ஆவார் ஆர்? என்று ஆராயும் போது, என் பின்னே போராநின்றால் ஒருவன் பின்னே போகா நின்றேன் என்று தன் நெஞ்சிற் படாதே நிழலைப் போலே என்னைப் பின் செல்வான் ஒருவனாக வேணும் என்றார். அத்தகையோரைத் தேர்ந்து தரும்படியாக எம்பெருமானார் வேண்டினார். எம்பெருமானாரைச் சூழ்ந்திருந்த நூற்றுக்கணக் கான சீடர்களில் கூரத்தாழ்வானையே பெரியநம்பி தேர்ந்து எடுத்தார். அது போன்று பலர் அடியார் முன்பு ஆழ்வார் அருளப்பட்டார்.

*மானேய் நோக்கியில் (5—9) தலைவி தலைவன் உறை யும் திருவல்லவாழ் நோக்கிப் புறப்பட ஒருப்படுகிறாள். தோழி அவளை மீட்கப் பார்க்கிறாள். அவ்வூரிலுள்ள சோலைகளின் நறுமணமும் தென்றலும் வண்டுகளின் மிடற்றோசையும் ஊரி லுள்ள வேதவொலிகளும் ஆடல்பாடல்களும் தலைவியின் செவிப் பட்டு அவளைத் துடிக்கச் செய்தன. இதற்கு ஒரு காட்டாக

நஞ்சீயரின் அனுபவத்தை ஐதிஹ்யமாக்கித் தருகிறார் பிள்ளை. நஞ்சீயர் பட்டருக்குச் சீடராகித் துறவு நெறி தழுவிய பிறகு ஒருமுறை திருநாராயணபுரத்துக்குச் சென்று விட்டு மீண்டு வருகிற போது காவிரி பெருகி வெள்ளமிட்டுக் கிடந்தது. திருநாள் காணும் பெரு வேட்கையுடன் எதிர்க் கரையில் இரா முழுவதும் காத்துக் கிடந்த சீயரின் திருச்செவிகளில் கோயிலில் உண்டான விழாவொலிகள் அனைத்தும் விழ, அவர் மிகவும் நோவு பட்டாராம். இதனைப் பிள்ளையும் அவர் காலத்துப் பெரியோர்களும் நன்கு அறிந்திருந்தனா. ஆழ்வாருடைய அனுபவத்தைப் புரிய வைக்க இது ஏற்ற எடுத்துக் காட்டாக அமைந்துள்ளது.[121]

உரையாடல் :

ஆழ்வாருடைய பாடலுக்கு விளக்கம் தருகின்ற வகையில் அடியார்களிடையே நடந்த சிறு உரையாடல் துணுக்குகளை ஐதிஹ்யமாகக் காட்டுவது பிள்ளையின் ஒரு நெறியாகும். இவற்றை 'சம்வாதம்' என்று அரும்பதகாரர் அழைப்பர். இவை பிள்ளையின் பரந்த பட்டறிவையும் பலருடன் ஒன்றிப் பழகி உற்றுநோக்கும் திறனையும் நன்கு காட்டுகின்றன. அனைத்துக்கும் மேலாக நம்பிள்ளையின் நினைவாற்றலைப் புலப்படுத்துகின்றன. தாமே கேட்ட வுரையாடல்கள், கேள்விப் பட்ட உரையாடல்கள் என்று பல்வகையான உரையாடல்களை ஈட்டில் பொதிந்து வைத்திருக்கிறார்.

• நெடுமாற் கடிமையில் (8-10) ஆழ்வார் தம்மை ஆட்கொண்ட அடியார்களைச் 'சிறுமா மனிசர்' என்று குறிப்பிடுகிறார்.[122] சிறுமையும் பெருமையும் முரணிய பண்புகள்; அவை ஒருவரிடத்து ஒருசமயத்துச் சேருமாற்றை ஆழ்வானுக்கும் பட்டருக்குமிடையே எழுந்த சிறு சம்வாதத்தைக் கொண்டு தெளிவுறுத்துகிறார். பட்டர் மிகச்சிறு குழவிப் பருவத்தில் தந்தையாரிடத்துத் திருவாய்மொழியை ஓதிவரும்போது இப் பாடலைச் சந்தை சொல்லுங்கால் ஐயமெழுந்தது. 'சிறுமை பெருமையாகிற முரணிய பண்புகள் ஒரே பண்பிபால் சேர்ந்தது

---

121. 5 - 9 - 0 ஈ

122. தி. வா. மொ. 8 . 10 - 3

எங்ஙனே?' என்று தந்தையாராகிற ஆழ்வானை வினவினார். பட்டருக்கு அப்போது உவனியப் பிறப்பு உண்டாகாதிருந்த படியால் வேத சாத்திரங்களைக் கொண்டு நிருபிக்கவில்லை. கட்கூடான பிரமாணங்களையே காட்ட விரும்பினார். ''வடிவு சிறுத்து அறிவு பெருத்திருக்கிற ஆண்டான், அருளாளப் பெருமாள் எம்பெருமானார், எம்பார் முதலியோரைச் சிறு மாமனிசர் என்னத்தட்டில்லையே. உலகினரைப் போன்று உண்டு பருகித் திரிந்தாலும் இறைவன் மாட்டுக் கொண்ட காதலைக்கருத விண்ணுளாரிலும் சீரியராயிருப்பர்'' என்று அவர்களைக் காட்டி விளக்கினாராம்.

*அஞ்சிறைய மடநாரையில் (1-4) ஆழ்வார் ஒரு பறவையை விளித்து 'அருளாய்' என்ற சிறப்புத் தோற்ற வேண்டுகிறார். 'கூவாய்' என்னாது 'அருளாய்' என்றதில் ஒரு கருத்து வலி யுறுத்தப்படுகிறது. ஒரு பறவையே ஆனாலும் இறைத் தொடர்பை உண்டாக்குவதால் அதனை ஞானாசிரியராகக கருதி வழிபடல் வேண்டும் என்பது கருத்து. 'நம்பியேறு திரு வுடையார்தாசர் திருநாட்டுக்கு நடந்தார் என்று பட்டரிடத் துச்சென்று சிலர் கூறினராம். அதைக் கேட்டதும் பட்டர் துணுக்குற்று ''அவர் அடியார்களுடன் பரிமாறிய படிக்குச் சேர திருநாட்டுக்கு எழுந்தருளினார் என்ன வேணுங்காண்'' என்று திருத்திக் காட்டியதை ஐதிஹ்யமாகப் பிள்ளை தருகிறார்.[123]

**இடைப்பிறவரல் :-**

உரை விளக்கத்திற்குத் தேவை இல்லையாயினும் இடைப் பிறவரலாக நினைவிற்குவரும் சில அரிய செய்திகளையும் பொருட்பொருத்தம்பற்றி ஐதிஹ்யங்களாகப் பல இடங்களில் வழங்குகிறார் நம்பிள்ளை.

திருப்புளிங்குடியில் திருமால் பள்ளிகொள்கிறான்; அவ னுடைய இருப்பழகைக் காண அவாவிய ஆழ்வார் அதனைத் தெரிவிக்கிறார்.

'எங்கள் கண்முகப்பே உலகர்கள் எல்லாம்
இணையடி தொழுதெழுதிறைஞ்சித்

---

123. 1-4-5 ஈ

தங்களன் பாரத் தமது சொல்வலத்தால்
தலைத்தலைச் சிறந்து பூசிப்ப''[124]

ஒருநாள் வீற்றிருக்குமாறு வேண்டுகிறார். சொல்வலத்தால் பூசிப்பதாவது - 'அவரவர் சொல்லவல்ல அளவுகளில் ஏத்துவது' என்று பொருள் கூறினார் பிள்ளை. உடனே அதை விளக்க, ''அதாவது, 'நூறு பிராயம் புகுவீர், பொன்னாலே பூணு நூலிடுவீர்' என்றாற்போலே சொல்லுகை'' என்ற ஒரு குறிப்பு வரைந்தார். அவ்விடத்திலேயே தாமறிந்த நிகழ்ச்சி ஒன்றைச் சுருங்க உரைத்தார். ''வங்கிப்புரத்து நம்பி 'விஜயஸ்வ' என்ன, ஆண்டான் சொன்ன வார்த்தையை நினைப்பது'' என்பது அச் சுருக்க மொழிகள். எல்லாரும் நன்கறிந்த வரலாறாக இருந்த மையின் அதனை விரிக்கவில்லை போலும். அரும்பதவுரை கொண்டே அதனை அறிய முடிகிறது. அந்நிகழ்ச்சி வருமாறு :

வங்கிப்புரத்து நம்பி பெருமாளைச்சேவிக்க எழுந்தருளின அளவிலே, இடைச்சிகளான சிறுபெண் பிள்ளைகள் அருகில் இருந்து சேவித்தார். அதனை முதலியாண்டான் கண்டு அவரை அழைத்து 'அடியார்களான ஆடவர்கள் இருக்கப் பெண்பிள் ளைகள் பக்கலில் நின்றது ஏன்?' என்று கேட்டார். ''நம்பக் கலில் சிறிதாகிலும் செருக்குக் கிடக்கும். அவர்கள் ஒன்றுமறி யாதிருப்பார்கள்; ஆதலின் இறைவன் அருளுக்கு அவர்கள் பள்ள மடையாக இருப்பார்கள் என்று கருதி அவர்பக்கலில் நின்றேன்'' என்று நம்பி விடையிறுத்தார். அதனைத் தொடர்ந்து ஆண் டான் ''அவர்கள் சொன்னது ஏது? நீர் சொன்னது ஏது?'' என்று கேட்டார். ''அவர்கள் 'பால் உண்பீர், பழம் உண்பீர், பொன்னாலே பூணுநூலிடுவீர், நூறுபிராயம் புகுவீர், அழுத்த இரட்டை உடுப்பீர்' என்று அவர்கள் சொன்ன வார்த்தை 'விஜயஸ்வ, விஜயீபவ' என்ற நான் சொன்ன வார்த்தை'' என் றார் நம்பி. உடனே அவரைக் குறித்து ''அங்கே போயும் முறட்டு ஸம்ஸ்கிருதத்தை விட்டீரில்லையே, எங்கே இருந்தாலும் நாம் நாங்காணும், இங்கே எழுந்தருள்வீர்'' என்று அறிவுறுத் தினாராம் ஆண்டான்.

இதைப் போன்று ஆளவந்தார், ஆழ்வார் திருவரங்கப் பெருமாள் அரையர் போன்ற பெரியோர்களின் வாழ்க்கைச்

124. தி. வா. மொ. 9-2-8

செய்தி நிகழ்ச்சிகளை இடைப்பிறவரலாகப் பல இடங்களில் உரைக்கண் அமைத்துள்ளார் நம்பிள்ளை.

**கருத்துத் தெளிவு :-**

பாடல் அடிகளுக்குத் தாம் தாணும் கருத்துரைகளான தாற்பரியங்களைத் தெளிவிக்கும் ஐதிஹ்யங்கள் பலவற்றை ஈட்டிற் கூறுவர் நம்பிள்ளை.

•அஞ்சிறைய மடநாரையில் (1-4) இனக்குயில்களைத் தூது போக்கும் தலைவி "முன் செய்த முழுவினையால்" தலைவனுக்குக் குற்றேவல் செய்ய இயலாது முடிந்தேபோம் இத்தனையோ என்று கேட்கிறாள். வினைமுடிந்தாலன்றோ அப்பேறு கிட்டும் 'வினையாகிற பாவத்துக்கும் முடிவில்லை; பாவம் பண்ணின காலத்துக்கும் முடிவில்லை; அதனால் இழக்கவே நேரும்' என்று தலைவியின் கருத்தாகச் சொல்லிய பிறகு முன் செய்த முழுவினை இறைவன் ஒருவனாலேயே போக்க முடியும் என்ற தாற்பரியத்தைச் சொல்லுவர். இதைத் தெளிவிக்க நெஞ்சை யள்ளும் ஒரு நிகழ்ச்சியைக் காட்டியிருக்கிறார்.

திருக்கோட்டியூரிலே தெற்காழ்வான் கோளரியாழ்வானுக்குத் தீர்த்தத் துறையிலே சொன்ன வார்த்தை :- "ஒரு முழுக்காலும் இரண்டு முழுக்காலும் போகாது காண், தெற்காழ்வார்கையில் திருவாழியாலே வினையை அறுத்துக் கொண்டு போகில் அத்தனை ஒழிய ஒன்றிரண்டு முழுக்கால் போகாது காண் நான்பண்ணின பாபம்' என்று" [125]

•நெடுமாற்கடிமையில் (8-10) பலன் உரைக்கும் தலைக் கட்டுப் பாடலில் 'நல்லபதத்தால் மனைவாழ்வர் கொண்ட பெண்டிர் மக்களே' என்று வருகிறது. இதற்குக் கருத்துரையாக, "தாங்கள் ஒன்றை நினைக்கப் பரிகரம் ஒன்றை நினைக்கை யன்றிக்கே பரிகரத்துடன் அடியார்களுக்கு உறுப்பாக வாழப் பெறுவர்" என்று வரைகிறார் பிள்ளை. இதனைத் தெளிவிக்கச் செல்வநம்பியின் குடும்ப வாழ்க்கையை எடுத்துக் காட்டுவர். சில அடியார்கள் திருவனந்தபுரத்துக்குக் கூட்டத்துடன் போகா நிற்கச் செய்தே, திருக்கோட்டியூரிலே செல்வ நம்பி திருமாளிகையிலே போய்ப் புக்கார்களாய், நம்பிதாம்

---

125. 1-4-2 ஈ

அகன்றிருக்க, நங்கையார் விதைக்காகச் சேமிக்கப்பட்டிருந்த நூறுகோட்டை நெல்லைக்குத்தி அடியார்களை அமுதுசெய்யப் பண்ணிவிட, பிற்றை நாள் நம்பி வந்து, 'அவை செய்தது ஏன்? என்ன, 'பரமபதத்திலே விளைவதாக வித்தினேன்' என்றாளாம்.[126] இப்படிக் கருத்தறிந்து செய்யும் மனைவியும் மக்களும் வாய்க்கப்பெற்று அடியார்க்குத் தொண்டுகள் செய்து மனைக் கண்வாழப்பெறுவர் என்று தெளிவு கிடைக்கிறது.

பதிகத் தெளிவு :-

•எம்மாவீட்டில் (2—9) ஆழ்வார் மிகவும் சிறந்த பிராப்பியத்தை வெளியிடுகிறார். அப்பதிகத்தின் பொருள் மிகவும் சீரியது என்று தெளிவுபடுத்த எம்பாரின் செயலை ஐதிஹ்யமாக்கிக் காட்டுகிறார் பிள்ளை. "எம்பார் இத் திருவாய்மொழி அருளிச் செய்யப் புக்கால் இருந்தவர்களை 'யார்?' என்று கேட்டுக் கதவுகளையும் அடைப்பித்து மறைவாக அருளிச் செய்வது" என்பது ஈடு.[127]

•நெடுமாற்கடிமையில் (8—10) ஆழ்வார் அடியார்க்கு அடிமைப்பட்டிருத்தலைப் பல படியாலும் கொண்டாடுகிறார். அப்பதிகத்தின் சிறப்பினைத் தெளிவுறுத்த பட்டரின் ஒரு செயல் ஐதிஹ்யமாக எடுக்கப்பட்டிருக்கிறது. அம்முணியாழ்வான் என்பார் போசளப் பேரரசில் வாழ்ந்தார்; அடியார்களுக்குப் போர அடிமைகள் செய்தார் — அவர் திருவரங்கம் புக்குப் பட்டரைத் தொழுது நின்றார். அவருக்குப் பரிசிலாகச் சீரியதோர் திருவாய்மொழிப் பதிகத்தை உபதேசிக்க விரும்பிய பட்டர் "நீ அடியார்க்குப் போர அடிமை செய்து போந்தாய் என்று கேட்டோம். உன் இயல்புக்குச் சேர நெடுமாற்கடிமையைக் கேள் "என்றருளிச் செய்தாராம்.[128]

உருவகத் தெளிவு:

•எம்மாவீட்டில் (2-9) ஆழ்வார் இறைவனை 'ஞானக் கைதா காலக் கழிவு செய்யேல்'[129] என்று வேண்டுகிறார். இங்கு

---

126. 8-10-11 ஈ
127. 2.9-0 ஈ
128. 8-10.0 ஈ
129. தி. வா. மொ. 2-9-2

ஞானத்தைச் கையாக உருவகப்படுத்தியதை ஒரு ஐதிஹ்யத்தால் தெரிவிக்கிறார் பிள்ளை. ஆண்டானுடைய சீடராகிய ஒருவர் எம்பாரை அடைந்து திருவிலச்சினையும் உபதேசமும் பெற்றார். பிறகு நெடுங்காலம் கழித்து ஆண்டானுடைய சீடர் என்பதை உணர்ந்து எம்பார் தம் செயலுக்கு வருந்தினார்; அப்போது ஆண்டான் பட்டரிடம் ''ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டுபேர் கைகொடுத்தால், எடுக்குமவர்களுக்கும் எளிதாய் ஏறுமவனுக்கும் எளிதாயிருக்குமிறே'' என்று கூறி ஆறுதல் கூறினாராம்.[130]

ஐதிஹ்யங்களின் பயன்:-

ஈட்டில் இடம் பெறும் நூற்றுக்கணக்கான ஐதிஹ்யங்கள் ஆய்வாளர்களுக்குச் சிறந்த களனாக விளங்குகின்றன. குருபரம்பரைகளில் சொல்லப்படும் ஆசாரியர்களின் வாழ்க்கைச் செய்திகளை முறையாகக் காலவரிசைப்படுத்த இவ் ஐதிஹ்யங்கள் உதவுகின்றன. எம்பார் பரமபதித்தபிறகே பட்டர் நஞ்சீயரைச் சொற்போரில் வென்று ஆட்கொண்டதாக ஆறாயிரப்படி குருபரம்பரையில் வரிசை முறை காணப்படுகிறது. ஆனால், எம்பாரும் முதலியாண்டானும் ஒருவரை ஒருவர் தெண்டனிட்டுத் தழுவிக்கொண்டதை நஞ்சீயர்கண்டதாக ஓர் ஐதிஹ்யம் ஈட்டில் வருகிறது.[131] அதனால் பட்டரால் ஆட்கொள்ளப்பட்டுத் திருவரங்க மாநகரில் நஞ்சீயர் வாழ்ந்த காலத்திலும் எம்பார் வாழ்ந்திருந்தார் என்று தெரிகிறது. இராமாநுசர் கி.பி 1137ல் உயிர் நீத்தார்; எம்பார் அவர்க்குப் பிறகு மூன்று ஆண்டுகளே வாழ்ந்திருந்தார். ஆதலால் பட்டர் நஞ்சீயரை அடிமை கொண்டது கி.பி. 1138-1140 என்ற காலப் பகுதியிலாகலாம்.

குருபரம்பரைகளில் இடம்பெறாத பல சுவையான நிகழ்ச்சிகள் ஈட்டில் ஐதிஹ்யங்களாக நுழைந்திருக்கின்றன. வண்ணான் ஒருவனை இராமானுசர் கைப்பிடித்துச் சென்று திருவரங்கருடைய அருளுக்கு இலக்காக்கிய செய்தி ஈட்டில் இரண்டிடங்களில் வருணிக்கப்படுகிறது.[132]

---

130. 2-9-2 ஈ
131. 6-4-10 ஈ
132. 4-3-5 ஈ; 5-10-6 ஈ

திருவரங்கம் பெரிய கோயிலில் ஒருநாள் ஸ்ரீவைஷ்ணவ வண்ணான் ஒருவன் பெருமாள் திருப்பரியட்டங்களை நன்றாக வெளுத்து மடித்து சமர்ப்பித்தான். அதனைத் திருமஞ்சனம் முடிந்தபிறகு திருவரங்கர்க்கு அணிவித்தபோது அவருடைய திருமேனிக்குப் பாங்காக அமைந்தது. அதை அருகிருந்த இராமாநுசர் கண்டு மகிழ்ந்து அவ்வண்ணானுடைய சேவையைப் பாராட்ட விருப்பங்கொண்டார்.

"கண்ணி எனதுயிர் காதல் கனகச்சோதி முடிமுதலா
எண்ணில் பல்கலன்களும் ஏலும் ஆடையும் அஃதே?"

என்ற திருவாய்மொழிப் பாசுரம் நினைவில் தோன்றியது. ஆழ்வார் தம்முடைய காதலை இறைவனுக்கு ஆடையாக அணிவித்தார். அதுவே 'ஏலும் ஆடையாக' அமைந்தது. இராமாநுசர் அவ்வண்ணான் அருகே தாமே சென்று அவனைக் கைப்பிடித்துத் திருவரங்கர்க்கு முன் அழைத்துச் சென்றார். பெருமாளிடம் அவ்வண்ணானுடைய சேவையைப் பாராட்டிச் சிறப்பிக்குமாறு வேண்டினார் பெருமாளுடைய திருமாலை தீர்த்தம், திருவடி நிலைகளான ஸ்ரீசடகோபன், சாற்றுப்படி, அபயஹஸ்தம் முதாலான சன்மானங்கள் வழங்கப்பட்டன. அவை போதா வென்று திருவுள்ளத்திற்பட்ட பெருமாள் இராமாநுசரை முன்னிலையாகக் கொண்டு, "வாரீர்! இந்த வண்ணான் செய்த கைங்கரியத்தால் போரத் திருவுள்ளம் உகந்தோம். இவனுக்காக நாம் முன்பு கிருஷ்ணனாய் அவதாரம் செய்து வடமதுரைக்குச் சென்ற போது நமக்கு அரையில் சார்த்தத் திருப்பரியட்டம் தரமறுத்து அபசாரப் பட்ட கம்ஸனது ஈரங்கொல்லியாகிய வண்ணானுடைய பிழையைப் பொறுத்தோம்!" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

ஈட்டில் வரும் ஐதிஹ்யங்களையும் சேர்த்து இராமானுசருடைய முழு வரலாறு இன்னும் எழுதப்படவில்லை. ஈட்டு ஐதிஹ்யங்களில் வரும் இயற்பெயர்கள் தனி ஆய்வுக்குரியன. சில ஐதிஹ்யங்கள் வரலாற்று ஆய்வாளர்களுக்குச் சிக்கல்களையும் உண்டாக்கியிருக்கின்றன. நாதமுனிகளின் காலம் கி.பி. 823—917 என்று பலரும் ஏற்றுக் கொண்டிருக்கின்றனர்.[133]

---

133. (அ) B. V. Ramanujam, History of Vaishnavism in South India up to Ramanuja, Annamalai University, 1973, P. 258.
(ஆ) K. A. Neelakanta Sastry, The Colas, 1975 P. 638

ஆனால் ஈட்டு ஐதிஹ்யம் ஒன்றில் நாதமுனிகள் கங்கை கொண்ட சோழபுரத்தின் கீழை வாசலில் மூர்ச்சையுற்று மயங்கி வீழ்ந்து பின் உயிர் துறந்தார் என்ற செய்தி தெளிவாகக் குறிப்பிடப் படுகிறது.[134] முதல் இராசேந்திரன் கி. பி. 19–6—1012ல் அரியணை ஏறினான்.[135] அவனே கங்கை கொண்ட சோழ புரத்தைக் கட்டினான். ஆதலால் கி. பி. 1012க்குப்பிறகே அது கட்டி முடிக்கப்பட்டிருக்கவேண்டும். கி. பி. 1025ல் கட்டப்பட்ட தாக வரலாற்றறிஞர்கள் நிரூபிக்கின்றனர்.[136] கி. பி. 917ல் நாதமுனிகள் உயிர்துறந்து விட்டார் என்றால் கி. பி. 1025ல் கட்டப்பட்ட கங்கை கொண்ட சோழபுரத்தில் அவர் உயிர் பிரிந்ததாகக் கூறுவது எங்ஙனம் பொருந்தும்? முதல் பராந்தக சோழன் காலத்திலேயே அங்கு படைவீடு ஒன்று அமைந்திருத் தல் வேண்டும். அதைப் பெரிதாக்கிச் சிவபெருமானார்க்குக் கோயில் எடுப்பித்தவன் முதல் இராசேந்திரசோழன். அதைக் கங்கை நீரால் குடமுழுக்குச் செய்யவே அவன் வடவகை தேசங்களைப் படையெடுத்து வென்றான். கங்கை கொண்டான் என்ற அவனுடைய வீரப் பெயரால் அப்படை வீடு பெயர் பெற்றது. அதனுடைய பழைய பெயர் மறைந்தது. நம்பிள்ளை காலத்தில் அது சீரும் சிறப்பும் பெற்றுக் கங்கை கொண்ட சோழபுரம் என்று விளங்கிக் கொண்டிருந்தது. அதனால் தாம் அறிந்த பெயராலேயே நம்பிள்ளை நாதமுனிகள் உயிர்நீத்த இடத்தைக் குறிப்பிட்டதாகக் கொள்ளலாம்.[137]

இவ்வாறு பல்வகைப் பயன்களையும் ஒருங்கே தரவல்ல ஐதிஹ்யங்களை இடைமடுத்துப் பேருரையை வரைந்த நம்பிள்ளைக்கு உரை உலகில் தனிச் சிறப்பிடம் உரியதாகிறது.

**வார்த்தைகள் (பொன்மொழிகள்)**

**விளக்கம்**

திருவாய்மொழியைச் சுவைக்கும்போது அக்காலங்களில் ஆசாரியர்கள் நுகர்ந்து கூறிய உண்மைகள் வாய்மொழிமர-

---

134. 4—4—8 ஈ
135, N. Sethuraman, The Cholas, 1977, P.3
136, R. Nagaswamy, Gangaikonda Cholapuram. 1970, P. 1.
137. "Later name cannot be attributed to earlier events, but this is common in Vaishnava Chronicles ...... This is not a drawback, it hleps us to see the clear picture of the earlier and later days
— என், சேதுராமன், கட்டுரையாளர்க்கு எழுதிய கடிதம், நாள் 2.7. 1980

பாகப் போற்றப்பட்டு இறுதியில் ஈட்டில் எழுத்து வடிவம் பெற்றன. அவற்றை 'வார்த்தைகள்' என்று நம்பிள்ளை குறிப்பிடுவர். முன்னோர்பால் கேட்ட அவ்வார்த்தைகளை ஒன்று தப்பாமல் நினைவில் இருத்தி ஈட்டில் தக்க இடங்களில் ஏற்றி வைத்தது நம்பிள்ளையின் ஒப்பரிய தனித்திறனாகக் கருதப்படும். இவ்வார்த்தைகளின் பெரும்பாலானவற்றையும் ஐதிஹ்யங்களையும் நம்பிள்ளையிடம் கேட்ட பின்பழகிய பெருமாள் சீயர் 'வார்த்தாமாலை' என்னும் தனிநூலில் தொகுத்துள்ளார். இராமாநுசர், கூரத்தாழ்வான், பட்டர், பிள்ளைதிருநறையூர் அரையர், நஞ்சீயர், நம்பிள்ளை போன்றோரின் அரிய வார்த்தைகள் ஈட்டை அணி செய்கின்றன.

சான்றுகள்

(1) மாயை : ஈட்டின் உரைப்பாயிரத்தில் சித்து, அசித்து, ஈசுவரன் ஆகிய மூன்று தத்துவங்களில் அசித்தாகிய மாயை கடத்தற்கு அரியது என்பதை கீதை மேற்கோளால் நிறுவிய பிறகு பிள்ளைதிருநறையூர் அரையரின் ஒரு பொன்மொழியையும் காட்டுகிறார். ''ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவரால் அவிழ்க்கப்போகிறதில்லை; ஸர்வசக்தி கர்மானுகுணமாகப் பிணைத்த பிணையை அவனையே கால்கட்டி அவிழ்த்துக் கொள்ளும் இத்தனை காண்'' என்று பிள்ளை திருநறையூர் அரையர் வார்த்தை'' என்பது ஈடு.[138] இது சிறிது வேறுபாட்டுடன் வேறோரிடத்திலும் காட்டப்படுகிறது.[139]

(2) மிடற்றுப்பிடி:- திருவாய்மொழி முதற் பாடலில் மிகவும் ஆழங்காற்பட்டுக் கூரத்தாழ்வான் உதிர்த்த பொன்மொழியைப் பிள்ளை போற்றியிருக்கிறார். 'உயர்வறஉயர்நலம் உடையவன்'[140] என்பதில் ஈடுபட்ட ஆழ்வான் தம்முடைய சீடரைக் குறித்து ''நிர்க்குணம் என்பார் மிடற்றைப் பிடித்தாற்போலே ஆழ்வார் நலமுடையவன்' என்றபடி கண்டாயே'' என்று கூறிய வார்த்தை போற்றப்பட்டிருக்கிறது.[141] இதே வார்த்தையைச் சற்று விரிவாக நஞ்சீயரும் மொழிந்திருக்கிறார்.[142]

138. ம. பி (1)
139. 4-9.8 ஈ
140. தி. வா. மொ. 1, 1. 1
141. 1, 1, 1 ஈ
142. 2, 5, 2 ஈ

## வினாவிடைகள் (சம்வாதம்)

### விளக்கம்

நம்பிள்ளை தம் பேருரையில் வைணவ ஆசிரியர் பலரின் வார்த்தைகளோடு அவர்கள் தம் மாணாக்கர்களுக்கு ஐயம் நீக்கியபோது நிகழ்த்திய உரையாடல்களையும் உரைத்தெளிவிற்குப் பயன்படுத்தியுள்ளார். அவற்றுள் ஒன்பதினாயிரப்படி உரை செய்த நஞ்சீயர் தம் நல் ஆசிரியரான பட்டரை வினவியறிந்தவை ஒன்பது இடங்களில் வருகின்றன;[143] நம்பிள்ளை தாமே நஞ்சீயரை வினவி அறிந்தனவும் ஆறு இடங்களில் வருகின்றன.[144] பட்டரை சீராமப் பிள்ளையும் சிறியாத்தானும் அனந்தாழ்வானும் நிலாத்துக்குறிபகவரும் தனித்தனியே வினவி அறிந்தனவாக நான்கு இடங்களில் வருகின்றன.[145] இவற்றை 'சம்வாதம்' என்று அரும்பதகாரர் குறிப்பர். இவ்வகைச் சம்வாதங்கள் திருவாய்மொழிப் பாடலின்மேல் எழுந்தனவாகவும் மேற்கோள்களின்மேல் எழுந்தனவாகவும் அமைகின்றன.

### எடுத்துக்காட்டு

*பரிவதிலீசனை[146] என்ற பாடலில் இறைவன் வழிபாட்டிற்கு எளியவன் என்று ஆழ்வார் உணர்த்துகிறார். இறைவனுக்குச் சேர்க்க வேண்டுவனபற்றி 'புரிவதுவும் புகை பூவே' என்பர் ஆழ்வார். மூலத்தில் இன்னபூ இன்ன புகை என்ற குறிப்பில்லை. ஆதலால் பட்டர் ''செதுகையிட்டுப் புகைக்க அமையும். கண்டகாலி இடவும் அமையும்'' என்று இன்சுவையாகப் பொருள் கூறினார். அருகிலிருந்த நஞ்சீயர் 'சாத்திர நெறிக்கு முரணாகக் கண்டகாலிப் பூவை (கண்டங்கத்திரி) இடலாமா?' என்று வினவினார். முள் உள்ள மலரையிட்டுப் பூசனை செய்யற்க என்பது சாத்திர விதியின் கருத்து. அதனைத் தெளிவிறுத்த, '' அவனுக்கு ஆகாது என்கிறதல்ல;

---

143. 1, 3. 8 ஈ; 1, 6, 1 ஈ; 2, 2, 3 ஈ; 3, 4. 6 ஈ; 3, 6; 8 ஈ 4, 5, 8 ஈ; 10, 2, 1 ஈ; 10. 2, 5 ஈ

144. 3, 7, 1 ஈ; 4, 6, 0 ஈ; 4, 6 3 ஈ; 6, 10, 4 ஈ; 7, 5, 11 ஈ; 9, 6, 7 ஈ

145. 3. 2, 0 ஈ: 3, 6, 8 ஈ; 3, 7. 2 ஈ 3, 7, 2 ஈ

146. தி. வா. மொ. 1, 6. 1

பறிக்கிற அன்பன் கையிலே முட்டாயும் என்றதுக்காகத் தவிர்த்தது காணும்'' என்று கூறினாராம். இவ்வுரையாடலால் அரிய ஒரு சாத்திர நுட்பத்தைப் பிள்ளை விளக்கிவிடுகிறார். 'புகை பூவே' என்ற மூலத்தில் இவை வெளிப்பட இல்லையாயினும் சம்வாதமுகத்தால் சாத்திரங்கள் விதிக்கும் அடிப்படை நன்கு புலனாக்கப்படுகிறது, நம்பிள்ளை தாமே நஞ்சீயரைக் கேட்டு அறிந்தனவாக வரும் வினாவிடைக் குறிப்புக்களையும் ஈட்டிற் காணலாம். இவற்றை ஆய்வு செய்தால் நம்பிள்ளை எவ்வாறு பேருரையாளராக உருவானார் என்பதும் இயற்கையிலேயே அவருக்கிருந்த சிந்தனைத் தெளிவும் கூரிய நோக்கும் நன்கு அறிய வருகின்றன.

## பொருளாட்சி வேறுபாடுகள்

### அடிப்படை

தாம் எழுதும் உரையேயன்றித் தமக்கு முன்பிருந்த ஆசிரியர்களின் உரைக் குறிப்புகளையும் எடுத்துக் காட்டுவது பொதுவாகத் தமிழிலக்கிய உரையாசிரியர்களிடத்துக் காணப்படும் உரை நெறியாகும். அவ்வுரைக் குறிப்புகள் பொருந்துவன அல்ல என்று தெரிந்தால் அவற்றைப் போலியுரை என்றும் இகழத் தயங்குவதில்லை. நம்பிள்ளை அவர்களிலிருந்தும் மிக வேறுபட்டவர். பிறருடைய உரைக்குறிப்புகளோடு அவர்கள் கூறிய நயமான பொருளாட்சிகளையும் பொன்னே போல் போற்றித் தழுவியிருக்கிறார். ஈட்டில் முப்பது பெரியோர்களின் பொருளாட்சி நயங்கள் எடுக்கப்பட்டிருக்கின்றன.[147] அவற்றுள் பட்டர், எம்பெருமானார், நஞ்சீயர், பிள்ளான் ஆகியோரின் பொருளாட்சிகளே பெரும்பான்மையாக அமைகின்றன. இவ்வளவு எண்ணிக்கையில் பொருளாட்சி வேறுபாடுகள் வேறு எங்கும் இல்லை. திருவாய்மொழி உரை, வாய்மொழியாகவே சில நூற்றாண்டுகள் வழங்கி வந்ததே இவை பெருகக் காரணம். திருவாய்மொழிப் பொருள் அவரவர் மதிநுட்பத்துக்கு ஏற்பச் சுரக்கும் என்று இராமானுசர் இவ்வகை வேறுபாட்டுக்கு வித்திட்டதால் நாளடைவில் பொருளாட்சிகள் சேர்ந்துவிட்டன. அவையனைத்தையும் பிற்கால ஆய்வாளர்க்குச் சேமித்து வைத்தவர் நம்பிள்ளை. பொருளாட்சியை 'நிர்வாஹம்'[148] என்று நம்பிள்ளையும் அரும்பதகாரரும் வடமொழிக்குறியிட்டு வழங்குகின்றனர்,

---

147. காண்க: பின் இணைப்பு (5)
148. 8.6.1 ஈ

மறுப்புமுறை :

பொருந்தாத பொருளாட்சிகளைக் கடுவுரையால் மறுப்பது பிள்ளையின் இயல்பன்று.

"இவை எல்லாமல்ல"[149]

"இப்பொருள் அழகிது ஆனாலும் அபக்ஷதர்மம்"[150]

"பிரகரணத்தோடு பொருந்தமாட்டாது"[151]

"முன்னிற் பாட்டுக்களும் பின்னிற் பாட்டுக்களும் ப்ரீதியோடே நடவாநிற்க நடுவே அப்ரீதிதோற்றச் சொல்லுமது சேராது"[152]

"இயலறிவுக்குப் போந்திருந்ததில்லை"[153]

"இதுபொருள் அழகிது, இவ்வாழ்வாருடைய ப்ரகிருதிக்குக் சேராது"[154]

"இங்ஙனேயாக அடுக்கும்"[155]

"இதுபொருள் அழகிது ஆனால் இப்போது இவர்க்கு ஓடுகிற தசைக்குச் சேராது"[156]

"மேலோடுகிற ரஸத்தோடு சேராது"[157]

"இத்திருவாய்மொழிக்குச் சொன்ன வாக்யார்த்தத்தோடு சேராது"[158]

என்பனவாக வரும் மறுப்புக் கூற்றுகளே ஈட்டில் வருகின்றன.

பொருளாட்சிகளில் சொற்களை உருமாற்றியும் இடம் பெயர்த்தும் புத்துரைகளைக் காணும் உரைஉரிமை வைணவ உரையாசிரியர்களிடத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டிருந்தது. இறுதியான தத்துவக் கூறுகளிலோ அடிப்படை உண்மைகளிலோ மாறுபாட்டை விளைவியாமல் கூறப்படும் உரைமுரண்களுக்குப் பழகியவர்களே அவர்கள். அன்னவர்தம்

149. 9-3-9 ஈ
150. 7-7-6 ஈ
151. 7-8-4 ஈ
152. 2-3-3 ஈ
153. 2-5-10 ஈ
154. 2-9-8 ஈ
155. 5-1-9 ஈ
156. 9-4-3 ஈ
157. 10-6-1 ஈ
158. 9-7-5 ஈ

உரைகளில் ''அர்த்த விரோதமில்லை; வாக்ய யோஜனா-பேதமே உள்ளது''[159] என்பர் வேதாந்த தேசிகனார்.

ஆயினும் ஆழ்வாருடைய இயல்புக்கு முற்றிலும் சேர்ந்-திராத பொருள் நிருவாகங்களைக் கேட்டபோது, மனவருத்தமும் பட்டிருக்கின்றனர். * மின்னிடை மடவாரில் (6-2) தலைவி தலைமகனோடு ஊடுகிறாள். தலைவனுக்குப் பிறமகளிடத்தே தான் மிக்க நேயமுண்டு என்பதைக் குறிப்பாலுணர்த்தி அங்ஙன் ஊடுகிறாள். தலைமகன் திருமாலாக இருப்பதாலும் தலைவிதானும் ஆழ்வாராக இருப்பதாலும் அப்படி உடன் கிழத்தி போல் வார்த்தையாடுவது 'சேஷத்வம்' என்கிற அடிமைக்குச் சேராது என்று நினைத்துச் சிலர் வேறுவகையாக அப்பதிகத்தை நிருவகித்தனர், அதாவது *வளவேழுலகிற்படியில் (1-5) ஆழ்வார் தற்சிறுமை பாராட்டுவதாகப் பொருள் ஆட்சி செய்தனர், இதைப் பட்டர் கேட்டு, ''என் சொன்னா-ரானார்கள்! இவர்க்கு (ஆழ்வார்) பகவத் விஷயத்திலுண்டான ருசிக்குப் பிரகாசகம் இத்திருவாய் மொழியாயிருக்கும்; இதுக்கு வேறே ஒரு வழிதேடுவதே ; ஆனபின்பு இதுவே பொருளா-மித்தனை''[160] என்று வருந்திக் கூறியதாக ஈட்டில் உள்ளது

ஈட்டில் காட்டப்படும் பொருள் ஆட்சிகளில் பிள்ளான் நஞ்சீயர் ஆகிய இருவருடைய ஆட்சிகளைத் தவிர மற்றவை வாய்மொழிமரபில் எழுந்தனவாகும், பிள்ளானுடையதாகக் காட்டப்படும் பொருளாட்சிகளிலும் ஒரு சிலவே ஆறாயிரப் படியில் காணப்படுகின்றன. நஞ்சீயருடைய பொருளாட்சிகளும் அப்படியே ஒன்பதினாயிரப் படியிற் காணப்படவில்லை நம்பிள்ளை அவரிடத்தே பாடங் கேட்ட போது வாய்மொழி மரபாகக் கூறிய பொருளாட்சிகளே அவை. நஞ்சீயருடைய ஒன்பதினாயிரப்படிப் பொருள் ஆட்சியை ஒரு இடத்தில் ஈட்டிற் காட்டியிருக்கிறார். [161] பெரியவாச்சான் பிள்ளையைப் பற்றிய குறிப்பீடு ஒன்றும் ஈட்டில் காட்டப்பட வில்லை.

---

159. வேதாந்த தேசிகன், ஸ்ரீஸம்ப்ரதாய பரிசுத்தி. 'சில்லறை ரஹஸ்யங்கள். வ. ந. ஸ்ரீராமதேசிகாசாரியர் பதிப்பு, 1972, ப. 7.

160. 6-2-0 ஈ

161. 10-3-11 ஈ

ஈட்டில் நம்பிள்ளை காட்டும் பொருளாட்சி வேறுபாடு களே இங்கு ஆய்வுக்கு உரியதாகினிறன ஆறாயிரப்படி, ஒன்பதி னாயிரப்படி, இருபத்து நாலாயிரப்படி, ஈடு ஆகியவற்றிலுள்ள உரைவேறுபாடுகள் தனித்து ஆராயப்பட வேண்டும் உரை வேறுபாடுவேறு; பொருளாட்சி வேறுபாடு வேறு. மூல நூலுக்கு வேறுவேறு ஆசிரியர்களால் வெவ்வேறு காலத்தில் எழுதப்பட்ட உரைகளில் வரும் வேறுபாடுகளை ஆய்வாளர் பிரித்துக் காண்பது உரை வேறுபாடு; ஓர் உரையாசிரியரே தம் உரைநூலுள் காட்டும் வேறுபாடுகளைப் பொருளாட்சி வேறுபாடுகள் எனலாம்.

ஏற்பு :

பொருளாட்சி வேறுபாடுகளில் நம்பிள்ளை எதனை ஏற் கிறார் என்பதை நுண்ணிதிற் காண வேண்டியுள்ளது. இறுதி யாகக் காட்டப்படும் பொருளாட்சியை ஏற்பது பெரும்பாலும் நம்பிள்ளையின் போக்காகும். *இன்னுயிர்ச் சேவலில் (9-5) தலைவனுக்குப் போலியான பொருள் வரவுகளைக் கண்டு துடிக்கிறாள் தலைவி. இறுதியில் நாரைக் குழாங்களை விளித் துத் தன் நிலையைக் கூறி "தழை நல்ல இன்பம் தலைப்பெய்து எங்கும் தழைக்கவே"[162] என்று வாழ்த்துகிறாள். தான் முடி கிற நிலைமையிலே 'உலகம் வாழ வேணும்' என்று வாழ்த்து வதற்கான மனக்கருத்தை மூன்றுபடியாகக் காட்டியிருக்கிறார் கள். "தாந்தாம் முடிய நினைப்பார் 'நாடு வாழ்க' என்பா ரைப் போலே சொல்லுகிறாள்" என்பது ஆளவந்தாரின் பொருளாட்சி; "நான் பட்டபாடு நாடு படாது ஒழிய வேணும்" என்பது எம்பெருமானாரின் பொருளாட்சி; "நான் முடிய என் துயர் கண்டு நோவு படாதே உலகமடங்கப் பிழைக்கு மாகாதே" என்பது பட்டரின் பொருளாட்சி. இவற்றுள் இறுதி யான பட்டருடைய நிருவாகத்தையே ஏற்று அடுத்து வரும் பாடலில் உரை கண்டிருக்கிறார்.

இனி ஈட்டில் வரும் பொருளாட்சி வேறுபாடுகள் பதி னைந்து இணைகளாகக் காணப்படுகின்றன.[163] அவற்றுள் திரு மாலையாண்டான்பொருளாட்சியைஇராமானுசர்மறுத்துள்ளது

162. தி. வா. மொ. 9 - 5 - 10
163. காண்க; பின்இணைப்பு (7)

இருபது இடங்களில் காட்டப்படுகிறது.[164] இராமானுசருடைய பொருளாட்சிகளே நம்பிள்ளையால் ஆதரிக்கப்படுகின்றன. இவற்றை முறையாக ஆய்வு செய்தால் பொருளாட்சி ஏற்பு நெறிகள் புலனாகும்.

**திருமாலையாண்டான் — இராமானுசர்:-**

**(1) தலைவியின் அடிமனநிலை :-**

*அஞ்சிறையமட நாரையில் (1-4) தூதுவிடும் தலைவி 'மதியினால் உலகிரந்த கள்வர்'[165] என்று தலைவனைக்குறிப்பிடுகிறாள். சிறிய காலைக்காட்டி இரந்து பெரிய காலால் அளந்து கொண்டான் என்னும் கதை நிகழ்ச்சியைக் கொண்டு 'வஞ்சகர்க்கு' என்று பணித்தார் ஆண்டான். தலைவி அச்சரிதையைக் கூறவேண்டிய மனநிலையை ஆராய்ந்தார் இராமானுசர். 'அன்று மாவலிபால் மண் இரந்தது இன்று அச்செயலை நினைப்பித்து என்னை மனங்கவருவதற்கே', என்ற எண்ணம் தலைவியின் நெஞ்சத்தில் ஓடியதாகக் கொண்டு ''ஒன்றை நினைத்து வேறு ஒன்றைச் செய்தவற்கு'' என்று பொருள் பணித்தாராம்.

**(2) பதிகச்சுவை:-**

*ஊனில் வாழுயிரில் (2-3) ஆழ்வார் கலவியின்பம் நுகர்ந்து மகிழ்ச்சியில் திளைக்கிறார். அப்பதிகத்தில், மூன்றாம் பாடலில் ''அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து அறியா மாமாயத்து அடியேனை வைத்தாயால்'[166] என்கிறார். சொற்களை ஆற்றொழுக்காகக் கொண்டு 'அறிவு நடையாடாத காலத்திலேயே எனக்கு அடிமையில் அன்பினைச் செய்வித்தும் அதுவளர வகையில்லாத மாமாயத்திலே (பிறவியில்) பின்னும் வைத்தாயால்' என்று இழவு தோற்றச் சொல்லுகிறதாக ஆண்டான் பொருள் பணித்தார். 'மேலும் கீழுமான பாடல்களில் உகப்பு தலையெடுத்துச் செல்வதால் இதிலும் மகிழ்ச்சியே தோற்றுவதாகப் பொருள்காணல் தகும் என்று இராமானுசர் கருதினார். அதற்காக, கொண்டுகூட்டிப் பொருள் பணித்தார் அவர். 'அறியா மாமாயத்து அடியேனை அறியாக் காலத்துள்ளே

---

164. மேலது
165. தி. வா. மொ. 1-4-3
166. மேலது 2-3-3

அடிமைக் கண் அன்பு செய்வித்து வைத்தாய்' என்பது அவர் காட்டும் பொருள்முடிபாகும். இதனால் ஆழ்வார் மகிழச்சியால் இறைவன் செய்த உதவியைப் பாராட்டுவது புலனாக்கப் படுகிறது.

(3) தமிழ்க்கொள்கை

*வைகல் பூங்கழிவாயில் (6-1) ஆழ்வார் வண்டுகளைக் குறித்து வார்த்தை சொல்லிவிடும் போது "என்னையும் உளள் என்மின்களே"[167] என்கிறாள். "இன்னமும் உயிரோடு இருக் கிறாள் என்று அறிவியுங்கோள்" என்பது ஆண்டானுடைய பொருளாட்சி. தமிழ் நூலோர் கூறிப்போகும் 'இன்றியமை-யாமை' என்பதற்கு அது முரணாவதைக் கண்டு அதற்குப் பொருத்தமாக, "இன்னும் காக்கப்படவேண்டியவள் ஒருத்தி உளள்" என்று பொருள் காட்டினார் எம்பெருமானர்.

இதுபோன்றே பட்டருக்கும் பிறருக்குமிடையே உளதாகக் காட்டப்படும் பொருளாட்சி வேறுபாடுகள் பக்திநூல்களுக்கு உரையிடப்புகுவார் அறிய வேண்டும் அரிய உரை நுட்பங்களை வெளிப்படுத்துகின்றன. அவற்றை எல்லாம் கேட்டும் கற்றும் தெளிவுபெற்றதால்தான் நம்பிள்ளையின் உரை சுவைமிகப்பயப் பதாய் திறன்பட அமைகிறது.

### அரியவுரைகள்

அடிப்படை

ஆழ்வார்க்கு இறைவனே பேரருள் நல்கினான். அவ்வருள் திறமே ஆழ்வார்க்கு இறைநுகர்வை அளித்தது. அவ் இறை நுகர்வுணர்ச்சியினால் உந்தப்பட்டே ஆழ்வார் பாசுரமிட்டார். அப்பாசுரங்கள் இறை நுகர்ச்சித் திறனால் (Mystical experience) புறம் போந்தவையாதலால், அவை அந்நுகர்ச்சிகளால் தொடை யுண்டன. அங்ஙனம் தொடையுண்ட பாசுரங்களில், அறிவரி தாய பொருட்பெற்றிகள் தாமே சேர விழுந்தன. சொற்கள் எளியனவாகவும் பொருட்கள் அரியனவாகவும் அமைந்த அத் தகைய பாடல்கள் திருவாய்மொழியில் மலிந்துள்ளன. வெறும் சொற்பொருள் உணர்ச்சியால் மட்டுமே அவற்றிற்கு உரையிடல் இயலாது. அப்பாசுரங்களில் தத்துவச் செய்திகளே மிகுதியாகப் புணர்ப்புண்டபடியையும் நம்பிள்ளை உணர்த்துகிறார் மேலும் அச்செய்திகள் யாவும் உருவகமாகவும் உள்ளுறையாகவும்

---

167: மேலது 6-1-10

வெளிப்படுவதையும் அவர் காண்கிறார். ஆதலால், அவற்றிலுள்ள சொற்களுக்குக் கருத்துப் பொருளே பொருந்து மாற்றைத் தெளிவுபடுத்துகிறார். ‘கரந்த சில் இடந்தொறும் இடம் திகழ் பொருள்தொறும்’[168] என்ற தொடரில் இடம்-சரீரம்’ பொருள்-ஆன்மா எனக் கொண்டு, “இமையோடு இமை பொருந்தும் போதைக் காற்றிலே முடியும் படியான ஸூக்ஷ்மமான அல்ப சரீரங்கள் தோறும்...சரீரங்களிலே ஜ்ஞான ஆனந்த லக்ஷணமாய்க் கொண்டு மிளிருகிற ஆத்மாக்கள் தொறும்’’ என்று அரியபொருள் காட்டினார். உரு, அரு என்ற சொற்களும் சரீரத்தையும் ஆன்மாவையும் குறிப்பதாகக் கொள்வர். ‘உருவினன்’[169] என்றால் சரீரங்களை உடைமையாகக் கொண்டவன் என்றும் அருவினன்[170] என்றால் ஆன்மாக்களையும் தனக்கு உடைமையாகக் கொண்டவன் என்றும் அரிய பொருளைக் காட்டுவர். திருவாய் மொழி முதற்பதிகம் முழுதும் தத்துவச் செறிவுடன் அமைந்திருக்கிறது. இறைவன் உயிர்ப்பொருள், உயிரல்- பொருள்கள் அனைத்தையும் தனக்கு உடலாகக் கொண்டு அவற்றுக்குத் தான் உயிராய் ஒருவனாய் உளன். இதுவே முதற்பதிகத்தின் உட்கோள். இதனை ‘சரீர ஆத்தும பாவம்’ என்பர் இக் கருத்தின் அடிப்படையில், வேதாந்த விழுப்பொருளான முதல் பதிகத்துக்கு அரியவுரை கண்டவர் நம்பிள்ளை.

எடுத்துக்காட்டு :-

*(1)* *ஒரு நாயகமாய் *(4—1)* என்ற திருவாய்மொழியில் நிலையாமைகளை ஆழ்வார் அறிவுறுத்துகிறார். ஒன்பது பாடல்களில் செல்வ நிலையாமை யாக்கை நிலையாமைகளைப் பரக்க மூதலித்தார். பதினோராம் பாடலில் பலனைக் கூறினார். இவை யாவும் இனிய சொற்களால் இயன்று பொருள் காண எளியனவாய்க் கிடக்கின்றன. ஆனால் பத்தாம் பாடலில் சொற்கள் எளியனவாய்க் கிடப்பினும் பொருள் அறிதற்கரியதாய் அமைந்திருக்கிறது. அப்பாடல் வருமாறு:-

---

168. மேலது 1 - 1 . 10
169. மேலது 1 - 1 . 3
170. மேலது 1 - 1 - 3

குறுகமிக உணர்வத்தொடு நோக்கி எல்லாம் விட்ட
இறுகல் இறப்பென்னும் ஞானிக்கும் அப்பயனில்லையேல்
சிறுக நினைவதோர் பாசமுண்டாம் பின்னும் வீடில்லை
மறுகலில் ஈசனைப் பற்றி விடாவிடில் வீடஃதே[171]

செல்வ, யாக்கை, துறக்க நுகர்ச்சி நிலையாமைகளை ஒப்புக் கொண்டு, ஆன்மானுபவம் என்ற கைவல்லிய மோட்சத்தைப் பற்றுகின்ற ஞானிகளைக் குறித்து இப்பாடல் தோன்றியதை நம்பிள்ளை உணர்த்துகிறார். செல்வ, யாக்கைகளின் அழிவை நோக்கக் கைவல்லியமாகிற ஆன்மலாபம் நன்றேயானாலும், இறையின்பப் பேறாகிற பரமான்மலாபத்தைக் கருத அது மிகத் தண்ணிது என்றும் அதைவிட்டு இறைவனைப் பற்றுக என்றும் ஆழ்வார் கூறுவதாகப் பிள்ளை கருத்துரைப்பர். இதற்குச் சேரச் சொற்களைக் கண்ணழித்து உரை செய்வது அரிய செய லாகும். அவ்வுரை வருமாறு:

குறுக-(தொலையிற்போய், பொருளை உணரும் மனத்தைக்) கிட்டவிட்டு;

மிக - (நனி) மிகத் (தெளிவாக);

உணர்வத்தோடு நோக்கி - ஆன்மாவோடு சேர்த்து அனு சந்தித்து;

எல்லாம் விட்ட - செல்வத்தோடு இறையனுபவத்தோடு வாசியற எல்லாம் விட்ட

'இறுகல் இறப்பு' என்னும் - சுருக்கத்தையே மோட்சம் என்று கூறும்;

ஞானிக்கும் - ஆன்மஞானிக்கும்;

அப்பயன் இல்லையேல் - இறைவனையே உபாயமாகப் பற் றுகை இல்லையேல்;

சிறுக நினைவதோர் பாசம் உண்டாம் — 'நான் தேவன்' 'நான் மனிதன்' என்று கூறுவதற்கு அடியான அறிவின்மை உண்டாகும்;

பின்னும் மறுகலில் ஈசனைப்பற்றி — உயிர் நீங்கும் சமயத் தில் இறைவனை நினைத்து;

விடாவிடில் — (உயிரை) விடாவிடில்;

171. மேலது 4 - 1 - 10

வீடில்லை — அந்த மோக்ஷமும் இல்லையாகும்: வீடுஅஃதே — அதுவே வீடு, (அதாவது) 'திருநாரணனைக் காலம் பெறச் சிந்தித்து உய்ம்மினோ' என்று நான் சொல்லுகிற அதுவே புருடார்த்தமாகும்.

இவ்வரிய வுரையில், மனத்தை என்ற சொல்லை வருவித்தார் குறுக என்ற எச்சத்தைக் 'குறுக்கி' என்றாக்கினார்; உணர்வு-ஆத்மா என்று பொருள் கொண்டார். இறுகல் இறப்பு - கைவல்ய மோட்சம் ; பயன் - தானே பயனான இறைவன் என்று பொருள் கொண்டார். மேலும் 'உயிரை' என்பதை வருவித்தார். மனத்தை ஆன்மாவோடு ஒன்றாக்கி ஆன்மாவைக் காண்பவர்கள் இறுதியில் உடலை உதறிக் களைந்து ஆன்மரூபமான நிலையில் ஆன்மானுபவம் செய்வார்கள். இதுவே 'கேவல மோக்ஷம்' எனப்படும். இப்படி, கேவல மோட்சத்தை நுகர விரும்புவோர்க்கும் அவிச்சைகள் என்ற மயர்வு ஏற்படும்; மேலும் அவர்கள் உடலைவிட்டு உயிர் நீங்கும் காலத்து இறைவனைப் பற்றிய நினைவு கூடப் பெற வேண்டும். இவையில்லாவிடில் அந்தக் கேவல மோட்சமாகிற ஆன்மாநுபவமும் இல்லையாகிவிடும் இத்தனை அரியதும் தண்ணியதுமாகிய ஆன்மானுபவத்தை விட்டு இறையின்பமாகிய அனுபவத்தைப் பெற முயல்க என்று அறிவுறுத்துகிறார். நம்பிள்ளையின் உரையின்றேல், இப்பாடற் பொருள் காண்டற்கு அரிதேயாம். இதே முறையில் 'குறுகா நீளா' என்ற[172] பாடலுக்கும் அரியவுரை செய்திருக்கிறார். 'சரணமாகிய'[173] என்ற பாட்டிலும் ஆழ்வார் கைவல்லியார்த்திகளை இகழ்வதாக அரிய வுரை செய்திருக்கிறார். அவர்களையே உருவகித்துப் பாடும் 'காது செய்வான்'[174] என்ற பாடலுக்கும் அரியவுரை அமைத்திருக்கிறார்.

(2) இறைவனைக் குறித்து அடைமொழியாக வரும் சொற்களுக்கு நம்பிள்ளையிடும் அரியவுரைகள் வேதாந்த ஆராய்ச்சியின் விளைவாக எழுந்தனவாக அமைகின்றன.

---

172. மேலது 6 - 9 - 10

173. மேலது 8 - 2 - 3

174. தி. வா, மொ. 9 - 1 . 9

'கடிசேர் நாற்றத்துள்ளாலை இன்பதுன்பக் கழிநேர்மை
ஒடியா இன்பப் பெருமையோன்'[175]

'நித்தியமாய் நிரதிசயமான ஆனந்தமயன்' என்று இத் தொடர்க்குப் பொருள் வரைகுவர். இறைவனுடைய ஆனந்த குணம் ஒன்றைப் பேசப்புகுந்த வேதம் அது தனக்கு நிலமன்று என்று மீண்டது. அதனை ஆழ்வார் தமக்கு நிலமாக்கிப் பேசுவதாகப் பிள்ளையின் கருத்து 'ஆலை' என்றால் மதுவைக் குறிக்கும். அது உபலட்சணமாய் உலகத்துச் சுவைப் பொருள் அனைத்தையும் காட்டும். 'அப்படிக் கடியும் நாற்றமும் சேர்ந்த ஆலையின் அனுபவத்தால் வந்த இன்பத்தில் அற்பம், நிலையின்மை என்ற துன்பக் கூறுகளைக் கழித்து மிக நுட்பமானதும் ஒடியாததும் பெரியதுமான ஆனந்தத்தை உடையவன் இறைவன்' என்று பொருள் விரிக்கிறார். தான் ஓர் உருவே தனி வித்தாய்'[176] என்றவிடத்து அடைகளைப் பிரித்து அரிய பொருள் காட்டுகிறார்.

தான் ஓர் தனி (உருவே) வித்தாய் - என்று பொருட்கோள் கொண்டார். தான், ஓர், தனி என்பன இறைவனுடைய இரண்டற்ற தன்மையைக் (அத்விதீயம்) குறிக்கும் சொற்கள் என்று கொண்டு, பாடலில் இறைவன் உலகத்தைப் படைத்த வரலாற்றைச் சொல்லுவதால், அச்சொற்கள் இறைவனுடைய காரணத்துவத்தைச் (முழுமுதலாம் தன்மை) சுட்டுவதாக அறுதியிட்டார். முதற்காரணம், துணைக் காரணம், நிமித்த காரணம் என்ற மூவகைக் காரணங்களாக இருப்பவன் இறைவன் என்பதை இச்சொற்களின் துணை கொண்டு உறுதிப்படுத்துகிறார். உரு = அழகு என்று கொண்டு இம் மூவகைக் காரணங்களையும் தனக்கு அழகாகக் கொண்டவன் இறைவன் என்றும் குறிப்பிடுகிறார். இவ்வரிய உரை சாந்தோக்கிய உபநிடத வாக்கியங்களைக் கொண்டு தோன்றியது.[177]

## நயவுரைகள்

திருவாய்மொழிப் பாசுரங்களுக்கு இன்சுவையே வடிவெடுத்த நயவுரைகளை ஈட்டில் காணலாம். பாடல்களில்

175. மேலது 8-8-2
176. மேலது 1-5-4
177. 10-10-9 ஈ

இடம்பெறும் தொடர்களின் சேர்த்தியழகு கொண்டு நயமிக்க உரைகளை நம்பிள்ளை இடுகிறார்.

**சேர்த்தியழகு :**

'ஆறாமதயானை'[178] என்ற பாசுரத்தில், 'ஆறாமத யானை அடர்த்தவன் தன்னைச், சேறார்வயல்சூழ் தென்குரு கூர்ச் சடகோபன்' என்ற அடிகளில் 'குவலயா பீடத்தைக் கொன்ற கண்ணபிரானைச் சேறார் வயல்சூழ்ந்த தென்குரு கூர்ச்சடகோபன் பாடினான்' என்ற கருத்து உறைகிறது. ஆங்கே, 'ஆறாமதயானை அடர்த்தவன்' என்ற உடனேயே 'சேறார் வயல்சூழ் தென்குருகூர்' என்ற தொடர்ச் சேர்த்தியழகில் ஈடுபட்டு, "குவலயா பீடமோதான் திருநகரியிலே வயலை யுழுவது நடுவதாக வொட்டாதே கிடந்தது'' என்ற நயத்தைக் காட்டுகிறார். 'சமபிவ்யாஹாரம்' என்ற முறையில் இந்நயக் குறிப்பு இடப்படுவதாக அண்ணங்கராசாரியார் கூறுவர். இதனை 'ரஸோக்தி' என்று அரும்பதம் குறிப்பிடும்.[179]

**எளிமையாக்கம்:-**

பிள்ளை தரும் சில உரைநயங்கள் விளக்கலாகாத் தொடர்களையும் அளந்து காண்டற்கு எளியன ஆக்குகின்றன. இறைவனை ஆழ்வார் 'நினைவரியவன்[180] என்று சுட்டுகிறார். உலகில் நினைவிற்கும் அரியன உண்டோ? இல்லாத பொருளையும் கூடப் பிடிக்கும் கற்பனை ஆற்றல் நினைவுக்கு உண்டு. அதனையுணர்ந்து,

> '' ஓர் ஊசி நிற்கிறதாகவும் அதின் மேலே கலசம் நிற்கிற தாகவும் அதின்மேலே மகாமேரு நிற்கிற தாகவும் இப்படிப் பொருந்தாமைகளைச் சேர்த்து நினைக்கலாமிறே. அப்படியே தான் கற்பனைக்குப் பொருளாயிருக்குமோ என்னில் மனோரத சமயத்திலும் பரிச்சேதிக்க அரியனாயிருக்கும்''

என்ற நயவுரை பகர்வர்.

178. தி. வா, மொ. 9-4-11
179. 1.4-0 ஈ; 2.3.2ஈ; 2.4.1ஈ, 2-7-0 ஈ; 3-8-5 ஈ 4-10.1 ஈ; 9.6-1 ஈ
180. தி. வா. மொ. 9-1-9

காரணம்:-

'நீர் நுமது என்றிவை வேர்முதல் மாய்த்து'[181] என்ற இடத்தில் யான், எனது என்று கூறாது முன்னிலைப்பட மொழிந்ததற்கு நயமிக்க காரணம் விளக்குகிறார். "நான், என்னது என்று தம் வாக்காலே சொல்லமாட்டாரே நாக்கு வேம் என்று" என்பது விளக்கம்.

குறிப்புமொழி:-

அன்னங்களைத் தூது போக்கும் ஆழ்வாராகிற தலைவி 'ஒருத்தி மதியெல்லாம் உள்கலங்கி மயங்குமால் என்னீரே'[182] என்று செய்தி சொல்லி அனுப்புகிறாள். பராங்குச நாயகி என்று பெயர் சுட்டாது 'ஒருத்தி' என்று பொதுப்படமொழியின் தலைவன் அவளை அறியுமோ? என்ற வினாவை எழுப்பி நயமிக்க காரணம் கூறுகிறார் :-

> ஒருத்தி என்றால் அறியுமோ? என்னில் எய்தவன் கை உணராதோ? 'இன்ன காட்டிலே மான் பேடை ஏவுடனே கிடந்துழையா நின்றது' என்று ஊரிலே வார்த்தையானால் எய்தவன்கை உணராதோ? நீயன்றோ எய்தாய் என்று சொல்ல வேண்டாவிறே.[183]

நகைப்புரை :-

'கூனே சிதைய உண்டை வில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா'[184] என்ற தொடரில் நயமும் நகையும் தோன்ற விளக்கவுரை பகருகிறார். கூனே சிதைய வில்லெறிந்தவன் இராமன் அன்றோ! அங்ஙன் 'இராமன்' என்னாது அச்செயல் புரிந்தானை 'கோவிந்தன்' என்றதற்கு நயவுரை மிக அழகிது. 'போம்பழி எல்லாம் அமணன் தலையோடே' என்ற பழமொழிக் கதையைக் கூறி 'இராமனது விளையாட்டுப் பழி எல்லாம் கண்ணன் தலைமேலே விழும்' என்று புது விளக்கம் தருகிறார். அக்கதை வருமாறு :

---

181. தி. வா. மொ. 1 - 2 - 3
182. மேலது 1 - 4 - 3
183. 1 - 4 . 3 ஈ இதே உரைநயம் 6 - 1 - 4 ஈட்டிலும் உள்ளது.
184. தி. வா. மொ. 1 - 5 - 5

ஓர் அந்தணர் வீட்டுச்சுவரில் கன்னம் வைத்துத் துவாரம் பண்ணித்திருடன் நுழைந்த போது சுவர் இடிந்து அத்திருடனை நசுக்கிக் கொன்றது. காலையில் அதைக்கண்ட அவன் மனைவி அரசனிடம் முறையிட்டாள். அந்தணர் உறுதியாகச் சுவரை எழுப்பவில்லை என்று பழி சுமத்தினார்கள். அந்தணர் சுவரை எழுப்பிய கொத்தனார்மீது பழியைச் சுமத்த, அவர் மண்குழைக் கத்தண்ணீர் விட்ட சிற்றாளின்மீது பழியைச் சுமக்தினார். அவள் பானையைப் பெரிதாக வனைந்து கொடுத்த குயவன் மீது பழியைப்போட்டாள். குயவனோ சூளையின்முன் உலாவிக் கொண்டிருந்த ஒரு நாடகக் கணிகை தன் கவனத்தை ஈர்த்தாள் என்று அவள்மீது பழிசுமத்தினான். அவளோ தன் ஒற்றைச் சேலையைத் தோய்த்துவர எடுத்துப் போன வண்ணானை நேரில் கண்டுவரப்போனதாகவும் அவன் அங்குக் காணப்படா மையால் சூளை அருகில் உலாவிக் காத்திருந்ததாகவும் கூறி வண்ணான் மீது பழியைச் சுமத்தினாள்; வண்ணானை விசாரித்தபோது நீர்த்துறையில் தோய்க்கும் பாறைமீது ஒரு சமணத்துறவி இடம் பிடித்து நகராது இருந்ததால் துணி களைத் தோய்க்க இயலாதாயிற்று என்று கூறித் துறவிமீது பழியைப் போட்டான். துறவியை அழைத்துவர, அவரும் அன்று மௌன விரதமாயிருந்தார்; அதனால் வாய் திறக்க வில்லை. மௌனம் குற்றத்தை ஒப்புக் கொண்டதற்கு அடை யாளம் என்று கூறி அரசன் சமணத்துறவியின் தலையை வெட்டுமாறு தீர்ப்பு வழங்கினான்.

## ஐயமறுத்தல்

பிள்ளையின் நயவுரைகள் ஐயப்பாடுகளை அகல்விக்கின் றன. 'அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத்தவர் அறிய, நெறி எல்லாம் எடுத்துரைத்த நிறைஞானத் தொருமூர்த்தி' [185] என்று இறைவனைச் சிறப்பிக்கிறார் ஆழ்வார். உலகரெல்லாம் அறியுமாறு நெறிகள் பலவற்றைக் கீதைமுகமாகக் கண்ணன் எடுத்துரைத்தான் என்பது கருத்து அறிவிற் குறைவாளர்க் கன்றோ அறநெறிகளை உபதேசித்தல் வேண்டும்? அறி வினால் குறைவில்லாதார்க்கு வேண்டுமோ? 'அறிவினால்

---

185. மேலது 4.8.6

குறைவில்லா' என்ற அடைமொழிக்கே பிள்ளை 'அறிவிற்குறை வாளர்' என்று பொருள் காட்டுவது நயமிக்கது.

> 'நாட்டார் அன்னபானாதிகள் எல்லாவற் றாலும்.
> காரியம் உடையரா யிருப்பர்களிறே'
> அறிவொன்றிலு மாயிற்றுக் குறைவுபட
> அறியாதது' [186]

என்பது நயவுரை. அன்னமில்லை, பானமில்லை, செல்வமில்லை என்று தம் குறையுணருவர்களே ஒழிய உலகில் ஒருவரும் தம் அறிவுக் குறைபாட்டை உணருவதில்லை என்பது பிள்ளையின் தெளிவுரையாகும்.

அடைமொழி :

அடைமொழிகளில் அரிய நயங்கள் பொதிந்திருப்பதை யும் நம்பிள்ளை உணர்த்திச் செல்வர். 'செரு வொண்பூம் பொழில்' [187] என்று பொழிலுக்குச் 'செரு' என்ற அடை சேரும்படியை நயமாகப் பொருந்தவிடுகிறார். 'என்னைப் பாராதே பூவை அமைந்திருக்கப் பார்த்தாய் நான் பறிக்க நினைத்த பூவைப் பறித்தாய் அணைப்பதற்கு முன்னே உன் உடம்பு நாறிற்று என்கிறபடியே சீறுபாறு என்று செல்லா நிற்கும்'' என்று உணர்த்துவர். பொழிலுக்கு உள்புக்க தலை வன் தலைவி இருவர் மாட்டும் பூசலை விளைவிக்கும்படியான பொழில் என்று கருத்தாகும்.

வருவித்துரை :

சொற்களை வருவித்து நயமான உரைப் பகுதிகளை விரித்துரைத்துச் செல்லும் பகுதிகள் உள. சிசுபாலனைக் குறிக்கும் ஆழ்வார் 'கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளே வையும்' [188] சிசுபாலன் என்கிறார். பிறர் கேட்டால் அவர் தம் செவிசுடும்படியான கீழ்மை வசவுகள் என்றே பிறர் பொருள் கொள்ளும் படியாக இருக்கிறது, ஆனால் நம்பிள் ளையின் நயவுரை மிகச் சீரியதாய்ச் சிறப்புறுகிறது.

---

186. 4-8, 6 ஈ.

187. தி. வா, மொ. 6 — 1 — 7

188. மேலது 7 — 5 — 3

''பகவன் நிந்தைக்கு ஜீவனம் வைத்துக் கேட்கும் தண்ணி யவர்களும் கூடப்பொறுக்க மாட்டாமை செவிபுதைத்து 'இத்தனை அதிரச் சொன்னாய் இப்படிச் சொல்லப் பெறாய் காண்' என்று சொல்லும்படியான வசவுகளே வைகை'',[189]

உலகியல்

சில பாசுரங்களின் விளக்கங்களில் நம்பிள்ளையின் உலகியல் அனுபவம் நயமிக்க உரைவளமாக மிளிருகிறது. பிறருக்குத் தோன்றாத புதுவதான பொருள் அவர்க்குப்படுகிறது. அப்பொருளைப் பதிகத்தின் பிண்டப் பொருளுக்கு ஏற்குமாறு அமைக்க விரிவையும் அஞ்சாது எழுதுவர்.

நண்ணாதார் முறுவலிப்பவில் *(4—9)* ஆழ்வார் உலகியற் கொடும்பாடுகளை எடுத்துக் கூறித் தம்மைத் திருவடியிற் சேர்ப்பிக்குமாறு இறைவனை வேண்டுகிறார். அங்கு,

மறுக்கி வல்வலைப்படுத்திக் குமைத்திட்டுக் கொன்றுண்பர்
அறப்பொருளை அறிந்தோரார் இவை என்ன உலகியற்கை[190]

என்று வியக்கிறார். பொதுவாக, 'விலங்குகளை வலையகப் படுத்தித் துன்புறுத்திக் கொன்று உண்பர், அவர் தாமும் அறத்தினை ஓராதார்' என்றே பொருள் கொள்ளக் கிடக்கிறது. இதனினும் நுண்ணியதாக நயம் தோய்ந்த உரையை ஈட்டிற் காண்கிறோம். கிராமத்தில் தலைவரானர் சிலர் தம்மை நம்பிப் பொருளை ஒப்படைத்த ஒன்றுமறியாச்சாதுக்களை எங்ஙனம் மோசடி செய்து இறுதியில் அவர் தம்மையே அஞ்சாது கொலை செய்யும் கொடியோர்கள் என்பதை இவ்வடிகளுக்கு விளக்கமாக்குகிறார்.

## பாடபேதம்

மூல நூல்களில் பாடபேதங்களைப் பெருக விடாது பேணிக்காத்த பெருமை உரையாசிரியர்களுக்கு உண்டு. ''ஒரு பாடத்தை மூலத்தில் தழுவிக் கொண்டு உரைவரைவர்; மாறு

189. 7 — 5 — 3 ஈ
190. தி. வா. மொ, 4 — 9 — 6

பாடங்கள் இருக்கு மேல் உரையிடைக் காட்டுவர். நல்ல பாடங்களுக்கும் இது உரையெனவரைவர். அல்ல பாடங்களா யின் இப் பாடம் சரியன்று என மறுத்து ஒதுக்குவர்'[191] என்று வ.சுப.மாணிக்கனார் பொதுவாகக் கூறியது நம் பிள்ளைக்கு முற்றிலும் பொருந்தும்.

உருமாய்வு :-

பாடபேதங்கள் பெருகிச் சென்றால் மூலநூல் 'உருமாயும்' என்பது நம்பிள்ளையின் கொள்கை. வாய்மொழியாகச் செல்லும் மூலநூலில் விளைவன 'பாடபேதம்' என்பர் அவர். மேலும் அது எழுத்து வடிவம் எய்துகிற போது 'லேகக தோஷம்' என்னும் ஏடெழுதுவோரின் எழுத்துக்குற்றம் ஏற்படும் என்றும் பிள்ளை குறிப்பிடுகிறார்.[192] இவற்றை விரிவாக அண்மைக் காலத்து மூலபாட ஆய்வியலார் ஆராய்ந்துள்ளனர்.

வலிந்துமாற்றம் :-

மேலும், மூலத்தில் வேண்டுமென்றே சில மாறுதல்களைச் செய்து பாடபேதத்தை உண்டாக்குவதும் உண்டு. சுகாத்தியர் (Scott) என்ற பாதிரியார் திருக்குறளில் வலிந்து செய்த பிழை கள் இதற்கு எடுத்துக் காட்டாகும்.[193] விரும்புகின்ற பொருட் பேற்றிற்காகச் சொல்லை மாற்றிப் பாடபேதம் விளைவிப் பதை நம்பிள்ளை வன்மையாகக் கண்டிக்கிறார்.

'தவம் புரிந்துயர்ந்த மாமுனி கொணர்ந்த கங்கை'[194] என்று திருமங்கைமன்னன் கங்கையாற்றினைச் சிறப்பிக்கிறார். 'பகீரத முனிவனால் கொண்டுவரப்பட்ட கங்கை' என்று பொருள் கூறலாம். ஆயினும் 'தவம் புரிந்துயர்ந்த' என்ற சொல் நலத்தைக் கருத்திற் கொண்டு 'விசுவாமித்திரனால் (இராம இலக்குவரை) தன் கரைமீது கொண்டுவரப்பெற்ற கங்கை' என்று பிள்ளை பொருள் பணித்தார். இப்படிப் பொருள் கொள்வது நலிந்து கோடலாம் என்று எண்ணிய

---

191. வ. சுப. மாணிக்கம், கம்பர். 1972 ப. 19
192. 1—9—8 ஈ ஏடு எழுதுவோரால் விளையும் பிழைகள் பற்றிப் பார்க்க: மு. சண்முகம்பிள்ளை, திருக்குறள் யாப்பு [அமைதியும் பாடவேறுபாடும் 1971, பக் 102, 103.
193. ஆ. விநாயகமூர்த்தி, மூலபாட ஆய்வியல், 1973, ப. 33.
194. பெரி. திரு. 1-4.8

பராங்குசதாசர் ''ஜீயா, 'மாமுனி புகன்ற' என்ற பாடபேதத்தைப் பண்ணி, அதனுடைய பிரபாவத்தைப் பிள்ளைகளுக்குச் சொல்லிக் கொண்டு போந்தானிறே, அத்தைச் சொல்லிற்றாகவுமாமே'' என்ன; ''அது நமக்கு பலம் போராது'' என்று பிள்ளை அருளிச் செய்தாராம். "அதாவது உள்ள பாடத்திற்கு நாம் பொருளுரைக்கக் கடமைப் பட்டிருக்கிறோமேயன்றி இல்லாததொரு பாடத்தைக் கற்பிக்க வல்லாமல்லோம்'[195] என்று பிள்ளையின் கருத்தாக அண்ணங்கராசாரியார் விளக்குவர். 'பலம்' என்பதற்குத் 'தகுதி' என்று பொருளாகும்.

நம்பிள்ளை உரையிட்ட பிறகும் திருவாய்மொழி வாய்மொழியாகப் பயிலப்பட்டு வந்ததால் பாடபேதங்கள் மேலும் புகுந்தன, ஒரு பாடலில் 'பண்புடைவேதம்' [196] என்று பாடம் கொண்டு நம்பிள்ளை உரைசெய்தார். ஆனால் 'பண்புரைவேதம்' என்று பாடம் கொணடு அழகியமணவாளப் பெருமாள் நாயனார் ஆசாரிய ஹிருதயத்தில் சூத்திரித்தார். ''பண்புடைவேதம் என்றொழிய பண்புரைவேதம் என்ற பாடம் வியாக்கியானங்களில் கண்ட தில்லையேயாகிலும் ஆப்தகமரான இவர் இப்பிரபந்தத்திலே இப்படி அருளிச் செய்கையாலே இப்படியும் கொள்ளவேணும்'' [196அ] என்று தம் கருத்கை மணவாளமாமுனிகள் வெளியிடுகிறார். ஆயினும் பிள்ளையின் உரை கொண்டு உள்ள பாடத்தை அறுதியிட முடிகிறது.

**பழையபாடம்:-**

'எரியே பவளக்குன்றே'[197] என்பது இன்றைய பாடம். 'எரியேய்ந்த பவளக்குன்று போலேயிருக்கை' என்ற ஈட்டினால் 'எரியேய் பவளக்குன்றே' என்ற பழைய பாடம் கிடைக்கிறது.

**வடிவவேறுபாடு :-**

மேலும் உரை விளக்கங்களால் சொல்லின் வடிவவேறுபாடும் அறியக்கிடக்கின்றது.

முந்நீர் /முன்னீர்[198] என்று இரண்டு மாறுபாடுகளைக் கருத்திற் கொண்டு இரு வேறு விளக்கங்கள் வரைந்திருக்கிறார்.

---

195. பெ. வா. பி. வியா. பெரி. திரு. 1 . 4 - 8
196. தி. வா. மொ. 6 - 6 - 5;
197. (அ) ம. மா. வியா., ஆசார்யஹிருதயம், சூ. 50
198. மேலது 3 - 2 - 1

நம்பிள்ளை காட்டும் சில பாடபேதங்கள் :-

(1) மதுவார் தண்ணந்துழாயான் :[199]
'வதுவார்' என்ற பாடத்தைக் காட்டி, 'புகைபூவே' என்று முடியும் கீழ்ச் செய்யுளோடு அந்தாதி பொருந்துமாற்றை விளக்குகிறார்.

(2) 'அந்தாமவாழ்முடி' : [200]
"அன்றியே 'வாண்முடி' என்றாய்" என்று வேறொருபாடம் காட்டுகிறார்.
'தேறேலென்னை உன்பொன்னடிச் சேர்த்து'[201]
'தேறேனென்று பாடமானது' என்று வேறொரு பாடம் காட்டுவர்

(3) 'துணங்கை எறிந்து':[202]

துணங்கை என்று முதலிற்பொருள் கொண்டார். உடனே 'மஞ்சட் பொடியைக் கையிலேபிடித்து ஒருவருக் கொருவர் எறிந்து ஆடுவதொன்று உண்டு அத்தைச் சொல் லிற்றாதல்' என்று குறிப்பதால் 'சுணங்கை' என்று வேறு பாடத்தையும் கருத்துட் கொண்டதாகத் தெரிகிறது. சுணம் என்பது சூரணமாக மஞ்சட் பொடியைக் காட்டும்.

இப்படி, வேறுபாடத்தை எடுத்துமொழியாமல் கருத்துட் கொண்டு வேறுபொருளை வரைதல் பிள்ளையின் இயல் பாகும்.[203] இவற்றைக் கூர்ந்து ஆராய்ந்தே அவர் கொண்ட பாடபேதங்களை நிருணயிக்க வேண்டியுள்ளது.

## நகையுரை

**விளக்கம்:-**

தமிழ் இலக்கிய உரையாளிகளில் நகைச் சுவையோடு கருத்துக்களை வெளிப்படுத்தியவர் நம்பிள்ளை ஒருவரே வாய்ப்புக்கிட்டும் போதெல்லாம் பிறரைச் சிரித்து மகிழச் செய் கிறார். வாழ்க்கை இயலைப் பல மூலைகளிலிருந்து உன்னித்து நோக்கியதால், மனித மனங்களின் பல்வகை மாறான போக்கு

199. மேலது 1 - 6 - 2
200. மேலது 2 - 5 - 1
201. தி. வா. மொ. 2 - 9 - 10
202. மேலது 4 - 6 - 7
203. இவை வருமிடங்கள். 8 - 1 - 1ஈ; 8 - 9 - 9ஈ, 10 - 6 - 9 ஈ

களைச் சுட்டிக்காட்டி நகை விருந்து நல்குகிறார். அன்றாட வாழ்க்கையிலிருந்து அரசியற் பேரோலக்க நிகழ்ச்சிகள் வரை ஒன்று தப்பாமல் அத்தனையும் அவர்க்குச் சுவைக்களனாக அமைகின்றன.சிறப்பாகப் பிறசமயக்கொள்கைகளை இகழ்வதில் அவருடை நகைச்சுவையில் நுண்மையும் எள்ளலும் இழை கின்றன. அரசியல் தலைவர்களை எள்ளி நகையாடுவதில் அவர்க்குப் பெருவிருப்பு இருந்தது. |*ஒருநாயகமாய் (4-1) என்ற திருவாய் மொழியில் பேரரசர்களின் இளிவரவுகளையும் ஆரவார வாழ்க்கைகளையும் விரிவாகவே சாடுகிறார். உரை யாசிரியர் மட்டுமன்றி வைணவ சமயத்தின் பெருந்தலைவராக இருந்ததாலும். அக்காலத்துக் கணிகையரின் போலிப் பாசங் களையும் பெண்வழிச் சேர்ந்தவரின் பொய்யுரைகளையும் பட்டறிந்தவர் போல் விரித்துரைத்திருப்பது வியத்தற்குரிய- தாகிறது.[204] இத்தனை அனுபவங்களையும், பாடற்பொருளைப் பிறர் மனங்கொள்ளுமாறு ஏற்கப் பயன்படுத்தியிருக்கிறார்.

## இல்லறம்

பருவங்கடந்த நிலையில் பெருநிதி கைப்பட்டவர்கள் வழி தவறி நுகரும் இன்பத்தின் இழிதகைமையைச் சுட்டி "விழுநிதி யும் வண்டார்பூங்குழலாரும் மனையொழிய உயிர் மாய்தல் கண்டாற்றேன்"[205] என்பர் ஆழ்வார். இதன் விரிவுரையில் நகைச்சுவையோடு ஒரு இரக்கவுணர்வையும் சேர்த்து விடு கிறார்:-

> "[விழுநிதியும்] நினைவின்றிக்கே இருக்கச் செய்தே சருகிவை திரளுமாபோலே சீரிய நிதி வாராக் கை புகுருமே; அதுக்குப் போக்கடி காணாமையாலே செய்வ தறியாமை அத்தையிட்டு ஒரு ஸ்த்ரீயை ஸ்வீகரிக்கும். அவள் தான் - வண்டார் பூங்குழலாளாயிற்று. இவள் செவ்வி வண்டேபுஜித்துப் போமித்தனை போக்கித் தான் புஜிக்க மாட்டான். போகயோக்யதை யில்லாத பருவத்திலேயாயிற்று ஸ்வீகரிப்பது [மனையொழிய] அவளுக்கும் தனக்கும் ஏகாந்தமாக அனுபவிக்கைக்குத் தன் இயற்றி எல்லாம் கொண்டு பல நிலமாக அகத்தை

---

204. தி. வா. மொ. 4.9
205. மேலது 4-9-3

எடுக்கும் [உயிர் மாய்தல்] இவை குறியழியா-
திருக்க, இவளைக் கூட்டோடே கொடுத்து, இப்படிப்
பாரித்த தான் முடிந்து கொடு நிற்கும்.''[206]

*கொண்ட பெண்டிர் (9—1) என்ற திருவாய்மொழியி-லும் நம்பிள்ளைக்கு நகைச்சுவையுடன் உண்மைகளை வெளிப்-படுத்தநல்வாய்ப்புக்கிட்டுகிறது.பொருட்பெண்டிரின்பொய்ம்மை முயக்கத்தில் விழுந்துபடுவோரின் நிலையை ஆழ்வார்,

சதுரம் என்று தம்மைத்தாமே சம்மதித்து இன்மொழியார்
மதுரபோகம் துற்றவரே வைகி மற்றொன்று உறுவர்[207]

என்று வருணிக்கிறார். நம்பிள்ளையின் விளக்கமின்றேல்'வைகி மற்றொன்றுறுவர்' என்ற தொடரின் கருத்து ஆழத்தைக் காண முடியாது, பிள்ளைதரும் விளக்கம் :

'' (வைகிமற்றொன்றுறுவர்) போகத்துக்குப் பாங்கான யௌவனமும் அதுக்குக் கைம்முதலான த்ரவ்யமும் போமே; பின்னையும் ஆசைமாறாதே; அவ்வோ இடங்களி-லே போயிருக்கும் வருவார்க்கும் விரோதியாய்; முற்-பட, மனிச்சிலே நாலிரண்டு பண்ணை ''போகலாகா-தோ'' என்பர்களே; ''போகிறோம், போகிறோம்' என்றிருக்குமே, போகாதே; பின்னை வெள்ளாட்டியை யிட்டுப் பரிபவிப்பர்கள்; அதுக்கும் போகானே;பின்னை யாணையிட்டு எழுப்பிப் பார்ப்பார்கள்; அதுக்கும் எழுந்திரான்; பின்னைக் காலைப்பற்றி யிழுப்பர்கள்; இவன் தூணைக்கட்டிக் கொள்ளும்; இப்படியால் அவர் களாலே பரிபூதராவார்கள். விபாகத்தில் பிறக்கும் பரி பவத்தை அநுஸந்தித்து வெறுத்து, அது தம் வாயா-லருளிச் செய்ய மாட்டாமையாலே 'மற்றொன்று' என்கிறார்.''[208]

உலகியல் :-

சில நகைச்சுவையுரைகள் தனித்துணுக்குகளாக அமைகின் றன. அவை அக்கால உரையாடல்களில் மக்களிடைப் பயின்ற வையாய்த் தோன்றுகின்றன. அவற்றுள் 'செருப்பு வைத்துத் திருவடி தொழுததை' மூன்றிடங்களில் காட்டுகிறார்.[209]

---

206. 4-9-3 ஈ
207. தி. வா. மொ. 9-1-5
208. 9-1-5 ஈ
209. 8-6.5 ஈ; 4-8-0 ஈ; 2-6-2 ஈ

'கோயில் கொண்டான் தன் திருக்கடித்தானத்தைக்
கோயில் கொண்டான் அதனோடும் என்நெஞ்சகம்'[210]

என்ற பாடலில் இறைவன் தானுறையும் திருப்பதியோடுகூட ஆழ்வார் நெஞ்சகத்துட் புகுந்தான் என்று தெரிவிக்கப்படுகிறது. திருப்பதியைப் புறமேவிட்டுத் தனியே ஆழ்வார் அகம் புகுந்தால் முழுச்சிந்தனையும் ஆழ்வாரிடத்துத் தங்காது; இடையிடையே திருப்பதியின்பாற் சென்றுவிடும். அதனால் திருக்கடித் தானத்தோடும் புகுந்தான். 'அதனோடும்' என்றதுக்குக் கருத்தாக "செருப்பு வைத்துத் திருவடி தொழுவாரைப் போலேயாக வொண்ணாது என்று திருக்கடித் தானத்தோடே கூட வந்து என் நெஞ்சிலே புகுந்தருளினான்" என்று விளக்குவர் நம்பிள்ளை. செருப்பைக் கோயிற் புறத்திலே விட்டு இறைவனைத் திருவடி தொழச்சென்றான் ஒருவன்; அவன் நினைவு ஒருபுறம் அதின்மேற் படிந்திருந்தது. அது தொலைந்து போமோ என்ற அச்சம் அதற்குக் காரணம். அதனால் 'தீர்த்தம் தந்தருள்க' என்று சொல்ல நினைத்த அவன் மறந்து 'செருப்புத் தந்தருள்க' என்று வேண்டினானாம். அது நகைப்புக்கு இடனாயிற்று. இத்தகைய நிகழ்ச்சிகள் இன்றும் பொருத்தமாகவே உள்ளது. இது போன்றே 'மடம் மெழுகுவார் ஆர்?'[211] 'மோருள்ளதனையும் சோறோ'[212] என்ற நகைச் சுவைத் துணுக்குகள் நம்பிள்ளை உரையை அணி செய்கின்றன.

ஈர்ங்கை விதிராத உலோபிகளைப்பற்றிய சுவைச் செய்திகளைப் பலரும் சொல்லி வருவதுண்டு. ஆனால் நம்பிள்ளையின் குறிப்பு நகைச்சுவையோடு அக்கால அரசியல் நிலையையும் காட்டுகிறது :-

> "ஒருத்தனை ராஜத்ரோஹி என்று கையையும் காலையும் தறிக்க, இவனை வினவப் புகவந்தவர்கள் 'இப்படிப்பட்ட-தாகாதே' என்ன, 'ஆயிரம் ஐந்நூறு என்று சில காசுதா' என்னாதே இவ்வளவோடே போயிற்று உங்கள் அனுக்ரகமிறே' என்றானாம்"[213]

கையிற் சிறிது பொருள் சேர்ந்தவாறே பிச்சை எடுத்தவனும் எப்படி மாறுகிறான் என்பதைச் சுவையுடன் விளக்கு

210. தி. வா. மொ. 8 . 6 - 5
211. 6 - 2 . 11 ஈ
212. 4 - 6 . 0 ஈ
213. 4 . 9 . 1 ஈ

கிறார் பிள்ளை:-

> "முன்பு இரந்துண்டு திரிந்தவன் நாழி அரிசி பெற்று ஜீவிக்கப் புக்கவாறே ஒரு வெள்ளாட்டியையும் சம்பாதித்து 'முதலியார்' என்னவும் பண்ணி அடிசிலுண்ணா நின்றார்' என்னவும் பண்ணும்"[214]

பிறசமயிகளைக்குறித்து :-

பிற கடவுளர் வலிமை யற்றவர் என்பதைக் காட்டவிரும்பி 'அய்யன் பாழியிலுள்ள (மண்) யானை போருக்கு உரித்தானால், அப்போது அவற்றிற்கும் வலிமை உள்ளதாம்' என்று உணர்த்துவர்.[215] 'சீமான்' என்ற அடைமொழி திருமாலுக்கே உரித்தாயிருக்கப் பிற தேவர்களையும் அதனையிட்டு வழங்குவதைக் கண்டு 'மாம்பழத்தோடு ஒரு தொடர்புமின்றிக்கே யிருக்கச் செய்தே அப்பேரை (மாம்பழ உண்ணி) தரிக்குமாபோலேயிறே இவனை யொழியச் சீமான் என்னும் பேரைத் தரிக்கிறவர்கள்[216] என்று எள்ளுகிறார்.

அரசவாழ்வு :

அரசர்களின் வாழ்ச்சியையும் வீழ்ச்சியையும் ஒருங்கே கண்டவர் நம்பிள்ளை. ஆதலால் அவருடைய பட்டறிவுரை நகைச்சுவையிலே தோய்ந்து வெளிவரும்போது செல்வ நிலையாமையை நன்கு புரிந்து கொள்ளமுடிகிறது. ஒரு நாயகமாய் நெடுநாள் உலகை ஒரு குடைக்கீழ் ஆண்ட மாமன்னர்கள் 'கருநாய் கவர்ந்த காலராகிச் சிதைகிய பானையருமாகி இம்மையிலே பிச்சைதாம் கொள்வர்'[217] என்று ஆழ்வார் அறிவுறுத்துகிறார். கருநாய் கவர்ந்ததற்குக் காரணத்தையும் பிச்சைபுக்க இளிவரவுகளையும் நம்பிள்ளை பின்வருமாறு விரித்துரைப்பார்.

> "இப்படி நெடுநாள் மதிப்போடே ஜீவித்துப் போந்தவன் 'எளிமைப் பட்டு ஜீவிக்கிறதென்! ஒரு பட்டினி விடுவோம்' என்றிருக்க மாட்டானே. ஜீவிக்கையில் உண்டான நசையாலே பிக்ஷை பண்ணப் பார்க்கும்;

214. 4.1-7 ஈ
215. 1-1-5 ஈ
216. 1-5.6 ஈ; 10-2.6 ஈ
217. தி. வா. மொ. 4-1.1

முன்பு குறைவற ஜீவித்துப் போந்தவனாகையாலே, பலர்காண வெளியில் புறப்படமாட்டானே; நிலா நாளில் இருட்டுப்புரைகளிலும் இருட்டுநாளிலுமா யிற்றுப் புறப்படுவது; இருள் ஓரிடத்திலே திரண்டாற் போலே கறுத்தநாய் கிடக்கும்; அதறியாதே அவற் றின் வாயிலே காலையிடும்; அவை கடிக்கும் ... 'வீரக்க ழலிட்டகால்' என்றிறே முன் நிரூபிப்பது; இப்போது 'நாய் கடித்தகால்' என்றாயிற்றுச் சொல்லுவது ... கண்டவிடம் எங்கும் பொளிந்து உபயோக யோக்ய மன்றிக்கே பொகட்டுக் கிடந்தது ஒன்றை எடுத்துக் கொள்ளும். முன்பு பொற்கலத்தில் ஜீவித்தவன் இப் போது ஒரு புத்தோடு கிடையாதபடியாயிற்று. இட்டது உண்டாகிலும் ஒரு மூலையிலே கீழே போகும் படியாயிற்று இருப்பது ... முன்பு பச்சை கொண்டு வந்தவர்கள் ஓராண்டு ஆறுமாசமும் உள்ளும் புகப் பெறாதே நின்று உலருமித்தனையிறே; அதுக்கும் போர இப்போது தடையற்று இருந்ததே குடியாகக் காணும்படியாக ... முன்பு ராஜாக்களுக்கு ராஜ்யம் வழங்கினானாயிறே போருவது. இப்போது ஒரு பிக்ஷை மாத்திரமேயாயிற்று இவன் அபேக்ஷிப்பது ... முன்பு ராஜாக்கள் கொண்டு வந்த பச்சை ஆளிட்டிறே வாங்குவது, சிலரிடக் கொண்டார் ஆகாமைக்கு. இப் போது தாம் கொள்வர்.''[218]

218. 4.1.1 ஈ

# இயல் 2 : நம்பிள்ளை நடைத்திறன்

## மணிப்பிரவாளம்

வடமொழி விரவிய தமிழ் உரைநடையில் ஈடு எழுதப்பட்டிருக்கிறது. இதனை 'மணிப்பிரவாளம்' என்று குறிப்பிடுவர். அகநானூற்றின் இடை நூற்றெண்பது பாடல்கள் 'மணிமிடை பவளம்' என்று பெயரிடப்பட்டிருக்கிறது; சொல்லும் பொருளும் ஒருங்கியைவதால் அங்ஙனம் அழைக்கப்பட்டது. வடமொழியும் தமிழும் அப்படியே ஒரு சமனாகக் கலந்து இயைவதால் மணிப்பிரவாளம் என்று பெயர்பெற்றது. மணியும் பவளமும் சேர்ந்தது காட்சிக்கு இன்பம் பயக்குமாப்போலே, செந்தமிழும் வடமொழியும் விரவிய மணிப்பிரவாளத்தில் வல்லோசை மெல்லோசைகள் இணைந்து செவியின்பம் பயக்கின்றன என்பர்.[1] மணிப்பிரவாளத்தைப் பெரிதும் பயன்படுத்திய வைணவ உரையாசிரியர்கள் அக்குறியீட்டுச் சொல்லை யாண்டும் வழங்கிற்றிலர். மணிப்பிரவாளத்தை ஒரு தனியான மொழியாகக் கருதுகிறார் ஸ்ரீ உ. வே. பி. ப அண்ணங்கராசாரியார்.[2] வடமொழி அறிஞர்கள் மணிப்பிரவாளத்தை வடமொழிக்குரியதாக ஒப்புக் கொள்வதில்லை. இம்மொழி நடையை திவ்வியப் பிரபந்த உரையாசிரியர்கள் தேர்ந்து கொள்ள யாது காரணம் என அறிதல் வேண்டும். மணிப்பிரவாளம் எழுதிய ஆசிரியர்கள் செந்தமிழ் வல்லுநர்கள்; சிலர் தனித்தமிழில் செய்யுள் நூல்கள் இயற்றியுள்ளனர். ஆனால் உரைநடைக்கு மட்டுமே மணிப்பிரவாளத்தைத் தழுவிக் கொண்டனர். அவர்கள் தாமாகப் புதுவதாக இந்நடையைப் படைக்கவில்லை. அவர்கள் காலத்தில் மணிப்பிரவாளம் தமிழகத்தில் ஓரளவு செல்வாக்குப் பெற்றிருந்தது. கி. பி. நான்கு ஐந்து நூற்றாண்டுகளிலேயே சமணர்களே மணிப்பிரவாளத்தைப் படைத்துக் கொண்டனர்.[3] தமது நோக்கங்களை முழுதும் நிறைவேற்றிக் கொள்ள அம்மொழி நடை வாய்ப்பு அளித்தமையால் திவ்வியப்பிரபந்த உரையாசிரியர்கள் அதனைத் தேர்ந்து எடுத்தனர்.

---

1. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியார், ''மணிப்பிரவாளம்'' செந்தமிழ், தொகுதி 12, பகுதி 12, 1914.
2. பி. ப. அண்ணங்கராசாரியார், ''மணிப்ரவாளம்'', ஸ்ரீராமாநுஜன், 325 ப, 18.
3. ஏ. வி. சுப்பிரமணியஅய்யர், 'தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி, 1971, ப. 18

சங்க காலத்தில் சிறுவரவிற்றாக வடமொழி தமிழிற் கலந்தது. அவற்றைத் தற்சமமாகவும் தற்பவமாகவுமே வழங்கினர். மணிமேகலையில் இக்கலப்பு மிக்க வலிமையுடன் வாழ்வு பெற்றது. தவத் திறம்பூண்டு தருமம் கேட்ட காதையில் அளவை நூற்கருத்துக்களைக் கூறும்போது மணிப்பிரவாளம் தழுவப்பட்டுள்ளது. உரை வளர்ச்சிக்காலத்தில் சமயப்பற்றுள்ளவர்கள் நூல் செய்யத் தொடங்கும்போது இந்த நடை பெரிதும் போற்றப்பட்டது. தமிழகத்தில் சமண பவுத்தர்களே இம்மொழி நடையைப் பரப்பினர். வைதிகர்களை எதிர்க்க நேரிட்டதால் வடமொழியை மிகப்பேரளவில் கலந்து கொண்டனர். அறிவாளிகளை இந்நடை ஈர்க்கத் தொடங்கியது. வீரசோழியம் போன்ற நூல்களில் இந்நடைக்கு இலக்கணம் காணப்பட்டது.

உபய வேதாந்தம்:

ஆழ்வாரின் அருளிச் செயலை 'திராவிட வேதம்' என்று நாதமுனிகள் வைதிகர்களிடையே அறிமுகப்படுத்தினார். வடமொழி வேதத்தோடு திராவிட வேதத்தையும் ஒரு நீராகக் கற்கும் வேட்கையினை நாதமுனிகளின் திருப்பேரனாரான ஆளவந்தார் அவ்வைதிகரிடையே எழுப்பினார். ஆழ்வாருடைய கருத்துக்களை வடமொழி நூலாகச் செய்து வடமொழிப் பேரறிஞர்களை அருளிச் செயலைக் கற்கத் தூண்டினார். ஆளவந்தாரை அடுத்து இராமானுசர் ஆழ்வாருடைய அருளிச்செயல்களை இதத்தாயாகி வளர்த்தார். வேதாந்த சூத்திர வாக்கியங்களை ஒருங்க விடுவதற்குத் திருவாய்மொழியைக் கருவிநூலாகக் கொண்டார். அதனையடுத்து வடமொழியைப் போன்றே தமிழும் அனாதியான மொழி என்ற கொள்கையை உருவாக்கி வலுவாக்கினர் வைணவ ஆசாரியர்கள்.[4] தமிழ் மொழி ஒன்றே கொண்டு திருவாய்மொழியை வெறுத்தவர்களை 'அறிவுகேடர்' என்று இகழ்ந்து நோக்கினர். அவர்களை வைதிகர்கள் என்றே ஒப்புக் கொள்ள மறுத்தனர்[5] ஆதலால் வைணவ சமயத்தைத் தழுவிய வைதிகர்கள் வடமொழி மறையோடு தென்மொழி மறையாகிய திருவாய்மொழியையும் ஓதவும் பொருள்உணரவும்

4. ''செந்நிறத்த தமிழோசை என்கையாலே ஆகஸ்த்யமும் அநாதி'' என்பர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்-ஆசார்ய ஹிருதயம், சூ. 41.

5. ம.பி (1)

தலைப்பட்டனர். தலைப்பட்டதின் விளைவாக, தெளியாத மறை நிலங்கள் தெளிவாகத் தொடங்கின[6] இராமாநுசரின் சமய நெறி 'உபயவேதாந்தம்' என்ற இருகால் கொண்டு இயங்கியது. உபய வேதாந்தம் என்றால், 'உபய (இரு) மொழிகளான வடமொழி தென்மொழிகளில் அமைந்த இரு வேதங்களின் ஒரு முடிபு' என்று பொருள்படும். வைணவ வைதிகர்கள் தம்மை 'உபய வேதாந்திகள்' என்று அழைத்துக்கொண்டு பெருமைப்பட்டனர். இந்த உபயவேதாந்தக் கொள்கையின் விளைவாக இருமொழிக்கலப்பான மணிப்பிரவாளம் வைதிகர் களிடையில் செல்வாக்குப் பெற்றது. இரு மறைமுடிவுக் கருத் துக்களை எளிதாகத் தங்கு தடையின்றி வெளிப்படுத்த மணிப் பிரவாளம் அவர்கள் கைகளில் சிறந்த கருவியாகப் பயன்பட் டது; வைணவ சமயத்தைத் தழுவிய பல்வகைச் சமுதாயப் பிரிவினருக்கும் அருளிச் செயற்கருத்துக்களோடு வேததாற்பரி யங்களையும் எடுத்துமொழிவதற்கு இக்கலப்பு மொழியை அவர் கள் விரும்பினார்கள். சாத்திரங்கள் மற்றும் தருக்கம் முதலிய வற்றின் குறியீடுகளை மொழி பெயர்த்துக்கொள்ள வேண்டிய இடர்ப்பாட்டை அவர்கள் விரும்பவில்லை. மேலும் இக்கலப்பு மொழியால் கற்றோர்க்கும் மற்றோர்க்கும் தம் சமயக்கருத்துக் களை நன்கு வெளியிடுவதற்குரிய வாய்ப்பைப் பெற்றனர். இத் தகைய சூழலில் அவர்களுக்குப் பயன்பட்டதால் மணிப்பிரவா ளத்தை 'சூழ்நிலைமொழி' (Situational Language) என்று கருத லாம்.[7] உபய வேதாந்தக் கொள்கைகளை உபதேசிக்கும் சமயத் திலும் நூலாக எழுதும் சமயத்திலும் இது பயன்பட்டது. ' உபய வேதாந்தப் பிரவர்த்தக ஆசாரியர்கள் என்று நம் ஆசாரியர்கள் கொண்ட சிறப்புப் பெயரானது இத்தகைய மணிப்பிரவாள நூல்களினாலேயே திண்மை பெறுகின்றது'' என்று இதனை ஸ்ரீ உ. வே. பி ப. அண்ணங்கராசாரியார் சுட்டிக்காட்டுவர்,[8] மணிப்பிரவாளத்தைத் தழுவியதற்கு வேறொரு காரணமும் கூறப்படுகிறது. 'அந்தமிழின்பப் பாவினை அவ்வடமொழியை

---

6. 'செய்யதமிழ்மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே' என்பர் வேதாந்த தேசிகர். —தேசிகப்ரபந்தம், அதிகார ஸங்கிரகம், 1.

7. K. K. Venkatachari. Sri Vaishnava Manipravala, 1978 P. 40.

8. பி. ப. அண்ணங்கராசாரியர், 62 உபந்நியாசமாலை, 1953, ப 8

என்றும் 'செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி' என்றும் கூறுகிறபடியே இறைவன் இருமொழிவடிவினன் ஆதலின் அவ் விருமொழிக்கலப்பிலேயே தமிழ் மறைக்கு உரை எழுதலாயி னர் என்பது அக்காரணம்.[9]

திவ்வியப் பிரபந்த உரையாசிரியர்களே மணிப்பிரவாள நடையை இனிமைப்படுத்தினர்; ஒழுங்குபடுத்தினர். வேத உப நிடதங்கள், ஸ்மிருதிகள், இதிகாச புராணங்கள் ஆகியவற்றி லிருந்து ஏராளமான மேற்கோள்களை இடையிட்டு எழுது வதற்கு மணிப்பிரவாளமே அவர்களுக்கு வாய்ப்பாக இருந் தது. உபாயஉபேய பாவம், கார்யகாரண பாவம், சாமானா திகரண்யம், புருஷகாரம் முதலிய சொற்களுக்கு ஏற்ற வழக் குச் சொற்கள் கிடைப்பது அரிதாயிருந்ததால், அவற்றை அப்படியே ஆளுவதற்கும் இந்நடையே வாய்ப்பாக இருந்தது, அது போலவே கூடலிழைத்தல், மடல் பல்லாண்டு, செங்கீரை, சப்பாணி, உந்திபறத்தல் முதலிய சொற்களுக்கும் அருளிச் செயலில் வரும் பிற தமிழ் அகப்பொருள் மரபுகளுக்கும் நேரான வடசொற்குறியீடுகள் இல்லாததாலும் அவற்றையும் ஒருசேரப் பயன்படுத்திக் கொள்ள மணிப்பிரவாளமே அவர் களுக்குக் கைகண்ட மருந்தாக இருந்தது. வடமொழிப் பெயர்ச் சொற்களையே அவர்கள் பெரிதும் பயன்படுத்தினர். அவற்றைத் தமிழ்ஒலிப்படுத்தாது அப்படியே ஆண்டனர். பல பெயர்ச் சொற்கள் சேர்ந்த தொகைச் சொற்களையும் தமிழ் வினையெச்ச விகுதி சேர்த்து எழுதினர். 'அகிலஹேய ப்ரத்யநீகனாய்', 'நித்யமுக்தாநுபாவ்யனாய்', 'ஸமஸ்த கல் யாண குணாத்மகனாய்' என்று வரும் தொடர்களைக் காண்க. இடையிடையே வடசொற்களைத் தம் ஓசை வழுவாது பயன் படுத்தினாலும் மணிப்பிரவாள உரைநடையினைத் தமிழ்த் தொடரியல் இலக்கணம் வழுவாது எழுதியுள்ளது குறிப்பிடத்தக்கது. இதனால் ஒரு பெரும் பயன் விளைந்தது. வடமொழியிலக்கண அறிவு பெறாதவரும் வடசொற்களை மட்டும் அறிந்தாலே போதும், அவர்களால் எளிதில் மணிப் பிரவாள உரைநடையைப் புரிந்து கொள்ள முடிந்தது. அதற் கும் வடசொற்கள் அனைத்தையும் தெரிந்து கொள்ள வேண்-

---

9. பு. ரா. புருஷோத்தம நாயுடு (மொ. ஆ), ஈட்டின் தமிழாக்கம், முதற்பத்து, முகவுரை, ப 3

டாம். பழக்கத்திலேயிருந்த சில நூறு சொற்களே மீண்டும் மீண்டும் மணிப்பிரவாள உரைநடையில் இடம் பெற்றன. இவற்றை மட்டும் தொகுத்து அகரவரிசைப்படுத்திப் பொருளுடன் வெளியிடுவது மணிப்பிரவாள உரை ஆராய்ச்சியாளர்க்குப் பெரிதும் உபகாரப்படும்.

முதன் முதலில் மணிப்பிரவாளத்தில் உரையிட்டவர் திருக்குருகைப் பிரான் பிள்ளான். அதையடுத்து நஞ்சீயரும் பெரியவாச்சான் பிள்ளையும் நம்பிள்ளையும் அவரிட்ட தடத்திற் சென்றனர். இவ்வுரைகளின் வளர்ச்சியில் மணிப்பிரவாள நடையிலும் மாற்றங்கள் தோன்றின. வடசொல் வரவு நிறைந்த மணிப்பிரவாளத்தில் பிள்ளான் ஆறாயிரப்படியை எழுதினார். வடசொற்களின் விழுக்காடு குறைந்து இனிய செந்தமிழ்ச் சொற்களின் மிகுதி தலையெடுப்பதைப் பெரியவாச்சான் பிள்ளையின் மணிப்பிரவாளத்திற் காண முடிகிறது. இறுதியாகத் தோன்றிய ஈட்டில் தமிழ்ச் சொற்களும் தொடர்களுமே பெரும்பான்மையாகி வடசொற்றொடர்கள் குறைந்து விட்டன. மணிப்பிரவாளத்தில் வடசொல் தொடர்களின் ஆட்சி மிகுதியை ஒரு குற்றமாகக் கருதுகிறார் மணவாள மாமுனிகள்[10] அக்குற்றம் சிறிதுமின்றிப் பெரியாழ்வார் திருமொழியில் 400 பாடல்களுக்குத் தாமே உரையிட்டுக் காட்டியவர் அவர்,

சமண பௌத்தத் துறவியரும் மணிப்பிரவாளத்தைக் கையாண்டிருந்தாலும், திவ்வியப்பிரபந்த உரையாசிரியரின் மணிப்பிரவாளம் தனித்தன்மை வாய்ந்தது. "மிகப்பழைய காலத்தில் ஜைன பௌத்தர்களின் மரபிலும் மணிப்பிரவாள நூல்கள் தோன்றியிருப்பதாகச் சில விமர்சகர்கள் சொல்லக் கேட்டிருக்கிறோம். அவற்றில் சாதாரணமான ஸம்ஸ்க்ருத பதங்களும் தமிழ்ச் சொற்களும் கலந்திருக்கக் கூடுமேயல்லாது சுருதிஸ்ம்ருதி இதிஹாஸ புராண வசனங்களும் காவ்ய நாடக அலங்கார சுலோகங்களும் பலவகைத் தமிழ்நூல் மேற்கோள்களும் கலந்து கமழப்ரஸக்தி இராது"[11] என்பர் ஸ்ரீ உ. வே, பி. ப. அண்ணங்கராசாரியர். வைணவர்களின் மணிப்பிரவாள நடையைப் பின்பற்றிச் சில சைவசாத்திர நூலுரைகளும் தோன்றின.

---

10. ம. மா. விபா., முமுக்ஷுப்படி, அவதாரிகை.

11. பி. ப. அண்ணங்கராசாரியார், 11 "மணிப்ரவாளம்", ஸ்ரீராமாநுஜன், 325 ப9,

நம்பிள்ளையின் எளிய தமிழ்நடை

ஈட்டில் பல இடங்களில் இனிய தமிழ்த்தொடர்கள் அணி செய்கின்றன. ஐதிஹ்யங்களும் கதை விளக்கங்களும் வருமிடங்களில் இத்தகைய நடையை நம்பிள்ளை ஆள்கிறார். இது கற்பார் மனத்தில் பக்தி உணர்வை நன்கு ஏற்ற வல்லதாகிறது. அறிவுக் கூர்மைக்கு வேலைதரும்தத்துவக்கூறுகள் இப்பகுதிகளில் இல்லாததால் இங்கெல்லாம் மணிப்பிரவாளம் பின்னடைந்து தமிழ்நடை ஓங்கி நிற்கிறது. ஐதிஹ்யம் ஒன்றை விரித்துரைக்கும் போது ஆளப்படும் எளிய நடைக்கு ஒரு எடுத்துக்காட்டு:

"வடக்கு நின்றும் போரப்பாட வல்லராய் இருப்பார் ஒருத்தர் 'பெருமாளைத்திருவடி தொழவேணும்' என்று வர, ஆழ்வார் திருவரங்கப் பெருமாள் அரையர் தீர்த்தத்தினன்று இரா திருமாலையைப் பாடிச் சமைந்து பெருமாளை மத்தகஜங்களை ஏத்துமா போலேயேத்தி வசமாக்கிக் கணிசங்கொண்டு, 'நாயன்றே, தேவர் திருவடிகளுக்குப் போர நல்லான் ஒருத்தன் எழுநூற்றுக்காதமாறுண்டு தேவரைத் திருவடி தொழவேணும் என்று வருகிறது; இவனை அழைத்துக் கொண்டு ஸம்பாவனை பண்ணியருளவேணும்'' என்ன, பெருமாளும் 'அப்படியே செய்கிறோம்' என்று திருவுள்ளமாய் அருள்பாடிட்டு, திருப்புன்னைக் கீழ் நின்றும் அவர்நின்ற இடத்தளவும் செல்ல நாலுகோல் தரை திருக்கைத்தலத்திலே எழுந்தருளி, விண்ணப்பஞ் செய்வார்களை எல்லாம் அருளப்பாடிட்டு, 'வாரிகோள், இவன் வந்த தூரத்துக்கெல்லாம் போருமோ நாம் இவனுக்குச் செய்த தரம்' என்று திருவுள்ளமானார். இப்படியிறே நம்மிழவுகளும் திருவுள்ளத்திலே பட்டவை எல்லாம் ஆறும்படிக்கீடாக முகம் தந்தருளவல்ல படியும்'[12]

இப்பகுதியில் தடித்த எழுத்துக்களில் உள்ளனவே வடசொற்கள். அவையும் வழக்கத்தில் உள்ளனவாகவே அமைகின்றன.

சில கதைவிரிவுகளில் வரும் தமிழ்நடைக்கு ஒரு சான்று;-

"'நாம் பிறந்து வளருகிற ஊரிலே வேறேயும் ஓர் ஆச்ரயணீய வஸ்து உண்டாகையாவது என்?'

---

12. 5-10-6 ஈ

என்று பொறாமையாலே', 'வாரீகோள், இந்திர
னாகிறான் எவன், கண்டறியாதான் ஒருவனோ !
நமக்கு உபகரிக்கப் புகுகிறான்; ஆனபின்பு
மேகங்களும் வந்து பணியும்படிக்கு ஈடாய்
புல்லும் தண்ணீருமுடைத்தாய்ப் பசுக்களுக்கும்
இடங்கொடுத்துநிற்கிற மலையன்றோ நமக்கெல்லாங்
கடவது' என்ற சொல்ல, இடையராகையாலே
சொல்லிற்றைக் கேட்பார் சிலரே, இனி இவன்தானே
சொன்னவை மறுக்க வொண்ணாதபடியாயிருக்குமே;
'இம்மலையின் முன்னேயிடுங்கோள்' என்ன,
அங்கேகொடுவந்து குவித்தார்கள்
அத்தைத்தான் புக்கிருந்து அமுது செய்தான்''[13]

அரிய மணிப்பிரவாள நடை :

ஈட்டில் தத்துவ விசாரங்கள் செய்யுமிடங்களிலும் புறச் சமயக் கொள்கைகளை எடுத்து மொழியுமிடங்களிலும் வேதாந்த விழுப்பொருளை உள் பொதிந்து நிற்கும் பாடல்களுக்கு உரை யிடுமிடங்களிலும் வடசொற்களும் குறியீடுகளும் விஞ்சி நிற்கும் மணிப்பிரவாளத்தைக் காணலாம்.

''நம் தர்சனத்துக்குத் தத்வங்கள் மூன்று: அவை யாவன சித்தும் அசித்தும் ஈச்வரனும். ப்ரகார ப்ர காரிகள் ஐக்யத்தாலே ஒன்றென்னலாய் ஸ்வரூப பேதத்தாலே பலவென்னலாயிருக்கும். அசித்தாகிறது குணத்ரயாத்மகமாய் நித்யமாய் விபுவாய் ஸதத பரிணாமியாய் ஹேயதயா ஜ்ஞாதவ்யமாயிருக்கும். இப்படியிருக்கிற அசித்திலே போக்யதா புத்தி பண்ணி ஸம்ஸாரத்தை த்ருடமாக்கிக் கொள்ளவேணும் என் றிருக்குமவனுக்கும் ஸர்வேச்வரனை ஆச்ரயிக்க வேணும். இது த்யாஜ்யம் என்னும் ப்ரதிபத்தியுண் டாய் இத்தைக் கழித்துக் கொள்ள வேணும் என்றி ருக்குமவனுக்கும் ஸர்வேச்வரனை ஆச்ரயிக்க வேணும்''[14]

இப்பகுதியில் வேற்றுமைஉருபுகள், வினைஎச்ச விகுதிகள், சில இடைச்சொற்கள் ஆகியவற்றைத் தவிரப் பிறவெல்லாம் வட

13. 5. 10 5ஈ,
14. ம.பி (2)

சொற்களாகவே விழுந்துள்ளன. அவையும் பழக்கச் சொற்களாய் அமையாது கற்றறிந்தோரே அறிந்து கொள்ளும்படி அமைந்துள்ளன.

**செய்யுள்நடை :**

எதுகை மோனைத் தொடைகள் நிறைந்த அடுக்கு நடையான செய்யுள் நடைகளையும் பல இடங்களில் ஈட்டிற் காணலாம், கற்பார் நெஞ்சைப் பிணித்து மனத்திற் பதிந்து கொள்ளும்படியான செய்யுள்நடைகள் வருணனைகளிற் காணப் படுகின்றன.

> ''அதிர்த்துக் கொண்டு புறப்பட்ட போதை அட்ட
> ஹாஸமும் நாமடிக் கொண்ட உதடும் நெற்றியது
> கண்ணும் உச்சியது புருவமுமாய்க் கொண்டு
> தோற்றினபோது பொசுக்கின பன்றிபோலே
> உருகினானாயிற்று பொன்னன் ஆகையாலே'[15]

என்று நரசிங்கப் பிரானுடைய தோற்றத்தை நம்பிள்ளை வருணிக்கிறார்.

**மேற்கோள்நடை :**

மேற்கோள் செய்யுட்களை உரைநடைப் படுத்தி வியாக்கியானத்தின் இடையில் எழுதுவது நம்பிள்ளையின் அரிய நெறியாகும். பரிமேலழகரும் இம்முறையிற் சென்றவரே.

> ''தானொட்டிவந்து என் தனி நெஞ்சை வஞ்சித்து
> ஊனொட்டிநின்று என்னுயிரிற் கலந்தியலு மவனன்
> றோ?''[16]

என்ற தொடர் 'யானொட்டி என்னுள்'[17] என்ற திருவாய்மொழிப் பாடலின் உரைநடையாக்கமாக அமைந்துள்ளது.

**உவமைக்குள் உவமை**

உவமைக்குள் உவமையாகவரும்படி நீண்ட தொடர்களை அடுக்கி எழுதுவதும் நம்பிள்ளையின் வழக்கமாகத் தெரிகிறது.

---

15. 2-8.9 ஈ; 5 10, , ஈ
16. 2—4—8 ஈ
17. தி. வா. மொ. 1.7.7

"... { மடுவின் கரையிலே அரைகுலையத் தலைகுலைய வந்து உள்ளே போய்ப்புக்கு, ஆனையை ஒரு கையாலும் முதலையை ஒரு கையாலுமாக அணைத்தெடுத்துக் கொண்டு கரையிலே ஏறி ... (ப்ரஜையின் வாயிலே முலையைக் கொடுத்து கிரந்தியை சிகித்ஸிக்குமாபோலே) பெரிய பிராட்டியாரும் தானுமாக இரண்டுக்கும் நலிவு வாராமே திருவாழியாலே விடுவித்து சாத்தி-யருளின திருப்பரிவட்டத் தலையைச் சுருட்டி திருப்பவளத்திலே வைத்து அதினுடைய புண்வாயை வேது கொண்டு திருக்கையாலே குளிரஸ்பர்சித்து நின்றாற் போலே } இவரும் 'வலங்கொள் புள்ளுயர்த்தாய்' என்று கூப்பிட்ட ஆர்த்த நாதம் செவிப்பட்டு ......... ஒப்பனை, திவ்யாயுதங்கள் சேர்ந்த சேர்த்தி இவை எல்லாவற்றோடும் வந்து ஸம்ச்லேஷித்து அத்தாலே ஹ்ருஷ்டனாய் க்ருதக்ருத்யனாய் இருககிற இருப்பை அனுபவித்து ... தாம்பெற்ற பேற்றைப் பேசி அனுபவிக்கிறார்",[18]

இந்நீண்ட தொடரில் வரும் சிறப்பு உவமை { } அடைப்பினுள்ளும் அவ் உவமைக்குள் வரும் உவமை ( ) அடைப்பினுள்ளும் வருதல் காண்க.

இடைப்பிறவரல்

சில இடங்களில் நீண்ட தொடர்கள்நிறைந்த வாக்கியத்தில் இடையில் சில சிறு தொடர்கள் தனித்துச் சேர்ந்து கிடக்கின்றன.

"ஆற்றாமை மீதூர்ந்து தனலுப்தனானவன் கிழிச் சீரையைக் கெடுத்தால் அத்தோடு போலியான முடிகளெல்லாம் அவிழ்த்து அவிழ்த்துப் பார்க்குமாபோலே; ('வைப்பாம் மருந்தாம்' என்னும்படியே இவர்க்குச் சேமநிதியிறே அவன் ஆகையாலே) அவனோடு ஸத்ருச பதார்த்தங்களையும் ஸம்பந்தி பதார்த்தங்களையும் அகப்பட அவனாகக் கொண்டு ப்ரமித்துக்கிட்டிப் பார்த்து அவனன்றிக்கே ஒழிந்தால் மீளவும் மாட்டாதே நோவுபட்டுச் செல்லுகிறது"[19]

---

18. 2.5.0 ஈ

19.—4—4—0 ஈ; 7—ஈ—0 ஈ

ஈண்டு ஓர் உவமையில் வாக்கியத்தைத் தொடர்ந்தார்; அதில் 'கிழிச்சீரை' என்பது இறைவனை உணர்த்தும் என்பதற்குப் பிரமாணம் காட்ட நினைவு எழுந்தது. வாக்கியமுடிவளவும் காத்திருக்க மனங்கொள்ளாது இடைப்பிறவரலாக வாக்கியத்தைப் பிளந்து உவமான உவமேயங்களுக்கு ஊடே அதனைச் சேர்த்தெழுதுகிறார்.

சிலேடை நடை

நம்பிள்ளையின் உரையில் சிலேடைகள் மிக இயற்கையாகப் பொலிகின்றன. உரையாளர் வேறு எவரும் இங்ஙனம் பேரளவில் சிலேடைத் தொடர்களைத் தம் உரை நூல்களில் இட்டு எழுதியதில்லை. இது நம்பிள்ளைக்கே அமைந்த தனிச் சிறப்பாகும். இருபொருள் தரும் சொற்களை அவ்விரு பொருளும் கொள்ளுமாறு வாக்கியங்களையிட்டு நயமான கருத்துக்களை வெளியிடுகிறார். அச்சொற்கள் இருமொழிகளிலிருந்தும் எடுக்கப்பட்டுள்ளன.

சான்றுகள் :

(1) ''அடியிலே தொழாமையால் வந்த (குறைவு) தீரும்படி அடியிலே தொழுது (உய்க) என்கிறார்''[20] 'அடி' என்பதைத் தொடக்கம், திருவடிகள் என்ற இருபொருளிலும் ஆள்கின்றார். இதனைச் 'சாடு' என்று அரும்பதகாரர்கள் குறிப்பிடுகின்றனர். இவ்விரு பொருள் சாடுவில் ஒன்று மற்றதிலும் சீரியதாயிருக்கும். அடி, கால், போந்து, படி, இடை, விலங்கு, நூல், ஓதி, கொம்பு, நிறம், முடி, மெய் என்ற தமிழ்ச் சொற்களையும் பக்ஷபாதம், தாரை, ஸ்நேஹம், வ்ருத்தவான், வம்சம் என்ற வட சொற்களையும் பன்முறை சாடுவாகப் பயன்படுத்துகிறார்.

(2) ''(பனிவாடாய்!) காலைப்பிடித்து வேண்டிக் கொள்கிறாள்.''[21] (கால்/காற்று)

(3) ''போந்திருக்கிற நீ''[22] (வந்துஇருக்கும்/பனைமரம்)

(4) ''மாலைக்கண் என்றிருப்பார்க்கு அல்லாதது

20. 1—1—1 ஈ
21. 1—4—4 ஈ
22. 2—1—2 ஈ

எல்லாம் மாலைக் கண்ணாய்த் தோற்றுமிறே"[23] (திருமாலைக் களைகண் மாலைக்கண் நோய்)

(5) "ஆனையின் காலில் விலங்கையிறே வெட்டி விட்டது"[24] (முதலை/தளை)

(6) "இவருடைய பா நல்ல நூலாகை யாலே வான்பட்டாடையாயிற்று"[25] (பனுவல்/நூல்)

(7) "படிகடந்து அவ்வருகு போமவர் அல்லரே"[26] (திருமேனி/வாயிற்படி)

(8) "இவள்தான் ஓதி நல்லளாயிருக்குமே; இவன் ஓதி உணர்ந்தவனாகையாலே கொண்டாடத் தொடங்கினான்"[27] (கூந்தல் / கற்றல்)

வடசொற்சாடுக்கள் :

(1) "இளையபெருமாளுடைய திருவுள்ளத்தில் சிவிட்குத் தாரையை இட்டு ஆற்ற வேண்டிற்றுக் காணும்"[28] (நீரொழுக்கு/வாலிமனைவி)

(2) "இவரைப் போலே அல்லாதார்க்கு ஸ்நேஹ மில்லையே; ஸ்நேஹ முண்டாகிலிறே இவ்விளக்கு ப்ரகாசிப்பது"[29] (பக்தி / தைலம்)

(3) "அவர் வம்சத்துக்குக் கொத்தையாங்காண்"[30] (குலம் / மூங்கில், வில்)

இருமொழிச்சிலேடை

"அவன் அகம் தாஸோஹமிறே"[31] (வீடு / நாள்) இவ் வண்ணம் உரைநடையில் சிலேடைகளைப் புகுத்தி அணி செய் தார். பிள்ளையின் சொல்வளம் இதனால் நன்கு வெளியா கிறது.

---

23. 2.2.2 ஈ
24. 3.5.1 ஈ
25. 4.3.2 ஈ
26. 5.1.1 ஈ
27. 6.2.2 ஈ
28. 1.4.3 ஈ
29. 1.7.5 ஈ
30. 5.4.7 ஈ
31. 2.1.3 ஈ

**சொல்வளம்**

ஓர் உரையாசிரியரின் திறனை, அவர் எழுதிய உரை நெடுக அமைந்து கிடக்கும் சொல்வளம் நன்கு அளந்து காட்டு கிறது, உரையாசிரியர்களின் சொல்வளத்தை எண்ணியும் வகைப் படுத்தியும் வரலாற்றோடு இணைத்தும் ஆய்வுசெய்வது தேவை யாகிறது. இவ்வகை ஆய்வுக்குக் கன்னிக் களன்கள் பல ஈட்டில் உள்ளன. நம்பிள்ளையின் சொல்வளம் இதுகாறும் முழுமையாக ஆய்வு செய்யப்படவில்லை. ஈட்டைத்தவிர நம்பிள்ளையின் பிற உரைகளையும் சேர்த்து ஆய்வு நிகழ்த்த நல்ல வாய்ப்பு உள்ளது.

**வரலாறு :**

பொதுவாக, திவ்வியப் பிரபந்த மணிப்பிரவாள உரை நூல்களில் ஆளப்படும் தமிழ்ச் சொற்களைத் திரட்டும் பணியை அரும்பதவுரைகாரர்கள் தொடங்கி வைத்தனர் என்று கருத லாம். திவ்வியப் பிரபந்த உரைகளின் காலத்திற்கு ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளுக்குப் பின்னர் இப்பணி கால்கோள் கொண் டது. பல அருஞ்சொற்களுக்குப் பிற்காலத்தே பொருள் விளங் குவது அரிதாகலாம் என்று நினைத்தே அரும்பதகாரர்கள் அப் பணியைத் தொடங்கினர். மூல உரைக்குப் பல்வகை விளக்கக் குறிப்புகளை இட்டாலும், அரிய பதங்களுக்குப் பொருள் குறிப்பதே முக்கிய நோக்கு என்பதை 'அரும்பதம்' என்றே அவை சுட்டப்படுவது கொண்டு அறியலாம். பாடல்களின் வரிசையில் அரும்பதங்கள் தனியாக எழுதப்பட்டன, பதிப்பாசி ரியர்கள் அவற்றை ஒவ்வொரு பாடலின் உரைக்கும் கீழே சேர்த்து அச்சிட்டனர். அவற்றிலிருந்து அருஞ்சொற்களைத் திரட்டி அகராதியாகவும் தொகுக்கும் முயற்சியும் நடைபெற்றது. அத்தகைய இரண்டு ஓலைச்சுவடிகள் அரசாங்கக் கையெழுத் துச் சுவடி நிலையத்தின் வாயிலாக 1961ல் அச்சிடப்பட்டுள்ளன. அச்சுவடிகளின் காலத்தைப் பற்றிய குறிப்பொன்றும் பதிப்பா சிரியரால் சொல்லப்படவில்லை. "முதலில், முறையின்றி எழு தத்தொடங்கிப் பின்னர் அகராதி முறை கைக்கொள்ளப்பட்டி ருக்கிறது. ......... உட்பிரிவுகள் புறக்கணிக்கப்பட்டுள்ளன" என்றும் இவ்வளவே அச்சுவடிகளைப்பற்றி அறியப்படும் செய் திகளாகும்.[32] இச்சுவடிகளைப் பதிப்பித்தவர் மேலும் சில

32, தி. ந. க. இராமகிருஷ்ணய்யங்கார், (தொ. ஆ). திவ்வியப்பிரபந்த அகராதி, பதிப்புரை, ப. 3

அரிய சொற்களைத் தாமே அவற்றில் சேர்த்துப் பதிப்பித்துள்ளார். அரிய பதங்களுக்குக் கருத்துப் பொருளும் உள்ளுறை பொருளும் அவற்றில் எழுதப்பட்டுள்ளன. பல சொற்களுக்கு வடமொழியிலேயே பொருள் வரையப்பட்டுள்ளது அவற்றிற்கு நேரான தமிழ்ச்சொற்களைப் பதிப்பாசிரியர் கொடுத்துள்ளார். சில சொற்களுக்கு அவைஆளப்படும் இடம் காட்டப்பட்டுள்ளது.

இந்த நூல் வெளிவந்ததும் திருவரங்கம் பார்த்தசாரதி அய்யங்கார் என்பார் 1963ஆம் ஆண்டு அரிதின் முயன்று அயராது தனிநின்று பாடுபட்டு 'திவ்வியப்பிரபந்த அகராதி' ஒன்றைத் தொகுத்து வெளியிட்டார். இதில் மூலநூலான திவ்வியப்பிரபந்தப் பாடல்களில் வரும் சொற்களே மிகுதியாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அவற்றோடு இடைக்கலந்து வியாக்கியான அருஞ்சொற்களும் வருகின்றன. இவ்விரண்டையும் தனித்தனியே வெளியிடுவதே சாலப் பயனை விளைவிக்கும். தமிழ் லெக்சிகனிலும் வியாக்கியான அருஞ்சொற்கள் பல இடம் பெற்றுள்ளன. எனினும் திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்கள் அனைத்தையும் உள்ளடக்கிய, அருஞ்சொல் அகராதி வெளிவர வேண்டியது அவசியமாகிறது. நம்பிள்ளை ஈட்டில் மட்டும் வருகின்ற அருஞ்சொற்கள் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன.[33]

**ஈட்டு அருஞ்சொற்கள் :-**

ஈட்டில் வரும் அருஞ்சொற்களை ஆராயின் நம்பிள்ளை ஒரு சொற் களஞ்சியம் என்று தோன்றும். அவர் ஆள்கின்ற சொற்கள் அவருடைய பல்வகைத் திறன்களுக்கும் உரைகற்கள். நம்பிள்ளை வாழ்ந்த காலம், அவர் பழகிய இடங்கள், அறிந்த கலைகள், அனைத்தும் அவருடைய சொற்களிலே மின்னுகின்றன. இலக்கியத் தமிழ்ச் சொற்களையே அவர் மேற்கொண்டிருந்தால் செறிவும் நுட்பமும் நூல் வன்மையும் ஆகியனவே வெளிப்பட்டிருக்கும்; ஆனால் நம்பிள்ளை பேச்சு வழக்குகளையும் அன்றைய சொற்களையும் உரை நடையில் ஆண்டிருப்பதால் அவருடைய பல்திற வெளிப்பாடு புலனாகிறது. மேலும் பல்துறை ஆய்வுக் களன்களையும் அது படைத்துத் தருகிறது. நம்பிள்ளையின் சொற்பொழிவுகள் ஏடுபடுத்தப்பட்டதால் விளைந்த பயன் இது. பெரியவாச்சான்பிள்ளை பேருரை நேரடி

33. பார்க்க. பின்னிணைப்பு (8)

யாக எழுதப்பட்டதால் பல்வகைப் பேச்சுவழக்குகள் இடம் பெறவில்லை. ஈட்டையும் இருபத்து நாலாயிரப் படியையும் ஒப்பாய்வு செய்தால் இத்தகைய உண்மைகளைக் காணலாம்.

ஈட்டில் வரும் அருஞ்சொற்களை அரசியல், வணிகஇயல், உழவியல், பொதுவியல் என்று வகைப் படுத்தி ஆராய்தல் தகும். அரசியற் சொற்களே ஈட்டில் பெருவரவாக மலிந்துள் ளன. சோழப் பேரரசின் உயரிய காலப் பகுதியில் வாழ்ந்த வர் பிள்ளை; பேரரசர் பலரையும் திருவரங்கத்திற்கண்டு பழகி யிருக்கும் வாய்ப்புப் பெற்றவர்; அரசியல் அதிகாரிகளும் உரிமைச் சுற்றத்தவரும் அமைச்சர்களும் சாமந்தர்களும் பிள்ளையின் பேரவையில் சொற்பொழிவுகளைக் கேட்டனர். அவர்களிற் பலர் அவருடைய சீடராகவும் ஆகியிருந்தனர். அவர்கள் வாயிலாக அரசியல் நிகழ்ச்சிகள் அத்தனையையும் தெரிந்து வைத்திருந்தார். தம் கண்ணுக்கு முன்னே பேரரசு கள் வீழ்வதையும் எழுவதையும் பார்த்தவர். பல பெரும் போர்களை உடனிருந்து கண்டவர். அதனால் அவருடைய ஈட்டில் போர்க்கலை பற்றிய சொற்கள் நிரம்ப வருகின்றன. வேறு நூல்களில் அங்ஙனம் காண முடியாது.

அரசியல் :

அரசுகளின் போர்ச் செய்திகளான பல சொற்களை ஈடு தருகிறது. வியூகத்தை 'அணி'[34] என்கிறார். அது பேரணி, இளவணி[35] என்று இருபாற் பட்டது: காலாட்படை மட்டும் கொண்டது இளவணி. அரசனே போரில் முன் இறங்கிச் செய்யும் போர் அரசுபோர்.[36] முற்றுகை அடைமதிட்படுத் தல்[37] என்று கூறப்பட்டது. போர்க்களரியில் வீரர்கள் தொடைதட்டி ஆர்ப்பரிப்பது 'அப்புத்தட்டுதல்'.[38] கணை யம்,[39] ஆனைத்தாள்[40] என்பன கோட்டை உறுப்புகள்.

---

34. 5.4,3 ஈ
35. 7.4.1 ஈ
36. 7,4.1 ஈ
37. 3;10.3 ஈ
38. 5.4.7 ஈ
39. 5.4,7 ஈ
40. 6.1.7 ஈ

இராக்காலத்திலும் போர் செய்யும் 'இராப்படை' [41] குறிப் புடப்படுகிறது. தோற்று ஓடுகின்ற படை 'கெடுபடை'. [42] நேர்மையாக நிகழ்கின்ற போர் 'செவ்வைப் பூசல்' [43] போர்க் களத்தில் வீரர்களின் வஞ்சினமொழி 'சேவகம் சொல்லுதல்' [44] என்று குறிப்பிடப் பெறுகிறது. படைத்தொகுதி 'தண்டல்' [45] என்று அழைக்கப்பட்டது' தோற்று ஓடியவர் புகலிடமாக ஒளியும் காடுகளுக்கு 'தாவளம்' [46] என்று பெயர். 'அஞ்சினான் புகலிடம்' [47] என்றும் சொல்லப்பட்டது. சேனையின் முன் பகுதிக்கு 'தூசித்தலை', 'முற்கொழுந்து' 'பூசல் தலை' என்று பெயர்கள். [48] பின்னால் வரும் சேமப்படைக்கு 'பிற்கூழை, என்றும் பெயர். [49] திறனில்லாத கூட்டுப் படைகளை 'பங்களப் படை' [50] என்றனர். சாமந்தர்கள் போர் தொடங்குமுன் செய்யும் சோதனைக்கு 'படைக்குறிகாணுதல்' [51] என்று பெயர். நடுப்போரில் எதிரிப்படைகளைத் தன்வசமாக்கிக் கொள்வது உண்டு. அது 'வினைத்தலையில் படையறுத்தல்' [52] என்று சொல்லப்பட்டது. இத்தகைய போர்க்கலைச் சொற்களையும் ஈட்டிற் காணமுடிகிறது. அந்தப்புரத்துக்குக் 'கோயிற் கட்ட ணம்' [53] என்றும் அரசனுடைய உரிமை மகளிர்க்கு உரிய நிலன்கள் 'படுக்கைப் பற்று' [54] என்றும் நப்பிள்ளை காலத்தில் வழங்கப்பட்டன. சிறைகளைப் பற்றிய பிரிவுகளையும் ஈடு வழங்குகிறது. 'தட்டி' [55] என்பது சிறை. இதில் அழுகுசிறை. [56] அறவைச் சிறை [57] என்றெல்லாம் பிரிவுகள் இருந்தன. கைவிலங்குக்கு 'விடுநகம்' [58] என்பதையும் அரசர்களைச் சிறை செய்தால் அங்கிருக்கும் காவலாளிக்குக் 'கைக் கூட்டன்' [59] என்பதையும் ஈட்டிற்காண்கிறோம்.

---

41. 9.9.1 ஈ
42. 8.4.1 ஈ
43. 4.3.1 ஈ
44. 3.10.4 ஈ
45. 2.6,7 ஈ
46. 4.6,4 ஈ
47. 6.4.5 ஈ
48. 7,3.4 ஈ; 9.9.0 ஈ 7.4.1 ஈ
49, 9.9.0 ஈ
50, 7.3.3 ஈ
51. 3.6.8 ஈ
52. 7.3.4 ஈ
53. 1.9.7 ஈ
54, 1.9.3 ஈ
55. 5.7,1 ஈ
56. 1.2.1 ஈ
57. 1.3.11 ஈ
58. 7.1,1 ஈ
59, 7-10,8 ஈ

அரண்மனைகளில் பழக்கத்திலிருந்த பண்டங்களின் பெயர்கள் நிறைய வந்துள்ளன. அவற்றுள் இரண்டு வரலாற்றாய்வாளர்க்குப் பெரிதும் பயன் படுகின்றன.

**பீங்கான் :-**

சந்தனம் கரைத்து வைக்கும் பீங்கான் கலத்தை நம்பிள்ளைகுறிப்பிடுகிறார். ''ஒரு பீங்கானுக்குட்பட்ட சந்தனபங்கம்' என்பது ஈட்டுத் தொடர்.[60]வேறு தமிழ் நூல்களில் இக்குறிப்பு இல்லை. பீங்கானை முதன்முதலில் தயாரித்துப் பயன்படுத்தியவர்கள் சீனர்களே. சுங்வமிசத்தார் ஆட்சிக்காலத்தில் சீனக்குயவர்கள் விற்பனைக்குரிய வகையில் பீங்கான் பண்டங்களைத் தயாரித்தனர். யுவன் மிங் வமிச ஆட்சிக்காலங்களில் பீங்கான் பாத்திரங்களை மெருகூட்டி அழகுபடுத்தும் கலை வளர்ந்தது. பீங்கான் கலங்கள் சோழர் ஆட்சிக் காலத்தில் தமிழகத்துக்கு அறிமுகமாயின. மூன்று முறை சோழர்களின் தூதுக்குழு சீனா சென்று திரும்பியது. கடைசியாக கி. பி.1077ல் முதற்குலோத்துங்கன் ஆட்சியில் 72பேர் அடங்கிய தூதுக்குழு சீனா சென்று வந்தது.[61] இத்தூதுக்குழுவினரே பரிசுப் பொருளாகப் பீங்கானைக் கொண்டுவந்திருக்கவேண்டும். பீங்கான் பாத்திரங்கள் மதிப்புமிக்கனவாய்ப் போற்றப்பட்டு அரசகுடும்பத்தினரால் வழங்கப்பட்டன. சந்தனக்கலவை கலைத்திறமைமிக்க பீங்கான் பாத்திரங்களில் சேர்த்துவைக்கப்பட்டது. அதனை நேரில் நன்கறிந்த பிள்ளை தம் உரையில் தக்கதோரிடத்தில் குறிப்பிட்டார். பீங்கான் என்பது தமிழ்ச் சொல் அன்று. சீனச் சொல்லின் திரிபாகலாம்.

**தேவாரம் :-**

'தேவாரம்' என்ற சொல்லை நம்பிள்ளை ஆண்டிருக்கிறார்.[62] இல்லங்களில் வணங்கப்படும் இறைவனுடைய திருவடிவத்தையே 'தேவாரம்' என்று ஈடு குறிப்பிடுகிறது. மூவர் முதலிகளின் திருமுறைகள் 'தேவாரம்' என்று பெயர் குறிக்கப்படுவது பற்றி அறிஞர்கள் ஆராய்ந்துள்ளனர். அவர்களின்

60. 7, 2, 11

61. கலைக்களஞ்சியம். தொகுதி 7, ப. 403

அண்மையில் கங்கை கொண்ட சோழபுரத்தில் தமிழ்நாடு தொல்பொருள் அகழ்வாராய்வுத் துறையினர் நிகழ்த்திய ஆராய்ச்சியில் கி. பி. 11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பீங்கான் கலங்கள் தோண்டி எடுக்கப்பட்டுள்ளன. இந்தியன் எக்ஸ்பிரஸ் நாளிதழ், 6, ஜூன், 1982.

62. 6, 8, 10 ஈ

ஆய்வுக்கு ஈட்டுக்குறிப்பு பெரிதும் பயன்படும். ஆனால் அவர்களின் ஆய்வுரைகளில் தேவாரம் என்ற சொல்லாட்சி ஈட்டில் இருப்பது காட்டப்படவில்லை. ஈட்டிற்கு அரும்பத அகராதி இல்லாத குறையால் அச் சொல்லாட்சி இருப்பது அறியப் படாது போயிற்று.

ஒன்பதாம் திருமுறை ஆசிரியர்கள், பட்டினத்தடிகள், நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார் ஆகியோருள் ஒருவரும் 'தேவாரம்' என்ற சொல்லை ஆளவில்லை. கி.பி. 14 ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்த இரட்டைப் புலவர்களே ஏகாம்பரநாதர் உலாவில் மூவர் முதலிகளின் திருமுறைகளை 'தேவாரம்' என்று குறிப்பிட்டனர்.[63] அப்புலவர்களுக்கு முன் 'தேவாரம்' என்பது சோழ மன்னர்களின் அரண்மனையில் எழுந்தருளுவிக்கப்பட்ட வழிபடு மூர்த்தங்களையும், அவை எழுந்தருளியிருந்த வழிபாட்டு அறைகளையும் குறிக்கும் பெயராகக் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன. முதல் இராசேந்திர சோழனுக்கு வழிபடு கடவுளாக, தேவார தேவராக எழுந்தருளியிருந்த சந்திரசேகர தேவரின் படிமத்தைப் பற்றிய செய்தியை ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.[64]தேவாரதேவரின் நாள் வழிபாட்டுப் பணிகளை மேற்பார்க்கும் அதிகாரி 'தேவார நாயகம்' என்று அழைக்கப்பட்டதாக மானம்பாடிக் கல்வெட்டுக் கூறுகிறது.[65] தேவார தேவர்க்குத் திருப்பதியம் விண்ணப்பஞ்செய்வார்கள் நியமிக்கப்பட்டனர் என்றும் அறியப்படுகிறது.[66] இவற்றால் கி. பி. 11ஆம் நூற்றாண்டுவரை தேவாரம் என்பது அரண்மனைகளில் இருந்த வழிபாட்டு இறைப்படிமங்களையே குறித்தன என்று தெரிகிறது. இதற்கு நேர் சான்றாக நம்பிள்ளை உரைக்குறிப்பு உதவுகிறது. மேலும் வைணவ உலகிலும் 'தேவாரம்' என்ற சொல்வழக்கு இருந்ததும் அறியப்படு

---

63. ''மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும் தேவாரம் செய்த திருப்பாட்டும்''
—ஏகாம்பரநாதர் உலா,

இவ்வடிகளை எடுத்துக்காட்டித் தேவாரம் என்னும் பெயர் வழக்கை விரிவாக க. வெள்ளைவாரணன் ஆய்வு நிகழ்த்தியுள்ளார். — க. வெள்ளைவாரணன், பன்னிருதிருமுறை வரலாறு, முதற்பகுதி, அண்ணாமலைப்பல்கலைக் கழகம், 1962, பக். 28 – 35.

64. S.I.I. Vol.II No.38

65. Ins. 97 of 1932

66. S.I.I. Vol.III No. 160

கிறது. பெரியவாச்சான் பிள்ளையும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் வழிபடுமூர்த்தம் என்ற பொருளில் தேவாரம் என்ற சொல்லைப் பயன்படுத்தியிருக்கின்றனர்.[67] கி.பி 15ஆம் நூற்றாண்டிலும் இதே பொருளில் வைணவ நூல்களில் ஆளப்பட்டுள்ளது. பரகாலநல்லான் ரஹஸ்யம் என்ற நூலில், "தானே எனக்கு விரோதியாயிருக்கிற லங்கையைத் தன் கையில் அம்புகளாலே செருப்பும் தேவாரமும் ஒக்கக்கட்டி ஒருவர் கூறை எழுவர் உடுக்கும்படி பண்ணி... என்னை எடுத்துக் கொண்டு போனாராகில் தம் பிறவிக்கும் தமக்கும் ஸத்ருசமாயிருக்கும்" என்ற தொடரில் 'தேவாரம்' இடம் பெறுகிறது.[68]

வணிகவியல்

கி. பி. 12-13ம் நூற்றாண்டுப் பகுதியில் வணிகருலகில் பழக்கத்திலிருந்த பல வாணிபச் சொற்கள் ஈட்டில் வருகின்றன. சமயத் தலைவராயிருந்த நம்பிள்ளை சமுதாயத்தைவிட்டு மடங்களிலேயே முற்றிலும் தங்கிப் பொழுது போக்கவில்லை; தம்மைச் சுற்றி அன்றாடம் சுழலும் கொள்வினை கொடுப்பினைகள் பண்டமாற்றங்கள் முதலிய வணிகத்துறை நிகழ்ச்சிகளை உற்றுநோக்கியிருக்கிறார். அதனால் அத்துறைச் சொற்களும் இயல்பாக அவர் உரையில் தோய்ந்திருக்கின்றன.

வணிகத்துக்குரிய மூலச் செல்வத்தை 'அஃகம்'[69] என்பர் பிள்ளை. சுத்தக்கிரயம்'அறவிலை'[70] யாகக் குறிக்கப்படுகிறது. நம்பிள்ளை காலத்தில் 'அடிமை வியாபாரம்' நடைபெற்றது. அடிமை ஒருவன் தான் அடிமைப்படுவதற்கு அடையாளமாகத் தன் மார்பில் ஆண்டானுடைய பெயரை எழுதிக் கொள்ளும் 'எழுத்துவாங்கல்'[71] மரபை ஈட்டிற் காட்டுகிறார் பிள்ளை. கடமை,[72] கணிசம்,[73] சரக்கு,[74] முதலிய வணிகக் குறியீடுகள் ஈட்டில் காட்டப்படுகின்றன. தனிப்பட்டோரின் வங்கித் தொழி

---

67, அமலனாதிபிரான், பிரவேசம்
68, பரகாலநல்லான் ரஹஸ்யம், ஸ்ரீவை, ஸி.மு, சபை வெளியீடு, 1918, ப 88
69. 5 - 2 . 11 ஈ
70, 1 . 3 . 1 ஈ
71, 1 . 3 . 11 ஈ
72, 5 . 2 . 8 ஈ
73, 7 . 4 . 1 ஈ
74, 1 . 2 - 7 ஈ

லில் வாங்கும் கடன் 'தனிசு'[75] என்றும் வட்டி 'பலிசை'[76] என்றும் நிலுவை 'சிகை'[77] என்றும் குறிப்பிடப்படுகின்றன.

**உழவியல்:-**

உழவியல் தொடர்பாக ஈட்டில் இருக்கும் செய்திகளி-லிருந்து அக்கால உழவியற் சொற்களை நன்கு காணமுடிகிறது. சாவி[78]' தரிசு[79] என்ற சொற்கள் இக்காலத்தும் பொருள் மாறாமல் வழங்கிவருகிறது. சம்பு,[80] சங்காயம்,[81] கோகுள் இலை,[82] சுரவனபாக்கு[83] முதலிய பயிர்களைப் பற்றிய பெயர் களை ஈடு குறிப்பிடுகிறது.

**சமுதாய இயல்:-**

பொதுவாக மக்கள் நடவடிக்கைகளையும் மனநிலைகளை யும் பயன்படுத்திய பொருள் வகைகளையும் குறிக்கும் அரிய சொற்கள் ஈட்டில் ஆங்காங்கே இடம் பெறுகின்றன. பல அணி கலன்களின் பெயர்கள் புதிதாக உள்ளன. சில சொற்கள் அக் காலச் சமுதாய நிலையில் குறைகளையும் அறிய உதவுகின்றன. கள்ளநாணயம் அடிப்பவர்கள் 'கண்வட்டக் கள்வன்'[84] என்று குறிக்கப்படுகின்றனர். கடன் வாங்குதலை 'கைக்குறியாப் பை'[85] என்கிறார். திருமணம் ஆகப் பெறாது போதலை 'குமரிருந்து போதல்'[86] என்பர்.

**சொல்லாக்கம்:-**

நம்பிள்ளை தாமே உருவகமாகச் சில சொற்களைப் படைத்திருக்கிறார். நற்பேறு பெற்றான் ஒருவனைக் 'குப்பைக் காலன்'[87] என்பர். கால் என்பது பயிர் நிற்கும் இடம். குப்பை சேருமிடத்தில் பயிர்கள் நின்று தாமே செழித்து வளருமன்றோ! அதனால் செழிப்புமிக்கவனைக் 'குப்பைக்காலன்' என்பார். 'பொரிபுறந்தடவுதல்[88] என்பது ஈட்டில் அடிக்கடி வரும் ஒரு

---

75, 1.2.8 ஈ
76 1.4.2 ஈ
77, 4.9.6 ஈ
78, 3.9.2 ஈ
79, 2.7.4 ஈ
80; 4.6.9 ஈ
81. 4-2-0 ஈ
82. 7-2-1 ஈ
83. 10-2-2 ஈ
84. 1-9-8 ஈ
85. 1.4-6 ஈ
86. 4-8-2 ஈ
87. 7-9-9 ஈ
88. 4-10-2 ஈ

தொடராக்கம், உட்குறையை மறைத்துப் புறம்பே மினுங்கச் செய்தலுக்கு இதனைப் பயன்படுத்துகிறார். பொரிந்து போன சுவர்களையுடைய வீட்டை விற்கும் போது அது தெரியாது புறத்தே சுண்ணம் பூசி மறைத்தலைக் கொண்டு இச்சொல் ஆக்கப்பட்டது. சுவையற்ற நெற்பொரி மீது வெல்லம் பூசுவதிலிருந்து இச்சொல் ஆக்கப்பட்டது என்றும் கருதுவர்,

மரூஉவும் சிதைவும்

பல சொற்களின் இயற்கை வடிவத்தைச் சுட்டாது மக்கள் பேசும் முறையிலேயே மருவிச் சிதைந்த வடிவத்திலேயே பயன்படுத்துவது ஈட்டிற் காணப்படுகிறது. அருமந்த[89], கிண்ணகம்[90], கினிய[91] ஆப்பை,[92] தலக்கு,[93] பண்ணை[94] பிசுகுதல்,[95] பையாத்தல்,[96] மனிச்சு,[97] முக்குதல்[98] ஆகியவை அவற்றுள் சிலவாகும்,

சில சொற்களை வேண்டும் என்றே திரித்து வழங்கினர் நம்பிள்ளை என்று சிலர் கருதுவர்.[99] வைணவ மரபைக் காக்கவே அப்படித் திரித்ததாகக் காரணம் காட்டுகிறார். ஈட்டிற்கு முன்னுள்ள உரையில் அப்படிச் சிதைந்த சொற்கள் இல்லை என்றும் கூறுகிறார். அவை எல்லாம் எழுதப்பட்டவுரைகள்; ஈடு சொற்பொழிவாக நிகழ்ந்ததை அப்படியே ஏடுபடுத்தினர். அதனால் பேச்சுவழக்கில் சிதைந்த சொற்களை நம்பிள்ளை விரிவுரையில் பயன்படுத்தினார் என்றும் அவற்றை அப்படியே விடாது குறித்தார் அவர்சீடர் என்றும்கொள்ளலாம். அன்றே → இறே; கண்டாய் → கிடாய்; கண்டீர் → கிடீர் / கிடிகோள்; என்பன சில சிதைந்த வடிவங்கள். சில வினைச்சொற்

---

89. 2-4-1 ஈ
90. 1-1-1 ஈ
91. 9-2-6 ஈ
92. 1-4-6 ஈ
93. 6-7-1 ஈ
94. 9-1.5 ஈ
95. 1-4-6 ஈ
96. 5, 10-3 ஈ
97. 3-3-4 ஈ
98. 2-7-11 ஈ
99. கே. பாலசுந்தரநாயகர், ஈட்டுரை ஆராய்ச்சியும் அகப்பொருட் பாசுர விளக்கமும், முதற் பகுதி. 1, 1956,

களும் சிதைந்த பேச்சு வடிவத்திலேயே ஈட்டில் இடம் பெற்றுள்ளன. கண்டிலோமீ, போனிகோள், ஆய்த்து, பேசிற்றின, அவரோபாதி' அவரோட்டை, மாட்டிகளோ, காணிகோள், கூறுவுதோம் என்று வரும் வினைவடிவங்களைத் தொகுத்து ஆய்வு நிகழ்த்தலாம். காலவளர்ச்சியில் சொற்களின் வடிவ மாறுபாடுகளை இதனால் அறியமுடியும்.

## தொடர்வளம்

சொல்வளத்தைப்போன்றே அரிய கருத்துக்களை உள்ளடக்கிய தொடர்களை ஆளும் திறனும் நம்பிள்ளைக்கு அமைந்தது. வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் இயற்கை நியதிகளையும் மனித மனத்தின் வியப்பான நிலைகளையும் கருவாகக்கொண்ட நீண்ட தொடர்களால் தம் கருத்துக்களைக் கற்பாருள்ளத்தில் பதியவைக்கிறார். மரபுவழியாகத் தொடர்ந்து வரும் பல புராணச் செய்திகளும் பழமொழிகளும் நம்பிள்ளைக்கு உரை விளக்கும் சீரிய கருவிகளாகின்றன. அவற்றைப் பயன்படுத்தும் போது நகைச்சுவையும் கலப்பதைக் காணலாம். 'திறந்து கிடந்த வாசல்தோறும் நுழைந்து திரியும்பதார்த்தம்[100]' என்று நாயைப் பெருமதிப்புப்பட வருணிப்பர். அதில் புகழ்வதைப்போல் இகழ்ச்சியை உறைய வைக்கிறார். மனித உடலை வருணிக்கும் போது புதுவகையிற் பார்க்கிறார். "அகவாய் புறவாயாகிற்றாகில் காக்கைநோக்கப் பணிபோருமத்தனை"[101] என்பர். ஒருபையைக் கையையுள்விட்டு உட்பக்கம் வெளிப்புறமாக மாற்றுவதுபோல், மனித உடலைத் தோலை உட்புறமாக்கிப் பார்த்தால், ஊனும் உதிரமும் நிறைந்து அருவருப்பாகக் காட்சி தரும். அதனைக் காக்கைகள் தான் பார்க்கத்தகும் என்கிறார்.

நம்பிள்ளை இடும் சில தொடர்கள் காலப்பழமையால் இன்று அறிவதற்கு அரிதாக உள்ளன. அரும்பதங்களின் துணை கொண்டே அறியவேண்டிய நிலை ஏற்படுகிறது.

**அரிய தொடர்கள் :-**

**(1) ஆனைக்குக் குதிரை வைத்தல் :-**

*எங்ஙனேயோவில் (5—5) தலைவி உருவெளிப்பாடாகத் தலைவனைக் காண்கிறாள். 'மொய்ய நீள் குழல் தாழ்ந்த

---

100. 5.1-6 ஈ

101, 5.1.5 ஈ

தோள்களும் பாவியேன் முன்னிற்குமே'[102] என்று இரங்குகிறாள். வெளிப்பட்டஉருவை அணைக்கமுயல அது எட்டாது அகன்ற தால் 'பாவியேன்' என்று தலைவி வருந்துகிறாள். 'கண்வட்டத் திலே தோற்றாநிற்க, அணைக்க எட்டாதிருக்கிறதிறே' என்று மட்டும் விளக்கினார் பெரியவாச்சான்பிள்ளை. நம்பிள்ளையோ அதனை மேலும் தெளிவாக்க ''கண்ணுக்குத் தோற்றா நிற்கச் செய்தே ஆனைக்குக் குதிரை வையா நின்றது'' என்கிறார். 'பிடி கொடுக்கு மாபோலேயிருந்து பிடிகொடா திருக்கிறபடி' என்று அரும்பதம் இதனை விவரிக்கிறது. யானையின் வேகத்தைச் சோதிக்க ஓடுகிற குதிரையின் பின்னே அதனைச் செலுத்துவார் களாம்; யானை தன்கையால் குதிரையை எட்டிப்பிடிக்க முய லும்; எட்டிப் பிடிப்பது போல் இருக்கும் சமயம் குதிரை நழு விப் பாய்ந்து ஓடிவிடுமாம். அப்போது குதிரையின் வேகத்தோடு யானையதை ஒப்பிட்டுக் காண்பார்களாம்.

## (2) கருமாறி பாய்தல்:-

தலைவியின் அழகைச் சிறப்பிக்கும் போதெல்லாம் இத் தொடரைப் பிள்ளை பயன்படுத்துகிறார். ''கருமாறி பாய்ந்தா லாகாதோ என்னும்படியிறே அவளுடைய ''போக்கியதை[103]'' என்பர். நப்பின்னையின் தோளழகிலே துவக்குண்ட கண்ணன் ஏறுபாய்ந்தான் என்பர் ஆழ்வார். ''அது பொய்கையிலே பாய்ந்தாற்போலே யிராநின்றது அவனுக்கு'' என்று விளக்கி முற்குறித்த தொடரையும் இடுகிறார். ''கருமாறி பாய்கை யாவது-காமாட்சியினுடைய ஆலயக்குளத்தில் சங்குகளிரண்டின் நடுவில் விழுகை'' என்பது அரும்பத விளக்கம். முற்காலத்தில் காஞ்சி காமாட்சி கோயிற் குளத்தின் நடுவில் இரு கூரிய சூலங்கள் நடப்பட்டிருந்தனவாம். விரும்புகிற பொருளை அடைய ஆசை மிகுந்தவர்கள் அவை கிடைக்கப் பெற்றால் கோபுரத்தின் மீதிருந்து அச்சூலங்களின் நடுவில் பாய்வதாக வேண்டிக் கொள்வார்களாம். மயிர் இழை தப்பினாலும் சூலங் கள் குடலைப் பிய்த்துவிடும் நப்பின்னை கிடைக்கப் பெற்றால் அவற்றின் நடுவில் விழவும் கண்ணன் உடன்பட்டிருந்தான் எருது களின் கொம்புகளிடையே பாய்ந்தது அச்சூலங்களின் நடுவிற்

102. தி. வா. மொ. 5 - 5 - 8
103. 5 - 10 - 2 ஈ

பாய்ந்தது போல் இருந்ததாம். குதிப்பாருடைய கருவை மாறி விடும்படி செய்யவல்லவையாதலால் 'கருமாறிபாய்தல்' என்று ஆயிற்று.

**(3) காலன் கொண்டு மோதிரமிடுதல்:-**

*வேய்மரு தோளிணையில் (10-3) தலைவி கண்ணனைக் குறித்து 'அடிச்சியோம் தலைமிசை நீ அணியாய்'[104] என்று வேண்டுகிறாள். 'நீ' என்று நியமித்துச் சொன்னதற்குக் கருத்தாகக் "காலன் கொண்டு மோதிரம் இடுவாரைப் போலே என் பேற்றுக்கு நான் முயற்சி செய்யுமவளோ?" என்று உரை விளக்கம் செய்வர். காலன் கொண்டு மோதிரம் இடுகையாவது— காலபுருட தானம் வாங்கி மோதிரம் பண்ணிப் பூணுதல் என்பது அரும்பத விளக்கம். ஆயுட்குறைவுடையார் எமனைப் போன்று பொன்னால் உருச் செய்து தானம் வழங்குவர். பொருட்குறை வுடையார் அதனை இழிசெயல் என்னாது வாங்கி அப்பொன்னால் மோதிரம் செய்து இட்டுக் கொள்வர். தானம் வழங்கியவர்க்கு ஆயுட்குறையுமாதலின் அம்மோதிரத்தைக் காணுந் தொறும் அச்சம் ஏற்படும். இயல்புக்கு ஏற்காத இழிசெயலைச் செய்து பேற்றை அடைவதற்கு இது உதாரணமாக்கப்படுகிறது. "ஆற்றாமை மிக்கது என்னா, அவ்வழக்குச் செய்யோம் காண்! நீ செய்வனவற்றை நாங்கள் செய்யவோ!" என்று அடுத்துவரும் உரைப்பகுதி அவ்வுதாரணத்தை விளக்குகிறது.

**(4) ஒருவர் கூறை எழுவர் உடுத்தல்**

*கடல் ஞாலத்தில் (5-6) தலைவி தலைவனுடைய கூற்றை அனுகரித்துப் பேசும்போது 'திறம்பாமல் மண் காக்கின்றேன் யானே என்னும்'[105] என்று எடுத்து மொழிகிறாள். திறம்பாமல் மண் காக்கிற திறத்தை விளக்கப்புகுந்த நம்பிள்ளை" "ஒருவர் கூறை எழுவர் உடாதபடி பூமியை நோக்குகிறேன் நான் என்னும்"[106] என்று தொடரமைக்கிறார். 'ஒருவர் கூறை எழுவர் உடுத்தல்' என்பது எளியாரை வலியார் வாட்டுதலைக் குறிக்கும் தொடராகும். ' ஒருவன் கையிற் புடைவையை ஒருவன்

---

104. தி. வா. மொ. 10 - 3 - 5
105. மேலது 5 - 6 . 5
106. 5 - 6 . 5 ஈ

பறிக்க, அவன் கையிலத்தை வேறொருவன் பறிக்க, இப்படி ஏழு பேராகப் பறித்துடுக்கை' என்பது அரும்பதவிளக்கம். இவ் வரிய தொடரைப் பரிமேலழகரும் ஆண்டிருக்கிறார்.[107]

அரும்பதங்களால் விளக்கமுடியாத தொடர்களும் ஈட்டில் உள. 'அன்வர்த்தப்ரயோஜனத்தேர் ஊர்தல்'[108] என்ற தொடருக்கு 'சீயர்காலம் தொடங்கி சம்பிரதாயமில்லை' என்று அரும்பதகாரர் குறிப்பெழுதி அமைகிறார்.

இன்று மருவி வழங்கும் 'காக்காய் பிடித்தல்' என்பது தெளிவான வடிவத்தில் 'காலைக் கையைப் பிடித்துக் காரியம் முற்றுவிக்கப் பார்த்தல்'[109] என்று ஈட்டில் வருகிறது.

உருவகத் தொடர்களும் பொருள்விளக்கப் பயன்படுகின்றன. 'இவ்வார்த்தை எத்தனை குளிக்கு நிற்கும்?'[110] என்பது அக்காலப் பேச்சு வழக்குத் தொடர். சில நறுமணப்பூச்சுகள் பலநாளைக்குளியலுக்குப் பிறகும் உடம்பிலே மணத்திருக்கும். இதனைக் கொண்டமைந்தது இத்தொடர். 'உப்பைத் தொட்டுப் புளியைத் தொட்டு,[111] 'பல்லிலே பட்டுத் தெறிப்பதே'[112] 'பதர் கூட்டிக்கழித்தல்'[113] வரில்பொகடேன் கெடில் தேடேன்'[114] புற்கவ்வினான்'[115] என்று வரும் தொடர்கள் அன்றாடம் இல்லற வாழ்க்கையில் அனைவராலும் போற்றப்பட்ட தொடர்களாகும். இவற்றால் அரிய தத்துவக் கருத்துகளையும் எளிதாகச் சொல்லிவிடுகிறார்.

**பழமொழித் தொடர்கள் :-**

தொன்றுதொட்டு உருவான சில தொடர்களே பழமொழிகள். காலத்தால் பட்டை திட்டப்பட்ட வைரக்கற்கள் பழமொழிகள். ஆழ்ந்த கருத்துக்களைக் கொண்ட பழமொழிகளும் ஈட்டில் உரைவிளக்கங்களில் பயன்படுவதைக் காணலாம்.

107. பரிமேலழகர் உரை: திருக்குறள் 1269
108. 8 - 8 - 3 ஈ
109. 10 - 3 - 5 ஈ
110. 8 - 7 - 10 ஈ
111. 5 - 5 - 7 ஈ
112. 5 - 10 - 0 ஈ
113. 7 - 5 1 ஈ
114. 10 - 10 - 8 ஈ
115. 10 - 7 - 1 ஈ

ஆனைக்கும் தனக்குத் தக்க வாதமிறே[116]
வாளேறுகாணத் தேளேறு மாயும்[117]
செம்புக்குக் கூராச் சிற்றறிவாள் உண்டோ?[118]
கள்ளரச்சம் காடு கொள்ளாது[119]
போர் சுட்டுப் பொறி கொறிக்கை[120]

ஆகிய பழமொழித் தொடர்கள் நெஞ்சிற் பதியுமாறு அமைகின்றன. பழமொழி நானூற்றிலிருந்தும் சில ஈட்டில் மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஈட்டைத் துருவி ஆய்வு செய்தால் நூற்றுக்கணக்கான பழமொழிகளைத் தொகுக்கலாம். பழமொழிகள் உவமைவடிவத்தில் ஆளப்பட்டுள்ளன. 'ஆயிரக்காதம் பறப்பதன் குட்டி ஐந்நூற்றுக் காதம் சிறகடித்துக் கொள்ளும் என்னுமாபோலே'[121] என்று பழமொழி தனித்தும் காட்டப்படும்; ஆனைக் கூட்டத்துக்குக் கதவிடப்போமோ?[122] என்று வினாவாகவும் காட்டப்படும்; 'பாடிகாப்பாரே களவு காணுமாபோலே[123] என்று உவமையாகவும் ஆக்கிக் காட்டப்படும்.

உவமை வளம்

மூல நூலாசிரியர்கள் செய்யுட்கு அணியாக உவமைகளை ஏற்றுக் கொண்டனர். உரையாசிரியர்கள் கருத்துவிளக்கத்திற்கே உவமைகளைத் தம் உரையில் தழுவுகின்றனர். பரிமேலழகரும் நெஞ்சையள்ளும் உவமைகளை உரைக்குறிப்பில் வழங்கியிருக்கிறார்.[124] பிற உரையாசிரியர்களும் உவமைகளைப் பயன்படுத்தத் தவறவில்லை. ஆனால் அளவுடன் அவற்றை ஆண்டனர். சிந்தாமணியின் 3145 பாடல்களுக்கும் உரைஎழுதிய நச்சினார்க்கினியர் மிகச்சில உவமைகளையே காட்டியிருக்கிறார். திருவாய்மொழி 1112 பாடல்களின் உரையில் ஏறத்தாழ 1500 உவமைகளை நம்பிள்ளை காட்டியிருக்கிறார். உரைவிளக்க நெறிகளில் உவமை சுட்டலுக்கு முதலிடம் அளித்

---

116. 2-2-2 ஈ
117. 4-9-0 ஈ
118. 4-10-0 ஈ
119. 4-10 2 ஈ
120. 5-3-0 ஈ
121. 7-4-1 ஈ
122. 10-3-6 ஈ
123. 3-3-3 ஈ
124. பரிமேலழகர் உரையில் 29 உவமைகள் வருவதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. — இ. சுந்தரமூர்த்தி, 'பரிமேலழகர் உரைவிளக்கம்', தமிழாய்வு, சென்னைப் பல்கலைக்கழகம், 1976 ப. 80.

தாகக் கூறலாம். மேலும் பிள்ளையின் பரந்துபட்ட பல்கலைத் தேர்ச்சியும் உலகியலை உற்று நோக்கும் தனித்திறனும் உணர்ந்ததை உள்ளபடி உரைக்கும் சொல்வளமும் அளப்பரிய நினைவாற்றலும் ஆயிரக்கணக்கான உவமைகளை உற்பத்தி செய்யக் காரணமாயிருந்தன.

ஆழ்வார் பாடலுக்குத் தாம் இடும் உரை பொருத்தமாயிருப்பதை உணர்த்துதற்கும் உணர்தற்கு அரிய நுண்பொருள்களை எளிமையாக விளக்குதற்கும், கட்புலனாகாத தத்துவக் கோட்பாடுகளைக் கட்புலனான காட்சிகளால் நிறுவுதற்கும் நம்பிள்ளை உவமைகளைக் கருவியாகக் கொண்டார். உவமை அவருக்கு அணிகலனன்று ; அரிய கருவியாகும்.

ஈட்டில் வரும் உவமைகளை முதன்முதலாகத் தொகுக்கும் பணியைச்செய்தவர் ஈட்டின் தமிழாக்குநரான அறிஞர் பு ரா. புருடோத்தமநாயடு அவர்களே. மிகச்சீரிய முயற்சி அது அவ்வுவமைகளை வகைப்படுத்தி ஆய்வு நிகழ்த்தலாம். நம்பிள்ளையின் உவமைகளைப் பிற வைணவ உரையாளர்களும் நன்கு பயன்படுத்திக்கொண்டனர். அவற்றுட் சில சூத்திரங்களாகவும் உயர்ந்திருக்கின்றன. முன்னோர்களால் போற்றப்பட்டுக் காலத்தால் பட்டைதீட்டப்பட்ட உவமைகளையும் தாமே உருவாக்கிய உவமைகளோடு நம்பிள்ளை உலவவிட்டிருக்கிறார். சில உவமைகள் சொற் சிக்கனமானவை; பல அதற்கு முரணாக நீண்ட தொடரால் இயக்கப்படுகின்றன. உவமைகளின் சுமை உரையைச் சற்றும் தளர்த்தவில்லை. நீண்ட பெருவழியில் இடை இடையே வரும் மரநிழல்களைப்போல் அவை உரைகற்பார்க்கு ஓய்வு தருகின்றன. ஓடமேற்றிக்கூலி வாங்குவாரைப்போலே,[125] செருப்புவைத்துத் திருவடி தொழுவாரைப்போலே[126] என்று வரும் உவமைகள் நகைச்சுவை விருந்தையும் நல்குகின்றன.

இதிகாச புராணங்கள் :-

ஈட்டு உவமைகளில் இதிகாச புராணக் கதை நிகழ்ச்சிகளாக வருவனவே எண்ணிறந்து உள்ளன அவற்றில் பிள்ளைக்கிருந்த புலமை நன்கு தெரிகிறது. சொற்பொழிவுகளில் கதை நிகழ்ச்சிகளே பொதுவாகக் கேட்போரின் உள்ளத்தில் நல்ல

125. 7 - 10 - 11 ஈ
126. 8 - 6 - 5 ஈ

பதிவை ஏற்படுத்துகின்றன. ஆதலால் ஈட்டில் அவை மலிந்து காணப்படுகின்றன திருவாய்மொழியைப் பின்னணியோ என்று ஐயுறும் அளவிற்கு வான்மீகரின் இராமாயணம் முன்னணியில் விரித்துரைக்கப்பட்டது. இராமாயண கதைப்பாத்திரங்கள் உவமைகளாக மாறும் அற்புதம் ஈட்டில் உள்ளத்தைப் பிணிக்கிறது.

சான்றுகள்

(1) *வாயும் திரை உகளில் (2-1) ஆழ்வார் தலைவியாகித் தலைவனைக் கலந்து பிரிந்து ஆற்றாமை மிகுந்து ஒரு சோலையிலே புகுந்தாள். அங்கே வாழ்கின்ற பறவைகளையும் மற்றவைகளையும் கண்டு அவையும் தன்னைப்போல் பிரிவுத் துயரில் உழல்வதாகக் கொண்டு அவற்றுக்கும் சேர்த்துத் தான் நோவுபட்டுக் கூப்பிடுகிறாள். ஒரே துயர் அடைந்தவர்கள் ஒருவரையொருவர் கட்டி அழுவதுபோல் ஆழ்வாருடைய மன நிலை இருந்தது. அதை விளக்க இராமாயணக் காட்சி ஒன்று உவமிக்கப்படுகிறது. ''பெருமாள் சீதே! உன் மாமானார் இறந்தார், இலக்குவ! நீ தந்தையை இழந்தாய்' என்று கூறி ஒருவரையொருவர் கட்டிக் கொண்டு கிடந்து கூப்பிட்டாற்போலே''[127] ஆழ்வார் கூப்பிடுவதாக விளக்குவர்.

(2) *மாலை நண்ணியின் (9-10) அவதாரிகையில் நம்பிள்ளை ஒரு நுட்பத்தை ஆராய்கிறார். ஆழ்வார் இறைவனை அடைக்கலம் புக்க போதே அவருக்கு உடற்பிரிவு ஏற்பட்டுப் பேறு பெற்றிருக்க வேண்டும், அவரைத் திருவாய்மொழி முடியுமளவும் துடிக்கச் செய்தது ஏன்? இதற்குரிய விடையை உவமைகளால் விளக்கப் பார்க்கிறார். தருக்க நெறியில் இழிவதிலும் உவமைகளால் விளக்குதல் நெஞ்சில் எளிதிற் பதியும் என்று உணருகிறார். சரண்புகுந்த அக்கணமே சரீரம் முடிந்து போனால் ''நச்சுப் பொய்கையோபாதி''யாக நினைத்து ஆள் பற்றாமற் போய்விடும். அதாவது சரணாகதி நெறியைப் பின்பற்ற உலகினர் அஞ்சுவர். அந்நெறியைப் பின்பற்ற ஆளற்று விடும். இதனோடு அமையாது மிகவும் மறைவான ஒரு உண்மையையும் உவமைகொண்டு காட்டுகிறார். ''ஸ்ரீ பீஷ்மரையிட்டு நாட்டுக்கு வெளிச்சிறப்பைப்பண்ணிக் கொடுத்தாற்போலே''[128] என்பது அரிய உவமை. வீடுமர் அம்புப் படுக்கையிலே நெடு

---

127. 2-1-0 ஈ

128. 9-10-0 ஈ

நாள் கிடந்து துடித்தார். பாண்டவர்களுக்கு அறநுட்பங்களை அறிவுறுத்தச் செய்யவே அவரைக் கண்ணன் அங்ஙனம் கிடந்து அலமாக்கச் செய்தான். அதுபோலப் பின்புள்ளார்க்குத் தமிழ் மறையை வெளிப்படுத்த வேண்டியே ஆழ்வாரை இருள் தரும் மாநிலத்தில் சில நாள் துடிக்கச் செய்து பின் வீடு பெறுவித்தான்.

**தாய்-தந்தை-சேய் உறவு**

அனைவர்க்கும் தெளிவாகப் புலப்படுவது தாய் சேய் உறவுகள். இதனைக் கொண்டு பல்வகை உவமைகளைப் படைத்து நுண்ணிய செய்திகளைத் தருகிறார்.

**சான்றுகள்**

*(1)* 'தாயும் தந்தையுமாய் இவ்வுலகினில் வாயும் ஈசன்'[129] என்ற குறிப்பின் ஆழத்தை ''பிரஜை கிணற்றில் விழுந்தால் ஒக்கக் குதிக்கும் மாதாவைப்போலே ''என்ற உவமையால் தெளிவுறுத்துகிறார். இறைவன் இந்நிலவுலகினில் பிறப்பதற்குரிய காரணத்தைக் கண்ணாடி போற் காட்டுகிறது இவ்வொப்புவமை. உயிர்களோடு அவன்கொண்ட தாய் சேய் உறவே அவர்களை மேலே எடுக்கத் தான் கீழ் இழியச் செய்தது என்பது கருத்து.

*(2)* 'முனிமாப் பிரம முதல் வித்தாய்'[130] என்று இறைவனை ஆழ்வார் வருணிக்கிறார். 'படைப்பதற்காக நினைக்கின்ற பரம்பொருளான பரம காரணமானவன்' என்பது பொருள். முனிதல் — நினைத்தல் என்று பொருள் கொண்டார் பிள்ளை. படைப்புக்குமுன் இறைவனுடைய நினைவு எப்படிப்பட்டது என்பதையும் அந்நினைவே படைத்தற்குரிய மூன்று காரணங்களாக அவனை ஆக்கியது என்பதையும் மிக எளிதாய் விளங்கிக் கொள்ள தாய்-சேய் உறவு உவமையினை எடுக்கிறார் பிள்ளை. ''தேசாந்தரம்போன பிரஜையைத் தாய் நினைக்குமாபோலே, இவை 'என்பட்டன' என்று திருவுள்ளத்தாலே நினைத்து பரப்பிரம்மமான தானே திரிவித காரணமுமாய்'' [131] என்பது ஈடு. வேறு தேசம் புக்கு நெடுநாளான மகனை நினைத்துத் தன் மேன்மைகளை எல்லாம்

---

129. தி. வா. மொ. 1 - 10 - 6

130. மேலது 8 - 10 - 7

131. 8 — 10 — 7 ஈ

ஒரு பொருட்டாக எண்ணாதவளாயிருப்பள் தாய். இறைவனும் நெடுநாளாய் அழிந்துபட்ட நிலையில் வாடும் உயிர்களை நினைத்து மனமிரங்கித் தன் மேன்மையைக் கணிசிக்காமல் தானே மூன்று காரணங்களுமாகக் கொண்டு உலகைப் படைத்து அவ்வுயிர்களைக் காக்கிறான்.

(3) "ஞாலத்தார் தமக்கும் வானத்தவர்க்கும் பெருமானை"[132] என்று இறைவனுடைய தலைமையை ஆழ்வார் கூறுமிடத்து ஞாலத்தோரை முற்பட எடுத்ததற்கு அரிய காரணத்தைப் பிள்ளை காண்கிறார். "மாதா பிதாக்கள் ப்ரஜைகளில் குறைவாளர் பக்கலிலேயிறே இரங்குவது; அத்தாலே ஸம்சாரிகள் முற்பட வேண்டுகிறது" என்பது ஈட்டின் உவமையும் அதன் கருத்தும் ஆகின்றன.

(4) ஈட்டில் வரும் உறவு உவமைகளில் சில:-

குழந்தையினுடைய தொட்டிற் காற் கடையிலேகிடக்கும் தாயைப் போலே;[133]

தந்தை கண்டிக்கத் தொடர்ந்தால், தீம்பு செய்த குழந்தை தாயின் காலிலே விழுமாறு போலே;[134]

பெரியநோய்க்குத் தப்பின புத்திரனை மாதாபிதாக்கள் பார்த்துக் கொண்டிருக்குமாபோலே;[135]

மகனுக்குச் சொற்களைக் கற்பித்து அவன் சொல்லக் கேட்டுப் பிதாவானவன் இனியனாமாப்போலே ;[136]

தேசாந்தரம் சென்றிருந்த குழந்தை ஊர் அணித்தான வாறே

மாதாக்களைப் பலகால் நினைக்குமாப்போலே[137]

**இல்லறவியல் :-**

இல்லற வாழ்வில் கணவன் மனைவி உறவுகளையும் ஊடல்களையும் தாழ்ச்சிகளையும் உயர்ச்சிகள்ளயும் உவமை

132. தி. வா. மொ. 4 — 5 — 8
133. 4 — 10 — 2 ஈ
134. 4 , 5 , 7 ஈ
135. 8 ; 7 , 1 ஈ
136. 10 , 7 ; 5 ஈ
137. 9 . 8 , 4 ஈ

களாக ஒப்பிட்டுக் காட்டுவதில் நம்பிள்ளை தனியிடம் பெறு கிறார். இல்லறத்தின் மாண்பினைக் காட்டும் அரிய உவமை யொன்று ஈட்டில் வருகிறது. ஆழ்வாரை ஆற்றொணாத்துய ரில் துடிக்க விட்டான் இறைவன். அவருடைய பெருந்துயர் *கங்குலும் பகலில் (7-2) வெளியாகிறது. தம் வாயாற் சொல்ல வொண்ணாது தாய் கூற்றாற் சொல்லுமளவு பெருந்துயர்ப் பட்டார் ஆழ்வார். இறைவனை அப்போதே பெற்றுத் தீரும் படியான பெருவேட்கை ஆழ்வாருடையது. "பிற்பாடு பொறுக்க மாட்டாத இவரை வைக்கப் போகுமோ?" என்ற வினாவை எழுப்பிய பிள்ளை அதற்கு விடையாக உவமையைப் படைக் கிறார். "குழந்தைகளைப் பட்டினி இட்டு வைத்தும் வந்த விருந்தினரைப் பேணுவாரைப்போலே: இவர் தாம் நான்கு நாள்கள் நோவுபட்டாராகில் படுகிறார்; இவருடைய பிரபந்தத் தைக் கொண்டு உலகத்தை வாழ்விப்போம் என்றிருந்தான்" என்பது பிள்ளை தரும் உவமையும் பொருத்தமும் ஆகும்.[138].

அரசியலும் உழவியலும் :-

அரசர்களின் பல செயல்களும் பாரம்பரியங்களும் நம் பிள்ளை காலத்தில் நன்கு அறியப்பட்டிருந்தன. அவற்றை ஒப்புமைகாட்டினால் கேட்பாரும் கற்பாரும் எளிதில் புரிந்து கொள்வர். அவற்றோடு நகைச்சுவையையும் தோய்த்துத் தருவது பிள்ளைக்குக் கைவந்த கலை. அரசியல் ஒப்பீடுகள் கருத்துவிளக்கங்களுக்குக் கருவியாகவே பயன்படுத்தப்பட்டன. ஆனால் இன்று அவை அக்கால அரசியல் வாழ்வின் படப்பிடிப் பாகப் பயனளிக்கின்றன.

*இவையும் அவையும் (1-9) என்ற பதிகத்தில் ஆழ்வார் தாம் பெற்ற இறை நுகர்ச்சியைப் பெருமகிழ்ச்சியுடன் பேசு கிறார். இறைவனைத் தம் எல்லா உறுப்புகளாலும் தாம் விரும்பியவாறே நுகர்ந்த படிகளைக் கூறிவருகிறார். ஒக்கலை யிலும் நெஞ்சிலும் தோளிணைகளிலும் நாவிலும் கண்ணிலும் நெற்றியிலும் முறையாகத் தங்கிய இறைவன் ஆழ்வாருடைய உச்சியுள் ஏறினான். அவ்வனுபவத்துக்குப் பாசுரமிடுகிறபோது

---

138. 7,1,0 ஈ

"ஒற்றைப் பிறை அணிந்தானும் நான்முகனும் இந்திரனும்
மற்றை அமரரும் எல்லாம் வந்து எனது உச்சியுளானே"[139]

என்கிறார். ஆழ்வாருக்கு இன்பத்தைப் பொறுக்கப் பொறுக்க ஊட்டுபவன் திருமால். அப்படியிருக்க, அரனும் அயனும் இந்திரனும் மற்றைய தேவர்களும் எல்லாருமாகக் கூடித் தொழுது கொண்டிருப்ப அவர்களுடன் திருமால் நெற்றியிலிருந்து உச்சி சேர்ந்து இன்பக்கலவியமுதைக் கொடுத்தானாகப் பாடியிருப்பதில் அரிய கருத்து உறைவதைக் காண்கிறார் பிள்ளை. திருமாலும் ஆழ்வாருமாக அந்தரங்க இன்ப நுகர்ச்சியில் திளைக்க அவர்கள் அங்கேவரக் காரணம் என்ன? 'ராஜாக்கள் அந்தப்புரத்தில் ஒரு கட்டில் நின்றும் மற்றைக் கட்டேறப் போகாநிற்க, நடுவே அந்தரங்கர் முகங்காட்டித் தம் காரியம் கொண்டு போமாபோலே, இவர் திருநெற்றியில் நின்றும் திருமுடியேறப் போகாநின்றால் பிரம்மாதிகள் நடுவே முகம் காட்டித் தங்கள் காரியங்கொண்டு போமித்தனை"[140] என்ற உவமை உரை நம்மை வியக்கச் செய்கிறது.

அரசியற் சார்பான அரிய உவமைகளிற் சில :-

"அரசகுமாரன் அழுகுசிறையிலே கிடந்தால், முடிசூடி அரசை
நடத்துவதிலும் சிறை விடுகை தானே பயனாக இருக்குமாப்போலே"[141]

"அரசர்கள் கறுப்புடுத்துப் புறப்பட்டால், விரும்புகிற காலத்தில்
முகங்காட்டுகைக்காக அந்தரங்கர் மறைந்து திரியுமா போலே[142]

"ராஜத்துரோகிகளைக் கொல்லும்போது ராஜசின்னங்களை வாங்கிக்

---

139. தி. வா. மொ. 1 , 9 , 10
140. 1 , 9 , 10 ஈ
141. 1 , 1 , 1 ஈ
142. 1 , 8 , 9 ஈ

கொல்லுவாரைப் போலே''[143]

அரசியற் சார்புகளை அடுத்து வேளாண்மைச் செய்திகளைப் பின்னணியாசக் கொண்ட உவமைகள் ஈட்டை அணிசெய்கின்றன. 'ஏகமூர்த்தி' [144] என்ற பாடலில் தேவர்களைப் படைத்த வகைகளைப் பேசி ''நாகமேறி நடுக்கடலுள் துயின்ற நாராயணனே'' என்று விளிக்கிறார் ஆழ்வார், தேவசாதியைப் படைத்ததும் பாற்கடலில் பள்ளி கொண்டானாம். இக்கருத்துச் சேர்த்தியின் அழகைப் புலப்படுத்த விரும்பிய நம்பிள்ளை ''பயிரைச் செய்து செய்த்தலையிலே குடிகிடக்குமாபோலே'' என்ற உவமையைச் சுட்டிக்காட்டுகிறார்.

வைணவசமய ஆசிரியர்களையே உவமையாக்கிய பெருமையும் நம்பிள்ளைக்கே சேரும். ஈட்டில் கூரத்தாழ்வானும் இராமானுசரும் பிள்ளையுறங்காவில்லிதாசரும் உவமைகளாகி ஆழ்வாருடைய மனநிலைகளை விளக்குகின்றனர். இந்த முறையைப் பிற மணிப்பிரவாள உரை ஆசிரியர்களும் பின் பற்றினர்' இலக்கணப் புலவர்களே அறியும் உவமைகளும் தத்துவ உவமைகளும் ஈட்டில் விரவியுள்ளன, வாழ்வியலில் ஒரு சார்பையும் விலக்காது அனைத்தையும் உவமைக்குக் கூறுகளாக ஆக்கிக் கொண்டதில் பிள்ளைக்கு இணையாக எண்ணத்தக்கவர்கள் இலர். பிள்ளை காட்டிய பல உவமைகள் பெரியவாச்சான் பிள்ளையின் எல்லா வியாக்கியானங்களிலும் தழுவிக் கொள்ளப் பட்டுள்ளன.

நம்பிள்ளையின் உவமைகளைக் கற்கும்போது பல தத்துவக் கருத்துகளை நன்கு அறிந்த வாழ்க்கை அனுபவங்களோடு ஒப்பிட்டுப் பார்த்துக் கற்பவர்கள் அவற்றைத் தன் மயமாக்கிக் கொள்ளமுடிகிறது.

---

143. 7, 6, 10 ஈ

144. 4, 3. 3 ஈ

# இயல் 3 : நம்பிள்ளையின் ஆய்வுத்திறன்

## திறன்காண் நெஞ்சம்

இறைவனால் மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்கள் ஆழ்வார்கள். அவர்களுள் நம்மாழ்வாரையே பெருஞ்சிறப்பாளராயும் தலைவராயும் வைணவ ஆசாரியர்கள் மதித்தனர், அவரைக் 'குலபதி' என்று ஆளவந்தார் கொண்டாடினார்.[1] நம்மாழ்வாரையே 'அவயவி' என்றும் கருதினர். "மற்றைய ஆழ்வார்கள் இவருக்கு அவயவமாயிருப்பார்கள்" என்பர் நம் பிள்ளையும்[2]. இறையருட் பேற்றுக்கு இலக்கானவர்களுள் உள்ளொன்றிய முழுமைநிலை எய்தி உலகை உய்விக்க அருமறையை அருளியவர் என்ற காரணத்தால் நம்மாழ்வாருக்கு அத்தனியிடம் தருகிறார் நம்பிள்ளை. அக் காரணத்தை நன்கு ஆய்வு செய்தால் நம்பிள்ளையின் திறன்காண்நெஞ்சம் புலப்படுகிறது.

## இறையருள் ஞானி (The Great Mystic)

நம்மாழ்வார் உலகினர் போன்றே மாறிமாறிப் பிறந்தார் ஒருவர். ஆயினும் இறைவன் தன்னுடைய கைம்முதல் கருதாத இயற்கை இன்னருளால் அவர்க்கு "விசேஷ கடாக்ஷம்"[3] செய்தருளினான். இறையருளால் அவர் உண்மையறிவு கைவரப் பெற்றார்; அதனால் மயர்வுகள் அற நீங்கின; பொறி புலன்களுக்கு அப்பாற்பட்ட உண்மைகள் தெளிவாயின; "சித்து அசித்து ஈசுவரன் என்ற தத்துவத் திரயங்களையும் தெளிவாக அறியவல்லவரானார்."[4] இறைவனை "பிரத்யக்ஷ சமாநாகார சாக்ஷாத்காரமாகக்"[5] கண்டவர் ஆழ்வார் என்பர் நம் பிள்ளை. அதாவது புலனைந்திற்கும் பிடிகொடாத பெருமானை உருவெளிப்பாட்டால் உள்ளதைப் போன்றே கண்டு இன்பம் எய்தினார் என்பது பிள்ளையின் கருத்து. இந்நிலையை 'Vision of Godhead' என்று வருணிப்பர் எவிலின் அண்டர்ஹில் என்ற அம்மையார்.[6] இவ்வின்ப உணர்ச்சியே ஆழ்வார் பெற்ற இறைமைக் கலவியாகும். அவ்வுணர்ச்சி இடையறவுபட்டால் அது

---

1. ஆளவந்தார், ஸ்தோத்ர ரத்னம், சு. 5.
2. 1-4-3 ஈ
3. ம. பி (1)
4. மேலது
5. மேலது
6. Evelyn Underhill, Mysticism, 1977 (Reprint), P.441

இறைமைப் பிரிவாகும். இக்கலவிக்கும் பிரிவுக்குமிடையே ஆழ்வார் பெற்றவை அனைத்தும் மனநுகர்வுகளேயாம். அவை பெருந்தொடராய்க் காப்பிய நுகர்வாகின்றன.

ஆழ்வாருடைய இறையருள் நுகர்ச்சியை (Mystical experience) நன்கு ஆராய்ந்திருக்கிறார் நம்பிள்ளை. இறையருட்பேற்றாளரின் வாழ்க்கையில் நான்கு நிலைகளை அறிஞர்கள் உணர்த்துகிறார்கள்,[7] அவை வருமாறு;

(அ) உடற்பொறை வெறுப்பு — **Purgation of bodily desires**

(ஆ) உள்ளத் தூய்மை — **Purification of one's will**

(இ) உள்ளத்து ஒளி — **Illumination of mind**

(ஈ) இறைமைக்கலவி — **Unification with Divine**

நம்மாழ்வாருடைய வாழ்க்கை வரலாறு அவருடைய நான்கு நூல்களே. அந்நான்கு நூல்களிலும் ஆழ்வாருடைய அகவளர்ச்சி, இறையருள் நுகர்ச்சி ஆகியவற்றை நுண்ணிதாக ஆராய்ந்து மேற்குறித்த நான்கு நிலைகளும் அவருடைய நான்கு நூல்களில் முறையாகவெளிப்படுவதை நம்பிள்ளை மகாப்பிரவேசத்துள் விரிவாக விளக்குகிறார்.[8] இதனை ஆராய்வதற்காகவே 'மூன்றாம் சிரியப்பதி'யை உருவாக்கியிருக்கிறார். அவர் காட்டும் நிலைகளாவன :-

(அ) திருவிருத்தத்தில், இறைநுகர்ச்சிக்கு இடைச்சுவராய்ப் பகையாயிருக்கும் உடலின் தொடர்பை அறுத்தருள வேணும் என்று இரக்கிறார். திருவிருத்தத்தின் முதலும் முடிவுமான பாசுரங்களில் ஓடும் ஆழ்வாருடைய விண்ணப்பத்தையும் எண்ணத்தையும் கொண்டு நம்பிள்ளை இம்முடிபைக் காண்கிறார். இறையருள் வாய்க்கப் பெற்றதும் 'பிறப்பறுக்கலுற்றார்க்கு உடம்பும் மிகை'[9] என்ற நிலை (Purgation of bodily desires) ஆழ்வார்க்கு ஏற்பட்டது என்பதை விளக்குகிறார்.

---

7. The New Encyclopaedia Britannica, Vol. 12, 1977, P. 786-790. Awakening, Purgation, Illumination, Surrender, Union என்ற ஐந்து நிலைகளை எவிலின் அண்டர்ஹில் காட்டுகிறார்.
- Evelyn Underhill, மு. நூ., ப. 203
8. ம. பி. (3)
9. திருக்குறள். 345

(ஆ) திருவாசிரியத்தில், ஆழ்வாருடைய மனத்தில் இறைவனுடைய எழில் நலன்கள் உறைந்தன. அதனால் எண்ணங்கள் தூயனவாய் அவனையே பற்றித்தூய்மையாயின. "ஸம்ஸார ஸம்பந்தமற்று ஒரு தேசவிசேஷத்திலே போனால் அனுபவிக்கக்கடவ தன்னுடைய மேன்மையையும் நீர்மையையும் வடிவழகையும் பரப்பற ஏழுபாட்டாலே அனுபவிக்கலாம்படி இங்கேயிருக்கச் செய்தே ஒரு தசா வைசத்யத்தைப் பண்ணிக் கொடுக்க அவ்வழகை அநுபவித்தார்."[10] என்பது ஈடு. இதில் **'Purification'** என்ற இரண்டாம் நிலையைப் பார்க்கிறோம்.

(இ) பெரிய திருவந்தாதியில், "இப்படி அனுபவித்த விஷயத்தில் விஷய அனுரூபமான ஆசை கரைபுரண்ட படியைச் சொன்னார்";[11] இரண்டாவது நிலையினையே 'தசா வைசத்யம்' (தெளிவானநிலை) என்று குறித்துள்ளார். அதற்கு மேல் அத்தெளிவு கரைபுரண்ட நிலையை ஈண்டுக் காட்டுகிறார். இது **"Illumination"** என்று கொள்ளத்தக்கது.

(ஈ) திருவாய்மொழியில், இவை எல்லாம் படிப்படியாக வளர்ந்து பக்குவம் அடைந்து பரஞானம் பரமபக்திகள் தலை எடுத்து இறுதியில் ஆழ்வார் அவாவற்று வீடுபெற்று இறைவனடி சேர்ந்தார். "ஆமத்தை அறுத்துப் பசியை மிகுத்துச் சோறிடுவாரைப் போலே, தமக்கு ருசியைப் பிறப்பித்த படியையும் அந்த ருசிதான் பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகளாய்க் கொண்டு பக்வமான படியையும், பின்பு ப்ரக்ருதி சம்பந்தமும் அற்றுப் பேற்றோடே தலைக்கட்டின படியையும் சொல்லுகிறார்"[12] என்பர் நம்பிள்ளை. இதுவே இறையருட்பேற்றாளரின் (Mystics) இறுதி நிலையான 'Unification' என்பது ஆகும். இந்நான்கு நிலைகளிலும் ஆழ்வார்க்கு இறையனுபவம் பொறுக்கப்பொறுக்கவே அமைந்தது. முதல் நிலையிலேயே இறுதியான பேறுகூடினால், ஆழ்வாரால் அதைத் தாங்க முடியாது. "இந்நின்ற நீர்மை என்றதும் வீற்றிருந்தேழுலகில் அனுபவத்தை அனுபவிப்பித்தானாகில் ஆழ்வார் கிடையாது"[13] என்பர் பிள்ளை.

10. ம. பி. (3)
11. மேலது
12. மேலது
13. 4. 5. 5 ஈ

இந்த நான்கு நிலைகளையும் முழுதுமாகப் பெற்றுத் தம் அனுபவத்தை வெளியிட்டாராதலின் நம்மாழ்வாரையே ஞானிகளில் தலைவராக உரையாசிரியர்கள் கொண்டாடுகின்றனர் நம்மாழ்வார்க்கு ஒப்புச் சொல்லலாவார் மண்ணுலகிலும் விண்ணுலகிலும் இலர் என்றும் அவர் எல்லார்க்கும் தம்முடைய ஒரோவகைகளாலே உவமையாயிருப்பர் என்றும் நம்பிள்ளை ஆய்வு செய்து அறுதியிட்டிருக்கிறார்,[13அ] இத்தகைய உள்ளொன்றிய துய்ப்பாகிய இறையனுபவத்தை (Mystical experience) முதன் முறையாக ஆய்வுசெய்தவர் தமிழிலக்கிய உலகிலேயே நம்பிள்ளை தான்.

**அழகுணர்ச்சி (கவிக்கு உள்ளூறை)**

ஆழ்வாருக்கு இறையருள் நுகர்ச்சியை முதன் முன்னம் எழுப்பியது இறைமைப் பண்புகளே என்பது நம்பிள்ளையின் தேர்ந்த கருத்தாகும். 'உயர்வற உயர்நலம் உடையவன்'[14] என்று ஆழ்வாரைச் சொல்லுவித்தது இறைவனுடைய பண்பு நலன்களே. ''இவர்தாம் முற்படக் குணங்களிலே இழிவானேன் என்னில், தாம் அகப்பட்ட துறை அதுவாகையாலே, இவரைக் குணத்தையிட்டாயிற்று வணக்குவித்தது''[15] என்பர் பிள்ளை.

'தொழுது எழு என் மனனே' என்று வணங்கிய ஆழ்வாரைக் கவி பாடும்படி தூண்டியது யாது என்பதையும் ஓரிடத்தில் பிள்ளை ஆராய்கிறார். ஆராய்ச்சிக்கு அடிப்படையாக ஆழ்வாருடைய பாடல் அடியையே கொள்கிறார். 'இன் தமிழ் பாடிய ஈசனை ஆதியாய் நின்ற என் சோதியை'' என்பது அவ் அடிப்படை அடியாகும். அதற்கு ''ஈசனால் செய்யப்பட்டதால் திருவாய்மொழியாகிற தமிழ் இனிமை பெற்றது; ஆழ்வார் கவி பாடுகைக்கு ஆதியாக நின்றான் அவனே'', என்று நயமுணர்த்தியபின் இறைவன் கவிக்கு ஆதியாக (ஏது) நின்றபடியை நம்பிள்ளை அற்புதமாக விரித்துரைக்கிறார். ''பிடாத்தை விழவிட்டுத் தன் வடிவழகைக் காட்டினான். திருத்திரை எடுத்தால் கூப்பிடுமாபோலே கூப்

---

13. (அ) ம. பி. (1)
14. தி. வா. மொ. 1-1-1
15. 1-1-1 ஈ
16. தி. வா. மொ. 7-9-1

பிட்டேன். அது கவியாய்த் தலைக்கட்டிற்று''[17] என்று ஆழ்வார்க்குக் கருத்தாக அவர் கூற்றுபட மொழிகிறார். அதற்கு மேல் ''வடிவழகைக் காட்டியாயிற்றுக் கவிக்கு உள்ளூறை கொடுத்தது''[18] என்று முருகு உணர்ச்சியே கவிதையின் தூண்டுகோல் என்ற அரிய கொள்கையை வெளிப்படுத்துகிறார்.

**இலக்கணம் இயைந்தது ஏன்?**

ஆழ்வார் இறையருட் பேற்றால் பரமபக்தி விளையப் பெற்றார், அதனாற் பெற்ற அனுபவமே உள்ளடங்காமை புறம் பொசிந்தது, புறம் பொசிந்த சொற்களின் ஈட்டம் இனிய கவிதைகளாக விழுந்தன. இதற்குக் காரணத்தை உரைப்பாயிரத்தில் விரிவாக ஆய்வுசெய்தார். இறையனுபவத்தில் சில போது பிரிவு நிகழ்ந்து ஆழ்வார் கலங்கிச் சொன்ன பேச்சுக்களும் பாவிலக்கணங்கள் தாமாகவே வாய்க்கப்பெற்றன என்பர் பிள்ளை. 'நிரைக் கொள் அந்தாதி'[19] என்ற தொடரை விளக்கும் போது. ''இவர் முன்னடி தோற்றாதே மடலூரச் செய்தேயும் பிரபந்தமானது எழுத்தும் சொல்லும் பொருளும் அடியும் தொடையும் பாவும் இசையும் தாளமும் அந்தாதியும் சேர விழுந்தபடி ... சோகவேகத்தாலே சொல்லச் செய்தேயும் ப்ரஹ்மாவின் ப்ரஸாதத்தாலே ஸர்வ லக்ஷண உபேதமானாற் போலவே பகவத் ப்ரஸாதம் அடியாகப் பிறந்ததாகையால் இலக்கணங்கள் சேர விழத் தட்டில்லை''[20] என்றுகுறிப்பிடுகிறார். இத்தகைய அரிய நிலையைத் தான்'உள்ளொன்றியம்' (Mysticism) பற்றி விரிவாக ஆய்வு நிகழ்த்திய அண்டர்ஹில் அம்மையார் **'Automatic Composition'** என்று குறிப்பிட்டு மேலும் அந்நிலையில் சொற்களும் தொடர்களும் கருத்துக்களும் தாமாகவே ஒருகட்டுக் கோப்பான வடிவ அமைப்புக்குள் அடங்கிவிடுகின்றன என்றும் கருத்துத் தெரிவிக்கிறார்.[21] ஆழ்வார் திருவாய் மொழியில் பெருந்துயர் எய்தி அலமாப்படைந்த இடங்கள் பல. அப்படித் துயரம் எய்தினும் அவற்றையும் ஆழ்வார் கவிகளாக வெளிப்படுத்தினார். ''அன்று இவர் தாம் வியசனப்பட்டாரேயாகிலும்

17. 7-9-1 ஈ
18. மேலது
19. தி. வா. மொ. 5-3-11
20. 5-3 11 ஈ
21. Evlyn Underhill, மு. நூ., ப. 79

இவர் அருளிச் செய்த பிரபந்தங்கள் லோகத்துக்குத் தண்ணீர்ப் பந்தலாயிற்று",[22] என்று சுட்டிக் காட்டுகிறார்.

எனவே, ஆழ்வாருடைய மதிநலத்தால் விளைந்த இன்ப துன்ப உணர்வுகள் இறையருளால் தமிழ் நூல்களாக மலர்ந்தன. இது நம்பிள்ளையின் கோட்பாடு. ஆயினும் இலக்கணங்கள் ஒரு சேர அமையப் பெற்ற எல்லா நூல்களும் இன்கவிகள் ஆகா. இலக்கணங்கள் சேர்வதோடு சொற்களில் ஒரு இனிமை இழைந்தோட வேண்டும். ஆழ்வார் பாடல்களில் இத்தகைய இனிமையைப் பிள்ளை காண்கிறார், ''லக்ஷணோபேதமாய் அந்த லக்ஷணம் கிடக்கச் செய்தே சொல்லின் இனிமைதானே ஆகர்ஷகமாம்படி இனிதான கவிகள்''[23] என்று ஆழ்வார் பாடல்களைப் பற்றிய தம் மதிப்பீட்டைச் சொல்லியிருக்கிறார்.

திருவாய்மொழி பற்றிய மேலும் சில கருத்துக்களைப் பரந்து கிடக்கும் ஈட்டில் ஆங்காங்குக்காணமுடிகிறது. அவற்றை ஒரு சேர ஓரிடத்தில் காண்கிறபோது நம்பிள்ளையின் தனிக் கருத்துக்களைப் பார்க்க முடிகிறது. அவையாவன :-

(1) ''ஆழ்வாருடைய வாக்கிலேபுக்கு...நாம் தூயராய் அடிமை செய்ய வேண்டும் என்று அச்சொற்கள் தாம் 'என்னைக் கொள், என்னைக் கொள்' என்று வந்து அடிமை செய்தன.''[24]

(2) தமிழ்ச் சொற்கள் ஆழ்வார் திருவாக்கால் தூய்மை பெற்றன.[25]

(3) ஆழ்வார் நூறுநூறாகத் திருவாய்மொழி செய்தது கற்பார்க்கு எளிதாயிருப்பதற்காக. ''பத்துப்பாட்டு ஒருதிருவாய் மொழியாய் பத்துத் திருவாய்மொழி ஒரு பத்தாய் இப்படிப் பத்துப் பத்தான ஆயிரம்''[26]

(4) திருவாய்மொழி ஓர் இலக்கியம். இதைக்கொண்டு பக்தி நூல்களுக்கு இலக்கணம் காணவேண்டும். ''பின்

---

22. 6-9-0 ஈ
23. 7-9-3 ஈ
24. 6-8-11 ஈ
25. 9-4-11 ஈ
26. 2-3-11 ஈ

புள்ளார்க்கும் இது கொண்டு லக்ஷணம் கட்டலாம்படியாய்த்து இவை இருப்பது''[27]

(5) திருவாய்மொழிக்கு ஆழ்வாரிட்ட பெயர் 'அவாவில் அந்தாதி' என்பதே[28]

**பக்திநூற் கோட்பாடுகள்:-**

ஆழ்வார்க்குப் பின்னர்த் தோன்றிய தமிழ் நூல்களை நம்பிள்ளை நன்கு அறிவர். அவற்றிற் சிலவற்றை ஈட்டில் மேற்கோளாக ஆண்டிருக்கிறார். ஆயினும் அவற்றில் எல்லாம் பொழுது போக்காமல் திருவாய்மொழியைப் பற்றியே துவண்டதால் அவருக்கு ஆழ்வாருடைய உள்ளக்கிடக்கைகள் நன்கு தெளிவாயின. ''ஆழ்வார்க்குப் பின்பு நூறாயிரம் கவிகள் போரும் உண்டாய்த்து;அவர்கள் கவிகளோடு கடலோசையோடு வாசியற்று அவற்றை விட்டு இவற்றைப் பற்றித் துவளுகைக்கு அடி-இவருடைய பக்தி அபிநிவேசம் வழிந்து புறப்பட்ட சொல்லாகையிறே''[29] என்று மனமுருகிக் கூறுகிறார். ஆதலால் ஆழ்வாரை நன்கு அறிந்த பேராசிரியரான நம்பிள்ளை காட்டுகின்ற பக்தி இலக்கியக் கோட்பாடுள் கற்பதற்குரியனவாகின்றன. இனி அவற்றை முறையாகக் காண்போம்.

**விருப்பும் வெறுப்பும் :-**

ஆழ்வார்க்கு இன்ப துன்பங்கள் ஏற்பட்டு அவற்றால் விருப்பு வெறுப்புகள் ஏற்படுவதாக நூல்கொண்டு அறியப்படுகிறது. அருளாளரான அவர்க்கு இவை ஏன்? உலகியற் செருக்கால் வருமவையே ஒதுக்கற்குரியவை; இறை அனுபவத்தால் வருமவை எல்லாம் ஏற்கத் தக்கனவே. அதனால் ஆழ்வார் இறையுணர்ச்சியில்லாதாரை நிந்திப்பதும் கொள்ளத்தக்கதேயாம். பிராட்டியைக் கண்டு வந்த பெருமகிழ்ச்சியால் மதுவனத்தை வானரமுதலிகள் அழித்ததை உரையாசிரியா ஈண்டுக் காட்டுகிறார்.[30]

**காலத்தாழ்வு ஏன் ?**

ஆழ்வார் ஆசைப்பட்ட பேற்றை உடனே வழங்காது இறைவன் காலந்தாழ்த்தது ஏன்? *நோற்ற நோன்பு (5-7)

---

27. 10 - 6 , 4 ஈ
28. 10 , 10 , 0 ஈ
29. 10 , 10 , 11 ஈ
30. 3 , 4 , 10 ஈ

* ஆராவமுதே (5-8) *மானேய்நோக்கு (5-9) *பிறந்தவாறும் (5-10) என்ற நான்கு திருவாய் மொழிகளிலும் ஆழ்வார் இறைவனைச் சரணம் புக்கும் உடனே தாம் விரும்பியதைப் பெற்றிலர் “ஆழ்வாருடைய ஹிதத்தைப் போல உலகினருடைய ஹிதத்துக்கும் கடவனாகையாலே ஈசுவர புத்தியாலே தலைக் கட்டிற்றில்லை”[31] என்பது பிள்ளை காட்டும் காரணம். இறைவனுடைய நினைவுகள் இன்னவை என்பதை வேறிடத்தில் காட்டுவர். ஆழ்வாருடைய திருமேனி இறுதியான ஒன்றாகையால், அதனை இன்னும் சில காலம் நிறுத்தித் தான் கண்டு அனுபவிக்க விரும்பினான் இறைவன்; மேலும் “ப்ரஜைகளைப் பட்டினியிட்டு வைத்தும் வந்த விருந்தினரைப் பேணுவாரைப் போல இவர்தாம் நாலுநாள் நோவு பட்டாராகில் படுகிறார்; இவருடைய பிரபந்தத்தைக் கொண்டு நாட்டை வாழ்விப்போம் என்றிருந்தான்”[32] என்பர் நம்பிள்ளை. இறைவனுடைய இவ் விரண்டு நினைவுகளே ஆழ்வார்க்குப் பேறு உடனே கிடைக்காது தாழ்த்ததற்குக் காரணம் என்பது நம்பிள்ளையின் அரிய கண்டு பிடிப்பாகும்.

ஆழ்வார் செய்த அடிமை யாது? :-

‘ஆட்செய்து ஆழிப்பிரானைச் சேர்ந்தவன்’[33] என்று தம்மை ஆழ்வார் அறிமுகப் படுத்துகிறார். ஆழ்வார் தாம் செய்ததாக நினைக்கும் அடிமை இன்னது என்பதை ஈடு ஆராய்கிறது.

அடிமை என்பது மன, மொழி, மெய்களால் செய்யப் படலாம். இறைவனை நினைத்த மாத்திரத்தில் ‘காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்’[34] என்ற தன்மையர் ஆழ்வார். ஆகையாலே மன, மெய் அடிமைகள் அவர்க்கு இல்லையாயிற்று.

இனி வாக்கினால் அடிமையைக் கருதினார் என்றால், மேற்குறித்த அறிமுகம் நூலின் இறுதியில் *முனியே நான்முகனே யில் இருக்க வேண்டும். அல்லது நூலுக்கே சுருக்கமான முதல் திருவாய்மொழியிறுதியில் இருக்க வேண்டும். அல்லது,

31. 6, 1, 0 ஈ
32. 7, 2, 0 ஈ
33. தி. வா. மொ. 4, 10, 11
34. பெ. தி. அந்., 34

உண்மையில் வாக்கினால் அடிமை செய்த *புகழுநல்லொரு வனில்' (3-4) இருக்கத்தகும். இவை ஒன்றிலும் இல்லையாத லால், வாக்கினால் அடிமையைக் கருதவில்லை.

இனி, பரத்துவத்தை அறுதியிட்டதும் அடிமையன்று; அப்படியானால் முதல் திருவாய்மொழியில் இருக்க வேண்டும்; பரத்துவத்தை உபதேசித்ததும் அடிமையன்று; அப்படியானால் *திண்ணன் வீட்டிலும் (2-2) *அணைவதரவணையிலும் (2-8) இருக்க வேண்டும்.

இப்படி நெடுகி ஆய்வுசெய்து, இறுதியில் அறிவுரைக ளால் உலகினரைத் திருத்திப் பணிகொண்டு அவர்களை இறைவனுக்குப் பல்லாண்டு பாடுவோராக ஆக்கியதைக்காட்டி அதுவே ஆழ்வார் செய்த அடிமை என்பதைக் காட்டுவர்.[35] இதனால் ஆழ்வார் செய்த நூல் ஒரு பயனோடு நிறைவு எய் துவதை உணர்த்துகிறார்.

**திறனாய்வாளர் :-**

திருவாய்மொழி அனுபவிக்கவேண்டிய ஒரு நூல். அதை அனுபவிக்க இலக்கிய விடாய் தேவை. அறிவினும் உணர்ச் சிக்கே முதன்மைகொடுத்து நுகர வேண்டிய காதல் இலக்கியம் அது. நுகர்தற்குரிய நூலில் தருக்கவாதங்கள் செய்வது செவ் வையன்று. இளநீரைப்பருக வேண்டிய திருக்க, அது எவ்வாறு உட்புக்கது என்று ஆராய்வதா? "தேங்காய்க்கு இளநீர் புக்க வழி ஆராய்ந்தன்றிறே விடாய்த்தவன் இளநீர் குடிப்பது?"[36] என்று கேட்கிறார் பிள்ளை. இளநீரைக் குடிப்பவன் இலக் கியச் சுவைஞன்; புக்கவழிதேடுபவன் அறிவியலறிஞன். இலக் கியச் சுவைஞர்களே திருவாய்மொழியை அனுபவிக்க முடியும்.

திருக்கண்ணபுரப் பதிகத்தில் 'வெள்ளி ஏய்ந்த மதிள் சூழ் திருக்கண்ணபுரம்'[37] என்று ஆழ்வார் வருணிக்கும் போது வெள்ளியால் மதிளை இயற்றுவாருண்டோ? அப்படிக் கண்டி லோமே! என்றெல்லாம் வினாக்களை எழுப்பிக் கொண்டிருந் தால் கவிதையின் உயர்வு நவிற்சியில் புதையுண்டிருக்கும்

35. 4, 10, 11 ஈ
36. 10, 8, 9 ஈ
37. தி. வா. மொ. 9, 10, 2

சுவையை இழந்துவிட நேரும். கவிதைக்கண் பெற்றிருப்பார்க்குப் பொன்மதிளாகவும் தோற்றும் என்பது பிள்ளையின் கருத்து. "பிரத்யக்ஷிக்கிறிலோம், ஆகிலும் ப்ரேமாதிசயத்தாலே அதி விலக்ஷணமாய்த் தோற்றுமிறே"[38] என்று கூறுகிறார். கவிதை யனுபவத்துக்கு 'பிரேமாதிசயம்' (உயர்ந்த பிரேமை) தேவை என்பதும் பிள்ளையின் கொள்கையாகும்.

## கவிதை அனுபவம்

கவிதை அனுபவம் பற்றியும் நம்பிள்ளை தம் கருத்துக் களை ஈட்டில் பொதியவைத்திருக்கிறார். இனிய கவிதைகளை வாய்விட்டுப் படித்துப் பொருளையும் சிந்தித்தால் அப்பொரு ளுக்கு ஏற்றவாறு கற்பவரின் உடலில் மெய்ப்பாடுகள் தோன் றும். மெய்ப்பாடு படச் சுவைப்பதே உயர்ந்த கவிதை அனு பவம்[39] இதனை ஓர் ஐதிஹ்யத்தால் ஈட்டில் விளக்கியுள்ளார். இராமானுசரின் மெய்ப்பாட்டைக் கண்டு அவர் ஓதியது இன்ன பாடல் என்பதை எம்பார் மறைவாகக் கண்டவர் உணர்ந்து கொண்டாராம்.[40]

இனிய கவிதைக்கு ஓர் எடுத்துக் காட்டையும் நம்பிள்ளை ஈட்டில் வழங்கியுள்ளார். 'இன்கவிபாடும் பரமகவிகள்"[41]' என் னுமிடத்தில் இன்கவிக்கு உதாரணமாகப் பூதத்தாழ்வாரின் ஒரு பாடலைக் காட்டி அதன் சுவைகளை விளக்குகிறார். 'பெருகுமதவேழம்'[42] என்ற அப்பாடலில் சொல்நயம், பொருள் நயம், குறிப்பு நயம் இவற்றுடன் உருக்காட்சியும் சிறப்பாக அமைவதை விளக்குகிறார்.

## ஈடுபாடு

ஆழ்வாருடைய மனப் போக்குகளை நன்கு அறிந்த நம் பிள்ளை தாமே சில இடங்களில் ஆழ்வாருடைய நெஞ்சிலோடு கிற உணர்ச்சிகளை எட்டிப் பிடிக்க மாட்டாமல் திணறுவதை ஒப்புக்கொள்வர்.

38. 9.10,2 ஈ
39. இதனைக் கவிதை அனுபவத்தின் கொடுமுடி என்பர் ந. சுப்புரெட்டியார் — கவிதை அனுபவம், 1961 ப, 127.
40. 10,8,3 ஈ
41. தி, வா, மொ. 7, 9, 6
42. இ, தி, அந்,, 75

(1) 'அருளாதநீர் அருளி'[43] ஆழ்வார் வரிவண்டுகளிடம் செப்பும் தூதுமொழிகள் இவை. 'அருளாமைக்கு' 'சங்கற்பித்திருக்கிற நீர்' என்று அவனிடம் சொல்லுமாறு வண்டுகளை வேண்டுகிறார். "இங்கு, "மயர்வற மதிநலம் அருளினன்! என்று நெஞ்சுருகிக் கிடக்குமவர் 'அருளாதநீர்' என்கிறது என்ன தசாவிஷேம் என்று அறிகிலோம்[44] என்று முடி மேல் கை வைக்கிறார் நம்பிள்ளை.

(2) *மின்னிடை மடவாரில் (6-2) ஆழ்வார் இறைவன் வந்து முன் நிற்கவும் 'போ' என்னர் நின்றார். *மாசறுசோதியில் (5-3) கையும் மடலுமாகப் புறப்பட்டவர், இப்படித் தள்ளிக் கதவடைத்து ஊடியதைக் கண்டு நம்பிள்ளை "இதுக்கு அடி என்னென்று அறிகிவோம்"[45] என்று முடித்தார்.

முழுப்பார்வை

ஓர் உரையாசிரியர்க்கு முதற்கண் வேண்டுவது மூலநூலில் முழுமைப் பயிற்சியாகும். இப்பயிற்சி கைவருதற்கு மூல நூலைப் பன்முறை ஓதியும் ஓதுவித்தும் நெஞ்சிற்கொள்ள வேண்டியது இன்றியமையாதது. திருவாய் மொழியை ஓதி உருச்செய்து பல்லாண்டுகள் அதனை நுகர்ந்து புலவரையும் நுகர்வித்தவர் நம்பிள்ளை. அதனால் ஆழ்வாரின் படைப்புக்களான நான்கு நூல்களிலும் அவர்க்கு ஒருமைப் பார்வை நன்கு பதிந்துள்ளது. அதன் விளைவாக 'முழுப் பார்வை' அவருக்குக் கிட்டியது. அதனாலேயே நூல் எழுதிய 'புலவர் பார்வை'[46] யும் அவருக்கு வாய்த்தது.

முழுமைப்பார்வையால் மூலநூலின் ஓட்டங்களை நுனித்தறியும் அறிவுத் திட்பம் நம்பிள்ளைக்குச் சேர்ந்தது. அதனால் மூலநூலில் பல்வகைப் புனைவுகளையும் அழகுகளையும் செறிவுகளையும் ஒரே பார்வையிற் கண்டுணர்ந்து பிறர்க்கும் உணர்த்துகிறார், முழுப்பார்வையின் ஒரு சிறப்புப்பயன் தொடர்பழகைச் காண்பது என்பர் பேரறிஞர் வ. சுப. மாணிக்கனார்.[47] 'இயைபுகள்' என்ற கட்டுரையில் தொடர்பழகைப் பிள்ளை உணர்த்திய முறையைக் கண்டோம்.

43. தி, வா. மொ, 1, 4, 6
44, 1-4-6 ஈ
45. 6-2.2 ஈ
46. வ. சுப. மாணிக்கம், கம்பர், 1972 ப. 15.
47. மேலது, பக். 23—30.

**போக்குகள்**

திருவாய்மொழியில் பல இடங்களில் இறைவனுடைய திருப்பெயர்களில் ஒன்றாகிய 'நாராயணன்' என்பது வருகிறது. அவ்விடங்கள் பலவற்றிலும் நெடுகி அமைந்து கிடக்கும் ஒரு போக்கினை அறிவுறுத்துகிறார். நாராயண நாமத்தைச் சொல்ல நேர்ந்தால் அதனுடைய பொருள் முற்பாசுரத்தில் விவரிக்கப்படும். அன்றி மாறி அமைதலும் உண்டு. இதனை ஒரு 'நிர்ப்பந்தம்' என்பர் பிள்ளை. ஒருதொடர்க்கண்ணேயே இப்போக்கினைக் காட்டுகிறார். ''யாவையும் யாவரும் தானாம் அமைவுடை நாரணன்''[48] என்பதையும் ''நாரணன் முழுவேழுலகுக்கும் நாதன்''[49] என்ற தொடரையும் அப்படி அமைவதாகக் காட்டியுள்ளார். இவற்றால் திருநாமத்தை ஓதி உரு எண்ணுவதிலும் அதன் பொருளைச் சிந்திப்பதே ஆழ்வார்க்குக் குறிக்கோள் என்பதனைத் தெளிவிக்கிறார்.

**கொள்கை மாற்றம் :-**

முதல் திருவாய்மொழியான *உயர்வற (1-1) வில்ஆழ்வார் பரத்துவத்தை அறுதியிட்டு அப்பரம்பொருளை வழிபடுக என்று *வீடுமின் முற்றத்தில் ((1-2) உலகினரைக் குறித்து உபதேசிக்கிறார். ஆழ்வார் இறைநிலைகளில் பரத்துவத்திலேயே ஊன்றிப் போருகிறாரோ என்ற எண்ணம் இதனால் ஏற்படுகிறது. உடனே மூன்றாவது திருவாய்மொழியில் அவதாரங்களைப் பேசி அனுபவிக்கிறார். அதிலிருந்து நூல் முடியும் வரை அவதார அனுபவத்திலேயே ஆழ்வாரின் அனுபவம் முற்றச் செல்வதை உரையாசிரியர் கண்டு உணர்த்துகிறார். ''நாடி நாடி நரசிங்கா என்று, வாடிவாடும் இவ்வாணுதலே''[50] என்ற இடத்தில் உயர்வற உயர்ந்த பரம்பொருளின் நிலைகுறித்து விளிக்காது அவதரித்து எளியனான நிலைபற்றி 'நரசிங்கா' என்று கூப்பிட்டதன் நயம் உணர்த்துங்கால், ''பத்துடையடியவர்க்குப் பின்பு அவதாரத்துக்கு அவ்வருகு இவர் போகமாட்டார்'' என்று தம் முழுப்பார்வை முடிவொன்றைக் குறிப்பிடுகிறார்.

*ஒழிவில் காலத்தில் (3-3) ஆழ்வார் திருமலை எம்பெருமானுக்கு எல்லா அடிமைகளையும் செய்ய வேண்டும் என்று

---

48. தி. வா. மொ.. 1 — 2 — 10
49. மேலது, 2 — 7 — 2
50. மேலது 2 — 4 — 1
51. 2 — 4 — 1 ஈ

மிகவும் பாரிக்கிறார்' 'ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி, வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்'[53] என்ப தாகப் பாரிக்கிறார். அப்போது 'நாம்' என்பதன் குறிப்பை விளக்க வேண்டிய தேவை உரையாசிரியர்க்கு எழுகிறது. தன்மைப் பன்மையாகக் கொள்ள அவருடைய முழுப் பார்வை இடம்தர வில்லை. ''தம் திருவுள்ளத்தையும் கூட்டி 'நாம்' என்கிறா ராதல்'' என்று ஆழ்வார் இயல்புக்குச் சேர உரைக்குறிப்புச் செய்த பிள்ளை, ''அன்றிக்கே*கேசவன் தமர்க்குப் (2-7) பின்பு இவர் தாம் தனியரல்லாமையாலே திருவுள்ளம் போலேயிருக் கும் ஸ்ரீவைஷ்ணவர்களையும் கூட்டிக் கொண்டு 'தாம்' என் கிறாராதல்'' என்று ஆழ்வாருடைய நூற்போக்கு அறிந்து நயவுரை செய்கிறார். பதினைந்தாவது பதிகத்தில் ஆழ்வாரு டைய மானசானுபவ வாழ்க்கையில்[53] கேசவன் தமரான அடியார் அளவும் அவருடைய வாழ்வு பலித்தது காணப்படு கிறது. அதனால் பதினாறாவது திருவாய்மொழி தொடங்கி அடியார்கள் சூழ ஆழ்வார் இருந்தாராகக் கொண்டு உரை யிடுவர் பிள்ளை. 'எங்கள் செல்சார்வு யாமுடை அமுதம்'[54] என்றவிடத்திலும் இதனை மறவாது 'கேசவன் தமர்க்குப் பின்பு தனியரல்லரே' என்று நினைவூட்டுவர்.

### விடாயும் விளைவும்

முழுப்பார்வையால் நூல்முழுதும் ஓடிக்கிடக்கும் ஆழ்வா ருடைய அகவுணர்வைப் பளிச்செனப் பார்க்க முடிகிறது. அதனால் ஒரு சிறப்பான பலன் விளைகிறது. திருவாய்மொழிப் பதிகங்களின் இடப்பெயர்ச்சியைக் காட்டி வியக்க முடிகிறது. *வீற்றிருந்தேழுலகும் (4-5) என்ற திருவாய் மொழி முப்பத் தைந்தாம் பதிகம். இது உண்மையில் இடம் பெற்றிருக்க வேண்டிய நிலையை ஆய்வு செய்கிறார். *மண்ணையிருந்து துழாவியில் (4-4) பிரிவித்துயர் எல்லையிலிருந்தவர் உடனே அடுத்த திருவாய்மொழியான *வீற்றிருந்தேழுலகில்(4-5) மகிழ்ச்

---

52. தி. வா. மொ. 3 -- 3 -- 1

53. 5 . 5 . 10 ஈட்டில் 'பொய்ந்நின்ற ஞானம் தொடங்கி முனியே நான்முகன் அளவும் செல்ல ஏகவாக்யமிறே; நடுவுள்ளவை அநுபவப்ரகாரங்களால் பிறக் கிற விசேஷங்களிறே' என்பர். ஈண்டு 'ஏகவாக்யம்' என்பதற்கு 'மானச அநுபவம்' என்று பொருள் வரைந்தார் அரும்பதகாரர்.

54. தி. வா. மொ. 8 . 4 . 2

சியின் உச்சிக்குச் செல்லுகிறார். பிரிவுத் துயரும் கலவி மகிழ்ச்சியும் ஆழ்வாருக்கு அடுத்தடுத்துத் தோன்றுவதே ஆயினும், வீற்றிருந்தேழுலகை (4-5) நன்கு ஆராய்ந்தபின் இப்பதிகத்தின் சிறப்பினை[55] விளக்குகிறார்.

> ''பொய்ந்நின்ற ஞானம் தொடங்கிக் கீழ் எல்லாம் *மண்ணையிருந்து துழாவியில் விடாய்க்குக் கிருஷி பண்ணினபடி. அப்படி விடாய்க்குப் பண்ணின கிருஷியின் பலம் சொல்லுகிறது இதில். பேற்றுக்கு இதுக்கு அவ்வருகு சொல்லலாவது இனியொன்றில்லை''[56]

என்பது பிள்ளையின் அகல நோக்கின் ஆய்வுரையாகும். ஆழ்வாரின் முதல் பிரபந்தத்தின் முதற்பாசுரத்திலிருந்து தம் ஆய்வைத் தொடங்குகிறார். திருவாய் மொழி நூலிலேயே *மண்ணையிருந்து துழாவியில்தான் ஆழ்வாருடைய விடாய் பேரளவுபட்டு நிற்கிறது. இவ்விடாய் சடக்கெனத் தோன்றவில்லை. 'பொய்ந்நின்ற ஞானத்தில் விடாய்ப்பயிர் முளைத்தது; ஐந்நூற்றெழுபது பாடல்களில் அது வளர்க்கப்பட்டுக் கதிர் வாய்த்து முதிர்ந்தது; விடாய்ப் பயிரின் பலனை *வீற்றிருந் தேழுலகில் (4-5) ஆழ்வார் அறுவடை செய்து நுகர்வதாகப் பிள்ளையின் உருவகப்பார்வை அமைகிறது.[57] இதனையொத்த நுகர்வுப் பேற்றை மற்றுமோர் முறை நூல் இறுதிக்கண் ஆழ்வார் அடைகிறார். ஆதலால் இத்திருவாய்மொழிப்பதிகம் இறுதிப்பதிகத்துக்கு முன் அமைந்திருக்கத் தகும் சால்புடையது என்பது பிள்ளையின் கருத்து. இதனைத் தம் ஆசிரியரது திருவாக்கைக் கொண்டு நிறுவுகிறார். ''சூழ்விசும்பணி முகிலுக்கு அனந்தரம் இத்திருவாய்மொழியாகப் பெற்றதில்லையே என்றருளிச் செய்வர் சீயர்''[58] என்பது மேற்கோள். இதனால், இத்திருவாய்மொழியின் தகுதி பற்றி இடப்பெயர்ச்சி செய்யின் நூலோட்டம் இடையறவு படாதாயினும், அங்ஙன் இடமாற்றுப் பதிப்புக்கு ஒருவர்க்கும் அதிகாரமில்லை என்பதும் பிள்ளையின் உட்குறிப்பாகும். அந்தாதியான நூலமைப்பும் அம்மாற்றத்துக்குச் சிறிதும் இடம் அளிக்காது என்பதும் மற்றுமோர் உட்குறிப்பாகும்.

---

55. 4. 5- 0-ஈ

56. மேலது

57. இதனைப் பரதனுடைய விடாய் வளர்ச்சியோடும் உருவகிப்பர் (4 6 . 0 ஈ)

58. 4 . 5 . 0 ஈ

சொற்பொருள் மாற்றம் :-

முழு நோக்கின் சீரியதோர் விளைவு, சொற்களுக்குப் பொருள் குறிப்பதில் ஏற்படுத்தும் மாறுதலாகும். *கையார் சக்கரத்தில் (5-1) தண்ணியரா யிருக்கிற தம் பக்கலில் அவை யொன்றும் பாராதே வந்து இறைவன் கலந்த படிகளைச் சொல்லி இனியராகிறார். ஆங்கே, 'விதிவாய்க்கின்று காப்பாரார்?'[59] என்று வியப்பு எய்துகிறார். விதிக்குப் பொருளாக 'இறைஅருள்' என்று பிள்ளை குறிப்பர்; ஆழ்வாருடைய 'நல் ஊழ்' என்று பொருள் கொண்டிலர். 'இறைஅருள் வாய்க்கப் பெறின் அதைத் தடுப்பார் ஆர்?' என்று ஆழ்வார்க்குக் கருத்தாக உரை வரைகிறார். ''விதி என்கிறது பகவத் கிருபையை; கேசவன்தமர்க்கு இப்பாலெல்லாம் இவர் விதி என்கிறது பகவத்கிருபையை'' என்பது பிள்ளையின் நுண்ணுரை. *கேசவன் தமரில் (2-7) தமக்கும் தம் திருவுள்ளத்துக்குச் சேர்ந்த அடியார்க்குமாக இறையருள் பலித்ததை உணர்ந்து மகிழ்ந்தாராதலின் அதற்குமேல் வரும் பாடல்களில் ஆழ்வார் தம்முடைய விதியை மனத்தால் நினைக்கமாட்டார். இறைவனுடைய திருவருளையே எண்ணியிருப்பர். அதனையே 'விதி' என்று குறிக்கிறார். விதி என்ற சொல் இறையருளைக் காட்டுமோ எனில், ''அதுக்கடி அவனால் தப்பவொண்ணாத 'படியிருக்கையாலே'' என்று அவ்விடத்தேயே காரணம் காட்டுகிறார். மேலும், தாம் அப்படிப் பொருள் கொண்டதற்கும் அத்திருவாய்மொழியினை நன்கு முழுநோக்காகச் சிந்தித்ததும் ஒரு காரணம் என்று அப்பதிகத்தின் ஒன்பதாம் பாடலில் குறிப்பாலுணர்த்துவர். 'அருள் செய்து அடியேனொடும் ஆனானே'[60] என்பதை விளக்க நேருகையில், ''கேசவன்தமர் தொடங்கி லோபத்தாலே க்ருபையை - விதி சப்தத்தாலே சொல்லிப் போந்தவர், இப்பாட்டிலே 'அருள்' என்று வெளியிடுகிறார்''[61] என்று எழுதுகிறார்.

இது போன்றே, *பயிலும் சுடரொளிக்குப் (3-7) பிறகு வரும் பாடல்களில் ஆழ்வார் திருவாக்கில் 'நான்' என்ற

---

59. தி. வா, மொ. 5 . 1 . 1
60. மேலது 5 . 1 . 9
61. லோபத்தாலே—கிருபையை வெளியிடவொண்ணாது என்கிற லோபத்தாலே என்பர் அரும்பதகாரர்.

சொல் வந்தால் அதற்கு 'அடியார்க்கு அடியனாகிய நான்' என்ற அளவு அதற்கு மெய்ப்பொருள் என்பது பிள்ளையின் முடிவாகும்.[62]

**ஆழ்வாரும் இருடியரும் :**

ஆழ்வார்க்கும் இருடியர்க்கும் நெடுவாசி உண்டு. 'ஆழ்வார்' என்பதற்குப் பொருந்திய வடசொல் இல்லை. 'திவ்யசூரி' என்று சிலர் ஆக்கிக்கொண்டனர். நம்மாழ்வாரை 'ருஷி' என்றும் 'முனி' என்றும் 'கவி' என்றும் வடமொழியாற் குறிப்பிடுகின்றனர். ஆழ்வார் 'தீர்க்கதரிசி' என்பதும் 'மனனசீலர்' என்பதும் 'கவிஞர்' என்பதும் தெரிவிக்கப்படுகின்றனவே ஒழிய அவர் இறைமை எழில் தடாகத்துள் எஞ்ஞான்றும் ஆழங்காற் படுபவர் என்பது தெளிவாக்கப் படவில்லை. ஆழ்வார்க்கும் இருடிகளுக்கும் உள்ள வாசி அறியப்பட்ட பின்னரே அருளிச் செயலுக்கும் வடமொழிக் காவியங்களுக்குமுள்ள வேறுபாட்டை உணர முடியும். ஆழ்வார்க்கும் இருடியர்க்குமுள்ள வேறுபாடுகளாகப் பிள்ளை காட்டுவன :-

(அ) எம்பெருமானுடைய குணங்களை நினைத்துத் தரிக்க நினைத்த ஆழ்வார் அது தானும் முடியாதபடி உருகினார். அதனால் குணானுபவத்தைப் பண்ணவல்லராகும்படி ஆக்கியருளச் சரணம் புகுந்தார். இப்படி இடியரும் பண்ணதில்லை.[63]

(ஆ) இருடியர் தம்தாம் பேற்றுக்குத் தாம்தாம் சில முயற்சி பண்ணா நிற்பவர்கள். ஆழ்வார்கள் இறைவனாலே பேறு ஆமளவும் அசோக வனத்துப் பிராட்டியைப்போலே துடியா நிற்பர்கள்.[64]

(இ) இருடியரால் பேற்றின் காலத் தாழ்வைப் பொறுக்கலாம்; இவர்கள் கிடந்து அலமாப்பார்கள்.[65]

(ஈ) பிறப்பைக் குறித்து அஞ்சுவதால் வரும் துயரமே இருடியர்க்கு உண்டு; இவர்கள் இறையனுபவத்தில் இடையீட்டைப் பொறுக்ககில்லாராய்த்துயரப்படுவர்[66]

62. 6 — 9 — 11 ஈ
63. 5 . 10 , 0 ஈ
64. மேலது
65. மேலது
66. மேலது

(உ) பிறவித்துயரிலிருந்து வீடுபெற்று இறைவனை அடைவதே 'புருஷார்த்தம்' என்றிருப்பர் இருடியர், ஆழ்வார்களோ என்னில், அத்துடன் அமையாது இறைவனுக்கு ஒழிவில் காலமெல்லாம் உடனாயிருந்து வழுவிலா அடிமைகள் செய்வதே 'புருஷார்த்தம்' என்றிருப்பர்கள்.[67]

(ஊ) தம் முயற்சியால் வருந்திப்பெற்றதாகலின் இருடியர் அளவுபட்ட ஞானமுடையராயிருப்பர்; 'மயர்வற மதிநலமருளினன்' என்று இறைவனது இன்னருளால் விளைந்த பெரிய ஞானத்தையுடையராயிருப்பர் ஆழ்வார்கள்.[68]

**ஆழ்வாரும் காப்பியமாந்தரும் :-**

ஆழ்வாருடைய நான்கு நூல்களில் அவர்தம் சொற்களை ஒருசேர ஆழ்ந்து நோக்கினால் அவருடைய வாழ்க்கைத் திறங்கள் சிலரை நினைப்பூட்டும்படியாயிருப்பதை நம்பிள்ளை உணர்த்துகிறார். ஆழ்வாரைப் பக்தராகச் சொல்லலாம்; பிறப்பறுக்கலுற்ற முமுட்சுவாக மதிக்கலாம்; முத்தராகவும் போற்றலாம்; நித்தியராகவும் கருதலாம்; பிராட்டியாகவும் பாராட்டலாம். இவற்றை *மின்னிடைமடவார் (6-2) பிரவேசத்துள் விரிவாக ஆய்வுசெய்கிறார். சுருக்கமாக, "இவ்வாழ்வாராகிறார், பிறவி அச்சத்தாலும் இறையீடுபாட்டாலும் அடிமையில் சுவையாலும் பிரிவில் தரியாமையாலும் எல்லாருடைய படியாயும் இருப்பர்"[69] என்று கூறித் தலைக்கட்டுகிறார்.

*தீர்ப்பாரையாமினி (4-6) பிரவேசத்தில் ஆழ்வார்க்கு இளைய பெருமாள், பரதாழ்வான், பிராட்டி ஆகியோரின் தன்மைகள் உண்டு என்பதையும் காட்டுகிறார்.[70]

**பாடல்களைத் தொடுத்தமுறை :-**

ஆழ்வார் இறைவனது எழில் நலத்தை எண்ணுங்கால் காலாழ்ந்து நெஞ்சழிந்து கண் சுழன்று வருந்துவர். அதனால் சொற்கள் பணி செய்யக் காத்திருப்பினும் அழிகின்ற பொறிகளையுடையவராதலால் அவற்றை வருந்தியே தொடுத்தார். "ஒருமலை எடுத்தாப்போலேயாயிற்று, இவர்க்கு ஒரு சொற்கொண்டு சொல்லுகை"[71] என்பர் நம்பிள்ளை. அதற்குக் கார

---

67. 7-10-0 ஈ
68. 7-10-0 ஈ
69. 6-2-0 ஈ
70. ம.பி, (1) லும் இக்கருத்து விளக்கப்படுகிறது.
71. 3-8-10 ஈ

ணம் இறைவனுடைய சொருப குணங்களைக்காட்டிலும் அவனுடைய திருமேனி எழிலில் மனம் பறியுண்டவர் ஆழ்வார் என்பதேயாம். ''வடிவழகுக்கு அவ்வருகு சொரூப குணங்களில் இழியமாட்டார்'' [72] என்பது ஈடு.

**உபதேசங்களை வழங்கியது ஏன் ?**

திருவாய்மொழியில் பல பதிகங்கள் ஆழ்வார் உலகினர்க்கு உபதேசிப்பதாகச் செல்கின்றன. இவை ஒருபத்துத் தோறும் ஒரு பதிகமாகப் பத்துப்பதிகங்களாக அமைந்துள்ளன. இவற்றை 'உபதேசப்பத்து' என்பர் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்.[73] இவற்றை முழுதும் பார்த்து அவை அமையும் இடங்களையும் கண்டு அப்போது ஆழ்வார்க்கோடும் மனவுணர்ச்சிகளையும் முன்னும்பின்னுமான பதிகங்களைக்கொண்டு ஆராய்ந்து பல அரிய செய்திகளைத் தம் முழுப்பார்வைத் திறனால் தேடித்தொகுப்பர் நம்பிள்ளை.

புகழ், பொருள்வரவு, பாராட்டுதல்களை நெஞ்சினால் நினைக்காது பிறர்படும் துயர்கண்டு அதனைப் போக்கவே ஆழ்வார் உபதேசிக்கிறார்.[74] தம்முடைய இழவுகளைக் கணிசிக்காமல் பிறருடைய துயரைக் களைவதே கடன் என்றிருப்பர்.[75] உலகினர் வேண்டாதிருக்கச் செய்தேயும் வெந்து அற்ற வீட்டிலே ஒரு கம்பாகிலும் கிடைக்குமோ என்று அவிக்கப் பார்ப்பாரைப் போலே உபதேசிப்பர்.[76] ஆழ்வாருடைய தன் நுகர்வும் பிறர்க்கு உபதேசித்தலை ஒழிந்து இராது[77]. உலகினர்க்கு உணர்த்தாது ஒழியின் ஆழ்வார்க்கு இருப்புக்கொள்ளாது. 'மோஹித்துக்கிடந்தாராகில் கிடக்குமித்தனை போக்கி, உணர்ந்தாராகில் பிறர்க்கு ஹிதம் சொல்லி யல்லது நிற்கமாட்டார்''[78] தாமே வலியச் சென்று இரந்தும் உபதேசிப்பதற்கு மணக்கால் நம்பியோடு ஒப்பர்.[79] இவற்றுக்கெல்லாம்

---

72. தி. வா. மொ. 8 - 8 - 1
73. ஆசார்யஹ்ருதயம், உபதேசப்பத்து, சூ. 216.
74. 1 - 1 - 0 ஈ
75. 3 - 9 - 0 ஈ
76. 4 - 1 - 0 ஈ
77. 7 - 10 - 6 ஈ
78. 9 - 10 - 0 ஈ
79. 9 - 3 - 5 ஈ
80. 10 - 5 - 0 ஈ

அடி ஆழ்வாரிடம் அமைந்த அருளே. "இவர் தாம் எம்பெருமானாரைப் போன்று கிருபை உடையவர் காணும்"[80] என்று ஆழ்வார் இயல்பைப் புரியவைக்கிறார்.

**ஓரியற்பதிகங்களின் நுண்ணிய வேறுபாடுகளைக்காட்டல்:**

முழுப்பார்வையால், ஓரிலக்கிய ஒப்புஆய்வு நிகழ்த்துகிறார் பிள்ளை. ஏறத்தாழ ஒரு நெறிப்பட்ட பதிகங்களின் நுண்ணிய வேறுபாடுகளை உணர்த்துகிறார். வெகுதொலை இடையறவுபட்டுக் கிடக்கும் பதிகங்களை உறழ்ந்து காண நினைவாற்றலும் நூல் முழுமை நோக்கும் மிகப்பெற்றதால் அதனைச் செம்மையாக நிறைவேற்றுகிறார்.

**கரைபுரளும் ஆற்றாமை :-**

*அஞ்சிறையமடநாரையில் *(1-4)* ஆற்றாமை மிக்குத் தூதுவிடுகிறார் ஆழ்வார். *வாயும் திரையுகளிலும் (2-1) ஆற்றாமைமிக்கு நோவுபடுகிறார். இவை இரண்டில் எதில் ஆற்றாமை விஞ்சியிருக்கும் என்பதை ஆய்வு செய்கிறார். ஆற்றாமையை விளைவித்த பொருள், ஆற்றாமைப்படும் ஆழ்வாரின் இயற்கை என்ற அரண்டு அடிப்படைகளைக் கொண்டு முடிவுகாண்கிறார். *அஞ்சிறைய மடநாரையில் *(1-4)*, அவதாரத்தில் அனுபவிக்க நினைத்து அது பெறாமையால் வந்த ஆற்றாமையாயிருந்தது. *வாயும் திரையுகளில் *(2-1)* அர்ச்சையில் அனுபவிக்க விரும்பி அது கிடையாமையால் வந்த ஆற்றாமையாயிருந்தது. ஆற்றாமை காரியம்; ஒன்றில் அவதாரம் காரணமாய் இருந்தது; மற்றதில் அர்ச்சை காரணமாய் இருந்தது. முன்னதில், அவதாரத்துக்குப் பிற்பட்டதை நினைத்து ஆறியிருக்கமுடியும். பின்னதில் முடியாது. கைப்பட்டிருக்கும் பொருளைப் பெறாத ஆற்றாமையன்றோ விஞ்சியிருக்கும். மேலும் *அஞ்சிறையவில் *(1-4)* அதற்குக் கீழ் மூன்று பதிகங்களில் பரத்துவம், வழிபடற்குரிமை, எளிமை ஆகிய மூன்று இறைமைக் குணங்களையே ஆழ்வார் நுகர்ந்திருந்தார். *வாயும் திரையுகளில் *(2-1)* அவற்றோடு சேர குற்றம் பொறுத்தல், புரையறக் கலக்கும் நீர்மை, வழிபடற்கெளிமை, இனிமை, செம்மை, பொறுக்க நுகர்விக்கும் திறன், கைம்முதல் கருதாப் பேருதவித்திறன் ஆகிய ஏழு குணங்களை மேலும்

நுகர்ந்து அதன்பின்னரே ஆற்றாமை தலை எடுத்தது. அதனால் ஆற்றாமை பின்னதில் விஞ்சியிருக்கும் என்று நிறுவுகிறார்.

*ஆடியாடியிலும் (2-4) மீண்டும் ஆற்றாமை தலை எடுக்கிறது. இதற்குக் கீழ் ஆழ்வார் தம்மோடு பேசித்தரிக்க அடியார்களை அவாவி அது கிடைக்கப் பெறாததால் ஆற்றாமை மீதூர்ந்தது. இதனைக் கீழ் இரண்டு பதிகங்களோடு ஒப்பிட்டுப்பார்க்கிறார். அவதாரத்திலும் அர்ச்சை சீரியது. அர்ச்சையிலும் அடியார்கள் கூட்டரவு மிகச்சீரியது. அவதாரம் காசு; அர்ச்சை பொன்; அடியார்கள் இரத்தினம். ''காசை இழந்தவனுக்கும் பொன்னை இழந்தவனுக்கும் இரத்தினத்தை இழந்தவனுக்கும் ஒத்திராதே கிலேசம்!''[81] என்பர் பிள்ளை. இவற்றுள் இரத்தினத்தை யிழந்தோனுக்கே துயரம் பெரிதாகும் ஆதலால், *ஆடியாடியில் (2-4) ஆற்றாமை அற விஞ்சியிருக்கும் என்பர் பிள்ளை.

உபதேசத்தில் உயர்வு :-

பிறரைக் குறித்து உபதேசிக்கும் திருவாய்மொழிகளில் பதிகப்பார்வை செய்து அவற்றின் தாற்பரியங்களைக் கொண்டு அரிய கருத்துக்களைப் பிள்ளை மொழிகுவர்.

(அ) *வீடுமின் முற்றவும் (1—2) *சொன்னால் விரோதம் (3—9) *ஒருநாயகமாய் (4—1) ஆகிய மூன்றிலும் பரோபதேசம் செய்யப்படுகிறது. ஒவ்வொன்றுக்கும் ஓர் அர்த்தத்திலே நோக்கு ஆதலால் மூன்றும் கூறியது கூறலாகாது என்று கூறுவர்.

*வீடுமின்முற்றவும் — பிறவற்றுள் வெறுப்புமுன்னாக இறைவன்மாட்டுப் பக்தி செய்க.
*சொன்னால் விரோதம் — பிறரை ஏத்தாது பரம் பொருளான இறைவனையே ஏத்துக.
*ஒரு நாயகமாய் — சில பயனுக்காக ஏத்தினால் அவை அற்பம், நிலையற்றவை என அறிக.

இவ்வாறு நுண்ணிய வேறுபாட்டைக் காட்டி விளக்குவர். மேலும் கூறியது கூறல் பிற நூலுக்குக் குற்றமாகக் கூறப்

81. 2-4-0 ஈ

படினும், இறைவனைப் பேசும் திருவாய் மொழிக்கண் அது ஏற்றம் பெறும் என்பதும் பிள்ளையின் அரிய கண்டுபிடிப்பாகும். அதற்கு அவர் காட்டும் காரணங்களாவன :

> "ஒருகால் சொன்னோம் என்று கைவாங்கியிருக்கிறவரல்லர் இவர்;
> ஒருகால் சொல்லிற்று என்று கைவாங்கலாம் விஷயமன்று அது;
> ஒரு குணத்தையே எல்லாக் காலமும் அனுபவிக்க வல்லார் ஒருவர் இவர்;
> புதுமையைப் பிறப்பித்து அனுபவிக்க வல்லான் ஒருவன் அவன்."

எனவே, பகவத் விஷயத்தில் கூறியது கூறினும் குற்றமில்லை. இவ்வாறு 'அப்யுபகம்யவாதம்' செய்த பிள்ளை அக்குற்றம் சிறிதுமில்லை என்றும் 'அனப்யுபகம்யவாதம்' செய்யவும் தவறுவதில்லை.

(ஆ) * உயர்வற உயர்விலும் (1—1) பரத்துவம் நிருபிக்கப்படுகிறது.

* திண்ணன் வீட்டிலும் (2-2) பரத்துவம் நிருபிக்கப்படுகிறது.

இரண்டிற்குமுள்ள வாசியைப் பின்வருமாறு காட்டுகிறார்.

| * உயர்வற | * திண்ணன்வீடு |
|---|---|
| 1. தன் நுகர்வு | 1. செவியறிவுறூஉ (உபதேசம்) |
| 2. உடன்பாடு | 2. உடன்பாடும் எதிர்மறையும் |
| 3. சுருதிச்சாயை | 3. இதிஹாசபுராணமுறை |
| 4. பரத்துவத்துள் பரத்துவம் | 4. அவதாரங்களுள் பரத்துவம் |

இவையாவும் முழுமையுணர்வினால் விளைந்த ஆய்வு முடிவுகளாகும்.

(இ) இதே முறையில்,

1) *ஊனில் வாழுயிரே (2—3) — *வைகுந்தா (2—6)

(2) *கேசவன் தமர் (2—7) — *நெடுமாற்கடிமை (8—10)

(3) *பத்துடையடியவர் (1—3) — *செய்யதாமரை (3—6)

(4) *கோவைவாயாள் (4—3) *பாலனாயேழுலகு (4-2)
(5) *அஞ்சிறைய (1—4) — *தீர்ப்பாரையாமினி (4—6)
(6) *ஏழையராவி (5—5) — எங்ஙனேயோ (7—7)
(7) *மின்னிடைமடவார் (7—1) *உண்ணிலாவிய (7—1)
(8) *ஆராவமுது (5—8) — *பண்டைநாளால் (9—2)
(9) *முடியானே (3—8) — மல்லிகை (9—9)
(10) * வளவேழுலகு (1—5) *கண்கள்சிவந்து (9 2)

என்ற திருவாய்மொழிகளை ஒப்பிட்டுப் பல அரிய முடிவுகளைத் தெரிவிக்கிறார்.

**ஏற்ற பொருளாட்சியைக் காட்டுதல்:-**

முழுமைப்பார்வையால் ஒரு தொடருக்கு இருவேறு பொருளாட்சிகள் எழுந்தால் அவற்றில் சிறந்ததைத் தேர்ந்தெடுக்கிறார். *ஒராயிரமாய் (9-3) என்ற திருவாய்மொழியில்,

தொழுது மாமலர் நீர்சுடர் தூபங்கொண்டு
எழுது மென்னும் இதுமிகை யாதலின்
பழுதில் தொல்புகழ்ப் பாம்பணைப் பள்ளியாய்!
தழுவு மாறறியேன் உனதாள்களே[82]

என்ற பாடல் வருகிறது. இதில், ஆழ்வார் தம்முடைய தகுதியின்மையைச் சொல்கிறார் என்று சிலர் பொருள் நிருவகிக்கிறார்கள். நம்பிள்ளை அதனை ஏற்கவில்லை. தமது தகுதியின்மையைச் சொல்லி அகலப்பார்ப்பது ஆழ்வார்க்கு உள்ளதே; *வளவேழுலகில் (1-5) அப்படிச் செய்தார். இதனை 'வளவேழுலகு தலையெடுத்தல்' என்று குறியீடு செய்வர் நம்பிள்ளை. ஆனால், *கண்கள் சிவந்து (8-8) என்ற திருவாய்மொழியில் இறைவன் பின்னொருகாலும் வளவேழுலகு தலையெடுக்க வொண்ணாதபடி ஆழ்வாருக்கு முற்படத் தன்னுடைய வடிவழகை முற்றூட்டாக அனுபவிக்கக் கொடுத்துப் பின் ஆழ்வாருடைய உயிர் தனக்குத் தன் அணிகலனைப் போல் இனிமை மிக்கதாயிருக்கும் என்பதையும் காட்டியருளினான். அதற்குப்பின் ஆழ்வார்க்கு வளவேழுலகு தலையெடுக்கவில்லை என்பது முழுப்பார்வையால் நம்பிள்ளை கொண்ட துணிவாகும். அதனால் சிலர் பொருளாட்சியை மறுக்கும்போது, ''கண்கள் சிவந்துக்குப் பின்பு இவர்க்கு அது (அயோக்யதையைச் சொல்லுதல்) இல்லையிறே''[83] என்ற சுருக்க மொழிகுவர்.

82. தி. வா. மொ. 9 - 3 - 9
83. 9 - 3 - 9 ஈ

விரைவுணர்ச்சியைக் காட்டல்:-

முழுப்பார்வையின் மிக அரிய பயன் ஒன்றை ஈட்டிற் காண்கிறோம். ஆழ்வார் நூறு பதிகங்களில் மூப்பது திவ்விய தேசங்களைப் பாடியிருக்கிறார். அவற்றுள் ஒன்பதாம் பத்தில் தான் மிகுதியான திவ்விய தேசங்களைப் பாடுகிறார். பத்தாம் பத்தின் முதல் பதிகமான *தாள தாமரையில் (10—1) ஆழ்வார் திருநாட்டிற்குச் (பரமபதம்)செல்ல ஒருப்பட்டுப்பின் திருவனந்தபுரம் புக்கார். அதற்குமுன் *பண்டை நாளாலே (9 2) தொடங்கி அடுத்தடுத்து ஒன்பது பதிகங்களில் திருப்புளிங்குடி, வரகுணமங்கை, திருவைகுந்தம், திருக்காட்கரை, திருமூழிக்களம், திருநாவாய், திருக்கண்ணபுரம், திருமோகூர், திருவனந்தபுரம் என்று பல திருப்பதிகளைப் பாடியனுபவித்-தார். இதனால் ஆழ்வார் திருப்பதிகளைப் பாடிவரும் முறையில் ஒரு நெருக்கத்தையும் விரைவுணர்ச்சியையும் உரையாசிரியர் காண்கிறார். அவ்வுணர்ச்சி விரைவுக்கு அவர் காட்டும் காரணம் உலகியலைச்சார்ந்து புரிந்துகொள்ளுவதற்கு எளிதாயுள்ளது. "பிறந்தகத்தில் நின்றும் புக்ககத்துக்குப் போகும் பெண்பிள்ளைகள் பந்துக்கள் இருந்தவிடமெங்கும் கண்டு வினவப் போமா போலே, பிராப்ய பூமி அணித்தானவாறே திருப்பதிகள் தோறும் புகுகிறார்"[84] என்பது நம்பிள்ளை காட்டும் சமாதானம். இதே முறையில், *அறுக்கும் வினை (9—8) என்ற பதிகத்தில் பாட்டுத் தோறும் ஆழ்வார் பிராட்டிமாரைக் குறித்துவருதற்கும் உலகியற் காரணங்காட்டுவர். "தேசாந்தரம் போன பிரஜை ஊர் அணித்தானவாறே தாய்மாரை நினைக்குமாபோலே, பிராப்பிய தேசம் அணித்தானவாறே திரளவும் தனித்தனியும் பிராட்டிமாரை அனுசந்திக்கிறார்"[85] என்று விளக்குகிறார். திருவாய்மொழி ஆயிரம் பாடல்களிலும் முழு நோக்குச் செலுத்தின பிள்ளை கண்ணுக்கு ஆழ்வார் புக்ககம் செல்லும் சிறுபெண்பிள்ளை போலும் வேற்றுநாடு சென்றவன் இல்லம் திரும்புவதுபோலும் இறுதிப்பதிகங்களில் காட்சிதருகிறார்.

---

84. 10-1-0 ஈ

85. 9-8-0 ஈ

திவ்வியப் பிரபந்த உரையாசிரியர்கள் வடமொழி வான்மீகி இராமாயணக் கருத்துக்கள் ஆழ்வார் பாடல்களின் கருத்துக்களோடுபெரிதும் ஒப்புமைப்பட்டிருப்பதை உணர்ந்தனர். இராமாயணத்தைச் 'சரணாகதிநூல்' என்று கண்டனர்; ஆழ்வாருடைய நெறியும் சரணாகதித் தத்துவமாயிருப்பதை உணர்ந்தனர். திருவாய் மொழியை 'தீர்க்க சரணாகதி'[86] என்று கொண்டாடினர். இராமாயணமும் திருவாய் மொழியும் வைணவ சமயத்தைப் போற்றிக்காக்கும் இரு மதிள்களாகக் கருதப்பட்டன.[87] இரு நூல்களும் இரு முனிவர்களால் செய்யப்பட்டவை. நான்முகக் கடவுளின்அருள் பெற்ற வான்மீகி முனிவர் செய்தது காவியமான இராமாயணம்; தனிமுதற்கடவுளான திருமாலின் திருவருள் பெற்ற சடகோபமுனிவரால் செய்யப்பட்டது அருளிச் செயலான திருவாய்மொழி; இராமாயணத்தை வான்மீகரின் சீடர்கள் இசையிலேற்றிப் பாடினர்; திருவாய்மொழியை ஆழ்வாரின் சீடரான மதுரகவிகள் இன்னிசையில் பாடித் திரிந்தார்; வான்மீகர் இராமாவதாரமல்லது அறியார்; ஆழ்வார் 'குரவை யாய்ச்சியர்' என்ற திருவாய்மொழியில் வான்மீகரைப் போலக் கிருஷ்ணாவதாரமல்லது அறியார். இவ்வாறு இருவருடைய மன நிலைகளையும் நம்பிள்ளை ஒப்பிட்டிருக்கிறார்.[88]

### தலைமைப் பண்புகள் ஒப்புநோக்கு :-

தலைமகன் தலைமகளுக்குரிய தலையாய பண்புகளைத் தமிழ் அகப்பொருள் நூல்கள் வரையறுக்கின்றன. 'பெருமையும் உரனும் ஆடூஉ மேன'[89] என்றும் 'அச்சமும் நாணும்மடனும் முந்துறுத்த, நிச்சமும் பெண்பாற்குரிய என்ப'[90] என்றும் தொல்காப்பியம் வரையறுத்தது. மெய்ப்பாட்டியலில், கற்பினுள் அழிவில் கூட்டம் நிகழ்ந்த பிறகு தலைவியால் ஏற்படும் மெய்ப்பாடுகளைச் சொல்லுமிடத்து தலைவன் தலைவியர் இருவர்க்குமிடையே 'உள்ள ஒப்பு' பத்துவகைப்படும் என்று தொல்காப்பியர் கூறுவர். அவை பிறப்பு, குடிமை, ஆண்மை, யாண்டு,

86. ஆசார்யஹ்ருதயம், 210
87. 10 - 7 - 5 ஈ
88. 6 - 4 . 0 ஈ
89. தொல்.. களவியல், 98.
90. மேலது 99

உருவுநிறுத்த காமவாயில், உருவு, நிறை, அருள், உணர்வு, திரு என்பனவாம்.[91] களவியலுரைகாரர் உரையிற் கோடலால் அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்றும் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்றும் முறையே தலைமகன் தலைமகளுக்குரிய குணங்களைக் கூறினார்.[92] வடமொழிக் காப்பியமான இராமாயணத்துள் கூறப்படும் இலக்கணங்களையும் ஒப்பு நோக்கித் தமிழ் அகப்பொருள் தலைவன் தலைவியர்க்கு அவற்றையும் சார்த்திக் கூறுவர் நம்பிள்ளை,

> "அதாவது - 'துல்யசீல வயோ வ்ருத்தாம்' என்று சீலத்தாலும் வயஸ்ஸாலும் அபிஜநத்தாலும் வடிவழகாலும் ஸம்பத்தாலும் குறைவற்றிருப்பன இரண்டு விஷயமாய், அது தன்னில், அறிவு, நிறைவு ஓர்ப்பு, கடைப்பிடி என்றாற் போலே சொல்லுகிற நாயக லக்ஷணங்கள் நாயகிக்கும் உண்டாய், நாண், மடம், அச்சம், பயிர்ப்பு என்றாற் போலே சொல்லுகிற நாயகீலக்ஷணங்கள் நாயகிக்கும் உண்டாய், இப்படி இரண்டு தலையும் குறைவற்று இவர்கள் தாங்கள் ப்ராப்த யௌவநருமாய் ... ...'[93]

என்பன ஈட்டுத் தொடர்கள்.

தலைவற்கும் தலைவிக்கும் பொதுமையான பண்புகளை வடமொழிக் காவியம் கூறுகிறது. அவர்களுக்குப் பிரித்துத் தனித்தனியாகவும் வரையறுக்கின்றன தமிழ் நூல்கள். தமிழ் அகப்பொருள் தலைவன் தலைவியர்க்கு வான்மீகம் கூறும் அப்பொதுமைக் கூறுகளைச் சார்த்திக் கூறுவதால் நம்பிள்ளையின் ஒரு தனிக் கொள்கை தெரிகிறது. திருவாய்மொழி அகப்பொருட் பாடல்களில் வரும் நாயகனும் நாயகியும் உலகியல் மாட்டு வரும் தலைமக்கள் போன்றவரல்லர்; இறைவனும் இறைவியுமானவர். திருவாய்மொழி அகப்பொருள் பதிகங்களில் கிளவித் தலைவனும் பாட்டுடைத் தலைவனான திருமாலே; தலைவியோ

91. தொல், மெய்ப்., 25

92. இறையனார் களவியல், 2

93. 5-3-0 ஈ

பிராட்டியான நம்மாழ்வார். நம்மாழ்வார்க்குப் பிராட்டி தசை விளைவதை நம்பிள்ளை விரிவாக மகாப்பிரவேசத்திலும் *அஞ்சிறைய மடநாரை (1-4) பிரவேசத்திலும் நிறுவியிருக்கி றார். நம்பிள்ளை வடமொழி இலக்கணத்தையும் தழுவியதால் அகப்பொருட்கிளவிகளுக்கு உள்ளுறை கூறுவது எளிதாகிறது.

கூற்று ஒப்புநோக்கு :-

ஆழ்வாராகிற பராங்குச நாயகியின் கூற்றுக்களை சீதை யின் கூற்றுக்களோடு ஒட்டிக் காண்கிறார் நம்பிள்ளை.

*ஏறாளுமிறையோனும் (4 — 8) என்ற திருவாய்மொழி யில் பராங்குச நாயகி தலைவனைப் பிரிந்த நிலையில் தான் கூப்பிடா நிற்கவும் அவன் எழுந்தருளாமையால் அவன் தன்னை வெறுத்தானாகக் கொண்டு, அவனால் வெறுக்கப்பட்ட தன் னுடைய உயிரிலும் உடைமைகளிலும் ஒரு பயனில்லை என்று வெறுத்துப் பேசுகிறாள். இராமபிரானைப் பிரிந்து அசோக வனத்தில் தனிச் சிறையில் விளப்புற்ற கிளிமொழியாளான சீதைக்கும் அதேநிலை ஏற்பட்டுப் பேசியிருக்கிறாள். "மகா ரதனாகிய பெருமாளைப் பிரிந்து அரக்கர் மத்தியில் வசிக்கின்ற எனக்குப் பிராணனால் பயனில்லை; பொருள்களாலும் பய னில்லை; அணிகலன்களாலும் பயனில்லை"[94] என்பது சீதை யின் கூற்று. பராங்குசநாயகியும் 'உயிரினால் குறைவிலமே என்றும் 'வரிவளையாற்குறைவிலமே'[95] என்றும் இவ்வாறு வருந்திக் கூறுகிறாள். இரண்டு இலக்கியங்களிலும் இரண்டு தலைவியர் கூற்றுக்களில் வரும் ஒப்புமையைக் கண்டு அதனைப் பிரவேசத்தில் சுருக்கமாகக் காட்டியுள்ளார்.

*மாசறுசோதியில் (5—3) பராங்குசநாயகி மடல் எடுக்கத் தலைப்பட்டாள். அது மடற் கூற்றோடு முடிந்தது. இதனைச் சீதை வலியப் பேசி இராமனுடன் வனம் புக்கனோடு ஒப்பிடு கிறார்.

பராங்குச நாயகி மடலெடுக்கமுடியாதபடி இருள் சூழ்ந்து கொண்டது. துயரம் மேலும் மிக்கது. உயிரை முடித்துப்

94. வான்மீகி இராமாயணம், சுந்., 26-5

95. தி. வா. மொ. 4 - 8 - 10
மேலது 4 - 8 - 7

பிழைக்க வேண்டுமளவாய் அதுவும் மடலெடுத்துப் பெற வேண்டும்படி அரிதாக ஆயிற்று. அதனை *ஊரெல்லாம் துஞ்சியில் (5-4) பராங்குச நாயகி வெளியிடுகிறாள். அதே போன்று அசோகவனத்துச் சீதையின் நிலைமையை வான்மீகர் வருணித்துள்ளார். இராமன் வருவான் என்ற நம்பிக்கை இழந்ததும் தன் உயிரைப் போக்கிக் கொள்ளச் சீதை முயல்கிறாள். அதுவும் முடியவில்லையே என்ற வருத்தமே அவளுக்கு விஞ்சியது "நான் விஷத்தினாலாவது கூரிய ஆயுதத்தினாலாவது உயிரை விட்டுவிடுகிறேன். இராவணனுடைய வீட்டில் எனக்கு விஷத்-தையாவது ஆயுதத்தையாவது கொடுக்கின்றவராக ஒருவரும் இல்லையே!"[96] என்பது சீதை கூற்று. "என் காகுத்தன் வாரானால், மாயும் வகையறியேன்'"[97] என்பது பராங்குச நாயகி கூற்று.

*எங்ஙனேயோ அன்னைமீர்காள் (5-5) என்ற பதிகத்தில் தலைவிக்கு மகிழ்ச்சியும் துயரமும் ஒரேகாலத்தில் விளைகின்றன. "ஆதித்தியன் உதித்துப் பதார்த்த தரிசனம் பண்ணப் பெறு-கையாலே ஒரு ப்ரீதியும் அதுதான் அவனைக் காணப் பெறாமையாலே ஒரு அப்ரீதியுமாய் ப்ரீதி அப்ரீதிகள் சமமாய்ச் செல்லுகிறது"[98] என்பது ஈடு. முரண்பட்ட இரு மெய்ப்பாடுகள் ஒரே காலத்தில் ஒருவரிடம் விளைவதாகக் காண்கிறது. இதே நிலை வான்மீகத்திலும் இடம் பெறுகிறதைப் பிள்ளை காட்டு கிறார். "பிராட்டி ...... திருவடி வார்த்தையைக் கேட்டபோது பெருமாள் என்னைப் பிரிந்த இடத்தில் என்னையல்லது அறியார் என்று சொன்னது எனக்கு இனிதாயிருந்தது, அவர் பிரிவில் தளரா நின்றார் என்று சொன்னபடியாலே வெறுப்பாயிருந்தது என்றாளிறே"[99] என்பது ஈட்டின் விளக்கம்.

*மின்னிடை மடவாரில் (6—2) ஆழ்வார் ஊடியதைப் பிராட்டி 'பிரணய ரோஷம்' மிக்கு இராமனோடு ஊடி மேலிட்டு வார்த்தை பேசியதோடு ஒப்பிட்டு விரிவாக ஆராய் கிறார் பிள்ளை.

---

96. வா. இராமா., சுந். 28-25

97. தி. வா. மொ. 5-3-3

98. 5-5-0 ஈ

99. மேலது

ஆழ்வார் தலைமகளாகப் பேசுமிடங்களில் பெரும்பாலும் வான்மீகத்தின் இணையான பகுதிகளைக் காட்டி விரித்து எழுதுவது நம்பிள்ளையின் அரிய உரை நெறியாகும். இவ் வழியே சென்று மற்றை ஆழ்வார்களின் நூல்களுக்கும் உரை யிட்டவர் நம்பிள்ளையின் நன்மாணாக்கரான பெரியவாச்சான் பிள்ளை.

வான்மீகத்தை ஒப்பியல் கண்ணோட்டத்துடன் ஆராய்ந் திருப்பதால், நம்பிள்ளையை ஒப்பியல் இலக்கிய முன்னோடி என்று கூறலாம். ஆழ்வார் தாமான தன்மையிற் பேசும் திரு வாய் மொழிகளிலும் ஆழ்வாருடைய தசைகளைப் பிராட்டி மற்றும் இளையபெருமாள் முதலானாருடைய கூற்றுக்களோடு ஒப்பிட்டிருக்கிறார்.[100] இவ் ஒப்பியல் கண்ணோட்டத்தால் சில பாசுரத் தொடர்களுக்குப் பொருத்தமாகவும் நயமாகவும் சிறப்புப் பொருள்களை வரைந்திருக்கிறார்[101] மேற்கோளாக எடுக்கும் வான்மீகச்சுலோகங்களுக்கும் நயமிக்க விரிவுரை களை இட்டிருக்கிறார். இவ்விரிவுரைகளே பிற்காலத்தில் கோவிந்தராஜரின் வான்மீக இராமாயணப் பேருரைக்குத் தூண்டுதலாகவும் வழிகாட்டியாகவும் அமைந்தன.[102]

### அகப்பொருள் ஆய்வுகள்

திருவாய்மொழியில் 27 பதிகங்கள் அகப்பொருள் பற்றியன. அவற்றுள் தலைவிகூற்றாக அமைந்தவை 17 பதிகங்கள். தாய்கூற்றாக அமைந்தவை 7 பதிகங்கள். தோழி கூற்றாக அமைந்தவை 3 பதிகங்கள். இவ்வகப் பொருட் பாடல்களுக்கு நம்பிள்ளை இட்ட பேருரையில் அகப்பொருள் கிளவிகள் பற்றி அவர் கொண்ட கருத்துக்கள் புலனாகின்றன. 'அஞ்சிறைய மடநாராய், 'மாசறுசோதி, 'மின்னிடைமடவார் ஆகிய பதி கங்களுக்கு மிகப்பரந்த பிரவேசங்களை அமைத்திருக்கிறார். தூதுபோக்கு, அறத்தொடுநிற்றல், வெறிவிலக்கு, மணவிலக்கு மடற்கூற்று, உடன்போக்குத் தனிப் போக்குகள் ஆகியன தவிர

---

100. 9-6-0 ஈ; 9-8-0 ஈ
101. 9-2-2 ஈ
102. கோவிந்தராஜர் ஈட்டைப் பின்பற்றியும் ஈட்டின் தொடர்களை மொழிபெயர்த்தும் வடமொழியில் வான்மீகரின் இராமாயணத்திற்குப் பேருரை வரைந்துள்ளதை ஸ்ரீ. உ. வே. பி. ப. அண்ணங்கராசாரியார் பல நூல்களில் நிறுவியிருக்கிறார்.

வேறு கிளவித்துறைகளைச் சுட்டிக் காட்டவில்லை. பெயர் சுட்டாவிடினும் அவற்றை விரித்துரைப்பர். அவற்றை 'அந்யா பதேச ப்ரகாரம்' என்று அரும்பதகாரர் கூறுவர்.

**தூதுப் பதிகங்கள் :-**

திருவாய்மொழியில் நான்கு பதிகங்கள் தூதுப்பதிகங் களாக உள்ளன. அவற்றின் முன்னுரைகளில் பல அரிய கொள் கைகளை ஆசிரியர் நம்பிள்ளை விளக்கியுள்ளார்.

தூதுப் பதிகங்களில் ஆற்றாமை அறவிஞ்சி நிற்கிறது. கூடிப் பிரிந்த தலைவனைக் கிட்டவேணும் என்பதே அவ்வாற் றாமை. 'இரண்டு தலையையும் அழித்தாகிலும் கிட்டவேணும்' என்பது ஆற்றாமையின் ஆழம். ஆறியிருக்கக் கடவ தலைவி ஆற்றாதவள் ஆனாள். தலைவனைக் கிட்டத் துடித்த தலைவி உடல் தளர்ந்தாள்; அதனால் தானே சென்று கிட்டமுடிய வில்லை. கால் நடை தந்து அழைத்துச் செல்லத் தோழியரும் அவளுடைய தளர்ச்சிகண்டு அவளுக்கு முன் தாமும் தளர்ந் தனர். அந்நிலையில் தலைவி தலைவன்பால் தூதுவிடுகிறாள்.[103] நான்கு தூதுப் பதிகங்களிலும் பறவையினங்களையே தூது போக்குகிறாள். ஆழ்வார் பாடல்களே பறவைகளைத் தூது போக்கும் சிற்றிலக்கியங்களுக்கு முன்னோடி என்பது பிள்ளை யின் கருத்து. ''ஆழ்வார்கள் அவதரித்தபிறகு பறவையினங்கள் வீறு பெற்றன.''[104] என்று கூறுமுகத்தால் அக்கருத்தை உணர வைக்கிறார். வடமொழித் தூதுக்காப்பியங்களும் பிற்காலத்தன என்பதும் பிள்ளையின் கருத்தாகத்தேறுகிறது. தூதுக்குத்திணை நெய்தல் என்றும் இரங்கல் உரிப்பொருள் என்றும் பிள்ளையின் கருத்து. *வைகல் பூங்கழிவாய் (6-1) என்ற தூதுப்பதிகத்தில், திருவண்வண்டூரிலுள்ள இறைவன்பால் தூதுவடப்படுகிறது. அவ்வூர் நெய்தல் நிலத்தது என்பதை நினைவூட்டுகிறார்.[105]

*வைகல் பூங்கழிவாய் (6-1) என்ற தூதுப்பதிகத்தின் முன்னுரை சில வினாக்குறிப்புகளை உள்ளடக்கி இருக்கிறது.

---

103. தலைவனுள்ள இடம் குறித்துப் புறப்பட்டு முற்றப்போகமாட்டாதே ஒரு சோலை யில் விழுந்து கிடந்து அந்நிலையில் தூது போக்குவதும் உண்டு (6 - 8 - 0 ஈ)

104. 1 - 4 - 0 ஈ

105. 6 - 1 - 0 ஈ

(1) தலைவன் தண்ணளி செய்தபோது கண்டிருக்கிறோம் என்று தலைவி ஆறியிருக்க வொண்-ணாதோ?

(2) தூதுவிடுவது அறிவின் செயலா, நைப்பாசையின் செயலா, அன்றி அறிவின்மையின் செயலா?

(3) தலைவியிருக்கிற இடத்தில் பறவைகள் உண்டோ?

(4) எவற்றைக் கண்டு அவன் வரக்கொள்ளத் தூது போக்குகிறாள்?

(5) குணத்தால் நிரம்பிய அவன் வாராமைக்குக் காரணம் யாது?

(6) தலைவி எதனைச் செய்தியாக அறிவிப்பள்?

(7) அறிவிக்கும் இடத்தில் தான்போதல், தோழியரைப் போகவிடுதல் செய்யாதே பறவைகளை விடுவான் ஏன்?

(8) உறவில்லாத பறவைகள் காரியம் செய்யுமோ?

(9) ஒருமுறை போக்கியவள் மீண்டும் தூது போக்குதல் ஏன்?

(10) இராமாவதாரத்தில் தூது விட்ட பிராட்டிக்கும் இவளுக்கும் என்ன வேறுபாடு?

இவற்றுக்கு உள்ளுறையும் அகப் பொருள் மரபும் கலந்து விடைகளை ஆராய்ந்து கீழ்வருமாறு தருகிறார் :-

தலைவன் மீது கொண்ட காதலே காரணமாக ஆற்றாமை கரைபுரண்டு ஆளிட்டு அறிவிக்கிறார் ; தூதுவிடுவது அறிவு, நைப்பாசை, அறிவின்மைகளின் செயலன்று; எதன் செயல் என்று "தெரிகிறதில்லை" ; பிரிந்தார் இரங்குவது நெய்தல் நிலத்திலாதலால் 'அதற்குச் சேர்ந்த கருப்பொருள்களான பறவைகள் உண்டு ; தலைவனுடைய அறிவு, நீர்மை, ஆற்றல் இவற்றைக் கண்டு தூது போக்கினாள்; இந்தப் பண்புகள் நிறைந்திருக்கும் அவன் வேறு பலரையும் காத்தருள வேண்டி அதிலே ஒருப்பட்டதால் தலைவியை மறந்தான்; தன்னுடைய ஆர்த்தியை அறிவித்துத் தூது விடுகிறாள்; அறிவிக்குமிடத்தில் கால் நடை தளர்ந்ததாலும் தோழியரும் தனக்கு முன் நோவுபட்டதாலும் பறவைகளையே தூதுவிடுகிறாள்;

நெய்தல் நிலத்தில் தன்னுடன் ஒருசேர வாழ்பவை யாதலால் அத்தொடர்பே உறுப்பாக அவை காரியம் செய்யும் என்று எண்ணினாள்; 'முன்பு போகவிட்டவர்கள் கொண்டு வருகிறார்கள்' என்று நினைத்துக் கொண்டு ஆறியிருக்கலாம் பொருள் அன்றே; ஆறியிருக்க அமையுமானால் முன்னரே தூது போக்கியது பொருளற்றதன்றோ; தலைவன் ஒருவனையே அனுபவித்ததால் வந்த ஆற்றாமையே சீதைக்கு நேர்ந்தது, இவளுக்குத் தலைவனையும் பிராட்டியையும் சேர அனுபவித்ததால் இரட்டிப்பான ஆற்றாமை நேர்ந்தது, மேலும் அத்தலையினின்றும் வந்தார்க்கே வார்த்தை சொல்லி விட வேண்டும் என்ற இடர்ப்பாடு சீதைக்கு இருந்தது. இவளுக்கு இராவணனைக் குறித்த ஐயப்பாடு ஒன்றுமில்லாமையாலே கண்ணாற் கண்டாரை அடங்கலும் தூதுபோக விடலாம்படி இருந்தது.

இம்முடிபுகளைத் தடைவிடைகளுடன் ஆய்வு நிகழ்த்திய பின்னரே தொகுத்துரைக்கிறார். தூது போக்கும் ஆழ்வார் தலைவியா, பிராட்டியா என்று ஆராயப்பட்டிருக்கிறது. இறைவியான பிராட்டியின் நிலைமை முற்றும் எய்தினாள் ஒரு தலைமகள் என்று நிரூபித்திருக்கிறார்.[106] இறுதியாக, நான்கு தூது மொழிகளிலும் வெளிப்படும் பற்றாசான தலைவனுடைய குணங்களை ஆராய்கிறார்.

மடல் :-

*மாசறுசோதியில் (5-3) ஆழ்வார் மடலேறுவல் எனக் கூறுவதாகச் செல்லுகிறது. இதனைப் பின்பற்றித் திருமங்கையாழ்வார் சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகிய இரு நூல்களைச் செய்தார். *மாசறு சோதித் (5-3) தோற்றுவாயில் நம்பிள்ளை மடல் பற்றிக் கூறும் கருத்துக்கள் தனியாக ஆராயத்தக்கன.

*(1)* 'மடல்' என்பது இரண்டு உலகியல் காட்டுக்களால் விளக்கப்படுகிறது. மடல் எடுப்பது தூது விடுவதைக் காட்டிலும் இழிந்தது; ஆனால் அதைவிட விரைவில் பயன்தரவல்லது; அரிய முயற்சியால் எளிய பலனைக் கருதியது; வழியல்லா வழியில் இழிந்து, தன்முயற்சியால் எதிர்த்தலைக்குப் பழியை

106. 6-8-1 ஈ

விளைவித்தாகிலும் பெறப் பார்க்கும் செயல். இவற்றை மனத்துட்கொண்டு மடலுக்குப் பொதுவான இரு காட்டுக்களைத் தருகிறார்:-

(அ) ''மடலெடுக்கையாவது போர் சுட்டுப் பொறி கொரிக்கை ''[107]

(ஆ) ''ஓரோ விஷயங்களிலே ஓரொருத்தர்க்கு ஸங்கம் உண்டானால், அவ்விஷயங்கள் கிடையாவிட்டால், 'அவை இப்போதே பெறவேணும்' என்னும்படியான த்வரை பிறந்தால், பின்னை அவை இருந்த இடங்களிலே புகை சூழ்ந்து புறப்படவேண்டும்படியாயிருப்பதொரு ஸாஹஸத்தைப் பண்ணிப் புறப்படவிடுவித்து முகத்திலே விழிப்பாரைப்போலே, 'அத்தலைக்குப் பழியை விளைவித்தாகிலும் முகத்திலே விழிக்குமத்தனை' என்று ஸாஹஸத்திலே ஒருப்படுதல்''[108]

(2) மடலின் பொதுத் தன்மையை இரண்டு காட்டுக்களால் புரிய வைத்தபின், மடல் எடுத்தல் சாத்திர முடிவா? அன்றிப் புனைந்துரையா? என்ற வினாக்களுக்கு விடைவிளக்கம் அளிக்கிறார்.

''அபிமத விஷயத்தைப் பிரிந்து ஆற்ற மாட்டாதார் மடல் எடுக்கக் கடவர்கள்' என்று ஒன்று உண்டு தமிழர் சொல்லிப் போருவது.''[109]

என்பது நம்பிள்ளையளிக்கும் பொதுத் தொகுப்புரை. வடமொழிச் சாத்திரங்களில் காணப்படாது தமிழர்கள் தம் இலக்கண இலக்கிய நூல்களில் தொன்று தொட்டு ஒரு மரபாகச் சொல்லிவரும் ஒன்று 'மடல்' என்பது அவர்க்குக் கருத்து. தலைவனுக்கும் தலைவிக்கும் ஒருசேர அமையும்படி 'மடல்' இலக்கணத்தை இவ்வாறு பொதுப்பட மொழிந்தார் பிறகு தாம் இட்ட வரையறையில், பிரிந்து, ஆற்றமாட்டாதார், மடல் எடுக்கக் கடவர்கள் என்ற மூன்றினையும் விரிவாக விளக்குகிறார். பிரிவு கூடியபிறகே விளைவதாகையால், கூடுதற்குக் காரணத்தையும், கூடியபின் பிரிவுக்குக் காரணத்தையும், பிரிந்தால் ஆற்றாமைக்குக் காரணத்தையும் மடல் எடுக்கும் படி

---

108. மேலது
109. மேலது

களையும் அதுதானும் பலனளிக்கும் படிகளையும் அவ்விளக்கங்கள் தெளிவுறுததுகின்றன.

(அ) "... ... இப்படி இரண்டு தலையும் குறைவற்று இவர்கள் தாங்கள் ப்ராப்த யௌவநருமாயிருக்க; இவர்களைப் புறம்பு கூட்டுவாரின்றிக்கே இருக்க, யாத்ருச்சிகமாக அவனும் 'வேட்டைக்கு' என்று புறப்பட்டு இவளும் 'பூக்கொய்து விளையாட' என்றுஉத்யானத்திலேபுறப்பட, அவ்விடத்திலே தைவயோகத்தாலே இருவருக்கும் கண் கலவியுண்டாய், சிலரடியாக வந்த ஸம்ச்லேஷமல்லாமையாலே, பிரிவோடேவ் யாப்தமாகப் பிரிந்து"[110]

இயற்கைப் புணர்ச்சி பிரிவுடன் கூடியே நிற்கும் என்பது பிள்ளையின் உட்கோளாகும்.

(ஆ) "குணாதிக விஷயமாகையாலே இரண்டு தலைக்கும் ஆற்றாமை விஞ்சி ஒரு தலையை ஒழிய ஒருதலைக்குச் செல்லாமை பிறந்து இரண்டு தலையையும் அழித்தாகிலும் பெறப்பார்க்கை"

இது ஆற்றாமைக்குக் கூறும் காரணம். ஆற்றாமையால் விளைவது 'செல்லாமை' ஆகும். ஆற்றாமை இருவர்க்கும் சமம் ஆனாலும் செல்லாமை ஒரு தலைக்கே விஞ்சிநிற்கும் என்று இங்கு அரும்பதகாரர் தெளிவுபடுத்துகிறார். ஆனால் அத்தலை தலைவனா தலைவியா என்பதைப் பிரித்துக் கூறவில்லை. ஏதோ ஒரு தலையிடத்தே அற விஞ்சி நிற்பதால்தான் மடல் எடுக்கும் காரியம் உண்டாகும் என்பது அவர்க்குக் கருத்தாகிறது.

(இ) "மடலூருகைதான் - அபிமத விஷயத்தைப் பிரிந்து ஆற்றாமையாலே அவ்விஷயத்தை ஒரு படத்திலே எழுதி, வைத்தகண் வாங்காதே அத்தைப் பார்த்துக் கொண்டு, பனை மடலைக் குதிரையாகக் கொண்டு பிரிந்தபோது தொடங்கிக் கண்ட போக உபகரணங்கள் எல்லாம் அக்னிகல்பமாய்த்தோற்ற ஊணும் உறக்கமும் இன்றிக்கே, உடம்பில் துளிநீர் ஏறிட்டுக் கொள்ளாதே, மயிரைவிரித்துக் கொண்டு திரியா நின்றால், இத்தர்ம ஹாநியைக் கண்ட க்ஷத்ரியாதிகள் 'கெட்டேன்,

110. தெய்வம் என்பது ஊழ் என்பர் பரிமேலழகர்.

இவனுக்கு ஒரு விஷயத்திலே இத்தனை பாவபந்தம் உண்டாவதே' என்று அவர்கள் அவ்விஷயத்திலே கூட்டுதல்; இல்லையாகில் இதுவே இரண்டு தலையிலுள்ள பந்துக்களும் கைவிட அலக்குப் போர் போலே ஒருவர்க்கொருவர் புகலாய் அங்ஙனே கூடுதல்; தோழிமார் கூட்டுதல்; ஆற்றாமைகூட்டுதல்; அந்த விஷயம்தான் குணாதிக விஷயமாயிருக்குமாகில் பழிக்கு அஞ்சிக் கூடுதல்; இவை இத்தனையும் இல்லையாகில் முடிந்து பிழைத்தல் செய்கையாவது ஒரு ஸாஹஸ ப்ரவ்ருத்தி விசேஷமாயிற்று.''

(3) இனிப், பெண்டிர் மடல் எடுப்பது தமிழிலக்கணிகளால் மறுக்கப்பட்டிருப்பதைக் காட்டிப் பாராங்குசநாயகியான தலைவி மடலேற ஒருப்பட்டதை ஆராய்கிறார். மடன்மாப்பெண்டிர் ஏறார் என்பதற்குத் தொல்காப்பியம் அல்லது திருக்குறளிலிருந்து பிரமாணம் எடுக்காது தம் காலத்து வழக்கத்திலிருந்த ஒரு நூலிலிருந்து விதியைக் காட்டுகிறார்.

> ''கடலன்ன காமத்த ராகிலும் மாதர்
> மடலூரார் மற்றையார் மேல்''[111]

என்பது நம்பிள்ளை காட்டும் குறள்வெண்பா மேற்கோள். பெரியவாச்சான் பிள்ளையும் இதனையே காட்டியிருக்கிறார். ''இங்கு அங்ஙன் அன்றிக்கே, பிராட்டி தான் மடல் எடுத்ததாக இராநின்றது, தமிழர் 'ஸ்திரீகள் மடலூரக் கடவரல்லர்' என்று சொன்ன இது பின்னைச் சேரும்படி என்?'' என்று வினா எழுப்பி அதனை மூன்று வகையாக ஆராய்ந்து சேரும் என்று நிலைநிறுத்துகிறார்.

(அ) முதற்கண் பெண்மடலேறக் கூடாதென்னும் விதியை மறுத்து 'மடலேறலாம்' என்று நிறுவுகிறார். இதனை 'அனப்யுபகம்ய வாதம்' என்பர். ஆடவர் மடல் ஊருவதற்குக் காரணம் எதுவோ அஃது பெண்டிர்க்கும் உண்டு என்று தம் கோட்பாட்டை முதற்கண் வெளிப்படுத்துகிறார். ''அவர்கள் ஒரு தலையிலேதான் அத்தை இசைந்தார்களே, அப்படி இசைகைக்கு அடி ஆற்றாமையே. அது இரண்டு தலைக்கும் ஒத்தபின்பு ஒரு தலையில் ஒதுக்குவார் ஆர்?'' என்று கேட்கிறார் ஆற்றாமை

---

111. 5-3-0 ஈ

அடியாக நாணுத்துறவுரைத்தல் இருபாற்கும் பொது என்பது பிள்ளையின் உட்கிடை. காப்புச் சிறைமிக்குக் காமம் பெருகிய வழி

> நிறையரியர் மன்னளியர் என்னாது காமம்
> மறையிறந்து மன்று படும்[112]

என்று தலைவி கூறியது பிள்ளையின் கருத்துக்கு அரண் செய்கிறது. மகளிர் என்ற சொல்லை வருவித்தும் விகாரத்தால் தொக்க இறந்தது தழீஇய எச்சவும்மையையும் கூட்டி "மகளிர் காமமும் அவர் மறைத்தலைக் கடந்து மன்றின் கண்ணே வெளிப்படுவதாயிருந்தது" என்ற பரிமேலழகரின் உரை இதனைத் தெளிவாக்குகிறது. இங்ஙன் இருந்தும் 'மகளிர் மடல்மா ஏறத்தகார்' என்று மரியாதை கட்டுவது ஆசைக்கு வரம்பு இடுவதாகும். ஆசைக்கு வரம்பிடுவதாவது எது? அரசன் ஆணைக்கு ஆசை நிற்குமோ? வேலிஅடைத்தால் நிற்குமோ? அப்படி நிற்காத ஆசைக்கு நூல் வரம்பிடுபவர்களைக் குறித்து 'அன்பின் இயல்பு அறியாதார்' என்று குற்றஞ்சாட்டுகிறார். 'மாதர் மடலூரார் மற்றையார்மேல்' என்றதும் 'மடலேறாப் பெண்'[113] என்றதும் விதி விலக்குகளில் நோக்கானவை அல்ல; மகளிரின் சிறப்பை உயர்த்திக் கூறுவதில் நோக்குடையவை என்று பெரியவாச்சான் பிள்ளை இவ்விடத்து ஒரு கருத்தைச் சொல்லுகிறார்.[114] ஆழ்வார்களின் மடற்பாடல்களை ஒழிய நம்பிள்ளை காலம் வரை வேறு மடல் நூல்கள் தோன்றவில்லை என்று ஈட்டை நுண்ணிதின் நோக்கினால் தெரிகிறது.

(ஆ) இரண்டாவதாக, தமிழ் நூலோரிட்ட இலக்கண மரியாதைக்கு ஒரு கருத்தைத் தெரிவித்துப் பராங்குச நாயகியின் மடலேற்றை ஒருங்கவிடுகிறார். புலனெறி வழக்கத்தின் பாற்பட்ட இலக்கியத் தலைவர்கள் இறைவனைப் போன்று குணநலன்களால் முழுமை எய்தினார்களல்லர். "வரம்பு அழியவாகிலும் முகம் காட்டி வைத்துக் கொண்டு தரிக்க வேண்டும்படியாய் இருப்பதொரு விஷயம் புறம்பு இல்லை" என்பர். பெண் மடலை விலக்கி மரியாதை கட்டியதற்குக் கருத்து

112. திருக்குறள் 1138
113. மேலது
114. பிரவேசம், பெ. தி. ம.
115. பன்னிருபாட்டியல், 241-6

அதுவே. இது நம்பிள்ளை தரும் நுண்ணிய தனிக் கொள்கை. எனவே குணங்களால் முழுநிறைவு பெற்றுத் தனக்குவமையில் லாத ஒப்பரிய தலைவனான திருமாலைக் குறித்துப் பராங்குச நாயகி மடலேறத் தட்டில்லை என்று நம்பிள்ளை ஒரு போக்குக் காட்டுவர்.

'மடன்மாப் பெண்டிர் ஏறார் ஏறுவர்
கடவுளர் தலைவராய் வருங்காலை'
'கடவுளர் மேற்றே காரிகைமடலே'[115]

என்ற பன்னிருபாட்டியல் இலக்கணம் நம்பிள்ளையின் நெறியைப் பின்பற்றிச் செல்கிறது. ஆழ்வாருடைய * மாசறுசோதியும் அதனை விரித்துரைத்த திருமடல்கள் இரண்டினையும் இலக்கியமாகக் கொண்டு பிற்காலத்தில் இவை எழுந்தனவாகலாம். அந்தக் கருத்தினாலேயே இவற்றைப் பிள்ளை எடுத்துக் காட்டவில்லை. "பின்புள்ளார்க்கும் இவை கொண்டு லக்ஷணம் கட்டலாயிருக்கும்"[116] என்று வேறு ஓரிடத்தில் நம்பிள்ளை கூறியுள்ளார் அதனால் ஆழ்வாருடைய பாடலைக் கொண்டு பன்னிருபாட்டியலில் மடல் இலக்கண விரிவு ஏற்பட்டது தெளிவாகிறது.

(இ) இறுதியாக, ஆழ்வார் தலைவியாகி மடல் ஊர்வன் என்று கூறினாரேயொழிய உண்மையில் மடல் ஊர்ந்தாரல்லர். இராமபிரான் வில்லைக் காட்டி வேலையை அச்சுறுத்தி அணை கட்டினாற் போல, மடலூர்வேன் என்று தலைவி அச்சுறுத்திக் கூறுவதாக அமையும் மடற்கூற்றே இது. "மடலூருவேன் என்று அச்சமுறுத்தி முகங்காட்டுவித்துக் கொள்ளப் பார்க்கிறார்"; "இவர் மடலிலே துணிந்தால் கடுக வந்து முகங் காட்டிப் பிழைக்கில் பிழைக்கும் இத்தனை போக்கி, இல்லையாகில் ஸத்தை கிடக்க விரகில்லையிறே அவனுக்கு" என்று வரும் ஈட்டுத் தொடர்கள் இதனை விளக்குவனவாம். மடல் என்ற கூரிய கணையைத் தொடுத்து அச்சுறுத்தின அளவே ஒழிய அதை எய்தாரல்லர் என்பது கருத்தாகும். நச்சினார்க்கினியரும் ஆழ்வார் மடல்கள் மடலேற்றன்று மடலேறுவல் எனக் கூறிய துணையேயாம் என்று இக்கருத்தினைத் தழுவியுள்ளார்.[117] கலித்தொகையில் வரும் பெண்பால் மடற்கும் இதுவே கருத்தாகும்.[118]

116. 10-6-4 ஈ
117. நச்சினார்க்கினியர், தொல், அகத். 35
118. கலித்தொகை, 147.

(ஈ) மடலெடுக்கத்துணியும் தலைவி உண்மையில் ஆழ்வார்தாமே. ஆழ்வாருடைய இயல்புகளை ஆராயின் நிறக்கேடான மடலேற்றம் பொருந்துமோ என்று ஐயுற்று ஒருவாறு பொருந்தவிடுவர் நம்பிள்ளை. அவர் காட்டும் முரண்களாவன :-

(1) அவனுக்கு ஒரு புகழ்க்கேட்டை விளைப்பதிற் காட்டிலும் அகன்று போய் உயிரை முடித்தாகிலும் அவனுக்குச் சிறப்பைப் பண்ண அமையும் என்று இருக்கும் இயல்போடும் சேராது.[119]

(2) அவனுக்குப் பயன்படாத உயிரும் உடலும் நசித்துப் போக அமையும் என்று சொன்ன சொற்களோடும் சேராது.[120]

இனி ஆழ்வார் இயல்புடன் நன்கு சேரும் என்பதனை ஆறு படிகளால் விரிவாக நிறுவுகிறார்.

(1) ஈண்டும் 'தன்னை ஆசைப்பட்டாருக்கு முகம் காட்டாததால் அவர்களை முடியச் 'செய்தான்' என்ற புகழ்க்கேடு வரக்கூடாது என்பதற்கே மடல் எடுக்கிறார்;

(2) பக்தியின் செயலான கலக்கத்தாலே இயல்புக்கு முரணாயிலும் தவிர்க்கப் போகாது;

(3) இவர் மடல் எடுக்காவிடில் நடுவே காலத்தாழ்வுக்கு அடி என்? என்று கேள்வி பிறந்து அவனுடைய காக்கும் இயல்வைப் பிறர் ஐயுற நேரும்;

(4) மடலூருவேன் என்று அச்சுறுத்தப்பார்க்கிறாரே ஒழிய ஊர்ந்தாரிலர்;

(5) *ஏறாளுமிறையோனில் (4—8) தன்னையும் தன் உடைமையயும் அழிக்கப்பார்த்தார்; அவை அழிந்தில ஈண்டு வேர்ப்பற்றோடே அழிக்கப்பார்க்கிறார். ஆதலால் இயல்வுக்கு முரணில்லை;

(6) இயல்புக்கு முரணேயானாலும் ஆற்றாமையின் முறுகுதலாலே இயல்பை மீறியும் அவனை அழிக்கப்பார்க்கிறார்.

நம்பிள்ளையின் கருத்துக்களை முழுதும் தழுவி அவருடைய மாணாக்கரான பெரியவாச்சான்பிள்ளை திருமடல்களின் வியாக்

119. 1-5-0 ஈ

120. 4-8-0 ஈ

கியானத் தோற்றுவாய்களில் மிகவிரிவான ஆராய்ச்சிகளை நிகழ்த்தியிருக்கிறார். *மாசறுசோதி (5-3) தோற்றுவாயில் 'ஆரிய மரியாதைகள்' பற்றி நம்பிள்ளை ஒன்றும் கூறிற்றிலர். அப்பதிகத்தில் வடமொழி நெறிகளைப் பற்றிய குறிப்புகள் இல்லையாதலால் அப்படிக் கூறிற்றிலர். பெரிய திருமடலில் 'மன்னும் வடநெறியே வேண்டினோம்'[121] என்று வருவதால் அவற்றைச் சொல்ல வேண்டிய தேவை பெரியவாச்சான்பிள்ளைக்கு ஏற்பட்டது.

**அனுகாரம் (போலச் செய்தல்):-**

அகப்பொருள் தலைவி காமமிக்க கழிபடர் கிளவிகளால் தூதுரைத்துத் தரிக்கப்பார்த்தல், மடலேறுவல் என அச்சுறுத்தி முகங்காட்டுவிக்கப் பார்த்தல் என்பன ஆற்றாமையின் விளைவுகளானாப் போல், தலைவனுடைய செயல்களையும் சொற்களையும் அவனாகவே தன்னைக் கருதித் தன்னுடைய மெய்ப்பாடுகளாக ஆக்கித் தரிக்கப்பார்ப்பதும் ஆற்றாமையின் விளைவாகும். இதனை 'அனுகரித்தல்'[122] என்பர். 'போலச் செய்தல்' என்பது பொருள். 'அசுக்காட்டுதல்'[123] என்று இதற்குரிய அரிய தமிழ்ச் சொல்லை திருப்பாவை ஆறாயிரப்படியிற் காண்கிறோம்.

அனுகாரத்தில் அமைந்த *கடல் ஞாலம் (5-6) என்னும் திருவாய்மொழி தாய் கூற்றாக அமைந்திருக்கிறது. தலைவனுடைய பேச்சுக்களையே பேசிக் காட்டுகிறாள் தலைவி. இனம் குறித்தலாகத் தலைவனுடைய செயல்களையும் தலைவி அனுகரித்ததாகப்பிள்ளை கருதுவர். மெய்ப்பாடுகள் விளைந்தே சொற்கள் பிறக்கும் என்ற உளவியலைக் கண்டவர் நம்பிள்ளை. 'கடல் ஞாலம் செய்தேனும் யானே'[124] என்று தலைவி கூறிய போது ஞானமுத்திரையும் தானுமாகக் கீதையுரைத்த கண்ணனைப்போலே வீற்றிருந்ததாக வருணிக்கிறார் பிள்ளை.

இறைவனைப் போன்றே அனுகரித்துப் பேசியவர்களாக வடமொழிப் புராண இலக்கியங்களிலிருந்து பலரையும் காட்டுகிறார் அனுகாரத்துக்கு அடிப்படையாக அமைவது நினைவின் முதிர்ச்சியாகும். இதனை 'பாவனாப்ரகர்ஷம்'[125] என்று குறிப்

121. பெ. தி ம அடி. 39.
122. பெ, வா. பி. வியா,, பிரவேசம், திருப்பாவை
123. அ. ம. நா. வியா., திருப்பாவை, 28.
124. 5-6-1
125. பெ. வா. பி. வியா., பிரவேசம், திருப்பாவை

பிடுகிறார்.முத்தியடைந்தான் ஒருவன் தன்னைப் பிரம்மமாகவே நினைத்து அது முதிர்ந்த நிலையில் தனக்கும் பிரம்மத்திற்கும் வேறுபாட்டை மறந்து ஒன்றாகிப் பேசுவதையும்,[126] 'பிரம்ம சாட்சாத்காரம்' அடைந்த இருடி ஒருவர் தன்னை மனுவாக வும் சூரியனாகவும் நினைத்துப் பேசுவதையும்[127] நம்பிள்ளை மேற்கோள் காட்டுகிறார். நினைவின் முதிர்வால் உடலுறுப் புக்களிலும் மாற்றங்கள் விளையும் என்பதையும் காட்டுகி-றார்.[128] நினைவின் முதிர்ச்சியால் ஆண்டாளுக்கு இடைநடை யும் இடைப்பேச்சும் முடைநாற்றமும் உண்டாயின என்பர் பெரியவாச்சான்பிள்ளை.[129] 'அதற்கு அடிப்படைக் கொள்கை வழங்கியவர் நம்பிள்ளை.அனுகாரம் ஒருவகை இறைத்தொண்டு என்றும் காட்டுகிறார். தலைவியின் அனுகாரத்தால் தலைவ னுக்கு மகிழ்ச்சி உண்டாக்குவதே இறையடிமை.

ஆயர்பாடி ஆய்ச்சியரும் கண்ணனை அனுகரித்தார்கள்.[130] ஓர் அவதாரச் செயல்களையே அவர்கள் அனுகரித்தார்கள். ''இவள் மயர்வற மதிநலம் அருளப் பெற்றவளாகையாலே உபய விபூதி யுக்தனை அனுகரிக்கிறாள்'' என்பர் பிள்ளை. இதனால் ஆழ்வாருடைய தலைவியாம் தன்மை (Bridal Mysticism) அனு கார நிலையில் உலகளாவி விண்ணையும் விஞ்சி நிற்கும்படியா யிருந்தது என்பது பிள்ளையின் அரிய விளக்கமாகும்.

### சில துறை விளக்கங்கள்

**வெறிவிலக்கு :-**

''விரக வெப்பத்தாலே நோவுபடுகிறவளுக்கு ஆடறுப்பது கள்உகுப்பது பலி இடுவதாய் பரிகரிக்கப்புக, தோழியானவள் 'இது ஒரு விஷயத்தில் பாவபந்தமடியாக வந்த நோயாயிற்று; மற்றொன்றாலன்று' என்று அவர்கள் செய்கிறவற்றை விலக் குகை.''[131]

**அறத்தொடு நிற்றல்**

''எம்பெருமானோடே இயற்கையிலே புணர்ந்து பிரிந்

126. வி. பு. 6 - 7 - 95
127. பிரு. உப. 3:4
128. 5 - 6 - 4 ஈ
129. பெ. வா. பி. வியா , பிரவேசம், திருப்பாவை
130. விஷ்ணுபுராணம், 5:13-27
131. 4 - 6 - 11

தாள் ஒரு பிராட்டி அவனாலே சிந்தை பறியுண்டபடியை உயிர்த் தோழியானவள் கண்டு வடிவ வேறுபாட்டாலும் பேச்சில் வேறுபாட்டாலும் கலவி நிகழ்ந்ததை அறிந்தாள்; இவையொன்றும் அறியாதே மணப்பருவம் அடைந்தாள் என்றும் இவ்வளவே கொண்டு பெற்றோர்கள் சுயம்வரத்துக்காக மண முரசு அறைவிக்க அத்தைக் கேட்ட தோழி துடித்து 'இந்த ஒலியைக் கேட்டால் இவளைக் கிடைப்பது அரிது; எம்பெரு மானோடு கலவி நேர்ந்தது என்றால் நம் காவற் சோர்வாலே வந்ததாய் விடும்; அறிவியாது ஒழியில் இவளை இழக்க நேரிடும்' என்று ஆராய்ந்து, 'இவர்கள் வடிவு வேறுபாடு களைக் கொண்டு ஆராயா நின்றார்கள்; நாமும் இவர்களுடன் ஆராய்ச்சியில் இழிந்து அவ்வழியாலே அறிந்தோமாய் இத்தை விலக்க வேணும்' என்று முடிவு செய்து ... அறத்தோடு நிற் கிறாள். 'மணவிலக்கு' என்பதொரு கிளவித்துறை இது.''[132]

உடன்போக்கும் தனிப்போக்கும் :

*உண்ணுஞ்சோறு (6-7) என்னும் பதிகத்தில் தலைவியின் தனிப்போக்கு தாய் கூற்றால் பேசப்படுகிறது. * கள்வன் கொல் (3-7) என்னும் பெரிய திருமொழிப் பதிகத்தில் தலைவனுடன் போக்கு தாய்கூற்றால் பேசப்படுகிறது. இவ்விரு போக் குகளிலும் தலைவியின் நிலைமையை நம்பிள்ளை ஆராய்கிறார். யாருடைய நிலை தாய்க்கு மிக இரங்கற்குரியது என்பதையும் அறுதியிடுகிறார். தமக்கு முன்பிருந்த ஆசிரியர்களின் ஆய்வு களையும் சுட்டிக்காட்டியிருக்கிறார். தனிப் போக்கில் ஒருப் பட்டவள் இடைநிற்காது தலைவன் இருப்பிடத்தைச் சென்று எய்துவள்; தலைவனோடு உடன் போக்கிலே ஈடுபட்டவள் நெடுநாள் பிரிந்தபின் கூடிச் செல்வதால் இருவரும் இருவர்க் கும் ஊமத்தங்காயாய் கடித்ததும் ஊர்ந்ததும் அறியாதாராய் எங்கே இடைநிலத்தில் மயங்கிக் கிடப்பார்களோ என்று இவ ருக்கே வயிறு எரியும்படியாய் இரங்க வேண்டும் என்று அறு தியிடுகிறார்.

பூத்தருபுணர்ச்சி :-

''எட்டாத கொம்பிலே நின்றதொரு பூவை ஆசைப் பட்டால் இவன் தன்னைப் பேணாதே இவளாசையை முடித்துக்

132. 8-9-0 ஈ

கொடுக்கை, இவள் தன்னைப் பேணாதே நம் நினைவை முடித்தானே என்று அதுக்காகத் தன்னைக் கொடுக்கை.''

புனல்தருபுணர்ச்சி :-

''ஆற்றிலே அழுந்துகிற இவளைத் தான் புக்கு ஏற விட்டதுக்காகக் தன்னைக் கொடுக்கை''

களிறுதரு புணர்ச்சி

''அசிந்திதமாக யானையின் கையிலே அகப்பட்டவளை மீட்டுக் கொடுத்ததுக்சாகத் தன்னைக் கொடுக்கை.''[133]

### உள்ளுறை (ஸ்வாபதேசம்)

ஆழ்வார் பாடிய பதிகங்கள் இருவகையாகப் பிரிக்கப் படுகின்றன. அவற்றுள் தாமான தன்மையிழந்து 'வேற்று வாயால்' பாடியவற்றை 'அன்யாபதேசம்' என்பர் நம்பிள்ளை; தலைவி, தோழி, தாய் கூற்றுக்கள் இதில் அடங்கும். *சூழ் விசும்பணிமுகில் (10–9) என்ற பதிகம் ஆழ்வாருடைய பேற்றைப் பாராட்டிக் கூறுவதாக அமைந்திருக்கிறது. இதனையும் 'அன்யாபதேசம்' என்ற வகையில் அடக்குகிறார். ''தமக்கு அவன் பண்ணிக் கொடுத்த பேற்றை வைஷ்ணவர்கள் எல்லாரும் பெற்றார்களாகப் பேசின இது—அந்யாபதேசமாவது'' என்பது ஈடு ஆழ்வார் அடியார்களாக மாறிப் பேசினபடி-யால் அன்யாபதேசமாயிற்று இதற்கு மாறாக ஆழ்வார் தாமான தன்மையில் பேசுகின்ற பதிகங்கள் யாவும் 'ஸ்வாபதேசம்' ஆகும். ஞானத்தில் தம் பேச்சு, பிரேமத்தில் பெண் பேச்சு என்பர்.[134]

சொற்போக்கில் மேலெழுந்த வாரியாகத் தோன்றுகின்ற பொருள் 'அன்யாபதேசம்' என்றும், உள்ளூர ஆழ்ந்து பார்க்குமளவில் கிடைக்கும் பொருள் 'ஸ்வாபதேசம்' என்றும் வழங்கப் படுவதாக ஸ்ரீ.உ.வே.பி.ப அண்ணங்கராசாரியார் கூறுவர்.[135] 'ஸ்வாபதேசம்' என்பது 'உள்ளுறைபொருள்'; அன்யாபதேசம்'

133. 4-4-6 ஈ
134. ஆசாரியஹிருதயம், 118
135. பி. ப. அண்ணங்கராசாரியார், ஸத்ஸம்பிரதாய பரித்ராணம், 1945, ப. 1

என்பதுமேலெழத் தனித்துநிற்பதால் வேற்றுப்பொருள்' என்று அவர்க்குக் கருத்தாகிறது. அதனால் ஆழ்வார் தாமான தன்மையிற் பாடுவனவற்றிற்கும் உள்ளுறை பொருள் கொள்ள இடனுண்டு என்று தோற்றும். ஆனால் உண்மையில் ஆழ்வார் வேற்று வாயாற்பாடிய பாடல்களுக்கே ஸ்வாபதேசம் என்ற உள்ளுறை உரையாசிரியர்களால் குறிக்கப்படுகிறது. பிற்காலத்தில் எல்லாப் பாடல்களுக்கும் உள்ளுறை எழுதும் போக்கு வரையறையின்றிப் பெருகிவிட்டது.

ஆழ்வார் வேற்றுவாயால் அன்யாபதேசமாகப் பாடியிருக்கும் பாடல்களை ஆழ்வார் தாமான தன்மையால் பாடியிருந்தால் எவற்றைக் கருதியிருப்பார் என்பதை அறிந்து வெளியிடுவதே 'ஸ்வாபதேசம்' ஆகும். அவ்வெளியீடே 'உள்ளுறை' எனப்படும். அதாவது, ஆழ்வார் காதல் முதிர்ந்து பேசினவற்றை அறிவு நிலைப் பேச்சுக்களாக மாற்றுவதே 'உள்ளுறை' என்பது.

உள்ளுறைக்கு அடிப்படையான கொள்கைகளை நம்பிள்ளை உரைப்பாயிரத்திலும் சில அகப்பொருள் பதிகங்களின் தோற்றுவாய்களிலும் வெளியிட்டிருக்கிறார். அகப் பொருட்பாடல்களில் நிறைந்து இயல்வது 'காமம்' ஆகும் இது உலகியற் காமம் அன்று; இறைவன் மாட்டுக் கொள்ளும் பக்தியே 'காமம், என்று அகப் பொருட் பதிகங்களில் குறியீடுபெறுகிறது. காதல் அன்பு, அவா, வேட்கை என்பனவும் ஒரு பொருட் கிளவிகளாய் 'காமம்' என்பதைக் குறித்து நிற்கும்.[136] பக்தியை 'பகவத் காமம்' என்று பேரிட்டழைப்பர் நம்பிள்ளை. வேதாந்தத்தில் 'நிதித்யாஸிதவ்ய:' என்று வருகிறது 'பிரம்மத்தை இடையறாது நினைக்கக் கடவன்' என்று அது பக்தியை விதிக்கிறது. அதுவே 'பகவத் காமம்' ஆகும். அதனை அறியாத ஒருவன் திருவாய்மொழி அகப்பொருட்பாடல்களைக்கேட்டு 'இது என்ன! காமுகனின் வாக்கியங்களாக இருக்கின்றனவே' என்று வெறுத்துப்போனானாம். ஆழ்வாருடைய அகப்பாடல்களை நுகரப் பெறும் பேறு பெற்றிலன் அவன் என்று நம்பிள்ளை வருந்தியுரைக்கிறார்.[137] அகப்பாடல்களில் தத்துவப் பொருள்களை உள்ளுறுத்துப் பாடியதற்குக் காரணத்தை 'குடஜிஹ்வா நியா

136. ஆசாரியஹ்ருதயம், 98

137. 1-4-0 ஈ

யம்' என்பதாக அரும்பதவுரைகாரர் விளக்குகிறார். கசப்பான மருந்தை வெல்லத்துட் பொதிந்து கொடுப்பது என்று இதற்குப் பொருள். 'கடுத்தின்னாதானைக் கட்டி பூசிக் கடுத்தீற்றிய வாறு'[138] என்று களவியலுக்கு பொருள் விரிக்கும்போது கூறுவர் நக்கீரர். அகப்பொருளுக்கும் பயன் வீடுபேறு என்பதும் நக்கீரரின் கொள்கை, இத்தமிழ் மரபினைப் போற்றிக் கொண்டு ஆழ்வார் அகப்பாடல்களுக்கு உள்ளுறை குறித்தவர் நம்பிள்ளை, திருக்கோவையாருக்கு உரையிட்ட பேராசிரியரும் அதிகார வரலாறு தொகுக்குமிடத்தில் ''அருள்வயிற் சிறந்த அகத்திணை மருங்கு''[139] எனவும் உரைப்பாயிரத்தில் திருக்கோவையாரில் 'அறிவன் நூற்பொருளும் உலகநூல் வழக்கும் என இருபொருளும் நுதலியெடுத்துக் கொண்டனர்' எனவும் இம்மரபைக் குறிப்பிடுகிறார்.

### அடிப்படை உள்ளுறைகள்

களவியற்கண், தலைவன் ஒரு சோலையிடத்தே தலைவியைக் கூடிக் கலவியின்பம் பெறுவதை 'யாத்ருச்சிக ஸம்ச்லேஷம்' என்பர் நம்பிள்ளை. ஆழ்வார் இறைவனால் மயர்வற மதிநலம் அருளப் பெற்றதே இக்களவுப் புணர்ச்சியாகும். கலவியானால்பிரிவோடு கூடியேயிருக்கும். இப்பிரிவினை 'விச்லேஷம்' என்பர். இறைவனால் மயர்வற மதிநலம் அருளப் பெற்ற அந்த ஞானம் பேற்றோடே உடன் தலைக்கட்டப் பெறாமையே 'விச்லேஷம்' என்பர் பிள்ளை.[140] இனி அடுத்து நிகழும் கலவிகளுக்கும் பிரிவுகளுக்கும் உள்ளுறைகளைக் கூறுகிறார். கலவியாவது உரு வெளிப்பட்டால் இறைவனைக் கண்டு மனத்துப்பெறும் இன்ப நுகர்வு: பிரிவாவது அவ்விறைவனைப் புறக்கரணங்களால் தழுவ ஆசைப்பட்டு அது பெறாமையால் மனவுணர்வுக்கு வரும் கலக்கம். பிரிவுக்கு உள்ளுறை பொருள் மிக நுண்ணியது. பிரிவின்றிக்கேயிருந்தால் கலவியின்பம் அளவிறந்து சென்று உயிருக்கே இறுதியாய்விடும். இதனை 'நற்கேடு' என்பர் பெரியவாச்சான் பிள்ளை.[141] தலைவி நுகரும் இன்பம் பொறுக்கவும், மேலும் காதலுணர்வு பெருகுவதற்கும் பிரிவு நிகழ்வதாகப் பிள்ளையின் கருத்தாகும். உளுைறையில், இறைமைக்

138. இறையனார் களவியலுரை, சூத். 1

139. பேராசிரியருரை, திருக்கோவையார். அதிகாரவரலாறு,

140. 1 - 4 - 0 ஈ

141. பெ. வா. பி. வியா. பிரவேசம், திருப்பாவை

குணங்கள் பெருவெள்ளமாதலின் அவற்றை ஆழ்வாருக்குப் பொறுக்கப் பொறுக்கத் தருவதற்காகவும் மேலும் விடாயைப் பிறப்பிப்பதற்காகவும் இறைவன் ஆழ்வாரைப் பிரிந்து கட்கு இலனாகின்றான். 'இப்படிக் கலவியாலும் பிரிவாலும் வந்த தசைஅன்யாபதேசப் பேச்சைப் பேசுவிக்கும்' என்று முடிவுகாட்டுகிறார்.

பிராட்டி நிலை :

அன்யாபதேசப் பேச்சு ஆழ்வார்க்கு வருவதற்கும் ஆறு காரணங்களை நம்பிள்ளை காட்டியுள்ளார். பிறருக்கு உரிமை யின்மை, பிறரைப்புகவாகக் கொள்ளாமை, சேர்த்தியில் ஆறி யிருத்சல், பிரிவில் ஆற்றாமை, அவனுக்கே நுகர்பொருளா யிருத்தல், அவனால் நிருவகிக்கப்படுதல் என்று ஆறு காரணங் களும் முதிர்ந்து பண்பட்ட நிலையில் காதல் மிக்குப் பெண் பேச்சு விழும் என்பர் நம்பிள்ளை. இதனை 'ஸாம்ய ஷட்கம்' என்று தொகைக் குறியிடுவர் அழகியமணவாளப் பெருமாள் நாயனார்.[142] இவ்வாறும் ஆழ்வார்க்கு வந்தேறியன்று; இயல் பாகும் என்றும் அவர் கூறுவர்.

இனி அன்யாபதேசமாய் மணிவல்லிப் பேச்சைப் பேசும் ஆழ்வாரைத் தலைவி என்று கூறாது 'பிராட்டி' என்றே நம்பிள்ளை குறிப்பிடுகிறார். இறைவியோடு முற்றுவமை பெற் றிருக்கிறபடியால் பிராட்டி என்று குறிப்பதாகச் காரணம் கூறுகிறார். தலைவி, கலவி, பிரிவு இவற்றிற்கு உள்ளுறை கூறிமுடித்தார். தலைவனுக்கு உள்ளுறை வேண்டிற்றிலர். அவன் யாண்டும் இறைவனாகவே அமைகிறான்.

தாய்—தோழி—மகள்

தலைவியின் நிலையை அடைகிற ஆழ்வார்க்கே தாயாகிற நிலையையும் தோழியாகிற நிலைமையும் பொருந்துகின்றன. இறைவனோடு உண்டான ஒழிக்கவொழியாத உறவுகளை எண்ணுகிற நிலையில் பிறக்கும் அன்யாபதேசப் பேச்சுக்கள் தோழி கூற்றாக விழுகின்றன; அவன் வரக் கொள்ளவேணும் என்று ஆறியிருக்கும் நிலையில் பிறப்பன தாய் கூற்றாக விழு கின்றன; அவனே உபாயம் என்ற கோட்பாட்டையும் மீறி

142. ஆசாரியஹிருதயம், 122.

அவனைக் கிட்டியல்லது ஆறியிரேன் என்றிருக்கும் நிலையிற் பிறப்பன மகளான பிராட்டி கூற்றுக்களாக விழுகின்றன. இவற்றை உறவில் உணர்த்தி, உபாயத்தில் துணிவு, பலனில் பதற்றம் என்ற மூன்று 'பிரக்ஞா அவஸ்தைகள்' என்பர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்.[143] இதற்கு அடிப்படை நம் பிள்ளையின் பேருரையே.

அறத்தொடு நிற்கும் தோழி கூற்றாக (8—9) வரும் பதிகம் "திருமந்திரத்தில் தனக்கும் பிறர்க்குமாய் இருப்பைக் கழித்து அனன்யார்ஹசேஷத்வத்தைச் சொல்லக்கடவதிறே" என்பர் பிள்ளை. மகளின் பதற்றத்தைத் தடுப்பவள் தாய் என்றும் உபாயம் அவனேயாகிலும் சொருபத்தை நோக்கிப் பதறுபவள் மகள் என்றும் இவ்வாறு தோழி, தாய், மகள் ஆகியோரின் நிலைகளைக் காட்டி ஸ்வாபதேசம் கூறுவர் நம் பிள்ளை.[144]

**கருப்பொருள்கள் :-**

சங்கத் தொகை நூல்களில் தெய்வம் ஒழிந்த கருப் பொருள்களைக் கொண்டே உள்ளுறை உவமம் புலப்படுத்தப் படுகிறது. இதற்குத் தொல்காப்பியர் விதியே காரணம்.[145] திருவாய்மொழி அகப்பாடல்களின் உரையில் கருப்பொருளாக வருமவற்றோடு முதற்பொருளான சிறுபொழுதுகளுக்கும் உள்ளுறை தரப்படுகிறது. சங்கப்பாடல்களில் வரும் உள்ளுறை வேறு பக்திப் பனுவல்களில் வரும் ஸ்வாபதேச உள்ளுறை வேறு என்று தெரிகிறது.

வண்டு முதலிய பறவைகள் ஆன்மாவை இறைவனோடு சேர்ப்பிக்கும் ஞானாசிரியரைக் குறிப்பதாகக் கொள்வர் பிள்ளை. 'ஆழிவரிவண்டே'[146] என்பதற்கு "கடகருடைய ஆத்ம குணத் தோபாதி ரூப குணமும் உத்தேச்யம் என்கை" என்று உள்ளுறை கூறுகிறார். ஞானாசிரியரின் பண்பு நலன்களோடு அவர் தம் உடல்நலங்களும் பாராட்டத்தக்கன என்று கருத்து'

* அஞ்சிறைய மடநாரையில் (1—4) தலைவி தூது மொழி யும் பறவைகளாக நாரை, குயில், அன்னம், அன்றில், குருகு,

143. மேலது 132
144. 7 - 3 - 0 ஈ
145. தொல்., அகத்., 47
146. தி. வா. மொ. 1 - 4 - 6

வண்டு, கிளி, முதலியன இடம் பெறுகின்றன. இவற்றால் ஞானாசிரியரின் பல்வகை நலன்கள் தெரிவிக்கப்படுகிறது என்று நம்பிள்ளை கருதுகிறார். அவையாவன. அறிவு, இன்மொழி, பகுத்தறிதல், கட்கினிமை, தூய்மை, அருள்மிடுக்குகள், நல்லோர்பால் நெடிய தொண்டு ஆகியனவாம். இவற்றால் நல்லாசிரியரின் இலக்கணம் சொல்லப்படுவதாக உள்ளுறை கூறுகிறார். அதே பதிகத்தில் இறுதி மூன்று பாடல்களிலி-ருந்து நன்மாணாக்கனின் இலக்கணங்களை உள்ளுறுத்துக் காட்டுகிறார். ஆசாரியஹிருதயத்தில் இவற்றையே மேலும் பாகு படுத்தி இன்னபறவை இன்னாரைக் குறிக்கும் என்று காட்டி யிருக்கிறார்.

## வரலாற்றுணர்வு

தமிழ் இலக்கிய உரையாசிரியர்கள் தாம் வாழ்ந்த காலத்து அரசியல் மற்றும் வரலாற்று நிகழ்ச்சிகளைத் தாம் எழுதும் உரையில் விளக்கநிலையில் குறிப்பிடுவதில்லை. பரிமேலழகரின் உரைக்கண் அவ்விதக் குறிப்புக்களேதுமின்மை இதனை வலியுறுத்தும். பிற உரையாசிரியர்களின் படைப்புக்களிலும் அவை அருகியேதான் இருக்கும். இந்நிலையால், உரையாசிரியரின் காலத்தையும் அவர்காலத் தமிழகத்தையும் கலை இலக்கிய வளர்ச்சிகளையும் பற்றி ஒன்றும் அறிதற்கு இயலவில்லை; கால ஆராய்ச்சியாளர் பேரிடர்ப்படுகின்றனர். இதற்கு மாறாக, திவ்வியப் பிரபந்த உரையாசிரியர்களில் நம்பிள்ளையின் ஈட்டில் அவர் காலச் செய்திகள் ஏராளமாகக் காணப்படுகின்றன. வரலாற்று ஆராய்ச்சி அறிஞர்களுக்கு நம்பிள்ளையின் ஈடு ஒரு காலப் பெட்டகமாகும்.

ஆழ்வார் வாழ்ந்த காலத்துக்கும் நம்பிள்ளையின் காலத்துக்கும் இடையே ஏறத்தாழ நான்கு நூற்றாண்டுகள் சென்றிக்கக் கூடும். நானூறு ஆண்டுகள் பிற்பட்ட உரையாளர் தம் காலச் சூழ்நிலைகளைக்கொண்டு முற்பட்ட நூலுக்கு உதாரணம் காட்டி உரை காணல் தகுமோ என ஐயுறவேண்டியதில்லை. நான்கு நூற்றாண்டுகளில் அரசியல், சமுதாய மாறுதல்கள் குறிப்பிடத்தகும் அளவுக்கு அக்காலப் பகுதியில் இருந்திருக்காது. முசுலீம் படையெடுப்புக் கூட நம்பிள்ளை காலத்துக்குப் பின்னரே தான் நிகழ்ந்தது. மக்கள் வாழ்க்கை முறைகளைப் பாதிக்

கும் அளவிற்கான மாற்றங்கள் அன்று இல்லை. அதனால், சோழச்சக்கரவர்த்திகளின் பொற்காலத்தில் வாழ்ந்த நம்பிள்ளை தம் கண்ணாற் கண்ட அரசியல், உலகியல் நிகழ்ச்சிகளைக் காட்டி ஆழ்வார் பாடல்களுக்கு விளக்கவுரையிட்டது பொருத்த மாகவே அமைந்திருக்கிறது. ஆனால் அரிய பல வரலாற்றுச் செய்திகள் ஈட்டில் புதைந்திருப்பது வரலாற்றாசிரியர்களின் கண்களுக்குத் தப்பிவிட்டது. கடலன்ன பரப்பைக் கொண்டிருப் பதாலும் மணிப் பிரவாள நடையில் இயன்றிருப்பதாலும் பெயரகராதி முதலியன பதிப்பாசிரியர்களால் தொகுக்கப் படாததாலும் வரலாற்றாசிரியர்கள் இடர்ப்படுகின்றனர்.

**போர்ச் செய்திகள் :-**

தம் காலத்தில் நிகழ்ந்த பல போர்களை நம்பிள்ளை நேரிற்கண்டிருக்கிறார். அப்படிக் கண்ட அனுபவங்களை ஈட்டில் உவமையாக்கிப் பயன் படுத்திக்கொள்கிறார். இவர் நான்கு சோழப் பேரரசர்களின் ஆட்சிக் காலத்தில் வாழ்ந்திருந்தார் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

| | |
|---|---|
| இராசராச சோழன் | (கி.பி.1146—1163) |
| இராசாதிராச சோழன் | (கி.பி.1163 1178) |
| குலோத்துங்க சோழன் | (கி.பி.1178—1218) |
| இராசராச சோழன் | (கி.பி.1216—1256) |

இக்காலப் பகுதியில் சோழ, பாண்டிய நாடுகளில் பெரும் போர்சள் நிகழ்ந்தன. அவற்றைக் காட்டிச் சில தொடர்களுக்கு விளக்கமளிப்பது நம்பிள்ளையின் அரிய நெறியாகும்.

(1) 'வலத்தனன் திரிபுரமெரித்தவன்...திசைமுகன் படைத்த நல்லுலகமும் தானும் உந்தித்தலத்தனன்' [147];- திசைமுகனையும் திரிபுரமெரித்தவனையும் தன் உந்தியிலும் மார்பிலும் என்றோ ஒரு காலத்தில் இடமளித்துக் காத்தாலும் அவ்வுறுப்புக்களை எப்போதும் அவரவர்க்குரியதாகச் சொல்வது ஆழ்வார்களின் போக்கு ஆகும். இதனை விளக்க

> "ஒரு கலகங்களிலே அடையவளைந்தானுக்குள்ளே குடி வாங்கியிருந்து, காலம் தெளிந்தவாறே புறம்பே புறப் பட்டாலும் 'இவ்விடம் இன்னார்பற்று' 'இவ்விடம் இன்னார்பற்று' என்று பின்னும் ப்ராப்தி சொல்லி வைக்குமாபோலே',[148]

---

147. மேலது 1 - 3 - 9

148. 1 - 3 - 9 ஈ

என்று போர்க்குப் பிற்செய்திகளைக் காட்டியிருக்கிறார்.

(2) "பிணக்கி யாவையும் யாவரும் பிழையாமல் பேதித்தும்"[149]:- ஊழிக்காலத்தில் எல்லா உயிரையும் தன் வயிற்றிலடக்கிப் பின் படைப்புக் காலத்தில் ஒருயிர் செய்த வினை மற்றதற்கு மாறாமல் புறப்படவிட்டான்" என்று பொருள் வரைந்தார். இதனை எளிதில் மனங்கொள்ளுமாறு,

> "ஓரோ க்ஷோபங்களிலே அமர்ந்த நிலங்களிலே குடி வாங்கிப் பின்பு தெளிந்தவாறே ஸ்வஸ்த்தானங்களிலே புகுந்துவிட்ட கார்யங்களிலே அதிகரிப்பாரைப் போலே"[150]

என்ற எடுத்துக் காட்டினால் விளக்கம் தருகிறார்.

(3) 'அப்பன் ஊளி எழ'[151] ஊளி என்பது போர் ஆரவாரம் என்பதைக் காட்ட.

> "ஓரோ க்ஷோபங்கள் உண்டானால் நம்முடைய அடைய வளைந்தானுக்கு உள்ளே புகும்போது திருவாசலில் பிறக்கும் ஆரவாரம் போலே"[152]

என்ற போர்க்கால அனுபவத்தை குறிப்பிடுகிறார்.

(4) திருவரங்கத்தில் நிகழ்ந்த போர்களில், பகைவர் களை வெல்ல அரிதான நிலையில் அவ்வூரில் வாழ்ந்தவர்கள் கோபுரங்களில் ஏறிக் கீழே விழுந்து உயிரை மாய்த்துக் கொண்டதையும் நம்பிள்ளை ஓரிடத்தில் எடுத்துக் காட்டு கிறார்.[153]

(5) அப்படி திருவரங்கத்தைப் பகைவர் முற்றியிருந்த போது குடியிருப்புகள் அழிந்த நிலையில் தாமும் தம் ஆசிரியராகிய நஞ்சீயரும் கோயிலுக்குள் திருக்கொட்டாரத்தின் அருகே கைந்நிரை கட்டிக் கொண்டிருந்ததையும் ஓர் ஐதிஹ்யத்தில் குறிப்பிடுகிறார்.[154]

(6) 'நின்றிலங்கு முடியினாய்'[155]:- "ஊடிநின்ற தலைவியை வெல்வதற்கு முன்பு தலைச்சுமையாய்க் கிடந்தது;

---

149. தி. வா. மொ. 6-2-8
150. 6-2-8 ஈ
151. தி. வா. மொ. 7-4-4
152. 7-4-4 ஈ
153. 7.5.1 ஈ
154. 4.6.2 ஈ
155. தி. வா. மொ. 6.2.10

வென்றபின் நற்றரித்து ஒளிவிடத் தொடங்கியது''—இவ்வாறு பொருள் கூறியதை விளக்கத் தம் காலத்துக் கண்ட அரிய போர் நிகழ்ச்சியை எடுத்துக் காட்டுகிறார் :-

''சில ராஜாக்கள் தந்தாம் எதிரிகளை அழித்து வீராபிஷேகமும்
விஜயாபிஷேகமும் பண்ணி நிற்குமா போலே''[156]

மூன்றாம் குலோத்துங்க சோழன் (கி.பி.1178—1218) பாண்டிநாட்டின் மீது பெரும் போர் தொடுத்துச் சடையவர்மன் குலசேகர பாண்டியனை வென்று மதுரைமாநகரில் வீராபிடேகமும் விஜயாபிடேகமும் செய்து கொண்டான். இந் நிகழ்ச்சி கி.பி.1202க்கு முன் நிகழ்ந்தது. இதனையடுத்துச் சோழர்களின் மீது பெருஞ்சினம் கொண்டு பழிதீர்க்கும் முறையில் மாறவர்மன் சுந்தரபாண்டியன் அப்போது அரசு புரிந்த மூன்றாம் இராசராச சோழனை அடிப்படுத்தி முடிகொண்ட சோழபுரத்தில் ஆயிரத்தளி அரண்மனையில் வீராபிடேகம்செய்து கொண்டான் (கி.பி. 1219)[157] அவனே மீண்டும் போரைத் தொடங்கி (கி.பி. 1228) சோழமன்னனை வென்று முடிகொண்ட சோழபுரத்தில் விசயாபிடேகமும் வீராபிடேகமும் செய்து கொண்டான்.[158]

(7) பெரும் போர்களைத் தவிர உள்நாட்டில் ஏற்பட்ட உட்பூசல்களான கலகங்களையும் ஈட்டில் குறிப்பிடக் காண்கிறோம்.[159] 'பள்ளிகள் கலகம்' என்பது அவற்றுள் ஒன்று. மூன்றாங் குலோத்துங்கன் காலத்தில் அவனது 22ஆம் ஆட்சியாண்டில் குகையிடிகலகம் (கி.பி. 1190ல்) நிகழ்ந்ததாகக் கூறப்படுகிறது. மூன்றாம் இராசராசன் ஆட்சிக்காலத்தும் (கி.பி. 1221) பெருங்கலகம் ஏற்பட்டது என்பது வரலாறு.[160]

---

156. 6 — 2 — 10 ஈ

157. தி. வை. சதாசிவபண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு. 1974 ப. 436.

158. N, Sethuraman, The Cholas, ப. 157.

159. 7 — 1 — 2 ஈ

160. தி வை. ச. பண்டாரத்தார், மு. நூ. ப. 438,

**சோழப் பேரரசர்கள் :-**

திருவரங்கத்துக்குக் கிழக்கே கங்கைகொண்ட சோழபுரம், பழையாறை என்ற முடிகொண்ட சோழபுரம் ஆகிய படைவீடுகளிலிருந்து ஆட்சிபுரிந்தமையால் சோழ அரசர்களைப் பொதுவாகக் 'கிழக்குத்தைராஜாக்கள்' என்று நம்பிள்ளை குறிப்பிடுகிறார்.[161] சோழமன்னர்களின் மெய்க்கீர்த்திகளை பிள்ளை நன்கு அறிந்துவைத்திருந்தார் என்றும் தெரிகிறது. 'விஜயமுண்டாகையாலே ப்ரசஸ்தி மாலைகளும் செல்லாநிற்குமிறே'[162] என்று அதனைச் சுட்டுகிறார். அவற்றில் 'இருமருங்கும் துய்யான்'[163] என்று சோழமன்னர்கள் புலவர்களால் சிறப்பிக்கப் படுவதையும் குறிப்பால் உணர்த்துகிறார். சோழமன்னர்கள் புதியபடைவீடுகளைத் தோற்றுவித்தனர் என்பது ''செடி சீய்த்துக் குடியேற்றின படைவீடுகளை விடாதேயிருக்கும் ராஜாக்களைப் போலே''[164] என்று ஈட்டு உவமையால் அறியப்படுகிறது சோழமன்னர்களின் விருதுப் பெயர்களை உரைக்குறிப்பிற்குப் பயன்படுத்துகிறார். 'ஏழ்விடை கொண்டான்'[165] என்று ஆழ்வார் கண்ணனைக் குறிப்பிடுவதை ''இன்ன படைவீட்டைக் கொண்டான் என்னுமாபோலே'' என்று விளக்கம் செய்கிறார்.

அரசர்கள் ஓரோசமயம் தோல்வியுற்றுச் சிறைப்பட்ட நிகழ்ச்சிகளும் ஈட்டில் இடம் பெற்றுள்ளன. ''முடிசூடி ராஜ்யம் பண்ணுமவனுக்கு ஏற்றம் சொல்லும் போது தட்டியிலிருந்த போதைப் படியையிட்டு ஏற்றம் சொல்லவொண்ணாதிறே.''[166] என்பது ஈடு. மூன்றாம் இராசராசன் காடவர்குல மன்னரால் பிடிக்கப்பட்டுச் சேந்த மங்கலத்தில் சிறை வைக்கப்பட்டிருந்தான். போசள மன்னன் வீரநரசிம்மன் என்பான் பெரும்படையுடன் புறப்பட்டு வந்து காவிரியாற்றுக்கு வடகரையில் திருவரங்கத்துக்கு அண்மையில் தங்கித் தன் தண்டநாயகனைக்

---

161. 7.10.5 ஈ
162. 9—6—11 ஈ
163. 3—9—0 ஈ; 'இருமருங்கும்துய்யான்' என்னும் பெயர் 'உபயகுலோத்தமன்' என்பதன் தமிழ் வடிவமாகும். முதற் குலோத்துங்க சோழனுக்கு இவ்விருதுப் பெயர் உண்டு. — தி. வை. ச. பண்டாரத்தார், மு. நா., ப. 314,
164. 1—7—4 ஈ: 10—9—4 ஈ
165. 1—8—6 ஈ
166. 3—3—4ஈ; 5—7—1 ஈ

கொண்டு பகைவரை வென்று சோழமன்னனைச் சிறைமீட்டு முடிசூட்டுவித்தான்.[167] இவ்வரலாறு நம்பிள்ளையின் உரைக் குறிப்போடு ஆராயத்தக்கது.

சோழ மன்னர்கள் திருவரங்கம் கோயிலுக்குச் செய்த திருப்பணிகளில் சில ஈட்டில் குறிப்பிடப்பட்டுள்ளன. திருவரங்கத்து இறைவன் அணியும் அணிகலனாக 'சேர பாண்டியன் தம்பிரான்' என்பதை ஈடு குறிப்பிடுகிறது.[168] இது நம்பெருமாள் அணியும் பதக்கம் என்று அரும்பதகாரர் விளக்குகிறார். 'சேர பாண்டியன்' என்று நம்பெருமாள் வீற்றிருக்கும் சிங்காதனம் ஒன்றும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரால் குறிப்பிடப்படுகிறது [169] 'சேரபாண்டியன் தம்பிரான்' என்ற விருதுப் பெயரைப் புனைந்து கொண்டவன் மூன்றாங் குலோத்துங்கசோழன் [170] இம்மன்னவன் நம்பெருமாளுக்குப் பதக்கமும் அரியணையும் வழங்கினான் என்று ஈட்டுக் குறிப்பால் தெரிகிறது. இதே போன்று நம்பெருமாளுக்குரிய அணிகலனான ''ராஜமஹேந்த்ரன் படி'' என்பதையும் ஈடு குறிப்பிடுகிறது.[171] இரண்டாம் இராசேந்திர சோழனின் தம்பியாகிய இராசமகேந்திரன் என்பான் திருவரங்கத்துத் திருமாலிடம் பேரன்புபூண்டு அப்பெருமானுக்குப் பொன்னாலும் மணியாலும் அரவணை ஒன்று அமைத்தான் என்பது விக்கிரம சோழன் உலாவில் கூறப்பட்டுள்ளது.[172] இவ்வரசனுடைய பெயரால் ஒரு திருச்சுற்றும் திருவரங்கத்துள் உள்ளது. இவ்வரசன் செய்து வழங்கிய அணிகலன் ஒன்றைத் தான் ஈடு குறிப்பிட்டுள்ளது.

திருவரங்கம் கோயிலின் யானை ஒன்றின் பெயராக 'சோளேந்த்ர சிங்கன்'என்பதை நம்பிள்ளை குறிப்பிடுகிறார்.[173]

---

167. தி. வை. ச. பண்டாரத்தார், மு. நூ., ப. 442.
168. 4 — 3 — 2 ஈ
169. அ. ம. நா. வியா., திருப்பாவை, 23.
170. K. A. N. Sastri. The Colas, 1975, P 382
171. 5 - 7 - 10 ஈ
172. விக்கிரம சோழன் உலா, வரிகள் 40 .. 42.

'' .... ..... ..... அப்பழநூல்
பாடரவத் தென்னரங்க மேயாற்குப் பன்மணியால்
ஆடரவப் பாயல் அமைந்தோனும்''

மேலும் செய்திகட்குப் பார்க்க :—
தி. வை. ச. பண்டாரத்தார், மு. நூ., ப. 225.

173. 6 - 4 - 9 ஈ

சோளேந்த்ரசிங்கன்' என்பது இரண்டாம் இராசராசனின் விருதுப்பெயராகும்.[174] இவ்வரசன் தன் பெயரிட்டுக் கோயி-லுக்கு வழங்கிய யானையின் பெயராக இதனைக் கருதலாம்.

ஆயிரத்தளி :-

சோழர்களின் தலைநகராகப்பழையாறை பண்டைநாளில் சிறப்புடன் விளங்கியது. ஆங்கே 'ஆயிரத்தளி' என்ற அழகிய மண்டபம் இருந்தது. அது ஈட்டில் இடம் பெற்றிருக்கிறது.[175] சோழமன்னன் ஆயிரத்தளியில் இருக்கச் செய்தே கூரத் தாழ்வானை நலிந்தான் என்றும் [176] அவனுடைய மகன் தந்தை யின் கொடுஞ் செயல்களை அறிந்து வருந்தினான் என்றும்[177] நம்பிள்ளை ஈட்டில் குறிப்பிடுகிறார். கூரத்தாழ்வானை நலிந்த சோழமன்னவனை 'அவ்யபதேசன்'(பெயர்சொல்லத்தகாதவன்) என்பர் பிள்ளை.[178] அவனைக் 'கிருமிகண்ட சோழன்' என்று அரும்பதவுரைகாரர் அழைப்பர்.[179]

சோழகுலாந்தகன் :-

இராமானுசருடைய சீடரான அனந்தாழ்வான் தெற்கே பயணம் செய்தபோது இவ்வூருக்குச் சென்றதாக ஈட்டில் வரு கிறது.[180] வீரபாண்டியன் என்னும் பேரரசன் கி.பி. 945ல் முதல் பராந்தகசோழனின் கடைசி மகனாகிய உத்தமசீலியைக் கொன்று 'சோழகுலாந்தகன்' என்னும் விருதுப் பெயரைச் சூட்டிக் கொண்டான் மதுரைக்கு மேற்கே தென்கரை, சோழ வந்தான், தேனூர்ப்பகுதியில் இருந்த 14 பிரம்மதேயங்களை ஒருங்கிணைத்து ஒரு பெரிய நகரமாக்கிச் 'சோழாந்தக சதுர் வேதிமங்கலம்' என்று கி. பி. 950ல் பெயரிட்டான். அங்கே 'வீர கேரள விண்ணகர்' என்ற திருமால் கோயிலை எடுப்பித்

---

174. தி. வை. ச. பண்டாரத்தார், மு. நூ., ப. 368.

175. 3-5-6 ஈ

176. 5. 10-4 ஈ

177. 10-7-5 ஈ

178. மேலது

179. அதிராசேந்திர சோழனே (கி.பி. 1070) கிருமிகண்டசோழன் என்று கே. ஏ. நீலகண்டசாஸ்திரியார் கருதுகிறார். (The Coals, ப. 644.) முதற் குலோத்துங்க சோழனே கிருமிகண்ட சோழனாகக் கருதுவர் பு.ரா, புருஷோத்தம நாயுடு (ஈட்டின் தமிழாக்கம், 10-ஆம்பத்து, ப. 251.)

180. 6-7-1 ஈ

தான். வீரகேரளன் என்பது அவனுடைய மற்றொரு விருதுப் பெயர்.[181] இவ்வுயரிய நகர் அப்படியே 'சோழகுலாந்தகன்' என்ற பெயரில் நம்பிள்ளை காலத்தும் வழங்கிவந்தது என்று தெரிகிறது. இன்று 'சோழவந்தான்' என்று அப்பெயர் திரிந்து விட்டது.

முக்கோட்டை:-

திருமாலிருஞ்சோலை இறைவனே தம்மைப் பாடுவித்தான் என்று ஆழ்வார் ஓரிடத்துப் பாடுகிறார்.[182] நம்மாழ்வாரைப் பாடுவித்த 'முக்கோட்டை' என்று திருமாலிருஞ் சோலையைக் குறிப்பிடுவர் பிள்ளை. இதேபோன்று திருமங்கையாழ்வாரைப் பாடுவித்த 'முக்கோட்டை' திருக்கண்ணபுரம் என்றும் பிள்ளை கூறுகிறார். 'முக்கோட்டை' என்பது ஊமையைப் பாடுவித்த துர்க்கையின் தலம் என்று அரும்பதகாரர் கருதுகிறார். 'மூக கோட்டம்' என்பது முக்கோட்டை எனத்திரிந்திருக்கலாம். 'மூகாம்பிகாஸ்தலம்'[183] என்பது கர்நாடக மாநிலத்தில்உள்ளது. பெரியவாச்சான்பிள்ளை பெரிய திருமொழிப் பேருரையில் 'முக்கோட்டை' என்பர்.[184] அங்குள்ள அரும்பதவுரையில் முக் கோட்டை மலையாளத்தில் உள்ளதாகக் குறிக்கிறது.

அரசியல் நடைமுறைகள்

ஈட்டில் பல இடங்களில் சோழமன்னர்களின் அரசியல் நடைமுறைகள் உரைவிளக்கங்களுக்காகக் காட்டப்படுகின்றன. அவற்றுட் சில:

1. வறுமை மிகுந்த காலத்தில் அரசர்களும் அற்பப் பொருளுக்காகத் தம்மை எழுதிக் கொடுத்து அடிமையாவர்[185]

2. அரச குமாரனுக்குத் தலையிலே முடியை வைத்துப் பின்னே விலங்கு வெட்டிவிடுவார்கள்.[186]

---

181. கல்வெட்டு அறிஞர் என். சேதுராமன் ஆய்வாளர்க்கு எழுதிய கடிதம். நாள் 2. 7. 1980; மேலும், S. I. I. Vol. XIV.

182. தி. வா. மொ. 10 - 7 - 5

183. 'கொல்லூர்' என்பது அக்கோயில் அமைந்துள்ள ஊரின் பெயர்.

184. பெ. வா. பி. வியா. பெரி. திரு. 8 - 10 - 9.

185. 1 - 3 . 1 ஈ

186. 1 - 3 . 11 ஈ

3. அரச குமாரர்களுக்கு உரிய காலங்களிலே வெள்ளிலை (வெற்றிலை) இடாதபோது மாந்துவர்கள்.[187]

4. அரசர்கள் அரசத்துரோகம் செய்தவர்களை நலிகைக்கு வேற்காரர்களை அனுப்புவார்கள்.[188]

5. அரசர்கள் கறுப்புடை உடுத்திப் புறப்பட்டால், அந்த ரங்கர் அரசர் விரும்புகின்ற காலத்திலே முகங்காட்டுகைக்காகப் பிரியத் திரிவார்ள்.[189]

6. அரசன் ஆணைக்குத் 'திருமுகம் என்று பெயர்; அரசனுக்கு எழுதும் கோரிக்கைக்கு "கடையீடு" என்று பெயர்.[190]

7. அரசனுக்குப் பணி செய்பவர்கள் தம் தாம் அடையாளங்களோடே சட்டையும் பிரம்புமாய் சேவிப்பார்கள்[191]

8. அரசர்களுக்குச் சீலப்பேர், வீரப்பேர், என்று அனேகம் பேர்கள் உண்டு[192]

9. அரசர்கள் நாட்டுக் கணக்குகள் பார்த்து முடித்த பிறகே அந்தப்புரத்துட் புகுவர்.[193]

10 சோழப் பேரரசர்கள் சாமந்தர் தலையிலே அடியிட்டு ஆனை கழுத்திலே ஏறுவர்.[194]

11. அரச துரோகிகளுக்குக் கடும் தண்டனைகள் வழங்கப்பட்டன.[195]

12. அரசர்கள் பொற்கலத்திலே உண்பார்கள்; திறை கொண்டு வந்தவர்கள் பல யாதங்கள் உள்ளுப் புகப் பெறாதே நின்று வருந்துவார்கள்; அவர்கள் கொணர்ந்த திறைப் பொருட்

---

187. 1-4-9 ஈ

188. 1-4-9 ஈ

189. 1-8-9 ஈ

190. 1-4-4 ஈ

191. 2.2.10 ஈ

192. 2-5-6 ஈ

193. 2-6-2 ஈ

194. 4-4-2 ஈ

195. 4-9-1 ஈ

களைத் தாமே வாங்காது ஆளைவிட்டு வாங்குவது அரசர்கள் வழக்கம்[196]

13. நாடகச்சாலை சென்றால் நடிப்பவர்களை அருளப் பாடிட்டு (விருதுகூறி) அழைப்பார்கள் அரசர்கள்.[197]

14. அரசர்களுக்கு உரிய காலங்களில் பூக்களை வாங்கி இடும் பணியாளர் 'பூ வேளைக்காரர்' எனப்படுவர்.[198]

15. அரசன் மிகச் சிறு பருவத்தில் இருந்தால் ஆண்டில் மூத்த அமைச்சரே அரச காரியங்களை நடத்துவார். அதற்கு 'அகம்படி வைத்த அரசு' என்று பெயர்.[199]

16. அரசதுரோகிகளைக் கொல்லும் போது அவர் களணிந்த அரச சின்னங்களை வாங்கியபின் கொலை செய்வர்.[200]

17. அரசர்கள் ஊர்களுக்குச் சென்று நாட்டுக் கணக்கு கேட்பார்கள்; கடமை இறுக்காதவர்களின் பெயர்ப் பட்டியலைக் கணக்கன் வாசிக்கக் கேட்பார்கள்; அப்பட்டியலில் அரசனுக்கு அந்தரங்கராயிருப்பார் பெயரும் வரும்; அப்போது அதை வாசிக்கவிடாமல் 'மேற் செல்க' என்று அரசன் ஆணையிடு வான். அதன் பின் கணக்கன் அப்பெயரைப் பின்பு ஒரு நாளும் எடுத்து மொழியமாட்டான்.[201]

18. அனுபவம் மிகுந்த முதிர்ந்த பிராயத்து அமைச்சர் களைக் கண்டால் அரசர்கள் அஞ்சியிருப்பர்.[202]

19. 'அரசர்கள் ஒருகால் கண்டு சிரித்து 'அழகிது' என்ற போலகைக்காக அரண்மனை வாசல்களை மகாநவமி (நவராத்திரி) காலங்களில் அலங்கரித்து வைப்பார்கள்.[203]

20. அரசர்கள் உலாப் போம்போது 'மேகர்' என்ற பணிக் கூட்டத்தார் தரையிலே நீரைத் தெளித்துச் செல்வர்.[204]

---

196. 4-1-1 ஈ
197. 4-1-3 ஈ
198. 5-1-9 ஈ
199. 5-8-2 ஈ
200. 7-6-10 ஈ; 8-4-1 ஈ
201. 10-2-1 ஈ
202. 10-6-1 ஈ
203. 10 9 - ஈ 4.
204. 10-1-1 ஈ

ஈட்டில் வரும் இத்தகைய செய்திகளைத் திரட்டினால் சோழர் கால அரசியல் நிலையையும் சமுதாய நிலையையும் ஆடியிற்போற் காணலாம்.

இவற்றைத் தவிர மேலும்,

"ஆட்சியில் தொடர்ச்சி நன்று"[205]

"மழுவேந்திக் கொடுத்துக் காரியம் செய்தல்"[206]

"அடிமை ஓலை எழுதுதல்"[207]

"இடையர் கார்த்திகைக்குக் குளித்தல்"[208]

வரி செலுத்தமுடியாத "கட்டக்குடி"[209]

என்பன போன்ற பல சமுதாய நிகழ்ச்சிகள் ஈட்டில் இடம் பெற்றுள்ளன. சோழர்காலச் சமுதாயத்தின் பழக்க வழக்கங் களை வரலாற்றாசிரியர்கள் தொகுத்துச் சொல்லுமிடங்களில் இக்குறிப்புகள் ஒரு நூலிலும் சுட்டிக் காட்டப்படவில்லை. கல்வெட்டுக்களாலும் பிற சாதனங்களாலும் அறியப்படும் செய் திகளுக்கு இவை அரண் சேர்ப்பனவாக அமைகின்றன. இவை அனைத்தையும் ஆழ்வார் பாடல்களைப் பொதுமக்களுக்குப் புரிய வைக்கும் நோக்கத்தோடு நம்பிள்ளை தம் பேருரையில் பயன்படுத்துகிறார்.

**அரையர் கலை**

ஈட்டில் உரைவிளக்கமாகப் பயன்படும் பல கலைக்குறிப் புகள் பொதிந்துள்ளன. அவற்றில் 'அரையர் கலை' பற்றிய அரிய செய்திகள் ஈண்டு ஆய்வு செய்யப்படுகின்றன.

**விண்ணப்பம் செய்வார்கள் :-**

சோழப் பேரரசில் இசை நாடகக் கலைகள் மன்னர்களின் ஆதரவோடு சமயக்கருத்துக்களின் வெளிப்பாடாகவே வளர்ந்து முழுமை நிலையை எய்தின.[210] திருமால் திருக்கோயில்களில் நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழி இறைவன் திரு

---

205. 1 - 2 - 1 ஈ
206. 1 - 7 - 6 ஈ
207. 1 - 9 - 4 ஈ
208. 1 - 5 - 1 ஈ
209. 2 - 2 - 4 ஈ
210. 'It may be observed in this regard that no piece of Art in India seems to have been produced just for the sake of artistic display;

வோலக்கத்தில் இசையுடன் ஓதப்பட்டது. தமிழ்ப்பண்ணிசையில் வல்லுநராய்த் திருவாய்மொழியை இசைத்தவர்கள், 'திருவாய்மொழி விண்ணப்பஞ் செய்வார்' என்று கௌரவித்து அழைக்கப்பட்டனர். மதுரகவியாழ்வாரே திருவரங்கத்தில் பெரிய பெருமாள் திருமுன்பாகத் திருவாய்மொழியை இசையுடன் விண்ணப்பித்துத் 'திருவாய்மொழி விண்ணப்பஞ் செய்வார்' என்ற விருதினை முதன்முதலில் திருவரங்கரால் வழங்கப் பெற்றார் என்று கோயில் ஒழுகுவாயிலாக அறியப்படுகிறது.[211] இவ்விருதுப் பெயர் நம்மாழ்வாரின் திருவிருத்தத்தில் 'அடியேன் செய்யும் விண்ணப்பமே' என்ற தொடரிலிருந்து உருவாக்கப் பட்டிருக்கலாம்.[212] மதுரகவியாழ்வாருக்குப் பிறகு நாதமுனிகளும் (கி.பி. 823-917) அவர்தம் மருமக்கள் வழியினரும் திருவாய்மொழி விண்ணப்பஞ் செய்வார்களாகத் திருவரங்கம் திருக்கோயிலில் தொடர்ந்து பணியாற்றிவந்தார்கள். இவ்வகைத் தொண்டும் இடையறாது நிகழ மன்னர்கள் அவ்வக் காலத்தே நிபந்தங்களும் பொற்கழஞ்சுகளும் வழங்கிவந்தார்கள். முதலாம் குலோத்துங்க சோழன் (கி.பி. 1070-1120) தன் பதினைந்தாம் ஆட்சியாண்டில் திருவரங்கம் பெரிய கோயிலில் திருவாய்மொழி விண்ணப்பஞ்செய்ய ஐம்பது பொற்காசுகள் வழங்கியிருக்கிறான்'[213] அக்கோயிலில் விண்ணப்பஞ் செய்வார்கள் எண்ணிக்கையிற் பலராயிருந்தனர்.[214] இவர்கள் திருவாய்மொழிமட்டுமன்றி மற்றைய பிரபந்தங்களையும் இசையுடன் விண்ணப்பித்து வந்தனர். பெரிய திருநாளின் இறுதியில் தீர்த்தவாரியன்று தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் 'திருமாலை'

---

instances of sculpture fashioned in response to more secular value are indeed very rare in occurence and of comparatively lesser importance'.

... M. Narasimhachari, Introduction to A Source Book of Vaishnava Iconography according to Pancharatra Agama texts, by H. Daniel Smith, Madras-5, 1969 P. xix.

211. எஸ். கி. ஐயங்கார், (ப. ஆ)., கோயிலொழுகு, ப. 8.

212. திருவிருத்தம், 1.

213. S. I. I. Vol. IV. 508

214. 3 - 10 - 6 ச

இசையுடன் ஓதப்பட்டுவந்தது.[215] திருமொழித் திருநாளில் ஒருநாள் குலசேகராழ்வாரின் 'பெருமாள் திருமொழி' இசையுடன் அபிநயிக்கப்பட்டிருக்கிறது.[216]

திருவத்தியயனம் :-

இசை நாடக அபிநயங்கள் ஒருங்கிணைந்து முத்தமிழ்க் கலையாகத் திவ்வியப் பிரபந்தங்களை விண்ணப்பிக்கும் முறை ஒரு திருவிழாவாகத் தோன்றி வளர்ந்து முழுமை எய்தியது திருவரங்கத்திலே தான். இங்கிருந்து தான் இவ்விழா தமிழகத்தின் பிற கோயில்களுக்கும் பரவியிருக்கிறது. ஒவ்வோராண்டிலும் மார்கழி மாதத்தில் இருபது தினங்களில் இத்திருவிழா நடைபெறுகிறது. இவ்விருபது நாள் உற்சவத்தை திருவத்யயனம்' என்று நம்பிள்ளை குறிப்பிடுகிறார்.[217] திருவத்யயன உற்சவம் பகற்பத்து என்றும் இராப்பத்து என்றும் இரு பிரிவுகளாகக் கொண்டாடப்படுகிறது. அவற்றுள் இராப்பத்து உற்சவமே முதலில் திருமங்கையாழ்வாரால் தொடங்கப்பட்டுத் 'திருவாய்மொழித் திருநாள்' என்று பெயரிடப்பட்டது. பகற்பத்து உற்சவம் நாதமுனிகளால் தொடங்கப்பட்டுத் 'திருமொழித் திருநாள்' என்று பெயரிடப்பட்டது[218] இவ்விரு திருநாளிலும் நடைபெற்ற அரிய நிகழ்ச்சிகளைப் பற்றியும் திருநாளிற் பங்கு கொண்ட அரையர்களைப் பற்றியும் சுவையான செய்திகளை நம்பிள்ளை தம் பேருரையில் ஆங்காங்கே குறிப்பிட்டிருக்கிறார். திருவாய்மொழியாகிய மூல நூலில் முத்தமிழ் பற்றிய குறிப்புகள் வருவன உளவேனும் முத்தமிழும் ஒருங்கிணைந்த திருவத்யயனம் பற்றிய செய்தி யாண்டுமில்லை; இருத்தற்குக் காரணமுமில்லை. ஆயினும் உரை நூலாகிய நம்பிள்ளை ஈட்டில் திருவத்யயனம் பற்றிய செய்திகளை ஐதிஹ்யங்கள் வாயிலாகத் தொகுக்க முடிகிறது. இச் செய்திகளின் மூலம் திருவத்யயனத்திற் பாடிய அரையர்களின் அபிநயத்திறன் ஆழ்ந்த புலமைத்திறன் இன்னோரன்ன அரிய செய்திகள் பலவற்றையும் ஐதிஹ்யங்களைக் கொண்டு நம்பிள்ளை உரையிடையிட்டதால் ஆராய்ச்

215 மேலது

216. 6-2-2 ஈ

217. 10-2-8 ஈ

218. எஸ். சி. ஐயங்கார் (ப. ஆ), கோயிலொழுகு, பக். 6-10.

சியாளர்களுக்கு அவ்வுரை நூல் அரிய பெட்டகமாக விளங்குகிறது.

**அரையர்கள் :-**

திருவத்யயன உற்சவத்தில் ஆழ்வார் பாசுரங்களை இசையுடனும் அபிநயத்துடனும் விண்ணப்பித்தவர்கள் 'அரையர்கள்' என்றும் அழைக்கப்பட்டனர். 'அரையர் என்பது' 'அரயர்' என்ற சொல்லின் போலியாகும்.[219] அரசர்களே அரயர்கள் என்றும் வழங்கப்பட்டனர். பெரியாழ்வாரும் சக்கரவர்த்தி திருமகனான இராமனை 'எரிசிதறும் சரத்தால் இலங்கையினைத் தன்னுடைய, வரிசிலைவாயிற்பெய்து வாய்க் கோட்டம் தவிர்ந்துகந்த அரையன்' என்று குறிப்பிடுகிறார்.[220] அகளங்க நாட்டாழ்வான் என்றவிக்கிரம சோழனை அரையன்' என்று நம்பிள்ளைதாமும் குறித்திருக்கிறார்.[221] ஆயின் விண்ணப்பஞ் செய்வார்களையும் அரையர்கள் என்ற சிறப்பித்தற்குக் காரணத்தைக் கோயிலொழுகுமூலமே அறிகிறோம். திருவாய்மொழியிசையில் நிகரற்ற தேர்ச்சி பெற்று விளங்கிய தலைமை தோற்றவே 'அரையர்கள்' என்று திருவரங்கரால் பாராட்டப் பெற்றனர். அத்தலைமை தோற்றவே தலையில் மகுடமாகப் பட்டுக் குல்லாய் அணிந்து கொள்ளும் உரிமையும் வழங்கப் பெற்றனர்.[222] திருவாய்மொழி விண்ணப்பஞ் செய்வார்களைக் குறிப்பிடும் போதெல்லாம் நம்பிள்ளை அவர்தம் இயற்பெயரையோ ஊர்ப் பெயரையோ அடுத்து அரையர் என்று சிறப்பித்து வழங்கத் தவறுவதில்லை. அரையர் எண்மர் ஈடு உரையில் இடம் பெறுகின்றனர்.[223]

**இசைகாரர் :-**

இசைக் கலையில் விரகராய்த் திகழ்ந்த அரையர்களை 'இசைகாரர்' என்றும் இராமாநுசர் காலத்து வழங்கியிருக்கின்றனர். நம்மாழ்வார் *வளவேழுலகின் இறுதிப் பாசுரத்தில்

---

219. நன்னூல், சூ. 123, ''அ ஐ முதலிடை ஒக்கும் சஞயமுன்''

220. பெ. ஆ. திரு., 4 - 3 - 8

221. 4 - 6 - 6 ஈ விக்கிரம சோழனுக்குரிய சிறப்புப்பெயர் 'அகளங்கன்' (கி. பி. 1118-1136) என்பது
— தி. வை. ச. பண்டாரத்தார், மு. நூ., ப. 331.

222. எஸ். கி. ஐயங்கார் (ப. ஆ), கோயிலொழுகு, ப. 34

223. பார்க்க: பின்னிணைப்பு (11)

திருவாய்மொழியைப் பரவுகின்றவர்கள் மூவகையினர் என்று மொழிகிறார்.

"பாலேய் தமிழர்இசைகாரர் பத்தர் பரவும் ஆயிரத்தின்
பாலே பட்ட இவை பத்தும் … … …"

என்று வரும் அப்பாடற்பகுதியில் பாலேய்தமிழர்களும் இசைகாரர்களும் பத்தர்களும் திருவாய்மொழியைப் பரவுவார் என்று அறியப்படுகிறது. அவருள் 'இசைகாரர்' என்பார் தமிழ்ப் பண்ணிசையைத் தாமிட்டவழக்காகப் பெற்றவராவர். இச்சொல்லின் பொருள் நுட்பத்தை யுணர்ந்த கூரத்தாழ்வான் ஆழ்வார் திருவரங்கப் பெருமாள் அரையரை 'இசைகாரர்' என்று அழைத்துக் கௌரவித்தாராம். இவ்வரிய செய்தி நம்பிள்ளை உபகரித்தது.[224] இசையறியும் கூட்டத்தார் என்ற சொல் வழக்குண்மையும் கோயில் ஒழுகால் அறியக்கிடக்கிறது.[225]

இசை—தாளம்—நடிப்பு

அரையர்கள் இனிய மிடற்றோசையையே பெருஞ்செல்வமாகக் கருதினர். தேவப்பெருமாள் அரையர் இனிய குரல் வளத்தைப் பெற்று மற்றவர்களால் பாராட்டப் பெற்றிருக்கிறார். அரையர்கள் பாசுரங்களை இசைக்கும்போது கைகளில் தாளங்களை ஏந்தி ஒலித்தனர். ஆப்பான் திருவழுந்தூர் அரையர் அங்ஙனம் வந்தருளி' என்ற பாசுரத்தைத் தாளவோசையுடன் நெடும்போது இசைத்ததை நம்பிள்ளை ஒரு பாடலுரையில் குறிப்பிடுவர்.[226] இசைதப்பாதிருக்கத் தாளத்தைக் கருவியாகப் பயன்படுத்திய அரையர்கள் வேறு இசைக் கருவிகளைப் பயன் படுத்தியதாகத் தெரியவில்லை. பாசுரங்களின் பொருளைக் கேட்பார் மனத்தில் தைக்கவல்லது நடிப்பாகும். இந்நடிப்புக் கலையிலும் அரையர்கள் முழுத் தேர்ச்சி அடைந்திருந்தனர். பரதக் கலையிற் குறிப்பிடப்படும் முத்திரைகளை நன்கு அறிந்திருந்தனர். இறைவனது திருவோலக்கத்திற் பாடியாடி மகிழ்வித்ததோடு அமையாது இறைவன் திருவுலா எழுந்தருளும் போதும் நடையழகுக்கு ஈடாக அரையர்கள் ஆடிவந்தனர் என்றும் நம்பிள்ளை பேருரையால் அறிகிறோம்'[227] கோயி

---

224. 1 - 5 - 11 ஈ
225. எஸ். கி, ஐயங்கார் (ப. ஆ), கோயிலொழுகு, ப. 30.
226. 5 - 7 - 7 ஈ
227. 9 — 2 — 4 ஈ

லொழுகுக் குறிப்பு ஒன்றும் இச்செய்திக்குச் சான்று பகரு-கின்றது.[228]

**இசையால் ஏத்துதல்**

திருவரங்கராகிய இறைவன் முன்னின்று அவனுடைய குணநலன்களை அடுக்கிய தொடர்மொழிகளால் இசையிலே ஏறிட்டு ஏத்தி மகிழ்விப்பதும் அரையர்களின் பணியாகும். இப்பணியைத்தான் 'கொண்டாட்டம்' என்று குறிப்பிடுகிறார்கள் அரையர்களின் இன்னிசை ஏத்துமொழிகளுக்கு இறைவன் வசப் பட்டான் என்றும் இச்செயல் மதயானையொன்றை[229] இசையால் ஏத்தி வணக்குவதோடு ஒக்கும் என்றும் நம்பிள்ளை விவரிக் கிறார்.[230] யானைகளை இசைகொண்டு வணக்குவது என்பது சங்கநூல்களில் காணப்படுகின்றன. நம்பிள்ளை காலத்து இது நடைமுறையில் இருந்திருக்க வேண்டும்.

**மனவுருக்கம்**

ஆழ்வார் பாசுரங்களை இசையோடு பாடும்போது சில போது அரையர்கள் பாடற்பொருளில் ஆழ்ந்து நெஞ்சுருகிக் கண்பனிப்ப நின்று மேற்பாடல்களைத் தொடர முடியாமல் விம்மல் பொருமலாய்க் குறையோடே தலைக்கட்டி விடுவதுண்டு. அத்தகைய சந்நருப்பங்களில் சிலவற்றை நம்பிள்ளை நல்விருந் தாக நமக்கு அளித்திருக்கிறார்.

ஆழ்வார் திருவரங்கப் பெருமாள் அரையர் 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா வடிமைசெய்ய வேண்டும் நாம்' என்ற பாடலையிசைக்கும் போதெல் லாம் 'ஒழிவில் காலமெல்லாம்' என்ற தொடரையே நெடும் போது பாடி மேல் போகமாட்டாதே அவ்வளவிலேயே தலைக் கட்டிப் போவாராம். நம்மாழ்வார் எம்பெருமானுக்குச் செய்யப் பாரிக்கும் தொண்டின் நீட்சியை நினைத்துப் பார்த்த அரையர் மனமுருகிவிட்டார் என்க.[231]

பிள்ளை திருநறையூர் அரையர் திருவாய்மொழியை அனு பவிக்கத் தொடங்கும் போதே ஆழங்காற்பட்டு மனமுருகிக்

---

228. எஸ். கி. ஐயங்கார் (ப-ஆ), கோயிலொழுகு, ப. 36.

229. 5.10.6 ஈ

230. கலித். 2:26.27; பெருங். 1.35; 100;101; 1-44; 61.63;

231. 3.3.1 ஈ

கண்ணீர் மல்கிநிற்பராம்[232] இந்நிலையை நஞ்சீயர் கண்டு வியந்து தம் சீடரான நம்பிள்ளையிடம் பிற்காலத்தில் கூறி மகிழ்ந்திருக்கிறார். பராங்குச நாயகி தனிப்போக்கிலே ஒருப் பட்டு ''உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம், கண்ணன் எம்பெருமான் என்றென்றே கண்கள் நீர் மல்கி''[233] நள்ளிரவில் திருக்கோளூர் புக்காள் என்று திருத் தாயார் வருந்தினாள். பராங்குச நாயகி கண்கள் நீர் மல்கி நின்றதை அரையரின் மனவுருக்கம் நஞ்சீயருக்கு நினைப்பூட்டிய படியால் அது அவருடைய நெஞ்சில் நீங்காமற் பதிந்துவிட்டது.

**பரந்தமனம் :-**

சிறந்த கலைஞர்கள் பிறரிடம் கலைத்திறங்காணின் அழுக் காறின்றிப் பாராட்டுவார்கள். ஆற்றுப்படை நூல்களில் இத் தகைய அருங்கலையுள்ளத்தைக் காணலாம். சங்க காலக் கலைப் பண்பாடு அரையர்களிடம் இயல்பாக அமைந்திருந்தது. ஆழ் வார் திருவரங்கப் பெருமாள் அரையர் வடதேசத்திலிருந்து தென்திருவரங்கம் போந்த ஓரிசைக்கலைஞரை மொழிமாறு தேசமாறு காணாது பெரிதும் பாராட்டி இறைவன் திருமுன் னர் இட்டுச் சென்று பரிசில் வழங்கிச் சிறப்பித்தார்.[234]

**பயன் கருதாத் தொண்டு :-**

அரையர்கள் ஒருபோதும் இசை விலை வணிகராயிருந் திலர்; இசையைக் காட்டி இறைவனை வசமாக்கிக் குடும்ப நலன்களான உலகியற் பொருள்களை ஒருநாளும் இரந்திலர். இசைபாடி இறைத்தொண்டு புரிவதையே பெரும் பயனாகக் கொண்டிருந்தனர். பிள்ளை தேவப் பெருமாள் அரையர் ஒரு கால் இராப்பத்தன்று திருவாய்மொழியில் 'உன் தாமரைக் கண்களால் நோக்காய் என்ற பாசுரப் பகுதியைப் பலகாலும் சொல்ல அருகிருந்த திருவரங்கப் பெருமாள் அரையர் எழுந் திருந்து, ''பிள்ளாய், நீ இங்ஙனே திருவுள்ளம் புண்படும்படி பலகாலும் நிர்ப்பந்திக்கிறதென்? அழகிய மிடற்றைத் தந்தா ராகில் நல்ல பாட்டைத் தந்தாராகில் பிள்ளைகளையும் செல் வத்தையும் தந்தாராகில் என் செய்யாதாராக நீர் இங்ஙனே கிடந்துபடுகிறது?'' என்றருளிச் செய்தாராம்[235] பயன்கரு

---

232. 6.7.1 ஈ
233. தி. வா. மொ. 6.7.1
234. 5, 10, 6 1; 6, 9, 3 ஈ
235. 9, 2, 1 ஈ

தாத சேவையே பின்பற்றத் தக்கது என்று திருவரங்கப் பெருமாள் அரையர் மற்றவருக்கு அறிவுறுத்தித் திருத்தினார் என்று தெரிகிறது.

உலகியலறிவு :-

ஆழ்வார்களின் அருளிச் செயல்களை இசைப்பதே பொழுதுபோக்காகக் கொண்டாலும் அரையர்கள் தம்மைச் சுற்றுமுள்ள அன்றாட வாழ்க்கையையும் உலகினரின் மன இயல்புகளையும் உயிரினங்களின் வாழ்வியல்புகளையும் உற்று நோக்கி அவ்வறிவு கொண்டு பிறருக்கு நல்லறங்களை விளக்கினார்கள் என்று நம்பிள்ளை பேருரையால் அறிந்து கொள்கிறோம்.

"ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவரால் அவிழ்க்கப் போகிறதில்லை.
சர்வ சக்தி கர்மாநுகுணமாகப் பிணைத்த பிணையை அவனையே
கால்கட்டி அவிழ்த்துக் கொள்ளுமித்தனை காண்"[236]

என்று பிள்ளை திருநறையூர் அரையர் அடிக்கடி கூறுவராம். இவ்வார்த்தையின் இன்சுவையறிந்த நம்பிள்ளை இதனை இரண்டிடங்களில் காட்டியிருக்கிறார். மேலும், உலகினரின் இயல்பறிந்து பாசுரங்களுக்குப் பொருள் நிறுவுவதிலும் பிள்ளை திருநறையூர் அரையர் வல்லவராயிருந்தார்.

பொருள் கையுண்டாய்ச் செல்லக் காணில்
போற்றியென்று ஏற்றெழுவர்
இருள்கொள் துன்பத்தின்மை காணில்
என்னே என்பாருமில்லை"[237]

என்று நம்மாழ்வார் உலகினர் இயல்பை ஒரு பாசுரத்தில் நயம்பட மொழிகிறார் இங்கு 'என்னே' என்பதை ஐயோ! என்னும் இரக்கக் குறிப்பாகக் கொண்டு ஒரு பொருளாட்சி ஏற்பட்டது. பிள்ளை திருநறையூர் அரையரோ 'என்னே' என்பதை வினாக்குறிப்பாகக் கொண்டு பொருள் விரிப்பாராம். அவ்விரிவில் உலகியல்பை எளிதாகக் காட்டுகிறார் :-

---

236. ம. பி (I); 4, 9, 8 ஈ
237. தி. வா. மொ, 9, 1, 3

"அவனாலே ஸம்ருத்தனானவன் இவனை என் என்னு தல்; இவன் க்ருஹத்திலே வந்தொருநாள் கால் கழுவிப் போதல் செய்ய, அவ்வளவிலே 'இன்னான் இன்னா னுக்கு பந்துவாகாதே' என்று இவ்வளவு கொண்டு ஜீவிக்கலாயிருந்தால் அவ்வளவும் செய்வாரில்லை"[238]

என்று பணிப்பராம்.

ஆசாரியர் நிலை:

வடமொழி வேதங்களை நன்கு ஓதிய பரமவைதிகர்களான அரையர்கள் ஆழ்வார் பாசுரங்களைப் பயின்று பாடிவந்தனர். வேதத்தினும் மிக்கதாக அருளிச் செயல்களைப் போற்றினர். அதனால் ஆழ்வார்கள் பாடல்களுக்கு 'வைதிக பரிக்கிரஹம்' ஏற்பட்டுமேன்மை பிறந்தது. இத்தகைய ஒரு நிலை வைணவத் தின் தனிப்பெருஞ்சிறப்பாகும். அரையர்கள் பொதுவாக நாத முனிகளின் வழியினராதலால் ஆசாரிய பீடத்தை அணி செய்யும் தகுதியும் இயல்பாக அமையப் பெற்றனர். வைணவ சமயத்தின் ஒப்பற்ற பெருந்தலைவராய்த் திகழ்ந்த இராமானுசர் ஆழ்வார் திருவரங்கப் பெருமாள் அரையரைத் தம் ஆசாரியருள் ஒருவ ராகக் கொண்டு அவரிடம் சரமோபாயத்தைக் கேட்டறிந்தார். அரையர் திருவத்யயனத்தில் ஆடிய களைப்புத்தீர அவருக்கு மஞ்சட்காப்பிட்டு நீராட்டிப் பணிவிடையும் இராமானுசர் செய்திருக்கிறார்.[239] பிள்ளை திருநறையூர் அரையரை ஆசாரிய ராகக் கொண்டு அவரிடம் நஞ்சீயர் திருவாய்மொழி கேட்ட றிந்தார் என்று நம்பிள்ளை குறிப்பிட்டிருக்கிறார்.[240]

அரையர் கலைவளர்த்த ஆசாரியர்கள்:

நாதமுனிகளும் அவருடைய திருப்பேரனாராகிய ஆளவந் தாரும் இராமானுசரும் அவருடைய சீடராகிய எம்பாரும் அரையர் கலையில் திருத்தங்கள் செய்து வளர்த்துவந்ததாக நம்பிள்ளையுரையிலிருந்து நன்கு அறிய முடிகிறது. அக்கலையை ஆளவந்தார் இராமானுசர் எம்பார் ஆகியோர் ஆதரித்ததை முறையாகக் காண்போம்.

ஆளவந்தார்:-

இவர் துறவு நெறியைத் தழுவித் திருவரங்கம் திருப்பதியே

---

238. 9, 1, 3 ஈ
239. எஸ். கி. ஐயங்கார் (ப. ஆ), ஆ. கு. ப. பி., ப. 183.
240. 6, 7, 1 ஈ

இருப்பாகக் கொண்டார். திருவரங்கத்தில் வைணவ ஆசாரிய பீடத்தை அணிசெய்த ஆளவந்தார் தம் திருக்குமாரரான திரு வரங்கப் பெருமாள் அரையரை விண்ணப்பஞ் செய்வாராக ஈடுபடுத்தினார். அவரும் இளமையிலேயே நாடகக் கலையில் தேர்ச்சியுற்றுத் திருவத்யயனோற்சவங்களில் திருமால் அவதா ரங்களிற் செய்தருளின செயல்களை நாடகமாகத் திருக்கோலம் புனைந்து அபிநயித்து மிகவும் உகப்பிக்கப் பெருமாளும் போர வுகந்தருளி 'கோயிலுடைய பெருமாள் அரையர்' என்று திரு நாமம் சாத்தி சகல வரிசைகளையும் வழங்கினார் என்று கோயிலொழுகு வருணிக்கிறது.[241] திருக்குமாரரான அரைய ரின் ஆடல் பாடல்களைக் கண்டும் கேட்டும் மகிழ்ந்து ஆள வந்தார் ஊக்கமளித்துப் பாராட்டிவந்தார். ஒருமுறை திரு வாய்மொழித் திருநாளில் திருவரங்கப் பெருமாள் அரையர் கடுவினை களையலாகும்' என்ற பாசுரத்தை மிகவுருக்கமாக ஆளவந்தாரை நோக்கிப் பாடினார். அப்பாசுரத்தின் ஈற்றடி யான,

> ''படமுடை யரவில்பள்ளி பயின்றவன் பாதம்காண
> நடமினோ நமர்கள்உள்ளீர் நாம்உமக் கறியச்சொன்
> னோம்''[242]

என்பவற்றைக் கேட்டதும் ஆளவந்தார் 'நமக்கு ஆழ்வாரோடே ஒரு உறவு உண்டாகவேணும்' என்று அப்போதே தம் சீடர் களான முதலிகளுடன் திருவனந்தபுரம் பயணப்பட்டாராம். அரையரின் இசையினை உற்றுக் கேட்டவுடன் ஆழ்வாரின் குறிப்பு பளிச்செனப்பட்டுச் சடக்கெனத் திருவனந்தபுரம் புறப் பட்டார் என்று தெரிகிறது.

**இராமானுசர்**

இவர் அரையர் கலையைப் பேரார்வத்துடன் ஆதரித்துப் புரந்துவந்தார். திருவத்யயன உற்சவத்தில் ஆர்வத்துடன் ஈடு பட்டு அரையரின் அபிநயங்களில் ஏற்ற திருத்தங்களையும் செய்துவந்தார். இராமானுசரின் முத்தமிழ்ப் புலமை இதற்குப் பயன்பட்டிருக்க வேண்டும். இராமானுசர் திருத்திக் காட்டிய அபிநயம் ஒன்றை நம்பிள்ளை எடுத்துக் காட்டியிருக்கிறார்.

---

241. எஸ். கி. ஐயங்கார் (ப. ஆ), கோயிலொழுகு, ப. 35.
242. தி. வா. மொ. 10, 2, 8

'அன்னையென் செய்யிலென்' என்ற பாசுரத்தைத் திரு வரங்கப் பெருமாள் அரையர் அபிநயித்துக் காட்டிவந்தார். மடலேறத்துணிந்த பராங்குச நாயகி காதல் கைமிக்கு 'அகப் பட்டேன் ...... மணிவண்ணன் வாசுதேவன் வலையுளே' என்று அரற்றுவதை அரையர் அபிநயிக்கும் சமயம் வந்தது. அப்போது வலையாகத் தமது மேலாடையை வளைத்துக் காட்டினார் அரையர். அதைக் கண்ணுற்ற இராமாநுசர் வலைக்கு அடை யாளமாகத் தமது திருக்கண்களைச் சுட்டிக் காட்டினார். கண்ணை வலையாக உருவகித்த ஆழ்வார் பாசுரங்களை இராமாநுசர் நீடு நினைந்து செய்த திருத்தத்தை அரையர் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டார்,[243].

**எம்பார்**

இவர் தமிழிலக்கிய இலக்கணங்களிலே விரகர். இசையில் மிக்க ஈடுபாடுடையவர். இவரும் அத்யயனோற்சவங்களில் தம் ஆசிரியரான இராமானுசருடன் அமர்ந்து அபிநயங்களில் பொருத்தமான திருத்தங்கள் சில செய்து காட்டினார். அவற் றுள் ஒன்றை நம்பிள்ளை 'போகுநம்பி' என்ற பாசுரத்தின் அவதாரிகையில் விரிவாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

உய்ந்தபிள்ளை அரையர் குலசேகராழ்வாருடைய பெருமாள் திருமொழியில் 'இன்னம் என் கையகத்து ஈங்கொருநாள் வருதி யேல் என் சினம் தீர்வன் நானே'[244] என்ற பாடலுக்கு அபி நயம் பிடித்தார்.

கண்ணபிரான் மீது ஆய்ச்சி ஒருத்தி ஊடிப்பேசும் பாசுரம் அது. கண்ணன் ஒருநாள் கைவசப்பட்டால் அன்று தன் சினத் தைத் தீர்த்துக் கொள்ளப் போவதாகப் பேசுகிறாள் தலைவி. அதாவது தலைவனான கண்ணன் மனம் வருந்தித் துடிக்கும்படி செய்வதுதான் அவள் சினம் தீர்த்துக்கொள்ளும் வழி. அதை நடித்துக்காட்ட அரையர் முற்பட்டுத் தம்மை ஆய்ச்சியாகக் கற்பனை செய்து கண்ணனைக் கையாலும் காலாலும் உதைத் துத் துகைப்பதாக அபிநயித்துக் காட்டினார். ஆய்ச்சியின் கையும் காலும் படப்பெற்றால் கண்ணனுக்கு வருத்தமா விளையும்? இன்பமன்றே துளிர்க்கும்! அவனை வருந்தச் செய்ய வேண்டியதன்றோ ஆய்ச்சியின் உட்கோள். ஆகையால் அரை

243. 5, 3, 6 ஈ

244. பெரு. திரு. 6:8

யரின் அபிநயத்தில் பொருத்தமின்மையை உணர்ந்த எம்பார் எழுந்திருந்து தம் முகத்தைத் திரியவைத்துக் காட்டினாராம். தலைவி நெடும்போது முகங்கொடாதிருந்தால் அதுவே தலைவனுக்குத் தக்க தண்டனையாகும் தலைவியின் முகம் பெறவும் உரை பெறவும் தலைவன் அவளடிக்கீழ் வணங்கவும் முற்படுவான். ஊடலில் தலைவன் தோற்பது அகப்பொருள் மரபாகும். இதையெல்லாம் அறிந்திருந்த எம்பார் மெய்யான அபிநயத்தை அரையருக்கு அறிவுறுத்தினார்.[245]

**பொருளாட்சிகள்**

இனி, அரையர்கள் தமிழ்நூல்களிலும் வடமொழிநூல்களிலும் நல்ல பயிற்சிபெற்றிருந்ததால் ஆழ்வார் பாசுரங்களுக்குப் பல இடங்களில் நயமான உரைகளை நிறுவியிருக்கிறார்கள். அவ்வுரை ஆட்சிகளையெல்லாம் நம்பிள்ளை தம் பேருரையில் போற்றியிருக்கிறார். மூன்று அரையர்களின் பொருளாட்சிகள் எட்டு இடங்களில் ஆளப்பட்டிருக்கின்றன.[246]

இவ்வாறு அரையர்களைப் பற்றியும் அரையர்சேவைக் கலை பற்றியும் அரிய குறிப்புகளை நம்பிள்ளையின் பேருரை தருகிறது. இவற்றோடு பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானங்களையும் ஒருசேர ஆராய்கின்றவர்களுக்கு அரையர்களைப் பற்றி இன்னும் விரிவான செய்திகளைத் திரட்டமுடியும். அது தனி ஆய்வாக நிகழத்தகும்.

### நம்பிள்ளை காட்டும் நல்நெறி

**பக்தரும் பிரபந்நரும் :**

திருவாய்மொழி முதற் பதிகத்தின் ஈட்டில் விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தின் முடிபுகளை எல்லாம் முறையாகக் காட்டுகிறார் நம்பிள்ளை. அதன் அடிப்படையான 'சரீர-ஆன்ம பாவம்' என்பதை 'உடன்மிசை உயிர் எனக் கரந்தெங்கும் பரந்துளன்' என்ற தொடர் கொண்டுநிறுவுகிறார். இதுவே 'விசிஷ்டாத்வைதத்தின் திறவுகோல்' என்று சொல்லப்படும். விசிஷ்டாத்வைத சித்தாந்தம் நம்பிள்ளை காலத்துக்கு முன்னிருந்தே 'எம்பெருமானார் தரிசனம்' என்று அழைக்கப்பட்டது. நம்பிள்ளை மிக்க பெருமையுடன் 'நம்தரிசனம்' என்று அதனைக் குறிப்பிடுவர்.[247] எம்பெரு

---

245. 6, 2; 2ப

246. பார்க்க. பின்னிணைப்பு (6)

247. ம. பி. (1); 1, 1. 2ஈ

மானார் தரிசனத்துக்குத் திருவாய்மொழியே அடிப்படை என்பதைப் பல இடங்களிலும் அவர் காட்டும் விளக்கங்கள் தெரிவிக்கின்றன. எம்பெருமானார் என்ற இராமாநுசருக்குப் பிறகு தமிழ்நாட்டு விசிஷ்டாத்வைதிகள் இரு பிரிவினராகப் பிரியத் தலைப்பட்டனர். அவர்கள் சில கோட்பாடுகளில் தனித்தனியான கருத்துக்களை வகுத்துக் கொண்டனர். இராமானுசர் காலத்திலேயே கருத்து வேறுபாடு நிலவியிருந்தது என்பதற்குச் சான்றுகள் உள்ளன. இராமானுசர் கீதையின் சரமசுலோகத்துக்குப் பிரபத்தி நெறியில் விளக்கம் கூறியபோது உய்யக் கொண்டார் என்பார் அதற்கு இசைய மறுத்துவிட்டார். இந்நிகழ்ச்சியைப் பிள்ளைலோகாசாரியர் ''உய்யக் கொண்டார் விஷயமாகஉடையவர் அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது'' என்று நினைவுபடுத்தியிருக்கிறார்.[248] தத்வநிர்ணயம் என்ற சமயநூலைச் செய்தவர் உய்யக் கொண்டார். அவர் "பக்திநிஷ்டராக" இருந்தாராம். அவரைப் ''பிரபத்திநிஷ்டராக'' மாற்றவேண்டும் என்று இராமானுசர் விரும்பினார். தாம் திருக்கோட்டியூர் நம்பிபக்கல் கேட்டிருந்த அரிய சரமசுலோகப் பொருளை அவருக்கு அறிவுறுத்தினார். 'பொருள் அழகிது, ஆயினும்பற்றத் தக்க 'ருசி' தம்மிடத்தில் இல்லை' என்று கூறினார் அவர். அதைக் கேட்ட இராமானுசர் ''வித்வானாக இருப்பதால் பொருளை ஏற்றீர்: இறையருள் இல்லாமையாலே ருசி பிறக்கவில்லை'' என்று கூறினார். இதனால், இராமானுசர் காலத்தில் பக்தி நிஷ்டர், பிரபத்தி நிஷ்டர் என்ற இருபிரிவினர் இருந்தனர் என்று அறியக்கிடக்கிறது. பக்தி நிஷ்டர்களை உபாசகர்கள் எனவும் குறிப்பிடுவர். பிரபத்தி நிஷ்டர்கள் தங்களைப் பிரபந்நர்கள் என்றும் தங்களுக்குத்தலைவர் நம்மாழ்வார் என்றும் கூறிக்கொண்டனர். நம்மாழ்வாரைப் பிரபந்ந ஜன கூடஸ்த்தர்' என்றும் பாராட்டினர்

பக்திநிஷ்டராய் உபாசகராயிருந்தவர்கள் நம்பிள்ளை காலத்தில் பெருகத் தொடங்கினர் அவர்களை 'புறம்பள்ளார்' 'அல்லாதார்', 'மற்றையார்' என்று நம்பிள்ளை குறியிட்டு வழங்குகிறார்.[249] அவர்களுடைய கொள்கைகளில் சிலவற்றைத் தம் பேருரையில் மறுத்திருக்கிறார். ஆழ்வாருடைய பாடல்களைக் காட்டி அவற்றை மறுக்கும் திறன் மிக நயத்தற்குரியது.

---

248. பிள்ளைலோகாசாரியார், முமுக்ஷுப்படி; 263.

249. 1-2-10 ஈ; 1-3-1 ஈ; 3-8-9 ஈ; 6-10-10. ஈ; 7.3.1ஈ; 9.3.1 ஈ

மறுப்புரையில் நுண்ணிய எள்ளலும் மெல்லிய நகைச்சுவையும் இணைந்து செல்கின்றன.

பரந்துளதன்மை (வியாப்தி)

இறைவன் எல்லாப் பொருள்களிலும் உள்புக்குப் பரந்து உளன். அப்படிப் பரந்து நிறையும்போது, ஒவ்வொன்றிலும் முழுமையாக நிறைவதில்லை; இறைவனுடைய ஓர் ஓர் பகுதியே ஒவ்வொன்றிலும் நிறைந்துள்ளது. பல தூணுக்கு ஓர் உத்தரம் இட்டால், உத்தரத்தின் ஓர் பகுதியே ஒவ்வொரு தூணோடு தொடர்புபட்டிருக்கும். அதுபோன்றது இறைவனுடைய பரந்துள தன்மை (வியாப்தி). இவ்வாறு கூறுகின்றவருடைய கோட்பாட்டை ஆழ்வார் பாசுரங்கொண்டு மறுப்பர் நம்பிள்ளை. ,'பரந்த தண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன்''[250] என்ற பாடல்பகுதியில் 'தொறும்' என்ற சொல்லையும் ''பரந்த அண்டம் இது என''[251] என்ற தொடரையும் திறம்படப் பயன்படுத்திக்கொள்கிறார். ஒவ்வொரு அணுவினுள்ளும் இறைவன் உட்புக்கு நிறைந்திருக்கிறான்; உட்புக்க அவனுக்கு ஒவ்வொரு அணுவும் அண்டம்போல் பெரிதாயுள்ளதாம் அதனால் எவ்வித இடர்ப்பாடும் நெருக்கடியுமின்றி அணுத்தொறும் புகுந்து உறைகிறான். இதுவே ஆழ்வாரின் பாடற் கருத்து. புறத்தே எங்கும் பரந்திருக்கும் அகண்டமான பரமாத்மா கழிய மிகச் சிறிதான அணுப்பொருளில் பகுதிப் படாமல் முழுவதுமாக நிறைந்திருக்க முடியாது; அப்படி முழுவதுமே அணுவுக்குள் நிறைந்துவிட்டால் புறத்தே அவன் வியாபிக்க முடியாது என்பது புறம்புள்ளாரின் கொள்கை. நம்பிள்ளைக்கு ஆழ்வாருடைய சொற்களே மிகச்சிறந்த பிரமாணம். ''புறம்புள்ளார் சொன்னபடி சொல்லுகிறார்கள்; நம் ஆழ்வார்கள் போனவழி இதுக்கு மேற்பட இல்லை''[252] என்று கூறும் போது நம்பிள்ளை ஆழ்வாருடைய கருத்துக்களிலே வைத்திருந்த பெருமதிப்புப் புலனாகிறது. புறம்புள்ளாரின் கொள்கையை ஆழ்வார் பாடல் கொண்டு மறுத்ததோடு அமையாது அனைவர்க்கும் புரியும் வண்ணம் அளவை நூலார் ஒப்புக் கொண்ட ஓர் எடுத்துக் காட்டால் விளக்குகிறார். ஒவ்வொரு பொருளிலும் அவ்வச்

---

250. தி. வா. மொ, 1-1-7
251. மேலது
252. 7-3-1 ஈ

சாதித் தன்மை நிறைந்திருத்தல் போன்று எல்லாப் பொருள் களிலும் தனித்தனியே குறைவு அற நிறைந்து நிற்பான் என்று விளக்குகிறார் மேலும் அது‘ஆகாயத்தின் வியாப்தி’ போன்றது அன்று எனவும் இறைவன் இத்தகைய சேராச் சேர்த்தியான அருஞ்செயல்களை ஆற்றவல்லோன் எனவும் நம்பிள்ளை கரு துவர்.[253] இவ்வளவு கூறியும் ஏற்கத்தயங்குகிறவர்களைக் குறித்துப் பின்வருமாறு நகையாடுகிறார்.

> “கார்த்த வீரியார்ஜுனன் என்பான் ஒருவன் தான் ராஜ்யம் பண்ணுகிற காலத்தில் ஆரேனுமொருவர் பாப சிந்தனை பண்ணினாருண்டாகில் அவர்கள் முன்னே கையும் வில்லுமாய் நின்று அவற்றைத் தவிர்த் துப் போந்தான் என்றால் ‘இது பொருத்தம்’ என்று இருப்பார்கள். ஒரு எளிய மனிதனுக்கு இது கூடும் என்றிருக்கிறவர்கள், ‘சர்வ சக்தி இப்படி வியாபித்து நின்று நோக்கும்’ என்றால் சிலர் ‘இது பொருந்தாது’ என்றிருப்பார்கள். ஒவ்வொரு பொருளின் சாதித் தன்மை அவை அவைதொறும் நிறைந்திருக்கும் என்றால் ‘உயிரற்ற சடப்பொருளுக்கு இது கூடும்’ என்றிருப்பார்கள்; பரம்பொருளானவனுக்கு இது கூடாது என்று ஐயுறுகிறார்களே!”[254]

தக்கநெறி :-

இறைவனை அடையத்தக்க உபாயம் இன்னது என்பதில் புறம்புள்ளாரின் கருத்துக்களைக் காட்டி அவற்றை மறுத்து ஆழ்வார் கருதிய உண்மைப் பொருளை உரைக்கண் நிலை நிறுத்தியிருக்கிறார் இறைவனே உபாயமாகவும் ஆகிறான் என்பது ஆழ்வார் கருத்து. உபாசகர்களான புறம்புள்ளார் இறைவனைப் பற்றாது வேள்வி முதலிய கருமங்களைப் பற்றி அவனை அடையப் பார்க்கிறார்கள். அவை யாவும் அறிவற்ற வெறும் செயல்களே; அதனால் பலனளிக்கும் திறமற்றவை. ‘நம்முடையவர்கள் எம்பெருமானையே உபாயமாகப் பற்றா நிற்க, அல்லாதார் அசேதனக் கிரியா கலாபங்களைப் பற்று கிறாப்போலேயிறே துர்யோதனன் நிலை’,[255] என்பது நம்

253. 3-2-4 ஈ; 4-3-3 ஈ; 4-5-1;
254. 4-10-0 ஈ
255. 1-3-1 ஈ;

பிள்ளையின் சுவை மிக்கவுரை. புறம்புள்ளாரின் செயலைத் துரியோதனன் நிலைக்கு உவமையாக்கி நகைப்புக்கு இடனாக்கு கிறார்.[256] எல்லாம் வல்ல ஆற்றல் மிக்க கண்ணனைப் படைத்துணை வேண்டாது அறிவாற்றலால் குறைவுபட்ட போர் வீரர்களை வேண்டிப்பெற்ற துரியோதனன் நிலையையே அங்ஙனம் விளக்குகிறார். துணிச்சலான எள்ளலை (Satire) நயமாக இணைக்கும் திறன் நம்பிள்ளைக்கு உரியது.

வேள்வி முதலியன ஒருபுறம் இயற்றி மற்றொருபுறம் இறைவனையும் பற்றுவார் சிலர் உளர். ''கண்ணல்லால் இல்லை கண்டீர் சரண்''[257] என்ற ஆழ்வார் உடனேயே, ''எண்ண வேண்டா நும்மதாதும் அவனன்றி மற்றில்லையே' என்று கூறியிருப்பது கண்டு அன்னவரின் செயலை மறுக்கிறார். ''எல்லாம் அவன் பக்கலிலே கிடக்கிறது...... சாதனமும் அவனை ஒழிய இல்லை; சமிதைபாதி சாவித்திரிபாதியாக நீங்களும் ஒரு தலை கூட்டுப்பட வேண்டுவதில்லை''[258] என்பது ஈடு.

பேற்றுக்கு வேண்டுவன யாவை என்பதையும் அவை யனைத்தும் உபாயங்கள் அல்ல என்பதையும் அவை யாவும் சிறப்பு இயல்புகளே என்பதையும் ஆழ்வார் பாடல்களைக் கொண்டே விரிவாகப் பல இடங்களில் விளக்கிச் செல்கிறார். வேறு வடநூற்களின் துணை தேடாது ஆழ்வார் பாடல்களைக் கொண்டே நுண்ணிய மெய்ப்பொருள்களைக் கண்டு உணர்த்து வது நம்பிள்ளையின் தனித்திறனாக அமைகிறது. அவை எல்லா வற்றையும் சேரக் காட்டி, திருவாய்மொழியைத் தத்துவக் களஞ்சியமாக நமக்கு அறிமுகம் செய்கிறார் நம்பிள்ளை.

இறையருட் பேற்றிற்கு அது வாய்க்கும் போது விலக் காமையே வேண்டுவது ஒன்றாகும். அவனது அருளைக் கொள் வதே விலக்காமை. ''அருள்கொள் ஆளாய் உய்யலல்லால் இல்லை கண்டீர் அரணே''[259] என்ற பாடல் அடியே அதற்குச் சான் றாகிறது. ''எண்ணிலும் வரும், என் இனி வேண்டுவம்?''[260] என்பது ஆழ்வார் வாக்கு. ''இவன் பக்கல் விலக்காமைக்கு வேளை பார்த்திருந்து முகம் காட்டுவானான பின்பு, இவனுக்கு

---

256. 3-2-2ஈ
257. தி.வா.மொ- 9-1-10
258. 9-1-10. ஈ
259. தி. வா. மொ, 9 - 1 - 3
260. மேலது 1 - 10 - 2

நன்மைக்காகச் செய்யவேண்டுவது பிறிதுஉண்டோ?'' என்பது அதற்குப் பிள்ளையின் விரிவு. அத்துடன் அவர் நிற்கவில்லை. ''இறைவனைப்பற்றிய பெருமைகளை நன்கறிந்தவர்களுக்கு 'இதுவே பொருள்' என்று தோற்றியிருக்கும். கேவலம் சில கிரியைகளுக்கே பலனளிக்கும் ஆற்றல் உள்ளது என்றிருப்பார்க்கு 'இப்பொருள் பொருந்தாது' என்று தோற்றியிருக்கும்' என்று ஏளனம் செய்கிறார்.

விலக்காமையை ஓரிடத்தில் இராமாயண வரலாறு கொண்டும் தெளிவு படுத்துகிறார்:

> ''கடற்கரையிலே விட்டபோது பெருமாளை நோக்குகைக்குத் தம்பியார், மஹாராஜர் ... உள்ளிட்ட முதலிகள் எல்லோரும்,லங்கையிலே கிட்ட, ஆகாசம் எல்லாம் வெளிக்காவல் அடைத்து, நிதிநோக்குவாரைப் போலே பெருமாளை நோக்கிக் கொண்டு கிடக்க, இவர்கள் இத்தனைவரும் கண் சோர்ந்த அளவிலே, பெருமாள் புறம்பே நின்று உலாவினாரிறே. அவன் நோக்குகைக்கு இத்தலை கண் செம்பளிக்கும் அத்தனையிறே வேண்டுவது'', [261]

கண் செம்பளித்தலாவது செயலற்றுக் கண் மூடி உறங்குவது. இது தன் முயற்சி ஒடுங்கிய நிலை; இறை முயற்சியைத் தடுத்து விலக்காத நிலை; இதனையே 'விலக்காமை' காட்டுகிறது. தன் முயற்சி இறை முயற்சியைத் தடுக்கிறது என்பது பிள்ளையின் கொள்கை.

விலக்காமை வேண்டுவது போல் இறைவன் பால் வெறுப்பின்மையும் எதிர்கொள் இன்முகமும் இறையருட் பேற்றுக்கு வேண்டுவனவே ஆயினும் இவையாவும் இறையருட் பேற்றுக்கு வழிகள் அல்ல. இறையருள் வாய்க்கும் போது தேக்கிக் கொள்ளத் தேவையான இயற்கைகளாம். ஏரியை வெட்டுவது மழைக்கு உபாயமன்று; மழை பெய்தால் தேக்கிக் கொள்ள அது தேவை; பிற நிலங்களினும் ஏரியே மழையைக் கொள்ளத்தக்க'அதிகாரம்' வாய்த்தது ஆகிறது; 'அதிகாரி' என்று அது பேசப்படும். ஏரியின் நீர் கொள்ளும் இயல்பு 'அதிகாரி விசேஷணம்' எனப்படும் [262] அது போன்றே, விலக்காமை, வெறுப்பின்மை, எதிர்

---

261. 6-9-3 ஈ

262. இக்கருத்தினை வலியுறுத்துவதாக அமைந்த பூதத்தாழ்வார் பாசுரம் :-
தனக்கடிமை பட்டது தானறியா னேலும், மனத்தடைய வைப்பதாம் மாலை-
வனத்திடரை, ஏரியாம் வண்ணம் இயற்று மிதுவல்லால், மாரியார் பெய்கிற்
பார் மற்று.
... இ. தி, அந். 16.

கோள் யாவையும் அதிகாரி விசேஷணமாகும்; அவை ஒருக்காலும் பேற்றுக்கு உபாயங்கள் அல்ல. இதனை வேறொரு எடுத்துக்காட்டாலும் தெளிவுபடுத்துகிறார். ஒருவன் அரசனைக் கண்டு ஒரு எலுமிச்சம்பழம் கொடுத்து இராச்சியத்தைப் பெற்றால் அது விலையாகப் போராது. அரசனுடைய இரக்கமே இங்குப் பலன்விளைவிக்கிறது என்று நம்பிள்ளை விளக்குவர்.[263]

வேறு வழிகளைப் பற்றுதலை அறவே விட்டு இறைவ்னைப் பற்றுகையாகிற செயலை உபாயமாகக் கொள்ளக் கூடாது. அப்பற்றுகைதானும் 'அதிகாரி விசேஷணம்' ஆகும். அது அறிவுடையவனின் இயற்கைச் செயற்பாடாகும். இறைவனைப் பற்ற இச்சையும் அதில் சுவையும் அதிகாரி விசேஷணங்களாகும். அவையும் அவனுடைய இன்னருளால் விளைவனவேயாம்.[264] 'அதுவும் அவனதின்னருளே',[265] 'உன் மனத்தால் என் நினைந்திருந்தாய்'[266] என்ற பாடல்களே நம்பிள்ளையின் கருத்துக்களை உருவாக்கியவை.

வேறுவழிகளான பிற கருமங்களை அறத் துறப்பதற்குக் காரணம் அவற்றில் நாஸ்திக நினைவால் அன்று; செய்வதற்கு அருமையால் சோம்பரால் அன்று; அவையாவும் ஆன்மாவின் மெய்ப்பொருள் இயல்புக்குச் சேராதிருப்பதுவேயாகும்.[267] ஆன்மாவின் மெய்ப்பொருள் இயல்பு, அது எஞ்ஞான்றும் யாண்டும் இறைவனுக்கு அடிமைப் பட்டிருத்தலேயாகும். ஆன்மா அறிவு வடிவமாகவும் அறிவிற்கிடமாகவும் இருத்தல் என்பது பருபொருளான இலக்கணம்; அடிமை என்பதே மெய்ப்பொருள் இலக்கணம். பருப்பொருளான இலக்கணத்தை முதன்மையாகக் கொண்டால், ஆன்மாவுக்கு முயற்சியும் நுகரும் தன்மையும் ஒப்புக் கொள்ளப்படும் (கர்த்தா, போக்தா); மெய்ப்பொருள் இலக்கணத்தை முதன்மையாகக் கொண்டால் முயற்றின்மையும் நுகர்பொருளாம் தன்மையும் (போக்யம்) ஒப்புக்கொள்ளப்படும். மெய்ப்பொருள் இலக்கணத்தையே (அடிமை) சீரியதாகவும்

---

263. 1.10.0 ஈ
264 4.7.7 ஈ; 8.7.8 ஈ; 8.8.3; 10.2.2 ஈ
265. தி. வா. மொ. 8.8.3
266. பெரி. திரு. 2.4.2
267. 5.7.10 ஈ
268. தி. வா. மொ. 8.8.2

அந்தரங்க அடையாளமாகவும் கொண்டவர் ஆழ்வார் என்பது நம்பிள்ளையின் அசைக்கமுடியாத நம்பிக்கை. ''அடியேன் உள்ளான் உடல் உள்ளான்''[268] என்ற பாடல் தொடரில் இவற்றை மிக விரிவாக நம்பிள்ளை விளக்கி வரைந்திருக்கிறார். அடிமைப் பொருளான ஆன்மா எப்போதும் எவ்விடத்தும் எந்நிலையிலும் இறைவனால் இயக்கப்பட்டு அவனுக்குப் பரதந்திரமானது என்ற ஆழ்வாருடைய உண்மை உள்ளக் கருத்தைத் திறம்பட எடுத்துக்காட்டுவது பிள்ளையின் முயற்சியாகும்.

சரணாகதிநெறி பற்றி மிக விரிவாக ஆய்வுசெய்து தம் கோட்பாடுகளை எல்லாம் ''அகலகில்லேன்''[269] என்ற பாடலின் விரிவுரையில் நம்பிள்ளை பரக்க உரைத்திருக்கிறார். முடிவில் அவர் கூறும் அரிய கருத்து ஒன்று நெஞ்சை ஈர்க்க வல்லதாய் ஆழ்வாரிடம் அவர் காட்டும் அளவற்ற காதன்மையை வெளிப் படுப்பதாய் அமைந்துள்ளது.

''இவர் (ஆழ்வார்) பண்ணின பிரபத்தியே, நமக்கெல்லாம் தனித்து வேண்டா.''[270] ஆழ்வார் புகலற்றுப் புகுந்து பாடிய 'அகலகில்லேன்' என்ற பாடலைச் சொல்லிப் பலனைப் பெற லாம் என்றும் அடுத்து மொழிகுவர். இக்கருத்தே சம்பிரதாய மாக உருவாகியது; பிரபத்தி நெறியின் இறுதி நிலையாக ஏற்கப்பட்டது.

**இயற்கை இன்னருள் :**

இறைவன் உயிர்கள்மாட்டுச் செய்யும் அருள் எத்தன் மைத்து என்பதை நம்பிள்ளை ஆழ்வார் பாடலைக் கொண்டு விளக்கி ஒரு தனி நெறியை அமைக்கிறார். உயிரியாகிய சேதன னுடைய ஒரு முயற்சியை ஏதுவாகக் கொண்டுதான் இறை அருள் சுரக்கிறது என்பது ஒரு சிலரின் கோட்பாடு. அவர்கள் இறையருள் 'ஸஹேதுகம்' என்றனர். நம்பிள்ளையோ அது 'நிர்ஹேதுகம்' என்று நிலைநாட்டுகிறார், ''வெறிதே அருள் செய்வர் செய்வார்கட்கு''[271] என்ற பாடல் அடிக்குப் பொருள்

---

269. மேலது 6.10.10
270. 6.10.10 ஈ
271. தி. வா. மொ. 8.7.8

வரையும்போது ''நிர்ஹேதுகமாகக் கிருபை பண்ணுவர்'' என்று குறிப்பிடுகிறார். 'வெறிதே' என்ற சொல் 'ஒரு ஏதுவுமின்றியே' என்ற பொருளைக் காட்டும் உயிர்ச்சொல். பிள்ளையின் கோட்பாட்டை நிலைநிறுத்தும் சொல். 'வெறிதே அருள் செய்வர்' என்றபின் 'செய்வார்கட்கு' என்று வருவதைக் கொண்டு 'அருளைப் பெறத்தக்கவர் ஏதாகிலும் ஏதுவான ஒரு செயலைச் செய்தவர்களே' என்று ஏதுக் கொள்கையினர் பொருள்காணவும் இடமின்றி 'செய்வார்கட்கு' என்பதற்குச் 'செயப்படுவார்க்கு' என்று செயப்பாட்டுவினைப் பொருள் விரித்துக்காட்டுகிறார். அதனை நிலைநிறுத்த ''தாம் தாம் ஒன்று செய்வார்க்கு என்னில் 'வெறிதே' என்னக் கூடாதிறே'' என்று காட்டுகிறார் வெறிதே' என்பதற்குப் பொருந்தவே 'செய்வார்கட்கு' என்ற சொற்குப் பொருள் காணவேண்டும் என்பது பிள்ளையின் கருத்து. இறைவனுடைய அருள் கைம்முதல் கருதாப் பெருங்கருணை என்பதைப் *பொருமா நீள்படை (1-10)யின் முன்னுரையிலும் மற்றும் பிற இடங்களிலும் நம்பிள்ளை விரிவாகக் கூறியுள்ளார். இக் கொள்கையையே பிள்ளைலோகாசாரியர் 'நிர்ஹேதுக விஷயீகாரம்' என்று தலைப்பிட்டுத் தம் நூலில் விரிவாகத் தடைவிடைகளுடன் ஆய்வு செய்து நிலைநிறுத்தியுள்ளார்.[272]

**கைவல்லிய மோட்சம்**

உடல் தொடர்பை அறவே விட்டு ஆன்மா தன்னையே இனிமையாகக் கொண்டு நுகருகையாகிற மோட்சத்தைக் 'கைவல்லியம்' என்று சாத்திரங்கள் பகருகின்றன. 'ஆத்மானுபவம்' என்று இதனைக்கூறுவர்,இதனைப்பற்றிக் கருத்துவேறுபாடுகள் உண்டு. ஆழ்வார் பாடல்களை நன்கு கடைந்து எடுத்துக் கைவல்லிய மோட்சம்பற்றிய தம் கருத்துக்களை முறைப்படுத்தியவர் நம்பிள்ளை. இறை அனுபவத்தை நோக்க இது மிக்க இழிந்தது. ''குறுக மிக உணர்வத்தொடுநோக்கி''[273] என்ற செறிவான பாடலில் கைவல்லியத்தில் ஊற்றமுடையவனுடைய இழிவுகளை ஆழ்வார் கூறிய முறையில் தெளிவுபடுத்தியுள்ளார். அதனைப் 'பெருந்துன்பம்'[274] என்று ஆழ்வார் குறிப்பதாகவும் சுட்டிக்காட்டுவர். பெருந்துன்பம் என்றதற்குக் காரணத்தைக்

---

272. ஸ்ரீவசனபூஷணம். சூத். 393, 394.
273. தி. வா. மொ. 4 . 1 . 10
274. மேலது 7 . 5 . 10

கூறும் போது கைவல்லியம் நித்தியமானது என்றும் அதனை அடைந்தான் ஒருவன் மீண்டும் இறையனுபவமாகிற பெருநல் வீட்டை அடைவது இல்லை என்றும் நம்பிள்ளை அறுதியிடுவர். கைவல்லிய மோட்சமடைந்தான் மீட்டும் முறையாக இறைய னுபவப் பேற்றை எய்தக்கூடும் என்பது ஒருசார் கொள்கை. திவ்வியப் பிரபந்த உரையாசியர்களுக்கு இது உடன்பாடன்று.

**புறம்புள்ளார் படிகள் :-**

புறம்புள்ளாரின் கொள்கைகளாக நம்பிள்ளை காட்டுவன :-

திருவெட்டெழுத்தின் சொல்லிலே ஊன்றி அதனை ஜபம், ஹோமங்களிலே பயன்படுத்துவர். ஓதி உருவெண்ணுவ திலேயே நோக்காயிருப்பர்;

அசேதனமான (அறிவற்ற) கருமங்களையே பற்றியிருப் பர்; பிரபத்தியைப் பற்றி வேறு பயன்களைக் கொள்வாரும் பிற சாதனங்களைப் பற்றி இறைவனையே பயனாகப் பற்று வாருமாயிருப்பர்;

திருவெட்டெழுத்தாகிற பெரியதிருமந்திரத்தைத் தவிர வும் பிறவற்றையும் போற்றிக் கொள்வர்;

பல தூண்களுக்கு ஓர் உத்தரம் போன்றே இறைவனு டைய பரந்துள தன்மை இருக்கும் என்பர்;

சாத்திர நெறிகளைக் கடைப்பிடிப்பதில் ஊற்றத்தாலே கருமங்களைச் செய்யும் காலத்தில் கோயில் திருவிழாக்களில் சேவிக்கலாகாது என்பர். [275]

இறைவனுக்குத் திருவுருவம் கொள்வது கற்பனை என்பர். [276]

நம்பிள்ளையின் தத்துவக்கருத்துக்களையே அவருக்குப் பிறகு பிள்ளைலோகாசாரியரும் அழகியமணவாளப் பெருமாள் நாயனாரும் ஒரு நெறிமுறைப்படுத்தி நூல்களாக எழுதினர். நம்பிள்ளையின் கருத்துக்களையேயன்றி மொழி நடைகளையும் அவர்கள் பொன்னேபோல் போற்றிக் கொண்டனர்.

275. 3-5-0ஈ

276. 7-3-1ஈ

